உ

# புலவர் உலகம்

## கம்பன் கலை நிலை

பதினோராவது தொகுதி.



ஆசிரியர்

ஜெகவீர பாண்டியனர்

மதுரை,
மதராஸ் சி. வரதராஜுலு நாயுடு பிரசில்
பதிப்பிக்கப் பெற்றது.

1952

# முகவுரை.

இது கம்பன் கலை நிலையுள் பதினோராவது தொகுதி. இராமபிரானோடு போராடித் தோல்வியடைந்து போன இராவணன் அரண்மனை புகுந்து அலமந்து இருந்தான். மாலியவான் வந்து நிலைமையை அறிந்து நெஞ்சம் வருந்தினான். அம் முதியவன் கூறிய அறிவுரைகளையும் கேளாமல் மீண்டும் கும்பகருணனை எழுப்பிப் போருக்கு அனுப்பிவிட்டு மாயா சனகனைக் கொண்டு வந்து சீதையை வஞ்சித்தான். தன் தந்தை என்று நம்பிச் சிந்தை கலங்கி அப் பதிவிரதை பதைத்தாள். முடிவில் தெளிந்து இருவரையும் இகழ்ந்து வெறுத்து உறுதியுண்மைகளை உரைத்தாள். அதுபொழுது தம்பி இறந்துபட்டான் என்பதை அறிந்து இராவணன் மறுகி அழுது அரண்மனைக்கு வந்தான். அதிகாயன் போருக்கு எழுந்தான்; சேனைகளோடு சென்ற அவன் மூண்டு போராடி இறுதியில் இலக்குவனால் மாண்டு விழுந்தான். அவன் அழிந்தது தெரிந்து அவனுடைய தாய் ஆன தானியமாலை அழுது துடித்தாள். இலங்கை வேந்தனும் கலங்கி உளைந்தான்; அவனைத் தேற்றி யிருத்திவிட்டு இந்திரசித்து பெரும் படைகள் புடைசூழத் தேர் ஏறிப் போர்மேல் சென்றான். பொருகளம் புகுந்தான்; வானரசேனைகளும் அரக்கர் திரள்களும் ஆர்த்துப் பொருதன. இந்திரசித்தும் இளையபெருமாளும் மூண்டு போராடினார். நீண்ட நேரம் இருவரும் வெருவரு திறலோடு வெகுண்டு பொருதும் ஒருவரும் வெல்லாமல் பருவரலடைந்தார். முடிவில் அவன் ஏறியிருந்த தேரை உடைத்து வில்லைத் துணித்துக் கவசத்தைத் தகர்த்துக் கடுங்கணைகளைக் கடுத்துத் தொடுத்து இலக்குவன் வெற்றி மிகப் பெற்றான்; படைகள் யாவும் இழந்து பரிதாப நிலையில் மறுகிநின்ற இந்திரசித்து ஆகாயத்தில் விரைந்து மறைந்து போனான். அங்கே கரந்து நின்று அவன் நாகபாசத்தை ஏவினான். இலக்குவன் முதல் யாவரும் மயங்கி மண்ணில் சாய்ந்தனர். வீடணன் வருந்தினான்; இராமன் வந்து அழுது தவித்துத் தம்பியைத் தழுவி உழுவலன்போடு உருகி மறுகிப் பருவரல் மீதூர்ந்து பரிந்து நின்று உற்றதை உசாவி உறுவதை ஓர்ந்தான். இந்தச் சரித நிலைகள் முறையே இதில் அடங்கி யிருக்கின்றன.

செகவீரபாண்டியன்.

# சிறப்புப்பாயிரம்.



வீர ராமன் விறலுயர் மாக்கதை
பார காவியம் ஆயுள பண்பினை
யாரும் இன்பாய் அறிந்து மகிழ்ந்திட
வீர பாண்டிய வேந்தன் விளம்பினன்.

திருத்தித் தலைமையாய் உயர்ந்து கொள்ளுவதே பலவகையிலும் நல்லதாம். இன்று மூண்ட போரில் தோல்வி நேர்ந்தது என்று தெரிகின்றது. என்றும் காணாத இழிபழிகள் நம் விழி தெரிய வந்துள்ளன. அழிவு நிலைகளை நினைந்து என் உள்ளம் பெரிதும் வருந்துகிறது. எவ்வளவு பெருமையுடைய அரசு இவ்வளவு சிறுமையடைய நேர்ந்துள்ளது! ஓர்ந்து உணர்ந்து உய்தியை நாடவேண்டும் அரசே!" என்றுமூதியவன் மதிநலம்கூறினான்.

பெருந்தவம் உடைய ஐயா! என்று தன் பேரனை நோக்கிப் பாட்டன் இவ்வாறு கூறியிருக்கிறான். தேவரும் ஏவல் செய்ய மூவுலகங்களையும் இராவணன் ஆளுவது தவத்தின் பயனாய் வந்தது என்பதை இந்த வாக்கியம் உணர்த்தி நின்றது. அரிய தவங்களால் அடைந்த செல்வங்கள் கொடிய அவங்களால் அழிய நேர்ந்துள்ளன. பழியும் பாவங்களும் படர்ந்து படுதுயரங்கள் பெருகி நிற்கின்றன. விழி திறந்து நோக்கி விளிவுகள் நேராத படி விரைந்து வழி செய்து கொள்ள வேண்டும் என்று பரிந்து மொழிந்து அன்று நடந்த போரின் நிலைகளை விசாரித்தான்.

என் உற்ற பெற்றி? என்றது உடல் மெலிந்து படர் மலிந்து அடு துயரோடு இன்னலுழந்திருக்கும் மன்னனை உன்னி நோக்கி எழுந்தது. இன்னவாறு நன்னயமாய் வினவியது அன்று அமரில் நேர்ந்த நிலைமைகளைத் தெளிவாக அறிந்து கொள்ள வந்தது.

பாட்டன் பரிந்து கேட்ட இந்தக் கேள்விக்குப் பேரன் நாட்டமாய்ப் பதில் சொல்ல நேர்ந்தான். அங்ஙனம் சொல்லிய பொழுது அவன் இருந்த நிலையைக் கவி சுவையாக எழுதிக் காட்டியிருக்கிறார். அயலே வருவன காணுங்கள்.

கவையுறு நெஞ்சன் காந்திக் கனல்கின்ற கண்ணன் பந்துச்
சிவையின்வாய் என்னச் செந்தீ யுயிர்ப்புறந் திறந்த மூக்கன்
நவையறு பாகை அன்றி அமுதினை நக்கி னாலும்
சுவையறப் புலர்ந்த நாவான் இளையவா சொல்ல லுற்றான்: (1)

சங்கம்வந் துற்ற கொற்றத் தாபதர் தம்மோடு எம்மோடு
அங்கம்வந் துற்ற தாக அமரர்வந் துற்றா ரன்றே
கங்கம்வந் துற்ற செய்ய களத்துநம் குலத்துக் கொவ்வாப்
பங்கம்வந் துற்ற தன்றிப் பழியும்வந் துற்றது என்றான். (2)

போரில் நேர்ந்ததைப் புகலும்படி புலன் விசாரித்த மாலிய வானிடம் இராவணன் இவ்வாறு கூறியிருக்கிறான். உரையாடும் போதிருந்த அவனுடைய பரிதாப நிலையைப் பரிந்து நோக்கி நாம் வருந்துகிறோம். மலை கலங்கினும் மாதிரம் கலங்கினும் கடல் கலங்கினும் கலங்காத இலங்கை வேந்தன் உடல் கலங்கி உளம் கலங்கி உணர்வுகலங்கி உயிர் கலங்கித் துயரமோடு பேசி யிருக்கிறான். வெளியே வந்த பேச்சு உள்ளத்தைத் திறந்து காட்டியுள்ளது.

நெஞ்சன், கண்ணன், வாயன், மூக்கன், நாவன் என அவனது அவல நிலையை எழுதிக் காட்டி யிருக்கும் காட்சிகளைக் கருதிக்காணுவார் எவரும் உள்ளமுருகி இரங்குவார். கொடிய துயரங்களால் உள்ளம் உடைந்து போயுள்ளமையால் கவையுறு நெஞ்சன் என்றார். கவை = கவர், பிளவு. சிவை = உலைத்துருத்தி.

கொல்லனுடைய உலைத்துருத்தியை ஊதுந்தோறும் நெருப்புக் காற்றை வீசும் ஆதலால் மூச்சு விடுந்தோறும் அனல் வீசி வந்த அதற்கு உவமையாய் நேர்ந்தது. துயரத்தீயால் உள்ளமும் உயிரும் வெந்திருத்தலை உயிர்ப்பு உணர்த்தி நின்றது.

இனிய வெல்லப்பாகை நக்கினாலும், அரிய அமுதத்தைச் சுவைத்தாலும் யாதும் சுவை தெரியாதபடி அந்த நாக்கு நவை படிந்திருந்தது. நாவில் நீர் ஊறியுள்ள அளவுதான் அது சுவையினை அறியும்; அவலத் துயரால் வறண்டு நா உலர்ந்திருந்தது ஆதலால் சுவை யுணர்வு அறவே குன்றிப் பொன்றிய நிலையில் அது புலனழிந்து கிடந்தது.

நெஞ்சம் அழிந்து கண்கள் சிவந்து நெடுமூச்சு எறிந்து வாய் புலர்ந்து நாவுலர்ந்து எவ்வழியும் யாதும் செயல் இழந்து மயலுழந்து மறுகிக் கிடந்த இராவணன் பாட்டன் கேட்ட கேள்விக்குப் பரிவோடு பதில் கூறினான். "எந்தாய்! இன்று போய் நான் போரில் அடைந்த துயரங்களையும் அவமானங்களையும் நேரில் கூற நாணுகின்றேன்; ஆயினும் முதல்வனான உன்னிடம் நிலைமைகளை யெல்லாம் முழுவதும் தெளிவாகச் சொல்லுகின்றேன். நால் வகைச் சேனைகளும் கடல் போல் புடைசூழ்ந்து திரண்டுவர அடலாண்மையோடு நான் அமர்க் களம் புகுந்தேன். இருதிறச் சேனைகளும் மூண்டு பொருதன. பருவராலுடன் மாண்டு விழுந்தன முடிவில் இராமனோடு மூண்டு

பொருதேன். பண்டாரக் கோலமாய்த் தவ வேடத்தில் வந்த அந்த இராமனைக் கண்டதும் முதலில் இளிவாக எண்ணினேன்; இளையவனையும் அவ்வாறே எளிதாக நினைந்து உல்லாசமாய்ப் போராட நேர்ந்தேன். போரில் புகுந்த பொழுது அந்த வில்லாளர் புரிந்த வல்லாண்மைகளைக் கண்டு என் உள்ளம் வியந்தது. யாரிடமும் என்றும் காணாத அதிசய ஆடல்களை நேரே பார்த்த பின் நெஞ்சம் கனன்று வீறோடு போராடினேன். நான் ஆற்றிய அமராற்றல் யாவும் அவலமாயின. மாற்றான் எதிரே மானம் அழிய நேர்ந்தது. மறைத்துச் சொல்லுவதால் யாது பயன்? நம் குலத்துக்குக் கொடிய இழிவும் நெடிய பழியும் நேர்ந்தன" என்று இங்ஙனம் உள்ளம் சோர்ந்து இராவணன் உரைத்து நின்றான். உரைகள் பருவரல் தோய்ந்து வந்தன.

நம் குலத்துக்கு ஒவ்வாப் பங்கம் வந்து உற்றது; பழியும் வந்து உற்றது. என அவன் பரிதபித்திருத்தலை விழி தெரிய இது வெளிப்படுத்தி யுள்ளது.

எங்கும் பங்கம் இன்றி இன்பக் களிப்புடன் வாழ்ந்து வந்தவன் ஆதலால் இன்று நேர்ந்த அவமானத்தை நினைந்து இங்ஙனம் நொந்து கூறினான். பங்கம் = கேடு, தோல்வி, இழிவு.

யாண்டும் வெற்றியும் புகழும் உடையதாய் வீறோடு விளங்கி வந்த குலம் இன்று தோல்வியும் பழியும் தோய்ந்தது என உள்ளம் காய்ந்து உரையாடுகின்றான் ஆதலால் ஒவ்வாப் பங்கம் என்றான்: நேராத பழி நேர்ந்தது என நெஞ்சம் கவன்றுள்ளது.

இழிவான தோல்வி முதலில் நேர்ந்தது; அதனால் பழி படிந்தது; ஆகவே பங்கமும் பழியும் அம் முறையே பேச வந்தன. மான பங்கம் அடைந்தேன்; ஈனமான பழி என்றும் அழியாத நிலையில் ஊனமாய் ஓங்கி எழுந்தது என உள்ளம் ஏங்கி யிருக்கிறான். உற்ற இழிவு உயிரைத் துயர் செய்துள்ளது.

குடும்ப பாசம் படிந்து உறவுரிமையுடன் பாட்டனிடம் பரிந்து பேசுகின்றான் ஆதலால் நம் குலத்துக்கு என்றான். வானவர் குலமும் வணங்கி வாழ்த்த மான வீரங்களுடன் மகிமை வாய்ந்த குலம் எனத் தன்குலத்தின் பெருமையை அவன் கருதி மகிழ்ந்து உரிமை கூர்ந்து வந்துள்ளமை உரையில் அறியவந்தது.

போரில் தனக்கு நேர்ந்த மானக் கேடுகளை முதலில் சுருக்கமாக உரைத்தவன் பின்பு எதிரிகளுடைய வீரப் பாடுகளைக் குறித்து வியந்து பேசினன். அவனுடைய உரைகள் உறுதி யுண்மைகளை மருவி அரிய தன்மைகளை விளக்கி வந்தன.

இலக்குவனைப் புகழ்ந்தது.

முளையமை திங்கள் சூடு முக்கணன் முதல்வ ராகக்
கிளையமை புவனம் மூன்றும் வந்துடன் கிடைத்த வேனும்
வளையமை வரிவில் வாளி மெய்யுற வாங்கு மாயின்
இளையவன் தனக்கும் ஆற்ருது என்பெருஞ் சேனை நம்ப!

இலட்சுமணனுடைய அடலாண்மையையும் வீரப்பிரதாபத்தையும் இவ்வாறு வியந்து கூறியிருக்கிருன். "தேவ தேவரும் மூவகையுலகிலுள்ள யாவரும் ஒருங்கு திரண்டுவந்து எனக்குப் பக்க பலமாய்த் துணை புரிந்து நின்ருலும் அந்த இளையவனை யாதும் செய்ய முடியாது. அவனைச் சூழ்ந்து வளைந்த சேனைகள் யாவும் மாண்டு விழுந்தனவே அன்றி மீண்டு வாழவே இல்லை. அவனது போராற்றல் யாராலும் அறிய முடியாத பேராற்றலுடையது. அளவிடலரிய நமது படைகள் நெருநல் அவனல் அழிந்து பட்டன; அந்த அழிவு நிலை நமக்கு இழி துயரமாய் நின்றது." என இன்னவாறு மன்னன் மறுகி உரைத்துள்ளான்.

போரில் அவன் பொருத திறங்களை இவன் நேரில் அறிந்து நின்ருன்; அந்நிலைமைகளை இங்கே நெஞ்சம் தெளியவுரைத்தான்.

"அறுத்தனன் அரக்கர் எய்த எறிந்தன அறுத்தருத
பொறுத்தனன் பகழி மாரி பொழிந்தனன் உயிரின் போகம்
வெறுத்தனன் நமனும் வேலை உதிரத்தின் வெள்ளம் மீள
மறித்தன மறிந்த எங்கும் பிணங்கள்அம் மலைகள் மான. (1)

தலையெலாம் அற்ற; முற்றும் தாளெலாம் அற்ற; தோளாம்
மலையெலாம் அற்ற; பொற்ருர்மார்பெலாம்அற்ற; சூலத்து
இலையெலாம் அற்ற; வீரர் எயிறெலாம் அற்ற; கொற்றச்
சிலையெலாம் அற்ற; கற்ற செருவெலாம் அற்ற சிந்தி. (2)

குன்றன யானை மானக் குரகதம் கொடித்தேர் கோப
வன்றிறல் ஆளி சீயம் மற்றைய பிறவும் முற்றும்
சென்றன எல்லை யில்லை திரிந்தன சிறிது போதும்
நின்றன இல்லை எல்லாம் கிடந்தன நெளிந்த பார்மேல்."

இலக்குவனேடு போர் மேல் மூண்ட நால்வகைச் சேனை களும் நாசமடைந்து கிடந்தபடியை இவை காட்டியுள்ளன. இவ்வாறு அதி விரைவில் படைகளை அழித்து அடலமர் புரிந்த இளையவனுடைய அதிசய ஆற்றலை நேரே கண்டு வந்தவன் ஆத லால் இங்ஙனம் துதிசெய்து கொண்டாடினன்.

இளையவன் தனக்கும் ஆற்ருது என்றதில் உம்மை மூத்தவனை நோக்கி வந்தது. அந்த அண்ணன் வில் எடுத்து வேலை செய்ய வேண்டாமலே இந்தத் தம்பி ஒருவனே தனி நின்று எல்லாரை யும் கொன்று வென்றிபெற வல்லவன் என்பது ஈண்டு விளங்கி நின்றது. இலக்குவனது பேராற்றலை முதலில் விழி எதிரே பார்த்தான் ஆதலால் அந்த இளையபெருமாளை முந்துற இங்ஙனம் சிந்தை தெளிய மொழிந்தான். அனுபவக் காட்சி இனிது முன் வந்தது. பின்பு மூத்த பெருமாளுடைய அற்புத ஆற்றல்களையும் அதிசய நிலைகளையும் வியந்து புகழ்ந்து உவந்து பேசினன்.

## இராமனை வியந்தது.

எறித்தபோர் அரக்கர் ஆவி எண்ணிலா வெள்ளம் எஞ்சப்
பறித்தபோது என்னை அந்தப் பரிபவம் முதுகில் பற்றப்
பொறித்தபோ தன்னன் அந்தக் கூனிகூன்போக உண்டை
தெறித்தபோது ஒத்த தன்றிச் சினவுண்மை தெரிந்த தில்லை.

மலையுறப் பெரிய ராய வாள்எயிற்று அரக்கர் தானை
நிலையுறச் செறிந்த வெள்ளம் நூற்றிரண்டு எனினும் நேரே
குலையுறக் குளித்து வாளி குதிரையைக் களிற்றை யாளின்
தலையறப் பட்ட தல்லால் உடல்களில் தங்கிற் றுண்டோ? (2)

போயபின் அவன்கை வாளி உலகெலாம் புகுவ தல்லால்
ஓயுமென் றுரைக்க லாமோ ஊழிசென் ருலும் ஊழித்
தீயையும்தீய்க்கும்செல்லும் திசையையும்தீய்க்குமசொல்லும்
வாயையும் தீய்க்கும் உன்னின்மனத்தையும்தீய்க்கும்மன்னே!

மேருவை உருவும் என்ருல் விண்கடந்து ஏகும் என்ருல்
பாரினைப் பிளக்கும் என்ருல் கடல்களைப் பருகும் என்ருல்
ஆருமே அவற்றின் ஆற்றல் ஆற்றுமேல் அநந்த கோடி
மேருவும் விண்ணும் மண்ணும் கடல்களும் வேண்டு மன்றே.

வரிசிலை நாணில் கோத்து வாங்கினன் விடுதல் ஒன்றும்
தெரிகிலது அமர்தன் ஆற்றல் யாரவன் செய்கை தேர்வார்?

பொருசினத்து அரக்கர் ஆவி போகிய போக வென்று
கருதிய வுலகம் எல்லாம் சரங்களாய்க் காட்டும் அன்றே (5)

இந்திரன் குலிச வேலும் ஈசன்கை இலைமூன்று என்னும்
மந்திர அயிலும் மாயோன் வளைஎஃகின் வரவும் கண்டேன்
அந்தரம் நீளி தம்மா தாபதன் அம்புக்கு ஆற்று
நொந்தனன் யானலா தார் ஆரவை நோக்க கிற்பார்? (6)

பேயிருங் கணங்க ளோடு சுடுகணத்து உறையும் பெற்றி
ஏயவன் தோள்கள் எட்டும் இந்திரன் இரண்டு தோளும்
மாயிரு ஞாலம் முற்றும வயிற்றிடை வைத்த மாயன்
ஆயிரம் தோளும் அன்னான் விரல்ஒன்றின் ஆற்றல் ஆற்ற

சீர்த்த வீரியரா யுள்ளார் செங்கண்மால் எனினும் யானக்
கார்த்த வீரியனை நேர்வார் உளர்எனக் கருத லாற்றேன்
பார்த்தபோது அவனும் மற்றத் தாபதன் தம்பி பாதத்து
ஆர்த்ததோர் துகளுக்கு ஒவ்வான் ஆரவற் காற்ற கிற்பார்?

முப்புரம் ஒருங்கச் சுட்ட மூரிவெஞ் சிலையும் வீரன்
அற்புத வில்லுக்கு ஐய அம்பெனக் கொளலும் ஆகா;
ஒப்புவே று உரைக்க லாவது ஒருபொருள் இல்லை; வேதம்
தப்பின போதும் அன்னான் தனுவுமிழ் சரங்கள் தப்பா. (9)

உற்பத்தி அயனே ஒக்கும் ஓடும்போது அரியே ஒக்கும்
கற்பத்தின் அரனே ஒக்கும் பகைஞரைக் கலந்த காலைச்
சிற்பத்தின் நம்மால் பேசச் சிறியவோ என்னைத் தீராத்
தற்பத்தைத் துடைத்தன்றால்பிறிதொருசான்றுமுண்டோ?

குடக்கதோ குணக்க தேயோ கோணத்தின் பால தேயோ
தடத்தபேர் உலகத் தேயோ விசும்பதோ எங்கும் தானோ
வடக்கதோதெற்கதோஎன்று உணர்ந்திலன்மனிசன்வல்வில்
இடத்ததோவலத்ததோஎன்றுணர்ந்திலேன்யானுமின்னும்.

ஏற்றம்ஒன்று இல்லை என்பது ஏழைமைப் பால தன்றே
ஆற்றல்சால் கலுழ னேதான் ஆற்றுமே அமரின் ஆற்றல்
காற்றையே மேற்கொண் டானோ கனலையே கடாவி னானோ
கூற்றையேஊர்கின்றானோ குரங்கின்மேல் கொண்டு நின்றான்.

போயினித் தெரிவது என்னேபொறையினால்உலகம்போலும்
வேயெனத் தகைய தோளி இராகவன் மேனி நோக்கித்
தீயெனக் கொடிய வீரச் சேவகச் செய்கை கண்டால்
நாயெனத் தகுது மன்றே காமனும் நாமும் எல்லாம். (13)

வாசவன் மாயன் மற்றை மலருளோன் மழுவாள் அங்கை
ஈசனென் றினைய தன்மை இளிவரும் இவரால் அன்றி
நாசம்வந்து உற்ற போது நல்லதோர் பகையைப் பெற்றேன்
பூசல்வண் டுறையும் தாராய்! இதுவிங்குப் புகுந்தது என்ருன்.

இந்தப் பாசுரங்கள் முழுவதையும் கண் ஊன்றிக் கருதி வாசிக்க வேண்டும். கூறியவுரைகள் கூர்ந்து சிந்திக்கத்தக்கன.

மகா வீரனை இலங்கை வேந்தன் மனம் திறந்து இங்கே பேசியிருக்கிருன். அரிய பல உறுதி நலங்கள் இதில் பெருகி வந்துள்ளன. மானச தத்துவங்கள் உய்த்துணர்வுகளை விளைத்து விசித்திர கதிகளில் விளைந்திருக்கின்றன. இராமனுடைய வீரப் பிரதாபங்களை அதிசய நிலையில் துதி செய்திருத்தலால் இப்பகுதி தனியான ஓர் வீரகாவியமாய் விளங்கி நிற்கின்றது.

முதியவனை மாலியவான் தன் குடும்பத்தில் பெரியவன் ஆதலாலவனிடம் அரசன் உண்மைகளை உரைத்திருக்கிருன். அன்று போரில் நேர்ந்த அவல நிலையைக் கவலையோடு விசாரிக்க வந்தமையால் நேர்ந்த நிகழ்ச்சிகளை யெல்லாம் நேரே சொல்ல நேர்ந்தான்: "பாட்டா! அந்த மனிதனுடைய ஆற்றல் அதிசயமுடையது; எவ்வளவோ வில்லாளிகளை நான் பார்த்திருக்கிறேன்; அவனது வில்லின் வேலை எல்லையில்லாதது; சொல்லால் வரைந்து சொல்ல முடியாதது; ஆயினும் நான் நேரில் கண்ட நிலைகளைச் சொல்லுகிறேன். தேரில் ஏறிப் போரில் புகுந்தேன்; அவன் நேரே வந்து எதிர்ந்தான்; போர் மூண்டது; அவனுடைய வில் வேலையால் பல்லாயிரம் அரக்கர்கள் ஒல்லையில் மாண்டனர்; கடல்போல் என்னைப் புடை சூழ்ந்து வந்த நால்வகைச் சேனைகளும் நாசமாயின; எங்கும் தலைகள் துள்ளி விழுந்தன; உடல்கள் பிண மலைகளாய்க் குவிந்தன; அவனது வில்லிலிருந்து விரைந்து எழுந்த பகழிகள் படைகளை ஊடுருவித் திசைகள்தோறும் பாய்ந்தன; ஊழித் தீயின் சுடர்களைப் போல் ஒளிகளை வீசி உயிர்களைப் பாழாக்கி வான வெளிகளில் உலாவின அந்தக் காட்சிகளை இப்பொழுது நினைத்தாலும் என் உள்ளத்தில் வெப்பும் வியப்பும் விரவி யெழுகின்றன. மேரு மலையை உருவி விண்ணைக் கடந்து பாரைப் பிளந்து கடல்களைப் பருகி அடலாண்மைகளோடு யாண்டும் மிடல் கொண்டு திரிகிற அவற்றின் உக்கிர

வீர நிலைகள் உரையிடலரியன. வில்லில் தொடுத்து அவன் அம்பு விடுவது தெரியவில்லை; எங்கும் பாணங்கள் பரந்து விரிவனவே தெரிகின்றன. ஒரு தொடையில் பல ஆயிரங்கள் எழுகின்றன. ஒன்று நூறு ஆயிரம் பதினுயிரம் என இப்படி எப்படியோ புங்கானு புங்கமாய்ப் பொங்கி வருகின்றன. பகழிகள் வருகிற நிலைகளைக் கூர்ந்து நோக்குமுன் பக்கம் எங்கணும் தலைகள் உருளுவதும் கொலைகள் விழுவதும் பயங்கரக் காட்சிகளாய்த் தோன்றின. நமது நிருதர் குலங்கள் ஊழித் தீயில் அகப்பட்ட சருகுகள் போல் மறுகி மாண்டன. யாண்டும் பரிதாபங்கள் நீண்டன. தேரிழந்து பரியிழந்து வில்லிழந்து நான் அல்லலுழந்து அயரும்படி அதிசய நிலையில் அவன் விரைந்து போராடி வருங்கால் அவனுடைய முகத்தைக் கூர்ந்து பார்த்தேன். அந்த முகத்தில் கோபக் குறியே தெரியவில்லை. இளமையில் கூனி முதுகில் விளையாட்டுக்காக உண்டை தொடுத்தான் என்று சொல்வதைக் கேள்வியுற்றுள்ளேன்; அவ்வாறு உல்லாச விநோதமாகவே இன்று அவன் என்னோடு போராடினன். சினமே இன்றி அதிசய லாகவமாய்ப் பொருத அவனது அமராடலில் வீர தேவதை குதிகொண்டு விளையாடியது போல் விளங்கி நின்றது. சிவபெருமான் பண்டு சிரித்துப் புரம் எரித்தான் என்று சொல்லுவார்கள்; இவன் சிரியாமலே நம் இனத்தை இன்று அழித்திருக்கிருன். ஈசனுடைய சூலம், திருமாலின் சக்கரம், இந்திரனது வச்சிராயுதம் ஆகிய அற்புத ஆயுதங்களின் ஆற்றல்களை நான் பார்த்திருக்கிறேன்; அவை யாவும் இந்த மனிதன் அம்புக்கு ஈடாகா. யுகாந்த காலத்தில் உலகங்களை யெல்லாம் அழித்து எங்கும் சுடுகாடாக்கிப் பேய்க் கணங்களோடு கூத்தாடும் அந்த உருத்திர மூர்த்தியும், அண்டங்கள் யாவும் உண்டு ஆதிமூலப் பொருள் என மேன்மை கொண்டு பேணி நிற்கும் அந்த மாயனும் இந்த மனிதனுடைய சிறுவிரல் செய்யும்செயலையும் செய்ய மாட்டார். என் வாழ்நாளில் நான் பார்த்த வீரருள் கார்த்தவீரியன் தலைசிறந்தவன். அவனுடைய அடலாண்மைகளை அறிந்திருக்கிறேன். அவனும் இந்த இராமன் தம்பியின் காலில் ஒட்டிய ஒரு தூசிக்கு நிகரான். இளையவன் மூத்தவன் என அமைந்துள்ள இத் துணைவர் இருவரும் அளவிடலரிய ஆற்றல்களுக்கே ஏற்றமாகப் பிறந்தவர். வீரதேவதையின் இணைவிழி

கள் போல் இணைந்துள்ளனர். அண்ணனுடைய வில்லாண்மை எண்ணரிய மகிமைகளுடையது. அவனது கம்பீரமும் வீரப் பாடும் கரவேகமும் சரவேகமும் குறிப்பும் கூர்மையும் உரை உணர்வுகளைக் கடந்து ஒளி மிகுந்துள்ளன. வேதம் தப்பினாலும் அவனுடைய அம்பின் குறி தவறுவதில்லை. அயன் அரி அரன் என வியன்நிலையில் விளங்கியுள்ள மூன்று மூர்த்திகளும் ஒருங்கு சேர்ந்து அரக்கர் குலத்தை அழிக்க மூண்டதுபோல் அவன் பாணங்கள் நீண்டு நிற்கின்றன. யாண்டும் அஞ்சாமல் எவரை யும் மதியாமல் எவ்வழியும் தலைவணங்காமல் நிலையான செருக் கோடு நிலைத்து வந்த என்னுடைய அகந்தையை அடியோடு அகழ்ந்து எடுத்து இகழ்ந்து வெளியே வீசியுள்ளது என்றால் அந்த அம்பின் உக்கிர வீர நிலையை நீங்களே யூகித்து உணர்ந்து கொள்ளலாம். நான் தேரில் ஏறிப் போர்மேல் சென்றபோது எதிரிக்கு யாதொரு வாகனமும் இல்லை என்று எளிதா எண்ணிப் போனேன். அவனுக்கு வாய்த்த வாகனத்தின் வேகத்தையும் வீரத்திறலையும் என் என்று சொல்லுவேன்? ஊழிக் காற்றும் வடவைத் தீயும் எமனும் நாணும்படி கடுமையும் அடலாண்மை யும் மண்டிப் படுகளம் எங்கும் அடு திறலோடு அவ் வூர்தி சூறையாடி வந்தது. அதனால் மாண்டு மடிந்த படைகள் பல. எங்கே நோக்கினாலும் அங்கேயெல்லாம் அவன் எதிர் தோன்றி நின்றான். அதி வேகமுடைய கருடன்மீது ஏறி வந்த திருமாலை யும் கண்டிருக்கிறேன். வானரத்தை ஊர்ந்து வந்து பொருத அந்த மனிதனது கதிவேகங்கள் மதிவேகங்கள் கடந்தன. கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு கோணம் முதலிய திக்குகள் எங்கணும் அங்கங்கே எதிர்ந்து அமராடினான். வில் இடது கை யில் இருக்கிறதா? வலது கையில் உள்ளதா? அம்பை எப்படித் தொடுக்கிறான்? என்பதை யாதும் அறியமுடியவில்லை. இன்னும் சிந்தனை செய்துகொண்டு திகைப்புறுகின்றேன். சீதை என்னை யாதும் மதிக்கவில்லை; எவ்வழியும் அவமதித்தே நின்றாள்; என் னுடைய வீரப் பிரதாபங்களை எவ்வளவோ எடுத்துக் காட்டியும் எள்ளி இகழ்ந்து தள்ளியே வந்தாள். அதற்குரிய காரணத்தை இன்றுதான் கண்டு தெளிய நேர்ந்தது. இராமனது உருவ அழகை நேரே கண்ட கண்களுக்கு மன்மதனும் நாயாகத் தோன்றுவான்; அவனுடைய வீரத்திறல்களை அறிந்த நெஞ்சுக்கு

மகா வீரன் என்று இறுமாந்திருந்த நானும் நாயாகவே காணப் படுவேன். பாட்டா! இனி மேலும் மேலும் விரித்துப் பேசுவானேன்? இந்திரன் முதலிய தேவர்களாலும் முதன்மையான மூவர்களாலும் இலங்கை வேந்தன் மாய்ந்தான் என்று காய்ந்த பழி நேராமல் ஓர் அதிசய வீரனோடு போராடி நேரே மாண்டான் என்னும்படி புகழ் வாய்ந்துள்ளதை நினைந்து ஆறுதலுறுகின்றேன். என் குலத்தோடு நான் நாசம் அடைய நேர்ந்தாலும் நல்ல ஒரு சுத்த வீரனை எதிரியாகப் பெற்றோமே! என்று என் உள்ளம் உவந்துள்ளது. இன்று போய் நான் போரில் கண்டு வந்த முடிவு இதுதான்'' என்று முடிவாகச் சொல்லி முடித்தான். அவனுடைய சொல்லில் சோக வீரங்கள் தோய்ந்து வேக வீறுகள் விரிந்து நின்றன.

ஈண்டு முடிந்துள்ள முடிவுகளைக் கூர்ந்து நோக்கி ஓர்ந்து சிந்திக்கின்றோம். உரைகள் உள்ள நிலையைக் கள்ளமின்றிக் காட்டியுள்ளன. கருத்துக்கள் கருதி யுணரவுரியன.

யாதும் ஒளியாமல் தன் உள்ளத்தைத் திறந்து இராவணன் நேர்மையோடு பேசியிருக்கிறான். பகைவன் என்பதை அறவே மறந்து எதிரியை வியந்து புகழ்ந்திருப்பது அவனுடைய உயர்ந்த பெருந்தகைமையை உணர்த்தி நிற்கின்றது. வீரரை வீரரே வியப்பர் என்னும் பழமொழியின் பொருள் இங்கே கிழமையோடு விளங்கியுள்ளது. மொழிகள் தோறும் உணர்ச்சிகள் பொங்கி வந்திருக்கின்றன. மானச மருமங்கள் மருவி மிளிர்கின்றன.

போரில் நேரே கண்டு அனுபவித்த காட்சிகள் எல்லாம் அவன் கண் எதிரே தொன்றியுள்ளன. அந்த உண்மைகளைப் பாட்டன்பால் தெளிவாக உரைத்திருக்கிறான்.

கூனி கூன் போக உண்டை தெறித்தபோது
ஒத்தது அன்றிச் சினஉண்மை தெரிந்ததில்லை;

படைகள் பலமாண்டு பல்லாயிரம் கொலைகள் விழும்படி உக்கிர வீரமாய் உருத்துப் போராடிய போர்முகத்தில் இராமன் திருமுகம் இருந்த நிலையை இது ஒருமுகமாய் எழுதிக் காட்டியுள்ளது. இந்தக் காட்சி அரிய சிந்தனைகளுடையது.

மந்தரை என்பவள் கைகேசியின் அரண்மனையில் இருந்தவள். முதுகில் ஒரு கூன் இருந்தமையால் அவள் கூனி என

நேர்ந்தாள். இராமன் இளமையில் ஒரு நாள் அந்தக் கூனியைப் பார்த்தான். தனது இளங் கண்களுக்கு அம்முதியவள் நிலை விநோதமாய்த் தோன்றியது. உடனே மண் உருண்டையை வில்லில் வைத்து அந்தக் கூனை நோக்கி உல்லாசமா எய்தான். குறி தவருமல் பட்டது. கூனி திரும்பிப் பார்த்தாள்; இராமன் மன்னன் மகன் ஆதலால் யாதும் பேசாமல் மவுனமாய்ப் போனுள். உள்ளத்தில் கறுவு கொண்டிருந்தாள். பின்பு இவன் பட்டம் சூட்ட நேர்ந்தபோது கோள் மூட்டித் தடுத்து இவனைக் காட்டுக்கு ஓட்டினுள்.

"பண்டைநாள் இராகவன் பாணி வில்உமிழ்
உண்டையுண்டு அதனைத்தன் உள்ளத்து உள்ளுவாள்.
(மந்தரை சூழ்ச்சி, 41)

அவள் உள்ளிச் செய்த செயலை இதனுல் உணர்ந்து கொள்ளுகிறேம். கூனி வேலை கொடிய அல்லலாய் நீண்டது.

"கொண்டை கொண்ட கோதைமீது தேன்உலாவு கூனிகூன்
உண்டை கொண்டு அரங்க ஓட்டி உள்மகிழ்ந்த நாதன்."
(திருச்சந்தம், 49)

கூனி கூனில் உண்டை எய்ததை ஆழ்வார்கள் இங்ஙனம் கொண்டாடியுள்ளனர். விளையாட்டிலிருந்து வினைகள் விளைந்தன.

இளமையில் நிகழ்ந்த இந்த நிகழ்ச்சியை இராவணன் கேட்டிருந்தான். ஆதலால் "கூனி சூழ்ச்சியால் அரசு இழந்தான்" என முன்னம் * இகழ்ச்சியாய் மொழிந்தான். ஈண்டு அவள் கூனில் உண்டை தெறித்ததை மீண்டும் இங்ஙனம் இசைத்தான்.

கூனி முதுகில் உண்டை தெறித்தபோது எவ்வாறு இராமன் விளையாட்டாக நின்றுனே அவ்வாறே இன்று போராட்டத்தில் அவன்முகம் நகைமலர்ந்து நின்றது. சினம்என்பதேதெரியவில்லை.

அரக்கர் ஆவி எண் இலா வெள்ளம் எஞ்ச என்றது உல்லாச விநோதமா அவன் செய்த போரில் தன் சேனைகள் அழிந்துபட்ட நாச நிலையை இங்ஙனம் அளந்து காட்டினுன். சிரித்த முகத்தோடு செய்த நிலையிலேயே இவ்வளவு இழவுகள் எய்தியுள்ளன;

---

* இந் நூல் பக்கம் 3452, வரி 3 பார்க்க.

அவன் சினந்து போர் செய்தால் எவ்வளவு அழிவுகள் ஆம் என்பதை நினைந்து தெளிந்து கொள்ளுங்கள் என நிலைமையை நினைவுறுத்தினன். உரைக் குறிப்புகள் ஊன்றி உணரவுரியன.

சேனைகளை இழந்து தன் ஆயுத பலம் யாவும் தொலைந்து மேனி முழுதும் பாணங்கள் பாய அல்லலுழந்து அலமந்து நின்ருன் ஆதலால் என்னை அந்தப் பரிபவம் முதுகில்பற்ற எனத் தனது துயரமான தோல்வி நிலையைத் துலக்கி மொழிந்தான்.

பரிபவம் = இழிவு, அவமானம், துன்பம்.

தன் முதுகில் அம்புகள் பாயவில்லை; மார்பில்தான் பாய்ந்தன; ஆயினும் கொடிய அவமானமான தோல்வியைத் தனது முதுகு நெடிது சுமந்தது என நெஞ்சம் மறுகி உரைத்தான்.

கூனி முதுகையும் தன் முதுகையும் இராவணன் இங்கே இணைத்து எண்ணியது உண்மையை நாம் எண்ணி யுணரவந்தது. போரில் இராமன் எய்தி நின்ற நீர்மையைக் கூர்மையாக ஓர்ந்து கொள்ள வுரைத்தான். அந்த முதுகில் எய்த போது இராமன் எந்த நிலையில் நின்ருனே அந்த நிலையிலேயே உல்லாச விநோதமா என்னேடு போராடினன்; எனக்கு இவ்வளவு பேரிழவு நேர்ந்தது என்று ஓரளவு காட்டி உள்ளம் பரிந்து கூறினன்.

கூனி கூனில் தெறித்த உண்டையால் இராமன் காட்டுக்கு வந்தான்: இராவணன் குலத்தோடு அழிய நேர்ந்தான்; அந்த உறவுக் குறிப்புகள் ஈங்கு உரையில் ஊர்ந்து வந்திருக்கின்றன.

யாதொரு பிரயாசையுமின்றி மிகவும் அநாயாசமாய் இராமன் போராடியிருக்கும் நிலையை இவ்வாறு பாராட்டினன். கொடிய போராட்டத்தை இனிய ஒரு விளையாட்டாகவே இக் கோமகன் செய்திருக்கிருன் என்று தெரிகின்றது.

இவ் வீர வள்ளலின் வில்லாண்மையில் உள்ளம் பறிபோய் இலங்கைவேந்தன் வியந்து புகழ்ந்துள்ளான்.

அந்தரம் நீளிது அம்மா! தாபதன் அம்புக்கு ஆற்ரு.

இந்திரன் குலிசமும், ஈசன் சூலமும், மாயோன் சக்கரமும் ஆகிய அத்திவ்விய ஆயுதங்கள் அதிசய வலியுடையன; ஆயினும் அவை இராமபாணத்துக்கு நிகராகா; இதன் அடலாண்மையும்

அற்புத வேகமும் அளவிடலரியன என உளம் மிகமறுகி உறுதி நிலைகளைக் கருதியுணர உரைத்துள்ளான்.

தாபதன் என இராமனை இங்கே குறித்திருக்கிறான். தவத்தையுடையவன் தாபதன் என வந்தான். வனவாச காலத்துக்கு உரிய தவக்கோலமுடையனாயிருந்தமையால் இங்ஙனம் வரைந்து குறித்தான். குறிப்பு கூரிய சீரிய காட்சியாய் வந்தது.

ஆடம்பர நிலையில் ஆரவாரமாய் வந்த தேவர் அசுரர் முதலிய யாவரையும் வென்றவன் ஆதலால் இந்த எளிய கோலத்தில் வந்தவனிடம் தான் இழிவுற நேர்ந்ததை நினைந்து இனைந்து மொழிந்தான். ஒரு பரதேசியிடம் படாத பாடு பட்டேனே! என்று பரிதபித்திருக்கிறான்.

கோதண்ட வீரனுடைய அமராடலும் பாணப் பிரயோகங்களும் அதிசய நிலையில் நிலவி நின்றமையால் பகைமையையும் மறந்து எதிரி துதிசெய்ய நேர்ந்தான். பல வழிகளிலும் பாய்ந்து தன் படைகளை அழிவு செய்த பகழிகளை அவன் புகழ்ந்து சொல்லியிருப்பது வியந்து சிந்திக்க வுரியது.

“நல்லியற் கவிஞர் நாவிற் பொருள்குறித்து அமர்ந்த நாமச்
சொல்எனச்செய்யுட்கொண்டதொடைஎனத்தொடையைநீக்கி
எல்லையில் செல்வம் தீரா இசைஎனப் பழுதி லாத
பல்லலங்காரப் பண்பே காகுத்தன் பகழி மாதோ!”

காகுத்தனுடைய பகழிகள் கவிஞருடைய சொல்லும் பொருளும் தொடையும் இசையும்போல் நல்ல வளங்கள் சுரந்து பல் வகையான அலங்காரங்கள் நிறைந்து எல்லையின்றி எழுந்து பாய்ந்தன என இராவணன் இங்ஙனம் சொல்லியிருக்கிறான்.

நல்ல கல்விமான் ஆதலால் போரில் நேரில் கண்ட பாணங்களுக்கு இவ்வாறு கவிஞர் கவிகளை உவமை கூறினான்.

எழுத்து அசை சீர் தளை அடி தொடை என்னும் உறுப்புக்களால் அமைந்து அரிய பொருள்கள் நிறைந்து அணிகள் பல பொலிந்து எங்கும் விழுமிய நிலையில் விளங்கி வருவன ஆதலால் கவிஞர் கவிகள் இராமன் அம்புகளுக்கு உவமைகளாய் வந்தன.

வில்லில் தொடுத்து விடுத்த பகழிகள் நல்ல வரம்புகள் அமைந்து எல்லை யில்லாதனவாய் எழுந்தன; அவை சொல்லில்

தொடுத்து விடுத்த தொடைகள் போல் பல்வகை அணிகளோடு யாண்டும் தடையின்றி ஊடுருவி ஓடின என்க.

செய்யுள் கொண்ட தொடை ஒன்று பத்து நூறு ஆயிரம் என முறையே விரிந்து பெருகி விரைந்து வருதல்போல் இராகவன் வில்லில் கொண்ட தொடையும் எல்லையின்றி எழுந்துள்ளமையை ஈண்டு உள்ளி யுணர்ந்து கொள்ளுகிறோம்.

## தொடை நிலை

"மெய்பெறு மரபில் தொடைவகை தாமே
ஐயீர் ஆயிரத்து ஆறைஞ் ஞூற்றொடு
தொண்டுதலை யிட்ட பத்துக்குறை எழுநூற்று
ஒன்பஃது என்ப உணர்ந்திசி னோரே;
தெரிந்தனர் விரிப்பின் வரம்பில பல்கும்." (தொல்காப்பியம்)

பதின்மூவாயிரத்து எழுநூற்றுப் பத்துத் தொடை வகைகள் உள்ளன; மேலும் விரித்தால் வரம்பின்றி அவை வளர்ந்து செல்லும் என ஆசிரியர் தொல்காப்பியனார் செய்யுளின் தொடைகளைக் குறித்து இவ்வாறு உரைத்திருக்கிறார். இலக்கணக் குறிப்புகள் இலக்கியச் சிறப்புகளை உணர்த்தி நிற்கின்றன.

கவிஞரது கவி நிலைகளைக் காவிய நாயகனுடைய கணைகளுக்கு உவமை கூறி நம் கவிஞர்பிரான் இங்கே உரைத்திருப்பது கவிச் சுவையிலும் கலைப் பண்பிலும் கவிஞர்பாலும் இவருக்குள்ள உவகை உணர்ச்சிகளை விளக்கியுள்ளது.

இராவணனது உருவில் உறைந்திருந்து கொண்டு இராமபிரானுடைய அற்புத மகிமைகளை உழுவலன்போடு விழுமிய நிலைகளில் உரைத்திருக்கிறார். உரைகளில் அரிய பல பண்பாடுகள் பெருகி வந்துள்ளன. உள்ளத்தில் மருவியுள்ள உணர்ச்சிகள் எவ்வழியும் ஒளி செய்து மிளிர்கின்றன.

"His page is the lucid mirror of his mind and life" (Newman)

"கவிஞன் நூல் அவனது இதயத்தையும் சீவியத்தையும் தெளிவாகக் காட்டும் இனிய கண்ணாடி" என நியுமன் என்னும் ஆங்கில ஆசிரியர் கூறியுள்ளது ஈங்கு அறிய வுரியது.

தமது கதா நாயகனை அற்புத மூர்த்தி, அதிசய வெற்றியாளன் என எதிரியின் வாய்மொழிகளால் கவி பல வகையிலும்

சுவையாக விளக்கி யிருப்பன உவகை நிலையங்களாய் ஒளி வீசி யுள்ளன. உரைகள் உய்த்துணர்வுகள் தோய்ந்திருக்கின்றன.

திருமாலின் சக்கரம் முதலிய தெய்வ ஆயுதங்களும் தன்னை யாதும் செய்ய முடியாது என்று தருக்கியிருந்த இராவணன் இன்று இராமனுடைய பாணங்களால் அரிய வலிகள் எல்லாம் இழந்து அல்லலடைந்து அலமந்து நின்றான் ஆதலால் அந்த அம்பின் ஆற்றலை இவ்வாறு வியந்து புகழ்ந்து கூறினான். தன்னை அவமானப் படுத்திய அம்புக்கு உவமானமே இல்லை என்று உறுதிகூறிப் பெரிதும் போற்றியிருக்கிறான்.

தான் தோல்வி அடைந்தது யாண்டும் தோலாத மேலான ஒருவனால் என்று தன் பாட்டனிடம் தெரியப்படுத்தித் தனது பாடுகளையும் கேடுகளையும் ஒருங்கே விளக்கினான்.

இந்திரன் இரண்டு தோளும் ஈசன்எட்டுத் தோளும்மாயோன்
ஆயிரம் தோளும் அன்னான் விரல் ஒன்றின் ஆற்றல் ஆற்றா.

இராமனது அற்புத ஆற்றலை இப்படிப் பரவசமாய்த் துதித் திருக்கிறான். தன்னை இன்று வென்றவன் சிவன் மால் அயனினும் வியனான வலியுடையவன் என்பதை நயமாக வலியுறுத்தி யுள்ளான். அதிசய நிலையைத் துதி செய்து நின்றான்.

தேவ தேவர்களும் செய்ய முடியாத அரிய காரியத்தை இராமன் எளிதே செய்திருக்கிறான் ஆதலால் அந்தச் செயல் நிலை எதிரியின் வாய்மொழியால் இனிது தெரிய வந்தது.

திரிமூர்த்திகளுக்கும் கலங்காத கண்டனாய் இலங்கை வேந்தன் இறுமாந்து வாழ்ந்து வந்தான்; அந்த வாழ்வு இற்று விழும்படி இன்று இந்தக் கொற்றக் குரிசில் ஒற்றை வில்லால் வெற்றி பெற்றுள்ளான்; அவ் வுண்மையை நேரே கண்டு நேர்ந்து வந்தவன் இன்னவாறு தேர்ந்து உரைத்தான்.

இந்திரன் ஆற்றாத, ஈசன் ஆற்றாத, மாயோன் ஆற்றாத அரிய ஒருசெயலை இராமனது ஒரு விரல் ஆற்றியுள்ளது என்றது பெருவிறல் தோற்றிப் பேராண்மையைப் போற்றி நின்றது.

ஆயிரத்துப்பத்துத் தோள்களும் ஒருங்கு சேர்ந்து செய்ய முடியாததை ஒரு விரல் செய்தது எனப் பருவரலோடு பாராட்டியிருக்கிறான். உள்ளத்தின் வியப்புஉச்சநிலையில்ஓங்கிவந்துள்ளது.

இராமன் வில்லில் அம்பு தொடுக்கும்பொழுது அந்தக் கர வேக சரவேகங்களை இராவணன் நேரே பார்த்து நின்றான் ஆத லால் விரல் ஒன்றின் ஆற்றல் ஆற்ற என இங்ஙனம் வியந்து பேச நேர்ந்தான். நேரே கண்டு மகிழ்ந்த காட்சி உரைவழியே மண்டி வந்தது. இவ் வீரனது விரல் அசைப்பிலேயே அவ் வெய்யவன் வீறழிந்து போயுள்ளமை விளங்கி நின்றது.

மாயோனுடைய ஆயிரம் தோள்களுக்கும் அஞ்சாதவன் இராமனது ஒரு விரலுக்கு அஞ்சி அலமந்திருப்பது அவதாரத் தின் அதிசய நிலையை அதிவிநயமாய் வெளிப்படுத்தியுள்ளது.

மாயிருஞாலம் எல்லாம் வயிற்றிடைவைத்த என்றது அந்த மாயவனது காப்புத் தன்மையையும் அற்புத வன்மையையும் கருதியுணர வந்தது. அத்தகைய பரமனே இத்தகைய மனிதனா வந்திருக்கிறான் என முன்பு தன் தம்பியும் பாட்டனும் அன்பு கூர்ந்து உரைத்ததை இவன் நம்பவில்லை ஆதலால் இப்பொழு தும் அவனினும் வேறான ஓர் அதிசய நிலையினனே என இராமனை இவன் துதி செய்திருக்கிறான்.

பழைய தேவதைகளையெல்லாம் எளிதாக எண்ணிக் களி மிகுத்து வந்தவன் புதுமையை வியந்து புகழ்ந்து பேசினான். அவரால் அடையாத அல்லலையும் அவமானத்தையும் இவனால் அடைந்துள்ளமையால் வியனுக நினைந்து விதந்து புகழ்ந்தான்.

திசைகள்தோறும் வென்று இசைகள்மிகப் பெற்று யாண் டும் எவரும் எதிரில்லை என்று உள்ளம் தருக்கி நின்றவன் உற்ற போரில் இவ் வெற்றி வீரனது வியத்தகு நிலையைக் கண் டதும் வெருவி மறுகி யுள்ளமையால் தன்னை மறந்து உரைகள் பெருகி வந்துள்ளன.

ஒப்பு வேறு உரைக்கலாவது ஒருபொருள் இல்லை; வேதம்
தப்பின போதும் அன்னான் தனு உமிழ் சரங்கள் தப்பா.

கோதண்டவீரனுடைய அற்புத ஆற்றல்களைப் பல வகை யிலும் எடுத்துக் காட்டித் தனித்தனியே பாட்டனிடம் பாராட்டி யிருக்கிறான். வில் எய்வதில் அவன் வல்லபம் எல்லை கடந்துள் ளது; வைத்த குறி தவறியதே இல்லை; உள்ளம் கருதியபடி யெல்லாம் சரங்கள் ஓடி வேலை செய்கின்றன. குறிகளை ஊடுரு

வித் திசைகள்தோறும் சென்று வென்றி வீறோடு அவை விரைந்து வருகிற காட்சிகள் இன்னும் என் கண்கள் எதிரே விளங்கி நிற்கின்றன. ஒரு சிறிதும் தவறாமல் எதையும் ஈடழித்து வருகின்றன என்பான் வேதம் தப்பினும் சரங்கள் தப்பா என்றான். வேதத்தின் நிலைமை நீர்மைகளை நன்கு தெரிந்தவன் ஆதலால் இங்ஙனம் உவமை கூறினான்.

வேதம் தெய்வீகமானது; விதி நியமங்கள் அமைந்தது; மெய்யான பலன்களையுடையது; அது குறித்தது யாண்டும் தப்பாது; அதுபோல் இராமனுடைய அம்பும் திவ்விய மகிமைகள் வாய்ந்து எவ்வழியும் யாதும் பிழைபடாமல் எதையும் அழித்து வரவல்லது என இவ்வாறு செவ்வையாய்த் தெளித்து நின்றான்.

இராம பாணம் தரும நீதிகளுடையது; தீமையை நீக்கி நன்மையைக் காப்பது; என்றும் வென்றி நிலையிலுள்ளது என்னும் உண்மை வேதம் என்றதனால் உணர வந்தது.

“இஷ்டப்ராப்தி அநிஷ்ட பரிஹார பார லௌகிகமுபாயம் யோக்ரந்தோ வேதயதி ஸ வேத:” “இன்பத்தை அடையவும் துன்பத்தை நீக்கவும் மேலான உபாயங்களை அறிவிப்பது எதுவோ அது வேதம்” என இது குறித்துள்ளது. இதனால் வேதத்தின் சீர்மை நீர்மைகளை உணர்ந்து கொள்ளுகிறோம்.

அல்லதை அழித்து நல்லதை நல்கும் வல்லமையுடையது இராம சரம் என்பது வேதம் என்றதனால் இங்கே விளங்கி நின்றது. தனு உமிழ் என்றது வில்லில் இருந்து எல்லையில்லாதபடி எளிதே வெளி வந்த காட்சி விழி தெரிய வந்தது.

என்னைத் தீராத் தற்பத்தைத் துடைத்த.

இராம பாணத்தால் தான் அடைந்துள்ள அனுபவத்தை இங்ஙனம் கிளர்ந்து காட்டினான். ஈசன் கயிலையை எடுத்தேன்; தேவர்களைத் தொலைத்தேன்; உலகங்களையெல்லாம் வென்றேன்; என்னை யாரும் வெல்லமுடியாது; என்று நெடுங்காலமாக இறுமாந்து வந்த எனது உள்ளச் செருக்கு இராமசரங்களால் இன்று அடியோடு அழிந்து ஒழிந்தது என்று இலங்கை வேந்தன் இங்ஙனம் மொழிந்திருத்தலால் அவன் அப்பொழுது இருந்த நிலைமையை நாம் இங்கே நன்கு தெளிந்து கொள்ளுகிறோம்.

தற்பம் = அகங்காரம், கருவம், செருக்கு.

சென்ற இடமெல்லாம் வென்றியே கண்டு வீறுகொண்டு வந்தவன் அன்று இராமனிடம் தோல்வியடைந்து செயல் இழந்து போயுள்ளமையால் அவ்வுண்மையை அயல் அறிய மொழிந்தான். தருக்கு முழுதும் ஒழிந்தது என்பான் துடைத்தது என்றான். நெஞ்சைத் திறந்து நிலைமையை விளக்கி யிருக்கிறான்.

வில் இடத்ததோ? வலத்ததோ? இன்னும் உணர்ந்திலேன்.

போரில் இராமன் பொருதுவந்த கதிவேகங்கள் யாரும் யாதும் கணிக்க முடியாதபடி அதிசயமுடையன வாயிருந்தமையால் அந்நிலைமையை இவ்வாறு துதிசெய்து சொல்லினான்.

தன்தேர் விரைந்து ஓடத் தான் வெகுண்டு பொருதிக்கெல்லாம் அவன் எதிர்ந்து பொருதான்; அவனது கரவேகமும் சரவேகமும் கண்கொள்ளாக் காட்சிகளாய்க் கதித்து நின்றன. "சென்றதிசையெல்லாம் அவன் வென்றிவீரனாய் விளங்கிவரநான் குன்றிவந்தேன்; எல்லா வழிகளிலும் எல்லைதெரியாமல் ஒல்லையில் வேலை செய்துவரும் அவனுடைய வில்லாண்மையின் வல்லாண்மையை விழைந்து நோக்கினேன்; யாதும் தெளிந்து கொள்ள முடியவில்லை; அந்த வில் இடதுகையில் இருந்ததா? வலதுகையில் நின்றதா? என்பதை இன்னமும் என்னால் உணர்ந்து கொள்ள முடியாமல் மயங்குகிறேன்'' என இங்ஙனம் இலங்கை வேந்தன் தியங்கி உரைத்திருத்தலால் அன்று மூண்டபோரில் இந்த ஆண்டகை அமராடியிருக்கும் அதிசயத் திறல்களை ஒருவாறு கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம்.

பலவகையான சாரிதிரிந்து கடுவேகத்துடன் அடுசமராடியிருத்தலால் எதிரி யாதும் நிதானிக்க முடியாமல் நெஞ்சம் கலங்கி யிருக்கிறான். அவனுடைய உள்ளக் கலக்கங்களையெல்லாம் ஒளியாமல் வெளியிட்டுள்ளமை வியப்பாயுள்ளது.

தேர் குதிரை முதலிய வாகன வசதிகள் இராமனுக்கு இல்லை என்று முன்னம் இராவணன் எளிதாக எண்ணியிருந்தான். இன்று போரில் இவ் வென்றி வீரன் ஏறிவந்த ஊர்தி நிலையைக் கண்டதும் அவன் நெஞ்சம் வியந்து நெடுந்திகில் கொண்டான். அங்கே தான் கண்ட காட்சியைப் பாட்டனிடம்

அதிசய பரவசனாய்க் கூறினான். கூறியுள்ள வார்த்தைகள் ஊர்தியின் வீரிய நிலைகளை விளக்கியுள்ளன.

காற்றையே மேற்கொண்டானோ? கனலையே கடாவினானோ?
கூற்றையே ஊர்கின்றானோ? குரங்கின்மேல் கொண்டுநின்றான்.

போரில் இராமன் ஏறிவந்த வாகனத்தின் மாட்சியை இன்னவாறு காட்சிப்படுத்தியிருக்கிறான். வாயுபகவானையே ஊர்தியாக் கொண்டு அவன் ஊர்ந்து வந்துள்ளான் என்று தேர்ந்து கூறியது அந்த வேகத்தின் விசித்திர கதிகளை ஓர்ந்து கொள்ள வந்தது. அக்கினி பகவானையும் எமனையும் ஒக்க நினைந்து பக்கம் உரைத்தான். அழிவு நிலைகளை உரைகள் தெளிவாக்கி நின்றன.

(பிரசண்ட மாருதம் போல் யாண்டும் வேகமாய் உலாவி மூண்ட படைகள் பல மாண்டுவிழும்படி காலால் எற்றிவீழ்த்தி மேல் ஓங்கிப்போயிருத்தலை உவமைகள் உய்த்துணரச் செய்தன.

இராமனது ஊர்தி உருவத்தில் குரங்காயிருந்தது; ஆயினும் அதன் வேகமும் உக்கிர வீரமும் ஊழிக் காற்றையும் ஊழித் தீயையும் யுகாந்த காலத்துக் காலனையும் போல் கடு வேகங்கள் கொண்டு அடுதிறல்கள் மண்டி நின்றன எனத் தான் நேரில் கண்டதை முதியவனிடம் அதிசயமாய்க் கூறினான்.)

காற்று, கனல், கூற்றம் என்றது கடிய வேகத்தோடு கொடிய அடலாண்மைகளையும் கூர்ந்து உணர வந்தது. இத்தகைய ஊர்தியை அக் கொற்றவன் ஊர்ந்து வெற்றி வீரங்களை விளைத்தான் எனப் போர் முகத்தின் விளைவுகளை நேர் முகமாய் விளக்கினான்.

தேர் குதிரை யானைகள் என எனக்கு அமைந்த சேனைகள் யாவும் அவ்வூர்தி மேல் வந்தவன் முன் ஊழிக் காற்றின் எதிரே பூளைப் பூவுகளைப்போல் உதிர்ந்து பாழாய்ப் போயின என்று பரிதபித் திருக்கிறான். அந்தப் பரிதாப நிலைகளை உரைகள் தோறும் உணர்ந்து உறுதி கூர்ந்து வருகிறோம்.

கண்ட அனுபவங்கள் கருத்தில் விருத்தியாகிச் சமையம் நேர்ந்தபோது வாய்மொழிகளாய் வெளி வருகின்றன.

(பொறையினால் உலகம்.

எனச் சீதையை இராவணன் இங்ஙனம் வியந்து புகழ்ந்திருக்கிறான். தான் இழைத்துவரும் அல்லல்களையெல்லாம் பொறுத்துக் கொண்டு சாந்தசீலமாய்ச் சிறையில் அமர்ந்திருக்கிறாள்

ஆதலால் அந்தப் பொறுமையை நினைந்து பொல்லாதவனும் புகழ்ந்தான். "பொன்னின் அழகும் புவிப்பொறையும்" என்றபடி சானகி மன்னியிருந்தலை உன்னி உணர்ந்து கொள்ளுகிறோம்.

> "She sat like patience on a monument,
> Smiling at grief." (Shakespeare)

"துயரத்தைச் சகித்துக்கொண்டு பொறுமையின் சின்னமாய் அவள் அமர்ந்திருந்தாள்" என்னும் இது இங்கே அறிய வுரியது. பிரிவின் துயரால் மறுகிப் பொறையோடு சிறையிருந்த சீதையின் நிறையும் நீர்மையும் நெடும் பரிவுடையன.

> "பொறையிருந்து ஆற்றிஎன் உயிரும் போற்றினேன்
> அறையிரும் கழலவற் காணும் ஆசையால்" (உருக்காட்டு ,11)

சீதை கருதி உருகி மறுகிப் புலம்பி யுள்ளதை இது காட்டி யுள்ளது. கழலவன் என்றது வெற்றி வீரங்களை நினைந்து வந்தது.

இன்னவாறு பொறுமையாய்ப் பரிதபித்து இருந்தாள் ஆதலால் அவளது பொறை நிலையை மிறை புரிந்த அவனும் மிக வியந்து பேசினன். பேச்சு உள்ளம் கடந்து உதித்துள்ளது.

நாய் எனத் தகுதுமன்றே காமனும் நாமும்.

சீதை என்னை யாதும் மதியாமல் யாண்டும் அவமதித்தே நின்றாள். என்னுடைய வீரப் பிரதாபங்களை எவ்வளவோ எடுத்துக் காட்டியும் ஏதும் உள்ளம் கொள்ளாமல் எள்ளி இகழ்ந்தே வந்தாள். அதன் காரணத்தை இன்றுதான் காண நேர்ந்தது: இராமனைக் கண்ட கண்களுக்குக் காமனும் நாயாய்க் காணப் படுவான்; அவனுடைய வீரத் திறலை அறிந்த நெஞ்சுக்கு எந்த வீரனும் இழிவாகவே தோன்றுவான்; வெள்ளி மலையை எடுத்த மகா வீரன் என்று செருக்கியிருந்த என்னை அவள் ஒரு நாய் ஆகவே எண்ணியிருந்தமையால் யாண்டும் இகழ்ந்து தள்ளி வரலானாள் என்று உள்ளி உளைந்து இங்ஙனம் உரைக்க நேர்ந்தான்.

அழகும் வீரமும் இராமனிடம் அதிசய நிலையில் அமைந்துள்ளமையால் மாற்றானும் இவ்வாறு ஏற்றமாத் துதி செய்து நின்றான். அழகின் அதிதேவதையான காமனையும் தன்னோடு சேர்த்துக்கொண்டு பழித்தான். அந்த மன்மதனால் இந்தத் துன்மதி இந்த அவல நிலைக்கு வந்திருத்தலால் அவனையும் இழுத்து இழித்தது நுனித்து நோக்கத் தக்கது. அவன் அழகுக்கு அழிந்

தான்; இவன் வீரத்துக்கு இழிந்தான். தன்னை அரிய அழகன் என்று செருக்கியிருந்த காமனும், பெரிய வீரன் என்று தருக்கி நின்ற இராவணனும் இராமன் எதிரே அவமானமடைந்து நாணியுள்ளனர். அந்த உண்மை ஈண்டு உணர வந்தது.

"புவனம் அனைத்தையும் ஒருதன் பூங்கணையால் உயிர்வாங்கும் அவனும் உனக்கு இளையானோ?" (சூர்ப்பநகை, 132)

என மதனவிதனத்தால் மறுகிநின்ற சூர்ப்பநகை இராமனை நோக்கி முன்னம் இன்னவாறு புலம்பியுள்ளமை ஈண்டு எண்ணியுணர வுரியது. தங்கை அங்கே உருவ அழகில் உருகியழிந்தாள்; அண்ணன் இங்கே வீரத்திறலில் மறுகி இழிந்தான்.

இராமனுடைய பாணப் பிரயோகங்களால் கொடிய துயரங்களை அடைந்து நெடிய அவமானமாய் இராவணன் நிலைகுலைந்து நின்றான் ஆதலால் தீ எனக் கோடிய வீரச் சேவகச் செய்கை என இப்படி உள்ளம் நடுங்கி உரையாடி யிருக்கிறான்.

போர் முகத்தில் நேர்முகமாய் அவன் அனுபவித்த துயரத்துடிப்புகள் எல்லாம் தீ என்ற ஒரு குறிப்பால் தெளிவாக வெளியறிய வந்துள்ளன.

எவ்வழியும் கலங்காத கண்டனை இராவணனுடைய அகங்காரத்தைச் சுட்டு எரித்துச் சுடு சாம்பலாக்கி அவனை அடக்கி ஒடுக்கி இராமனது வீரத்திறல் வெற்றி கொண்டுள்ளதைச் செவ்வையாக ஈண்டு உய்த்துணர்ந்து கொள்கிறோம்.

இதுவரையும் காமத்தீயால் கரிந்து வந்தவன் இன்று வீரத்தீயால் எரிந்து போயிருக்கிறான். தீய்ந்து போயுள்ள அந்நிலைமையை வாய்மொழி தேர்ந்து கொள்ளச் செய்தது. நாய் என்றது இழிவுக்கு ஓர் எல்லை காண வந்தது.

உள்ளம் கூசாமல் உணர்ச்சி மிகுந்து உற்றதை உரைத்திருக்கிறான். கொற்றக் குரிசில் என்று எதிரியைக் கொண்டாடி அவனது வெற்றியை விளக்கி நின்றான்.

இவ்வாறு பலவும் கூறி வந்தவன் முடிவில் முடிவாகக் கூறியது நெடிதுசிந்தித்து நிலைமைகளை ஓர்ந்துகொள்ள நேர்ந்தது.

நாசம் வந்து உற்றபோது நல்லது ஓர் பகையைப் பெற்றேன்.

இந்த வாசகத்தை ஊன்றி நோக்குபவர் அவனுடைய உள்ளத்தில் உறுதி செய்துள்ளதை ஓர்ந்து கொள்ளுவர்.

தனக்கும் தன் குலத்துக்கும் அழிவு நேர்ந்தது என அவன் தெளிவாக முடிவு செய்திருத்தலை இம் முடிவுரை ஒளியாமல் உணர்த்தி நின்றது. நாசம் நேர்ந்தாலும் நல்ல மரியாதையான நிலையில் மூண்டுவந்துள்ளது என ஆறுதலோடு உள்ளம் உவந்து கொண்டது அவனுடைய வீர வாழ்க்கையின் மேன்மையை விளக்கி நின்றது. "வேறு தேவர்களால் இராவணன் மாண்டான் என்ற இழிபழி நேராமல் ஒரு சிறந்த போர் வீரனேடு போராடி இறந்தான் என்னும் உயர்ந்த வாய்ப்பு வாய்ந்துள்ளதே! அதனை நினைந்து நான் உவகை கூர்ந்திருக்கிறேன்" என அவன் உரையாடியிருப்பது ஊன்றி உணரவுரியது.

தனக்குப் பகை இனம் ஆன தேவர்க்கு அரசன் ஆதலால் வாசவனை முதலில் எண்ணினன். வாசவன் = இந்திரன். உயர்ந்த பதவியில் வசிப்பவன் என அவனது தானத்தின் மகிமையை இந் நாமம் உணர்த்தி வந்தது.

தேவர்களை எப்பொழுதும் அடக்கி ஆண்டு வந்தவன் ஆதலால் அந்த இனத்தவரால் தனக்கு அழிவு நேர்வதை இளிவரவாகக்கருதினன். மாயன் அயன் ஈசன் என்னும் இம் மூவரும் தேவருக்கு அனுகூலராயிருந்து வருதலால் அவரையும் அயலாக எண்ணினன். வானவர் ஏவல் செய்ய மேலாக வாழ்ந்து வந்தவன் ஆதலால் அவரை இயல்பாகவே இளிவாக எண்ணி மான வீரங்களோடு உயர்வாக உரையாடினன்.

அன்று போரில் இராமனுடைய வென்றி வீரங்களை நேரே நன்கு தெரிந்து வந்தான் ஆதலால் தான் பொன்றுவது உறுதி என்று திடமாக அவன் முடிவு செய்து கொண்டான்.

பெரிய சுத்த வீரனேடு போராடிச் சாகும்படி நேர்ந்தமையை நினைந்து நெஞ்சம் உவந்திருத்தலால் அவனுடைய வீரப் பிரதாபத்தை நாம் வியந்து கொள்ளுகிறோம்.

நாசம் வந்து உற்றபோது நல்ல பகையைப் பெற்றேன் என்று சொல்லியிருப்பது அவனது உள்ளத் துணிவையும் முடிவையும் உணர்த்தியுள்ளது. அந்தச் சிந்தனையைச் சிந்திக்க வேண்டும்.

தான் அடியோடு அழிந்து படுவது உறுதி என்று தெளிந்து பேசியிருக்கிறான். தனது பொல்லாத தீமைகளையெல்லாம்

அழித்து ஒழித்துத் தனக்கு நல்ல கதியை எதிரி நல்க வந்துள்ளான் என்னும் தொனி நல்ல பகை என்றதில் தனியே தோன்றியுள்ளது.]

ஓர் பகை என்றது ஒப்பற்ற சத்துரு என்றவாறு.

தன்னைத் தவிர இராமனுக்கு வேறு பகை யாதும் இல்லை என்பதையும் அது விளக்கி நின்றது.)

தேவர்களுடைய துயரங்களைத் தீர்த்தருளும்படி அரக்கர் குலத்தை கருவறுக்க உருவெடுத்து வந்திருத்தலால் ஓர்ந்துணரும் பகையாய் அவன் தேர்ந்து கொள்ள நின்றான். அந்நிலை ஓர் என்னும் குறிப்பால் கூர்ந்து உணர வந்தது. வந்துள்ள வீரன் எந்த வகையிலும் தன்னை அடியோடு அழித்தேவிடுவான் என்று தெளித்து நின்றான். தெளிவு விளிவுமேல் விளைந்து வந்தது.

தனக்கு மூண்டிருக்கும் நிலைமையை இன்னவாறு பல வகையிலும் விரித்துப் பாட்டனிடம் இலங்கை வேந்தன் விளக்கியிருத்தலால் அவன் நெஞ்சம் துணிந்துள்ள முடிவுகள் யாவும் நேரே விளங்கி நின்றன.

யாண்டும் யாருக்கும் யாதும் அஞ்சாத தீரனாய் நீண்டிருந்த இராவணன் நிலை குலைந்து நெஞ்சம் தளர்ந்து பேசிய உரைகளை யெல்லாம் பரிவோடு கேட்டுவந்த பாட்டன் உள்ளம் உருகி மீண்டும் சில புத்தி மதிகளை நலமாகச் சொல்லினான்.

மாலியவான் உரைத்தது.

“மன்னர் பெரும! மனம் தளர வேண்டா; நேர்ந்துள்ள நிலைமைகளை யெல்லாம் முன்னம் நேரே தெரியப் படுத்தினேன். என்னை வீணே இகழ்ந்து பழித்தீர்; நல்லது சொன்ன தம்பியையும் எள்ளி விலக்கினீர்! அல்லல்கள் வந்து மூண்டன.

அழிதுயரங்கள் நீண்டு நம் வழி முறைகள் பழியுறும் படி நேர்ந்தன. இன்னும் நாம் உறுதி பெறலாம்; அந்தப் பதிவிரதையை விட்டு விடுக; இராமன் நல்ல நீதிமான்; தருமவான்; அநீதியாக யாதும் செய்யான்; சீதையை விடாமல் இருந்தால் நமது குலம் முழுவதும் நாசமாகி விடும். யோசனை செய்து உடனே உறுதியைத் தேடிக் கொள்ளுக. வேதங்களை யெல்லாம்

ஓதி யுணர்ந்துள்ள உங்களுக்கு யார் போதிக்கவல்லார்? உள்ளப் பாசத்தால் உறுதி நலங்களைச் சொன்னேன்? கருதி யுணர்ந்து விரைந்து காரியம் செய்க. இன்னமும் இகழ்ந்து நின்றால் இன்னலும் பழியும் எய்தி அழிவோம்.''

முன் உரைத் தேனை வாளா முனிந்தனை முனியா உம்பி
இன் உரைப் பொருளும் கேளாய்! ஏதுவுண்டு எனினும் ஓராய்!
நின்உரைக்கு உரை வேறுண்டோ? நெருப்புரைத்தாலும் நீண்ட
மின்உரைத்தாலும் ஒவ்வா விளங்கொளி அலங்கல் வேலோய்!

உளைவரா எனினும் மெய்ம்மை யுற்றவர் முற்றும் ஓர்ந்தார்
விளைவரா சொன்ன போதும் கொள்கிலாய் விடுத்தல் கண்டாய்!
கிளைதரு சுற்றம் வெற்றி கேண்மை நம் கல்வி செல்வம்
களைவரு தானையோடும் கழிவது காண்டி என்றான். (2)

மாலியவான் இவ்வாறு மனம் மறுகி உரைத்திருக்கிறான். வயது முதிர்ந்த அனுபவசாலி ஆதலால் அழிவு நிலைகளைச் சுட்டிக் காட்டிப் பேரனுக்கு ஆர்வமோடு அறிவுறுத்தினான்.

நின் உரைக்கு உரை வேறு உண்டோ?

என்றது மன்னனுடைய வார்த்தைக்கு மாறாக யாரும் யாதும்சொல்ல முடியாது; அத்தகைய உயர்ந்த தலைமையில் இருக்கின்ற அவனுக்கு நிலைமையை வலியுறுத்தி நேரே நீதி சொல்லும் படி நேர்ந்ததே! என்று நெஞ்சம் பரிந்திருக்கிறான்.

நீயே தெரிந்து திருந்த வேண்டியது; நான் உனக்குப் புத்தி சொல்லுவது மிகையாம் என முதியவன் அதி விநயமாய் உரையாடித் தனது மதி மொழிகளை விளக்கி யிருக்கிறான்.

மந்திரி வந்தது.

பாட்டனுடைய இந்த உரைகளைக் கேட்டதும் இராவணன் சிறிது மறுகினான். சிந்தனைகள் செய்தான். நொந்திருந்த அந்த நெஞ்சில் பல பல எண்ணங்கள் எழுந்து விழுந்தன. நிலைமைகளை யெல்லாம் நெடிது நோக்கினான். முடிவில்சீதையை விட்டு விடின் சிறுமை நீர்ந்துவிடும் என்று கருதினான். அவ்வாறு மறுகிக்கொண்டிருக்கும் பொழுது அங்கே முதல் மந்திரி ஆகிய மகோதரன் வந்தான். மாலியவானைச் சினந்து நோக்கிக் கேலியாக இகழ்ந்து பேசினான்: ''வயது முதிர்ந்த நீர் நிலைமை ஒன்

றையும் உணராமல் இங்கே வந்து அவல வுரைகளாடியது தவ றும்" என்று தருக்கி மொழிந்து மன்னனை வணங்கி மனந் துணிந்தபடி பேசினான். "அரக்கர் குலத்துக்கு நாச காலன் போல் வந்து அத் தீயவன் பேசியதில் தீமைகள் ஓங்கி நின்றன.

ஆயவன் உரைத்த லோடும் அப்புறத் திருந்த ஆன்ற
மாயைகள் பலவும் வல்ல மகோதரன் கடிதின் வந்து
தீயெழ நோக்கி என்இச் சிறுமைநீ செப்பிற்று என்ன
ஓய்வுறு சிந்தையானுக்கு உறுதபேர் உறுதி சொன்னான். (1)

நன்றியீ தென்று கொண்ட நயத்தினை நயந்து வேறு
வென்றியே ஆக மற்றுத் தோற்றுயிர் விடுத லாக
ஒன்றிலே நிற்றல் போலாம் உத்தமர்க்கு உரியது ஒல்கிப்
பின்றுமேல் அவனுக் கன்றோ பழியொடு நரகம் பின்னை. (2)

திரிபுரம் எரிய ஆங்கோர் தனிச்சரம் துரந்த செல்வன்
ஒருவனிப் புவனம் மூன்றும் ஓரடி ஒடுக்கிக் கொண்டோன்
பொருதுனக்கு உடைந்து போனார் மானிடர் பொருதபோர்க்கு
வெருவுதி போலும் மானக் கயிலையை வெருவல் கண்டாய்! (3)

வென்றவர்தோற்பர்தோற்றோர்வெல்குவர்;எவர்க்கும்மேலாய்
நின்றவர் தாழ்வா; தாழ்ந்தோர் உயர்குவர்; நெறியும் அஃதே
என்றனர் அறிஞர் அன்றே ஆற்றலுக்கு எல்லை யுண்டோ?
புன்றவர் இருவர் போரைப் புகழ்தியோ புகழ்க்கு மேலோய்!(4)

தேவியை விடுதியாயின் திருமுன் தீமை அன்றேல்
ஆவியை விடுதல் அன்றி அல்லதொன் றுவது உண்டோ?
தாவரும் பெருமை யம்மா நீயினித் தாழ்த்தது என்னே
காவல விடுதி இன்றிக் கையறு கவலை நொய்தின். (5)

இனிஇறை தாழ்த்தி யாயின் இலங்கையும் யாமும் எல்லாம்
கனியுடை மரங்கள் ஆகக் கவிக்குலம் கடக்கும் காண்டி!
பனியுடை வேலைச் சின்னீர் பருகினன் இரவி என்னத்
துனியுழந் தயர்வது என்னே துறத்தியால் துன்பம் என்றான்.

முன்னுனக்கு இறைவரான மூவரும் தோற்றார் தேவர்
பின்னுனக்கு ஏவல் செய்ய உலகொரு மூன்றும் பெற்றாய்
புன்னுனிப் பனிநீர் அன்ன மனிசரைப் பொருள்என் றுன்னி
என்னுனக்கு இளைய கும்ப கருணனை இகழ்ந்தது எந்தாய்! (7)

ஆங்கவன் தன்னைக் கூவி ஏவுதி என்னின் ஐய!
ஓங்கலே போல்வான் மேனி காணவே ஒளிப்பர் அன்றே
தாங்குவார் செருமுன் என்னின் தாபதர் உயிரைத் தானே
வாங்கும்என்று இனைய சொன்னான் அவனது மனத்துட் கொ
[ண்டான். (8)

மகோதரன் வந்து இவ்வாறு பேசியிருக்கிறான். உரைகள் அவனுடைய மன நிலைகளை நன்கு உணர்த்தி நிற்கின்றன. அவன் நல்லகல்வியறிவு வாய்ந்தவன் ஆயினும் பொல்லாத இயல் பினன். தீய வழிகளிலேயே பழகித் தீங்குகளை விழைந்து வந் திருத்தலால் யாண்டும் தீயவன் என நின்றான். எவ்வழியும் வெவ்விய கபட சிந்தனைகளையுடையவன்.

மாயைகள் பலவும் வல்ல மகோதரன் என்றதனால் அவனது வஞ்சச் சூழ்ச்சிகளும் நெஞ்சக் கொடுமைகளும் நிலை தெரிய லாகும். அஞ்சாமை ஊக்கம் முதலிய சில நல்ல இயல்புகளும் அவன்பால் அமைந்திருந்தன எனினும் அவற்றை யெல்லாம் பொல்லாத தீமைகளுக்கே பயன் படுத்தி வந்தான். பேசுவதில் வல்லவன். அவன் சொல்வதை யெல்லாம் அரசன் விழைந்து கேட்டு உவந்து கொள்வான். இலங்கை வேந்தன்பால் பெரு மதிப்புப் பெற்றிருந்தான் ஆதலால் பாட்டன் ஆகிய மாலிய வானையும் இகழ்ந்து பேச நேர்ந்தான். மதிநலமுடைய அம்முதி யவனை வாயடக்கி விட்டு மன்னனை நோக்கி அவன் பேசியிருப் பது உன்னி யுணரவுரியது: "ஒரு காரியத்தை நல்லது என்று துணிந்து கொண்டவன் பின்பு அதனால் என்ன நேர்ந்தாலும் தணிந்து கொள்ளலாகாது. தாம் கருதிக் கைக் கொண்டதை உறுதியாகப் பிடித்துச் சாதிப்பதே உத்தமர்க்கு அழகாம்; சப லமாய்ச் சலித்துக் கைவிடின் பழியும் நரகமும் அவர்க்கு உள வாம். திரிபுரம் எரித்த சிவ பெருமானும் உலகம் முழுவதையும் ஓர் அடியால் அளந்து கொண்ட திருமாலும் பொருமாலுடைய ராய் வந்து புறங்காட்டிப் போயுள்ளார். யாரும் யாதும் செய்ய முடியாதபடி மேலான நிலையில் வீறு கொண்டுள்ள நீங்கள் கீழான இந்தச் சின்னமனிதருக்கு வெருவுவது சிரிப்பைத் தருகி றது. உங்களை நினைந்த போதெல்லாம் கயிலைமலை அஞ்சுகிறது; நீங்கள் மனிதரை நினைந்து அஞ்சுவது மானக்கேடாம். வென்ற

வர் தோற்பர்; தோற்றவர் வெல்வர்; உயர்ந்தவர் தாழ்வர்; தாழ்ந்தவர் உயர்வர்; வலியர் மெலியராய் மெலியர் வலியராய்ச் செல்வர் வறியராய் வறியர் செல்வராய் மாறிமாறி வருவன உலக அனுபவங்களாயுள்ளன. இன்று தோல்வியடைந்த நாம் நாளை வென்று மேன்மைபெறுவோம். என்றும் யாண்டும் கலங்காத தாங்கள் ஈண்டு உள்ளம் உடைந்து புல்லிய மனிதரைப் புகழ்ந்து பேசியது எள்ளலாய் என் உள்ளத்தை வருத்தியுள்ளது. சிறைபிடித்து வந்த சீதையை விடின் தேவர்கள் சிரிப்பர்; பழியும் இழிவும் பெருகி எழும். எதிரிகளுக்குப் பயந்து இலங்கை வேந்தன் கலங்கித் தாழ்ந்தான் என்னும் வசை வையமும் வானமும் பரந்து விடும். தேவியை அயலேவிடுவது ஆவியை விடுவதினும் அவலமேயாம். இன்று தோல்வியுற்றது நாளை வெற்றி பெறுவதற்குரிய ஓர் அறிகுறியே என்று நாம் உறுதி கொண்டு ஊக்கி எழவேண்டும். அயர்ந்து தாமதித்திருந்தால் வானரங்கள் நம் ஊருள் புகுந்து மானக் கேடுகளை விளைத்து விடும். அளவிடலரிய சேனைகளையுடைய நாம் நிலைமையை மறந்து தலைமையை இழந்து தாழ்ந்து நிற்பது கொடிய தவறும். தேவர்கள் ஏவல் செய்ய மூவுலகங்களையும் ஆளுகின்ற தாங்கள் கேவலமான மனிதரைப் பெரிதாக எண்ணநேர்ந்தது பிழைபாடான காலவேற்றுமை என்றே கருதுகின்றேன். காலனும் கண்டு நடுங்குகின்ற தங்கள் அருமைத் தம்பி உரிமைத் துணையாயிருந்தும் அதனை உணர்ந்து கொள்ளாமல் உறுதிகுன்றி மறுகி உளைவது பெரிய வியப்பாயுள்ளது. அந்த வீரத்தம்பியை அழைத்துப் போருக்கு ஏவினால் போதும்; அவரைக் கண்டவுடனே வானரங்கள் யாவும் ஓடி ஒளிந்து போம்; மனிதர் இருவரும் மாண்டு தொலைவர். ஒரு கவலையுமின்றி ஈண்டு நாம் உவந்து வாழலாம்; உணர்ந்து துணிந்து காரியத்தை விரைந்து செய்யுங்கள்'' என இன்னவாறு மன்னன் எதிரே நின்று மகோதரன் பேசி முடித்தான்.

அவனுடைய வார்த்தைகள் இராவணனுக்கு உறுதி உற்சாகங்களை ஊட்டின. மறுகி மயங்கியிருந்தவன் மறுபடியும் திடமாய்ப் பெருகி உரங்கொண்டு ஊக்கி இயங்க நேர்ந்தான்.

வென்றவர் தோற்பர்; தோற்றோர் வெல்குவர்,

என்ற இந்த உரை அவனுக்கு ஒரு நகை உணர்ச்சியை ஊட்டியது. மறுபடியும் அரிய பல ஆயுதங்களோடு போய்ப் போர் புரிந்தால் வெற்றி பெற்றுவிடலாம் என்று விழைந்து எண்ணவே தளர்ந்திருந்த தளர்ச்சி நீங்கியது; கிளர்ச்சி ஓங்கியது.

இன்று வென்ற இராமன் நாளைத் தோல்வி யடைவான்; தோற்ற நீங்கள் கட்டாயம் வெற்றி பெறுவீர்கள் என்று சுட்டிச் சொன்னதுபோல் அவன் கட்டி யுரைத்த உரை அரசனுக்குக் களிப்பை விளைத்து விழிப்புறச் செய்தது.

தேவ தேவர்களையும் வென்று யாவரும் அடிபணிய அரசர் ஏறுய்த் தலைமை பெற்றுள்ள தாங்கள் புலையான புல்லிய ஒரு மனிதனை வெல்ல மறுகி யிருப்பது மாய மயக்கமேயாம் என அத் தீயவன் தெளித்திருப்பது விழித்து நோக்க நேர்ந்தது.

மானக் கயிலையை வெருவல் கண்டாய்! என்றது தனது உக்கிர வீர நிலையை உணர்ந்து மன்னன் உறுதி பெற வந்தது.

ஈசன் மலையும் நிலை குலைந்து வெருவ நிலையான ஆண்மை புரிந்த நீங்கள் ஈசல் போன்ற எளிய மனிதர் இருவர் செய்த போரை நினைந்து உள்ளம் ஊசலாடி உளைவது ஏசலான இழிவு என்பான் மானுடர் பொருத போர்க்கு வெருவுதி போலும்! என்றான். அன்று மூண்ட போரில் இலங்கை வேந்தன் அவலமடைந்து அஞ்சியுள்ள நிலையை இந்த அமைச்சன் வாய்ச்சொல் நெஞ்சறியச் செய்தது. நிலைமையைத்துலக்கி விளைவினை விளக்கினான்.

தேவியை விடுவது ஆவியை விடுவதினும் அவலமுடையது; அவ்வாறு விடின் தேவர்கள் சிரிப்பார்; யாவரும் பழிப்பார்; என்றும் குன்றாத பழியை விளைத்து இருந்து வாழ்வதினும் யாண்டும் இசை பரவ இறந்து போவது நல்லது என அப் பொல்லாதவன் சாதனையாய்ப் போதனை செய்துள்ளான்.

படை எடுத்து வந்த பகைவனுக்கு அஞ்சிச் சிறை எடுத்து வந்த சீதையை விட்டான் என்று பேதை உலகம் பேசிப் பழிக்கும்; அப் பழி படியாமல் எவ்வழியும் திடமாய் நின்று அடலமரே புரிய வேண்டும் என அந்தக் கெடு மதியாளன் பேசியிருப்பது நாசகாலத்தின் வாசகமாய் நின்றது.

மீண்டும் நீங்கள் இனிப் போருக்குப் போக வேண்டிய தில்லை; தம்பி கும்பகருணனை எழுப்பி விட்டால் போதும்; பகைவர் அடியோடு அழிந்தே போவர்; ஒரு கவலையு மின்றிச் சுகமாய் வாழ்ந்திருக்கலாம் என்று இன்னவாறு வகையாய்ச் சொல்லி முடித்தான். முடிவில் சொன்ன அவ் வார்த்தை மன்னனுக்கு விடிவு காட்டி நெடிய மகிழ்ச்சியை ஊட்டியது. தன்னுடைய தம்பி சென்றால் பகைவரை எப்படியும் வென்று விடுவான் என்று நப்பாசையால் நம்பி நின்றான்.

பண்டு முதலே கருதி இறுமாந்து வந்த தனது பெருமித நிலை அன்று போரில் குன்றி அவல மடைந்து நின்றமையால் அரசன் நன்று காண நேர்ந்தான்; அது போது நாச காலன் வந்து வென்றி வீறுகளை விரித்துப் பேசி விபரீதத்தை விளைத்து விட்டான். மாண்ட செருக்கு மீண்டும் மூண்டு நீண்டது.

தேவர் ஏவல் செய்ய உலகு மூன்றும் பெற்றாய்!

இராவணனது தலைமைத் தன்மையையும் நிலைமையையும் இவ்வாறு நினைவுறுத்தி நெஞ்சைப் பேதித் திருக்கிறான். தேவர் யாவரும் ஊழியம் புரிய உன்னத அரசாய் உயர்ந்துள்ள நீர் சின்ன ஒரு மனிதனைப் பெரியவனாக எண்ணி மறுகி ஆலோசிப்பது மாய மான ஓர் அதிசயமா யுள்ளது. முதியவன் பேசிய வார்த்தை களால் மதி மயங்கி யுள்ளாய்! என்று தெரிகின்றது. மயக்கம் தெளிந்து மாட்சியுற வேண்டும்.

"அதிசய ஆற்றலுடைய வீரத் தம்பியை ஏவினால் பகைவர் அடியோடு அழிந்தே போவார். விரைந்து ஏவி வெற்றி பெறுக!" என மகோதரன் கூறிய இவ் வுரைகளைக் கேட்டதும் உறுதி ஊக்கங்கள் பெருகி இராவணன் உவகைமீக் கூர்ந்தான்.

பெறுதியே எவையும் சொல்லிப் பேறிவாள சிரிற்று
அறிதியேஎன்பால்வைத்தஅன்பினுக்குஅவதியுண்டோ?
உறுதியே சொன்னாய் என்னா உள்ளமும் வேறு பட்டான்
இறுதியே இயைவ தானால் இடைஒன்றால் தடையுண்டாமோ?

(துன் மதியான அந்த முதல் மந்திரியின் பேச்சைக் கேட்டு இலங்கை வேந்தன் மனம் திரும்பி மீண்டும் போராட மூண்டு நின்றநிலையை இதனால் உணர்ந்து கொள்கிறோம்.) வினையின் விளை

வுகள் விபரீத நிலைகளில் வளர்ந்து வருகின்றன. விதியின் வழியே மதியும் வாழ்வும் மருவி வருதலை ஈண்டு உறுதியாக உணர நேர்ந்தோம். அழிவு நேர்ந்தபோது தெளிவு தூர்ந்து போகிறது.

தன்னுடைய பாட்டன் உரைத்த அறிவுரைகளையெல்லாம் அறவே மறந்து விட்டு அந்தக் கேட்டாளன் வார்த்தைகளை இந்தக் கெடுமதியாளன் அதிவிரைவில் உவந்து கொண்டான். தீய சூழ்ச்சிகளில் மகோதரன் வல்லவன் ஆதலால் அந்தப் பொல்லாதவன் சொல் அரசன் குடிக்கும் அரக்கர் குலத்துக்கும் அழி கேடாய்க் கொடிய அவலங்களை விளைத்து நின்றது.

துரியோதனனுக்குச் சகுனி வாய்த்தது போல் இராவணனுக்கு மகோதரன் வாய்த்திருந்தான் என்னும் உலக வசனத்தால் கலக நிலைகளில் கதித்திருந்த தியவர் நிலைகளைத் தெளிந்து கொள்கிறோம். அழிந்துபோக நேர்ந்துள்ளமையால் நல்ல போதனைகளை இகழ்ந்து தள்ளித் தியவன் சொல்லில் உள்ளம் மகிழ்ந்து இராவணன் ஊக்கி நின்றான்.

உள்ளமும் வேறு பட்டான் என்றது தோல்வி யடைந்து நொந்தவன் மாலியவானுடைய சொல்லைக் கேட்டுச் சமாதானத்துக்காக இசைந்திருந்த அந்த மனநிலை மாறுபட்டமையை விளக்கி நின்றது. மானச மருமங்களை உரைகளின் தொனிகளால் நுணுகி உணர்ந்து கொள்ளுகிறோம்.

உள்ளமும் என்றதில் உம்மை முன்னம் உரைத்த உரை மாறியதை உணர்த்தி நின்றது. இராமனுடைய வீரப் பிரதாபங்களை வியந்து புகழ்ந்துவந்தவன் அந்தப்புகழ்ச்சி நிலைகள் ஒழிந்து அமைச்சனைப் புகழ்ந்து பேசி உவந்து கொண்டாட நேர்ந்தான். நாச காலம் மூண்டிருத்தலால் நல்லதை ஒல்லையில் மறந்து நவையில் நீண்டு நின்றான்.

### இறுதியேஇயைவதுஆனால்இடைஒன்றால்தடைஉண்டாமோ

இராவணனுக்கு நேர்ந்துள்ள அழிவு நிலையை இது தெளிவாக விளக்கி யுள்ளது. பாட்டன் கூறிய உறுதி மொழிகளால் சிறிது உள்ளம் திருந்தினவன் மகோதரன் சொல்லைக் கேட்டதும் மாறுபட்டு மறுபடியும் பகைமை மண்டிப் போருக்கே துணிந்து பொன்றி முடிய நின்றான் ஆதலால் அவனது அவல நிலையைக் கவலையோடு இவ்வாறு கவி காட்டியருளினார்.

இலங்கை வேந்தன் அடியோடு அழியும்படி மூண்டுள்ளமையால் அவனுக்கு நல்ல புத்தி எழாமல் போயது. தீய ஊழ் அதிவேகமாய் வேலை செய்தலால் பதிநலம் எதையும் கேளாமல் மாண்டுபடவே நீண்டு நின்றான். இறுதி இயைந்தால் இடையே தடை உண்டோ? என்றது ஊழின் உறுதியை உணர்த்தி நின்றது. "சாவாரை யாரே தவிர்ப்பவர்?" என ஔவையார் கூறிய செவ்விய வாய் மொழியும் இங்கே சிந்திக்கத்தக்கது.

நலத்தோடு ஒத்ததை உணராமல் தன் குலத்தோடு செத்து ஒழியவே அவன் துணிந்து நின்றான் என்றது நிலைமைகளை உய்த்துணர்ந்து நேரும் அழிவுகளைத் தெளிந்து கொள்ள வந்தது.

தன்னுடைய தம்பியான கும்பகருணனை அனுப்பினால் பகைவரை அடியோடு வென்று விடுவான்; அதன் பின்பு துன்பமின்றி வாழலாம் என்று நன்கு நம்பினான் ஆதலால் தம்பியை அழைத்து வரும்படி சேனைத் தலைவரை இராவணன் சிறப்புடன் அனுப்பினான்.

நன்றிது கருமம் என்னா நம்பியை நணுக ஓடிச்
சென்றிவண் தருதிர் என்றான்; என்றலும் நால்வர் சென்றார்
தென்றிசைக் கிழவன் தூதர் தேடினர் திரிவர் என்னாக்
குன்றினும் உயர்ந்த தோளான் கொற்றமாக் கோயில்புக்கார்.

இராவணனுடைய கட்டளைப்படியே கும்பகருணனை அழைத்து வரும்படி சென்றவரைக் கவி இங்ஙனம் குறித்திருக்கிறார். குறிப்பு மொழிகள் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வந்தன.

அரசன் உத்தரவு செய்தவுடனே அந்த வீரனுடைய அரண்மனையை நோக்கிச் சேனைத் தலைவர் விரைந்து சென்றனர். சிறந்த மணிமாளிகையில் கும்பகருணன் அதுபொழுது அயர்ந்து உறங்கியிருந்தான் ஆதலால் போனவர் யாதும் செய்ய இயலாதவராய் அயல் ஒதுங்கி பயமுழந்து நின்றனர். பின்பு துணிந்து உள்ளே புகுந்தனர். சங்கு, தாரை, காளம் முதலியவற்றால் ஊதியும் பேரிகை முதலியவற்றை முழக்கியும் எழுப்பினர். அவன் யாதும் எழவில்லை. தம்மால் இயன்றவரையும் பல்வேறு வகையில் முயன்று பார்த்தும் யாதும் பலன் இல்லாமையால் உள்ளம் சலித்து மீண்டு போய் இராவணனிடம் தம்பியின்

உறக்க நிலையைக் குறித்து விளக்கி உரைத்தார். அவன் வெகுண்டு நோக்கி எப்படியும் அடித்து எழுப்பி விரைந்து கொண்டு வாருங்கள் என்று சிறந்த வீரர்கள் பலரை ஒருங்கே சேர்த்து அனுப்பினன். அச்சமும் அவலமும் மண்டி யாவரும் விரைந்து போய் ஆனவரையும் வருந்தி முயன்றனர்.

தென் திசைக் கிழவன் தூதர் தேடினர் திரிவர்.

எனக் கும்பகருணனை எழுப்பச் சென்றவரைக் குறித்து இங்ஙனம் உரைத்திருக்கிறார். எமதூதர்கள் போல் போனர் என்றதனல் கும்பகருணன் இறந்துபட நேர்ந்துள்ளமையைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம். உறங்குகின்ற அந்த வீரனை அநியாயமாய் விரைந்து கொல்லவே பொல்லாத இலங்கை வேந்தன் ஒல்லையில் சேனவீரர்களை ஊக்கி ஏவினன். அவனது ஏவல் தம்பியின் சாவினைத் தலைமேல் கொண்டு சென்றுள்ளது. சென்றவர் சேர்ந்து எல்லா வழிகளிலும் ஆய்ந்து எழுப்பியும் எழாமை கண்டு உள்ளம் கனன்று இருப்புலக்கைகளைக் கொண்டு இரு புறங்களினும் நின்று மாறி மாறி அறைந்து எழுப்பினர்.

உறங்கு கின்ற கும்ப கன்ன உங்கள் மாய வாழ்வெலாம்
இறங்கு கின்றது இன்றுகாண் எழுந்திராய்! எழுந்திராய்!
கறங்கு போல விற்பிடித்த கால தூதர் கையிலே
உறங்குவாய்! உறங்குவாய்! இனிக்கிடந்து உறங்குவாய்!

என்றும் ஈறிலா அரக்கர் இன்பமாய வாழ்வெலாம்
சென்று தீய நும்முனேன் தெரிந்து தீமை தேடினன்
இன்று இறத்தல் திண்ணமாக இன்னும் உன்னுறக்கமே
அன்றலைத்த செங்கையால் அலைத்து அலைத்து உணர்த்தினர்.

கிங்கரர்கள் போய்க் கும்பகருணனை எழுப்பியிருக்கும் திறங்களை இவை உணர்த்தியுள்ளன. எழுப்பப் போனவர்களுடைய உள்ளங்கள் கொதித்துள்ளமையை உரைகள் உணர்த்தியுள்ளன. இரு வரிசைகளாய் நின்று அடிக்கும் அடிகளுக்கு இசைய வார்த்தைகள் ததித்து வந்திருக்கின்றன. சந்தம் படிந்து படித்து நோக்கின் அந்த விந்தையை அறிந்து கொள்ளலாம். நிகழ்ச்சி நிலைகளை ஓசை ஒலிகளால் உணர்த்தி வரும் விசித்திரம் வியந்து சிந்திக்கத் தக்கது. அரசன் ஏவலின்படி காவலர் சென்று கைசெய்து முயன்றுலும் அவருடைய மனவுறுதிகள் தளர்ந்து சினம் மிகுந்து சீறி இகழ்ந்து பேசியிருக்கின்றனர்,

உங்கள் மாய வாழ்வு எலாம் இறங்கு கின்றது.

என்றது அவரது கவலைக் காட்சியைக் காட்டி நின்றது.

"வீணே பெரிய பகையை விளைத்து அரக்கர் குலத்தை அடியோடு பாழாக்குகின்றானே!" என வேந்தனுடைய வெந்திமையை நினைந்து இலங்கை மாந்தர் நொந்துள்ளமையை நேரே தேர்ந்து கொள்ளுகிறோம். முதல் நாள் போரில் படைகள் பல மாண்டுபோனதும், இராவணன் தோல்வியடைந்து அவமானமாய் மீண்டு வந்ததும் அவல நிலைகளும் பொது மக்களுடைய உள்ளங்களில் நெடியகவலைகளை வளர்த்திருக்கின்றன. கொடிய நிலைகளும் சூழ்ந்துள்ளன. அழிவின் முடிவுகள் ஆழ்ந்துநின்றன.

என்றும் தோலாத வென்றி வீரனாய் விளங்கி வீறுகொண்டிருந்த தங்கள் மன்னன் அன்று படுதோல்வி யடைந்து பழியோடு வந்தான்; வந்தவன் பாட்டன் சொல்லியபடி உணர்ந்து இருந்தாமல் மீண்டும் தம்பியைப் போருக்கு அனுப்ப மூண்டுள்ளானே! இது என்ன மதிகேடு! என அவர் இன்னலுழந்துள்ளமையால் பேச்சுகள் ஏச்சுகளாய் வெளி வந்தன. மூண்டுள்ள அழிவு நிலைகளை நெஞ்சம் துணிந்து நேரே பேச நேர்ந்தனர்.

கறங்குபோல வில்பிடித்த காலதூதர் கையிலே
உறங்குவாய்! உறங்குவாய்! இனிக்கிடந்து உறங்குவாய்!

வருத்தமும் வெறுப்பும் அவருடைய மனங்களில் எவ்வளவு புகுந்துள்ளன! என்பதை இவ் வாய் மொழிகளால் உணர்ந்து கொள்கிறோம். "இங்கே கிடந்து ஏன் வீணே இப்படி உறங்குகின்றாய்? நீ போய்ச் சுகமாய் உறங்கவேண்டிய இடம் வேறே உள்ளது; அங்கே போ ஐயனே!" என்று தங்கள் கைகளால் அடித்து இடித்து அலைத்துக் கலைத்து எழுப்பி யுள்ளனர்.

இராம லட்சுமணரைக் காலதூதர் என்று குறித்திருக்கின்றனர். அவருடைய வில் ஆடல்களையும் வல்லாண்மைகளையும் எல்லா வகையிலும் போரில் நேரே அறிந்திருத்தலால் அந்த அதிசய ஆற்றல்களைத் துதி செய்து சொல்லினர். கும்பகருணன் விரைந்து சேத்தே போவான் என்று அவர் உறுதி செய்திருத்தலை உரைகள் ஈண்டு இறுதியான பரிவோடு அறுதியிட்டுள்ளன.

இவ்வாறு உள்ளம் கனன்று உருத்து அடித்தும் அவனை எழுப்ப முடியவில்லை. பின்னரும் பல வகையான படைகளைக் கொண்டுவந்து நெடிது முயன்று கடுமையாகத் தாக்கினர். முடிவில் சிறிது அசைந்தான்; படுத்தபடியே கண்களைத் திறவாமல் துயில் மயலோடு தொடர்ந்து கிடந்தான்; மீண்டும் கடுத்து உணர்த்தினர்; கண்விழித்து எழுந்தான். எழுப்பிய அனைவரும் எமன் எதிரே அஞ்சி நிற்பவர் போல் நெஞ்சம் கலங்கி அடிமிசை விழுந்து தொழுது நின்றனர்; கடிதில் உணவுகள் வந்தன பரிசாரகர் பலபேர் வரிசை வரிசையாய் உண்டிகளை வாரிக் கொண்டு வந்தனர். யாவும் உண்டான். அருந் திறலுடைய அவன் அருந்தியிருந்த நிலை அதிசய கம்பீரமாய்த் துலங்கி யிருந்தது. அந்த இருப்பு வியந்து சிந்திக்க வந்தது.

இருந்த போதும் இராவணன் நின்றெனத்
தெரிந்த மேனியன் திண்கடலின்திரை
நெரிந்த தன்ன புருவத்து நெற்றியான்
சொரிந்த சோரிதன் வாய்வரத் தூங்குவான்.

உறங்கி எழுந்து உணவுகள் அருந்தி மீண்டும் துயில் மயலோடு கும்பகருணன் அமர்ந்திருந்த நிலையை இது குறித்துக் காட்டியுள்ளது. அவனுடைய உருவத் தோற்றம் பெரிய வியப்பினை விளைத்து அரிய ஒரு காட்சியாய் மருவி நின்றது.

இருந்தபோதும் இராவணன் நின்றுளனத்
தெரிந்த மேனியன்.

அவனது உருவ நிலையைக் கவி இவ்வாறு நயமா அளந்து காட்டியிருக்கிறார். இராவணன் இராச கம்பீரமான உயர்ந்த தோற்றம் உடையனாயினும் தம்பியோடு இணைத்து நோக்கும் போழுது அவன் தாழ்ந்தே நின்றுள்ளான்.

கும்பகருணன் கீழே உட்கார்ந்திருந்தாலும் இராவணன் நின்றது போன்ற அவ்வளவு உயரமாய் நிலவித் தோன்றினன். யானை படுத்தாலும் ஆட்டினும் உயரம் என்னும் பழமொழியைக் கிழமையோடு இது நினைவுறுத்தி வந்துள்ளது. பிறப்பில் இளையவன் ஆயினும் உருவம் முதலிய நிலைகளில் இலங்கை வேந்தனினும் கும்பகருணன் சிறப்புடன் உயர்ந்து விளங்கினன்.

நெடிய உறக்கத்திலிருந்து மிகவும் அருமையாக அவன் விழித்து எழுந்த பொழுது வானும் வையமும் கலங்கி நின்றன. அருகே பழகி நின்ற அரக்கரும் எவ்வழியும் வெருவி வேலை செய்தனர்; அதிசய நிலையில் வீறு கொண்டிருந்த அவனைக் காண்பவர் எவரும் கதி கலங்கி மதி கலங்கினர்.

விண்ணினை இடறு மோண்மை விசும்பினை நிறைக்கு மேனி
கண்எனும் அவை யிரண்டும் கடல்களில் பெரியவாகும்
எண்ணினும் பெரியனான இலங்கையர் வேந்தன் பின்னோன்
மண்ணினை அளந்து நின்ற மால்என வளர்ந்து நின்றான்.

மூவகை உலகம் உட்க முரட்டிசைப் பணைக்கை யானை
தாவருந் திசையினின்று சலித்திடக் கதிரும் உட்கப்
பூவுளான் புணரி மேலான் பொருப்பினான முதல்வ ராய
யாவரும் துணுக்குற்றுஏங்க எளிதினின் எழுந்தான்வீரன்.

கும்பகருணன் துயின்று எழுந்த பொழுது உலகம் அடைந்த நிலையை இது உணர்த்தியுள்ளது. பெரிய உருவத் தோற்றமும் அரிய அதிசய வலியும் உடையவன் ஆதலால் அவனால் என்ன விளையுமோ? என யாவரும் உள்ளி உளைந்து இன்னலுழந்தனர்.

பூவுளான் = பிரமன்.

புணரிமேலான் = திருமால்.

பொருப்பினான் = சிவபெருமான்.

இருப்பிடங்களால் குறித்துக் காட்டியது சிறப்பு நிலைகளைக் குறிப்போடு தெளிந்து கொள்ள. தேவரும் அஞ்ச மூவரும் சிந்தனை செய்யும்படி கும்பகருணன் எழுந்தான் என்றதனால் அவனுடைய அடலாண்மைகளும் அதிசய ஆற்றல்களும் அறிய வந்தன. அரிய பெரிய மாட்சிகள் இங்கே காட்சிகளாயின.

கும்பகருணன்.

இவன் இலங்கைவேந்தனோடு உடன் பிறந்த தம்பி. சிறந்த போர் வீரன். உயர்ந்த நீர்மைகள் பல நிறைந்தவன். இவனுடைய தோற்றமும் எற்றமும் ஆற்றலும் அமைதியும் ஆட்சியும் மாட்சியும் விசித்திரக் காட்சிகளாய் விளங்கி நிற்கின்றன. உறங்கினால் நெடிது உறங்குவதும் விழித்து எழுந்தால் நீண்ட காலம் தூங்காமல் இருப்பதும் இவனிடம் இயற்கை வழக்கங்களாய் எவ்வழியும் தனியே அமைந்திருக்கின்றன.

நாம் பகலில் விழித்து உழைக்கின்றோம்; இரவில் தூங்கிக் கழிக்கின்றோம்; நமது விழிப்பும் உறக்கமும் அடுத்தடுத்து நிகழ்கின்றன. இவனுடைய விழிப்பு உறக்கங்கள் நெடிது கழிந்து நேர்கின்றன. இவ்வளவே வேற்றுமை. நாம் இடையே பகலிலும் தூங்குகிறோம். ஆகவே கணக்கைக் கூர்ந்து நோக்கின் உறக்கத்தில் நம்மினும் கும்பகருணன் குறைந்தவனே யாவன். இவனது தூக்கம் ஒரே சமமான தூக்கமாய் ஆக்கம் நோக்கி அமைந்திருக்கின்றது. இந்த அதிசய உறக்கம் சாபத்தால் நேர்ந்தது என்று சரித்திரம் குறித்துள்ளது. இவன் விழிப்பாயிருந்தால் தேவகுலம் விளிந்துபடும் என்று அஞ்சித் தேவர்கள் செய்த சூழ்ச்சியால் நெடிது துயிலும் அந்தச் சாபம் வாக்குத் தேவியின் வாயிலாய் மேவியது எனக் காவியங்கள் உரைத்திருத்தலால் இம் மான வீரனிடம் வானவர் கொண்டுள்ள அச்சமும் திகிலும் அறிய வந்தன. இவனுடைய மனைவி பெயர் வச்சிர சுவாலை. கும்பன், நிகும்பன் என இரண்டு புதல்வர் இவனுக்குப் பிறந்துள்ளனர். எவ்வழியும் உச்ச நிலையில் இவனுடைய உக்கிர வீர பராக்கிரமங்கள் ஒளிபுரிந்துள்ளன. இடையே துயில் நீங்கி எழுந்த இவன் அயலே நின்றவர்களை இயல்பாக நோக்கினன். "என்னை ஏன் இப்படி இன்னலோடு எழுப்பினீர்கள்?" என்று சுளித்துக் கேட்டான். "அரசே! நம் அரசர் பெருமான் அழைத்து வரும்படி பணித்தார்" என்று அவர் பணிவோடு உரைத்தார். அண்ணன் அழைத்தான் என்றதும் ஆர்வத்தோடு எழுந்தான். தனது மாளிகையை விட்டுப் புறப்பட்டு இராவணனுடைய அரண்மனையை அடைந்தான். தம்பியைக் கண்டதும் அவன் விரைந்து எதிர் வந்து உவந்து தழுவி உபசரித்துத் தனது அரியாசனத்தின் அருகே ஒரு சரியான ஆசனத்தில் இருக்கச் செய்தான். மிகுந்த மரியாதையோடு அண்ணனை வணங்கி இவன் அமர்ந்திருந்தான். மந்திரிகள் பிரதானிகள் யாவரும் மருங்கே மருங்கோடு நின்றனர். உரிய துணைவர் இருவரும் மருவியிருந்த காட்சி அரிய மாட்சியாய்ப் பெருகினின்றது.

## விநயமாய் வினவியது.

தம்பியை நோக்கி உறவுரிமையுடன் இராவணன் அன்புரைகள் ஆடினன். அரிய பல உபசாரங்களோடு இனிய உரைகள்

ஆடிவருங்கால், "என்னை அழைத்த காரணம் என்ன?" என்று தமையனிடம் இவன் அமைதியாய் வினவினான். அவன் உற்றதை உரைத்தான். "மனிதர் இருவரும் வானர சேனைகளோடு வந்து நம் ஊரை வளைந்துள்ளனர்; அவரை அடியோடு கொன்று தொலைத்து வென்றி வீறோடு நீ விரைந்து வரவேண்டும்" என்று வீரவுரிமையோடு காரிய நிலைகளை அவன் விளக்கி உரைத்தான். அவ்வுரைகளைக் கேட்டதும் கும்பகருணன் உள்ளம் திகைத்தான். பரிவு மீதூர்ந்து பரிந்து மொழிந்தான். அப்பொழுது இவன் வாயிலிருந்து வந்த பரிவுரைகள் அரிய பல மானச மருமங்களை வெளி செய்து நின்றன. அயலே வருகின்றன.

ஆனதோ வெஞ்சமம்? அலகில் கற்புடைச்
சானகி துயர்இனம் தவிர்ந்தது இல்லையோ?
வானமும் வையமும் வளர்ந்த வான்புகழ்
போனதோ? புகுந்ததோ பொன்றும் காலமே? [1]

கிட்டியதோ செருக் கிளர்பொற் சீதையை
சுட்டியதோ முனம் சொன்ன சொற்களால்
திட்டியின் விடமன்ன கற்பின் செல்வியை
விட்டிலையோ? இது விதியின் வண்ணமே! (2)

பகைவர் வந்து நம் ஊரை வளைந்திருக்கின்றனர்; நீ விரைந்து சென்று அவரை நீறு செய்து வா என்று வீறோடு கூறிய இராவணனது உரைகளைக் கேட்டதும் கும்பகருணன் இவ்வாறு கூறியிருக்கிறான். உள்ளத்தின் உணர்ச்சிகள் உரைகளில் துள்ளி வந்திருக்கின்றன.

போர் மூண்டதா? என்று பரிவோடு வியந்து கூறிச் சிறிது போது இவ் வீரன் மவுனமாயிருந்துள்ளதை உரையிலிருந்து ஊகமாய் உணர்ந்து கொள்ளுகிறோம்.

போர் மூளாது; சமாதானமே ஆகிவிடும் என உறுதியாய் இவன் கருதியிருந்தான் ஆதலால் போர்மூண்டது என்று தெரிந்ததும் ஆனதோ வெஞ்சமம்! என்று ஆயாசத்தோடு அலறி நின்றான். உரையின் தொனி உள்ளச் செவியில் உணர வுரியது.

"சீதை மகா பதிவிரதை; அந்த உத்தமியின் உள்ளத்தைக் கொதிக்கச் செய்யலாகாது; பிறனது தாரத்தை விரும்புவது பெரும் பாவம்; இது நம் குலத்திற்கே கொடிய கேடாம்; உட

னே சீதையை இராமனிடம் கொண்டுபோய்ச் சேர்த்துவிட வேண்டும்'' என இன்னவாறு பல நீதி நெறிகளை எடுத்துக்கூறி முன்னம் * இராவணனுக்கு இத் தம்பி புத்திமதிகள் போதித்தான்; அந்தப் போதனையின்படி அண்ணன் நடந்திருப்பான் என்று எண்ணிப் படுத்திருந்தான்; விழித்து வந்தபொழுது மாறுபாடு தெரிய வந்தது; தெரியவே ஆனதோ வெஞ்சமம் என்று பரிதாபத்தோடு பரிந்து பேசி வருந்தினன்.

சமம் = போர். வெஞ்சமம் என்றது வீணான கொடிய போர் என்று இவன் கருதியுள்ளமை உரையில் வந்தது. தேவர் அசுரர்களோடு மாறுபாடு மண்டி வீரப் போர் புரிவது மேன்மையாம்; பிறனுடைய மனைவியை இச்சித்துக் காமியாய் நின்று போராட மூண்டது மிகவும் கீழ்மையாம் என்று இவன் எண்ணியிருக்கிருன்; அந்த எண்ணங்களின் வண்ணங்களை முன்னம் அறிந்திருக்கிறோம். நல்ல சுத்த வீரன் ஆதலால் உத்தம நீர்மைகளோடு உரையாடி யிருக்கிருன்.

அலகில் கற்புடைச் சானகி துயர் இனம் தவிர்ந்தது இல்லையோ?

இராமபத்தினிபால் இவன் கொண்டுள்ள பரிவும் இரக்கமும் இதனால் அறிய வந்தன. சானகி துயர் நீங்கித் தன் நாயகனோடு சேர்ந்து இனிது வாழ வேண்டும் என்று இவன் கருதியுள்ளமையை உரைகள் இங்கே காணச் செய்கின்றன. அலகு இல் கற்பு என்றது அவளது நிலைமையை நினைந்து.

இராவணன் பலவகையிலும் முயன்று சீதையின் உள்ளத்தைப் பேதித்துப் பார்த்தான்; யாதொரு வழியிலும் பலியாமல் இழிந்து நின்றான் ஆதலால் அந்த உத்தமியின் கற்புத்தன்மையை இப்படிப் புகழ்ந்து துதித்தான். நிலைகுலையாத நிலை தெரிய வந்தது.

அலகு = அளவு, எல்லை. சில கற்புகள் சில சோதனைகளில் உடைந்து போம்; அவை ஓர் அளவும், எல்லையும் உடையன; எவ்வகையிலும் உடையாமல் யாண்டும் செவ்வி தோய்ந்திருந்த தெய்வக் கற்பு ஆதலால் சீதையின் கற்பை அலகில் கற்பு என்ருன். நிலைமைகள் பல நெஞ்சம் தெளிய வந்தன.

* இந் நூல் பக்கம் 3401, முதல் பார்க்க.

மூவுலகங்களையும் ஆளுகின்ற பெரிய சக்கரவர்த்தி அவள் எதிரே படாதபாடுகள் பட்டுப்பல வஞ்சங்கள் புரிந்தும் நிலை குலையாமல் நிலைத்து நிற்கின்றாள்; அந்த நிலைமையை அறிந்து இவன் நெஞ்சம் வியந்திருந்தான்; அவ் வியப்பு ஈண்டு உரையில் வெளியாயது. தவத்தி என்று சீதையை முன்னம் இவன் குறித் திருப்பதும் இங்கே கூர்ந்து சிந்திக்கத் தக்கது. அரிய தவத்தியிடம் கொடிய அவத்தங்களைச் செய்திருப்பது நெடிய தீமையாம் என நினைந்து பரிந்துள்ளமை உணர்ந்து கொள்ள வந்தது.

நிறையும் பொறையும் நெறியும் நீர்மையுமுடைய இத் தகைய ஒரு உத்தமியை விழைந்து பித்த மயக்காய்ப் பிழை புரிந்து வருவது கொடிய பழியோடு குடியும் அழிந்து போம் என்று இவன் முடிவு செய்துள்ளமையால் அண்ணன் இழிந்து அழியாதபடி பலவகையிலும் உணர்வு நலங்களை உரைத்து வந்தான். இன்று முடிவு தெரிந்ததும் நெஞ்சம் உடைந்து நேரே துணிந்து பேச நேர்ந்தான்.

வானமும் வையமும் வளர்ந்த வான்புகழ்
போனதோ? புகுந்ததோ பொன்றும் காலமே.

நீண்ட காலமாக வளர்ந்து வந்துள்ள அண்ணனுடைய புகழ் நிலையையும் இன்று மூண்டுள்ள அழி கேட்டையும் கருதி நொந்து கழிவிரக்கத்தோடு இங்ஙனம் குறித்திருக்கிறான்.

மண்ணும் விண்ணும் வளர்ந்தபுகழ் என்றது எவ்வுலகமும் வியந்து புகழத் தாம் உயர்ந்துவாழ்ந்து வருதலை நினைந்து வந்தது. வானவர் தானவர் யாவரும் வணங்கி ஏவல்செய்யத் திசைகள் தோறும் இசைகள் பரந்து விரியச் சிறந்த செல்வங்களோடு சக்கரவர்த்தியாய் இருந்து வருகிற இந்த இனிய வாழ்வு பாழாய் அழிந்து போக நேர்ந்ததே என்று நெஞ்சம் நொந்து தவித்திருக்கிறான். தன் குடிக்கு நேர்ந்த அழிவுகள் குலைதுடிக்கச் செய்தன.

புகழ் போனது பழி புகுந்தது என்னுமல் பொன்றும் காலம் புகுந்தது என்றது 'அழிவு நிலையை விழிதெரிய விளக்கி ஆவதை உணர்த்தியபடியாம். பொன்றுதல் = அழிதல். நம்குலம் அடியோடு அழியமூண்டுள்ளது ஐயனே! என்று உய்தியுணர உளைந்து பேசினன். அழிவு தெளிவு என்பது விழி தெரிய வந்தது.

ஆனதோ? முதலிய வாசகங்களிலுள்ள ஓகாரங்கள் பரிதாபம் தோய்ந்து வந்திருத்தலை உள்ளச் செவியால் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம். ஓசையுள் உள்ளப்பாசம் ஒளிர்கிறது.

அரக்கர் குலம் அடியோடு அழிய மூண்டுள்ளதை எண்ணி எண்ணி இனைந்து பேசியுள்ளான். அண்ணனுடைய அழிசெயல் அவலமாய் நீண்டுள்ளமையாமல் கவலை மீதூர்ந்து கரைந்து நின்றான். உற்றுள்ள கேடு உயிரை உருக்கியுள்ளது.

திட்டியின் விடம் எனச் சீதையை இப்படிச் சுட்டியிருப்பது ஈண்டு உய்த்துணரத்தக்கது. எவ்வளவு கொடிய நஞ்சையுடையதாயினும் பாம்பு கடித்த போதுதான் கொல்லும்; சீதையைப் பார்த்த அளவிலேயே இராவணன் பாழாய் அழிய நேர்ந்துள்ளமையால் அந்த அழிவு நிலையைப் பரிதாபத்தோடு தெரிய விளக்கினான். திட்டி = பார்வை. கிட்ட நெருங்கித் தொடவில்லை; கண்ணால் மாத்திரம் பார்த்திருக்கிறான்; அவ்வளவிலேயே அழிவு நேர்ந்துள்ளது; இத்தகைய கொடிய திட்டி விடத்தைத் தழுவி மகிழலாம் என்று மையல் மீதூர்ந்து மயங்கியிருப்பது முழு மடமையாம் எனப் பழிபடப் பேசினான். சீதையைக் கண்ணால் கண்ட அளவிலேயே இராவணன் குலத்தோடு நாசம் அடைந்திருக்கிறான்; ஆகவே அவள் திட்டிவிடம் எனநேர்ந்தாள். தன் கண்ணால் பார்த்த அளவில் கொல்லுகின்ற பாம்புக்குத் தான் திட்டிவிடம் என்றுபேர். தன்னைப் பிறன் காதலோடு பார்த்த அளவிலேயே அவன் சாதலை அடைந்திருத்தலை இங்கே சீதையிடம் அறிந்து கொண்டான் ஆதலால் இங்ஙனம் பரிந்து கூற நேர்ந்தான். பரிவுரை பரிதாபம் கலந்து வந்தது.

கற்பின் செல்வியை விட்டிலையோ?
இது விதியின் வண்ணமே!

கும்பகருணனுடைய உள்ளத்துயரத்தை இது தெள்ளத் தெளிய விளக்கியுள்ளது. தாம் அடியோடு அழிந்து போகும்படி விதிசெய்துள்ள சதியே சீதையை இராவணன் விடாமல் வைத்திருக்கிறான் என இத்தம்பி உள்ளம் நொந்து தவித்துள்ளான். அத் தவிப்பு உரையில் விளங்கி நின்றது.

அசகாயசூரனான இவ்வீரன் இவ்வாறு மறுகி நொந்து மேலும் சில உறுதி நிலைகளை உரைத்தான். அண்ணன் எவ்வண்

ணமாவது உண்மை தெளிந்து நன்மை அடைய வேண்டும் என்று உரிமை மீதூர்ந்து இவன் உரையாடியுள்ள மொழிகள் உணர்வின் ஒளிகளாய் வெளிவந்துள்ளன. அவனுடைய உள்ள நிலைகளையெல்லாம் ஓர்ந்து பேசியிருக்கிறான்.

கல்லலாம் உலகினை; வரம்பு கட்டவும்
சொல்லலாம்; பெருவலி இராமன் தோள்களை
வெல்லலாம் என்பதும் சீதை மேனியைப்
புல்லலாம் என்பதும் பொய்யுமாலைய! (1)

புலத்தியன் வழிமுதல் வந்த பொய்யறு
குலத்தியல் பழிந்தது, கொற்றமுற்றுமோ?
வலத்தியல் அழிவதற்கு ஏது மையறு
நிலத்தியல் நீரியல் என்னும் நீரதால். [2]

கொடுத்தனை இந்திரற்கு உலகும் கொற்றமும்
கெடுத்தனை நின்பெருங் கிளையும் நின்னையும்
படுத்தனை பலவகை அமரர் தங்களை
விடுத்தனை வேறினி வீடும் இல்லையால். (3)

தஞ்சமும் தருமமும் தகவுமே யவர்
நெஞ்சமும் கருமமும் உரையுமே நெடு
வஞ்சமும் பாவமும் பொய்யும் வல்லநாம்
உஞ்சுமோ அதற்கொரு குறையுண்டகுமோ? (4)

காலினிற் கருங்கடல் கடந்த காற்றது
போலவன் குரங்குள சீதை போகிலள்
வாலியை உரங்கிழித்து ஏக வல்லன
கோலுள யாமுளேம் குறையுண்டாகுமோ? (5)

என்று கொண்டினையன விளம்பி யானுனக்கு
ஒன்றுளது உணர்த்துவது உணர்ந்து கோடியால்
நன்றது நாயக நயக்கி லாயெனின்
பொன்றினை யாகவே கோடி போக்கிலாய்! [6]

தையலை விட்டவன் சரணம் தாழ்ந்து நின்
மையறு தம்பியோடு அளவளாவுதல்
உய்திற மன்றெனின் உளது வேறும் ஓர்
செய்திறம் உண்டது தெளிந்து கோடியால். (7)

பந்தியிற் பந்தியிற் படையை விட்டவை
சிந்துதல் கண்டு நீ இருந்து தேம்புதல்

மந்திரமன்றுநம் வலியெலாம் உடன்
உந்துதல்கருமமென்று உணரக் கூறினன். (8)

கும்பகருணனுடைய உள்ளக்கருத்துகள் இவ்வாறு துள்ளி வந்திருக்கின்றன. நீண்ட நாளாக நெஞ்சம் வருந்தியிருந்துள்ள நிலைகளையெல்லாம் உரைக் குறிப்புகள் நன்கு உணர்த்தியுள்ளன.

இலங்கை வேந்தனுடைய செயல் இயல்களை அகழ்ந்து காட்டி இகழ்ந்து கூறி இடித்து அறிவுறுத்தி யருளினன். எதிரியை வென்று தான் கருதியபடி இன்பங்களை அனுபவிக்கலாம் என்று அவன் உறுதி பூண்டிருத்தலை அறவே மறுத்து இறுதி மூண்டுள்ளதை அறுதியிட்டு அறிவு கூறியிருக்கிறான். பலவகையிலும் நிந்தனைகள் விளைந்துள்ளதை அவன் சிந்தனை செய்து உணருமாறு தெளிவாக விளக்கிக் கவலைமீதூர்ந்து கடுத்துப் பேசியிருத்தலால் இவனுடைய மனநிலைகளையும் மதிமாண்புகளையும் ஈண்டு இனமாக எண்ணி நாம் உணர்ந்து கொள்ளுகிறோம்.

“அரசர் பெரும! நேர்ந்துள்ள நிலைமைகளை நினைந்து நினைந்து என் நெஞ்சம் வருந்துகிறது. பிறனுடைய மனைவியை விரும்புவது பெரும் பாவம்; கொடும்பழி என்று தாங்கள் உணர்ந்திருந்தாமல் இருப்பது ஊழ்வலி என்றே கருதுகின்றேன். வேதம் முதலிய நூல்களை யெல்லாம் ஓதியுணர்ந்த உங்களுக்குப் பேதை மதியேன் போதனைசெய்ய நேர்ந்தது வேதனையை விளைக்கிறது. அமரரும் ஏவல் செய்யும்படி வாய்ந்த அதிசயமான இந்த அரசவாழ்வு அருந்தவத்தால் கிடைத்தது. இதனைப் பாவத் தீமையால் அழிக்க மூண்டிருப்பது பரிதாபமாய் நீண்டு நிற்கிறது. திட்டி விடம் என்று கருதிச் சீதையை உடனே விட்டு விடவேண்டும்; இல்லையானால் நாமும் நம் குலமும் ஒருங்கே அழிந்துபோவது தெளிந்த உறுதியாம். இராமனை வென்று சீதையை அடைந்து கொள்ளலாம் என்று கருதினால் அது பெரிய மடமையாம். கடலைக் குடிக்கலாம்; மலையை எடுக்கலாம்; உலகத்தை யெல்லாம் ஒருங்கே அடக்கலாம்; வேறு பல அதிசயங்களையும் துணிந்து செய்யலாம்;' ஆயினும் இராமனை வெல்ல முடியாது. அண்ணா! நான் பகைவனைப் புகழ்ந்து சொல்லுவதாக எண்ணலாகாது; உண்மையை உணர்ந்தே சொல்லுகிறேன். பிரமனுடைய பேரன்மார் என்று பெரு

மகிமை பெற்றுள்ள நாம் சிறிய ஒரு தீமையால் சீரழிய நேர்ந்துள்ளோம். புலத்திய முனிவன் வழி புன்மையடைந்தது; நல்ல குலத்தியல்பு பொல்லாத இனத்தால் புலையடைய நேர்ந்தது; நிலத்தின் இயல்பால் நீர் திரிந்ததுபோல் கொடிய இனத்தின் இயல்பால் நீங்கள் இழிந்து நிற்பது என் மனத்தைத் தகித்து வருகிறது. நேர்ந்துள்ள நிலைமைகளைக் கூர்ந்து ஓர்ந்து நெஞ்சம் கவலுகின்றேன். மையல் மயக்கங்களில் மறுகியுள்ள உங்கள் செயல் பல கேடுகளுக்கு இடமாயுள்ளது. அஞ்சி அடங்கி இருந்த இந்திரன் இனி மிஞ்சி அமரர் கோமானாய் அரசு புரிய நேர்ந்தான்; நம் அரசும் கிளையும் குலமும் அழிய நேர்ந்தன; அமரர் யாவரும் ஆரவாரமாய் நம்மை இகழ நீண்டனர்; இவை யாவும் உங்கள் செயலின் பலன்களாய் விளைந்தன. எதிரியாய் மூண்டுள்ள இராம இலக்குவரை வீணே இகழ்ந்துபேசி நம்மை நாமே புகழ்ந்து கொள்ளுவதால் வெற்றியை அடைந்து கொள்ள முடியாது. அவருடைய மனம் மொழி செயல்கள் புனிதம் மிகவுடையன; நம்முடையன பழுது பட்டுள்ளன. அவர் நெஞ்சில் நேர்மையும் வாக்கில் சத்தியமும் செயலில் இனிமையும் வாய்ந்துள்ளனர். நாம் வஞ்சமும் பொய்யும் பாவமும் தோய்ந்திருக்கிறோம். அவரை எப்படி நம்மால் வெல்லமுடியும்? நல்ல நீதியுள்ள இடத்தில் தெய்வம் துணையாய் நின்று உரிமையோடு உதவி புரிகின்றது; பொல்லாத அநீதி எவ்வழியும் புலையாய் இழிந்து ஒழிகின்றது. அழிவு நிலை தெரியாமல் வீணே களி மிகுத்து நிற்பது அவலமேயாம். எதிரியிடம் என்றும் எவரிடமும் காணாத அதிசய ஆற்றல்கள் குடி கொண்டிருக்கின்றன. அவன் ஏவிய ஒரு குரங்கு அரிய பெரிய நெடிய கடலை எளிதே கடந்து வந்து இலங்கை புகுந்து யாண்டும் கலங்காத அரக்கர் திரளைக் கலக்கி அழித்து ஊரைத் தீயைக் கொளுத்திச் சுடுகாடு ஆக்கிவிட்டு வெற்றி வீரனாடு மீண்டு போயுள்ளது. இதைவிட நமக்குப் பழியும் தோல்வியும் இழிவும் வேறு வேண்டுமோ? என்றும் வென்றி வீரனாய் யாண்டும் அதிசய நிலையில் விளங்கியிருந்த வாலியை ஒரே பாணத்தால் இராமன் உயிரை வாங்கியிருக்கிறான். அத்தகைய பாணங்கள் எல்லையில்லாதன அவனிடம் இருக்கின்றன; நாமும் இருக்கின்றோம்; எமனும் இருக்கின்றான்; நமக்குப் பிழைப்பு உண்டு என்று கருதினால் அது ஒரு கொடிய மடமை

யாம். நாம் உயிரோடு பிழைக்க வேண்டுமானால் சானகி இவ் ஊரை விட்டு வெளியே போய்விட வேண்டும். போகவில்லை என்றால் நாம் யாவரும் நேரே சாகவேண்டியதேயாம். ஐயனே! மேலும் விரித்துப் பேசுவதனால் யாதொரு பயனும் இல்லை. நாம் உய்திபெற வேண்டுமாயின் ஒரே ஒரு வழிதான் உள்ளது. அது யாது? சீதையைக் கொண்டுபோய் இராமனிடம் ஒப்பித்துவிட்டு வணங்கி நின்று மன்னிப்புக் கேட்பதேயாம். அக் கேள்வி ஒன்றே நம்மை நம் குலத்தோடு வாழ வைக்கும்; வேறு வழி யாதும் இல்லை ஆதலால் அதனை விரைந்து செய்தருளுக; செய்ய மனம் இல்லையானால் சேனைகளைத் தனித் தனியே ஏவிப் பாழாக்கிப் படுதுயரடையாமல் நாம் எல்லாரும் ஒருங்கே திரண்டு போய் மூண்டு போராடி முடிவு காண வேண்டும். ஈண்டு வேறு ஆலோசனைகளைச் செய்து கொண்டு பொழுதை வீணே கழிப்பது பழுதேயாம்; உண்மையை ஓர்ந்து கூறினேன்; உறுவதைத் தேர்ந்து செய்யுங்கள்!'' என்று இன்னவாறு யாவும் உன்னி உணர்ந்து உறுதி பெறும்படி கும்பகருணன் உரைத்து நின்றான்.

இந்த வீரனுடைய பேச்சில் அரிய பல நீர்மைகள் நிறைந்திருக்கின்றன. பகை உறவு என்று பாராமல் நடுவு நிலைமையோடு முடிவுகளைத் தெளிந்து பேசியிருக்கிறான். உறுதி நிலைகளை வற்புறுத்தி உய்வு காட்டி உணர்த்தியுள்ளது உள்ளத்தின் மாட்சியை விளக்கியுள்ளது.

புலத்தியன் வழிவந்த குலத்து இயல்பு அழிந்தது.

தன் குலத்தின் பெருமையைக் குறித்துக் கும்பகருணன் கருதியிருக்கும் உறுதி நிலையை இதனால் உணர்ந்து கொள்ளுகிறோம். புலத்தியன் என்பவன் அரிய பெரிய தவமுனிவன். பிரமாவின் அருளால் உதித்தவன்.

அண்டர் நாயகன் அணிதிகழ் உந்தியாம் மடுவில்
புண்டரீக நான்முகன் மகன் புலத்தியன்''

என இங்ஙனம் புகழ்மிகப் பெற்றவன். ஞான யோகங்களில் சிறந்து அருந்தவர் யாவரும் புகழ்ந்து போற்ற விளங்கியிருந்த அந்த மகான் குணவதி என்பவளை மணந்து விச்சிரவசு என்னும் புதல்வனைப் பயந்தான். அவன் பருவம் எய்தி வேதம்

முதலிய கலைகளைப் பயின்று தெளிந்து உயர்ந்த தவ சீலனாய் விளங்கியிருந்தான். அந்த உத்தமனை நிருதர் குலமகளான கேகசி ஒரு நாள் கண்டாள். காதல் கொண்டாள்; அம் மாதவன் இம் மாதின் மன நிலையை உணர்ந்து இணங்கினான். இருவரும் கலந்தார்; புதல்வர் மூவரும், புதல்வி ஒருத்தியும் பிறந்தார்; பிறந்த மக்களும் சிறந்த தவங்களைச் செய்து உயர்ந்த அரச வாழ்வை அடைந்தார். சுமாலி என்னும் நிருதர் வேந்தன் மகள் வயிற்றில் பிறந்தமையால் அரக்கர் குலதிலகனாய் இராவணன் சிறப்பு மிகப் பெற்றான். இவ்வாறு உயர்ந்த முனிவன் வழியில் பிறந்து வந்திருத்தலால் புலத்தியன் வழி வந்த குலம் எனத் தம்முடைய குலத்தின் மாட்சியைக் குறித்துக் காட்டினான். "புகழும் புண்ணியமும் நிறைந்த அத்தகைய உத்தமகுலத்தில் பிறந்து வந்துள்ள நீ பழியும் பாவமும் செய்யத் துணிந்தது அந்தோ! கொடிய நிந்தை" எனக் கும்பகருணன் இந்தவாறு சிந்தை நொந்துள்ளான். குலமானம் தலைமை எய்தி நின்றது.

நல்ல குலத்தவனான நீ பொல்லாதவரது சேர்க்கையால் புலைத் தீமைகளைச் செய்யத் துணிந்தாய்! என வையநேர்ந்தான். மகோதரன் முதலிய தீயவர்களோடு சேர்ந்ததனாலேதான் இராவணன் தீயவனாய் இழிந்தான் என்று தம்பி இங்கே கும்பி கொதித்திருக்கின்றான். சிற்றினத்தைச் சேர்ந்து சீரழிந்தான் என இவ் வெற்றி வீரன் வெதும்பி யிருப்பது உய்த்துணர வந்தது.

நிலத்துஇயல் நீர்இயல் என்னும் நீரது.

இனிய நல்ல நீர் ஆயினும் தான் சேர்ந்த நிலத்தின் இயல் பின்படி சுவையும் நிறமும் மாறுபடும்; அதுபோல் நல்ல குலத்தவனாயினும் பொல்லாத இனத்தவரோடு சேர்ந்தால் புன்மையாய்ப் புலையுறுவான் என்பதை உன் நிலைமை நன்கு உணர்த்தியுள்ளது என உள்ளம் கவன்று உரைத்து நின்றான்.

நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு
இனத்தியல்ப தாகும் அறிவு. (குறள்,452)

எனத் தேவர் அறிவுறுத்தியுள்ளதும் இங்கு அறியவுரியது.

மனம் நல்லதாயினும் இனம் தீயதேல் அந்த மனிதன் தீயனாய்த் திரிந்து கெடுவன். மனநலம் போல் இனமும் நலமாயிரு

க்க வேண்டும். மனம் அகத்தும், இனம் புறத்தும் மனிதனைச் செப்பம் செய்து வருகின்றன. தீயஇனம் எவ்வழியும் நோயை விளைத்து வரும் ஆதலால் தீயினும் நஞ்சினும் தீயது என அதனை மேலோர் அஞ்சியுள்ளனர்.

வேதம் முதலிய கலைகளை எல்லாம் ஓதியுணர்ந்து நீதி நெறியில் நிலைத்து நில்லாமல் இராவணன் நிலைதிரிந்துள்ளான்; அதற்குக் காரணம் தீயவர் தொடர்பேயாம். விபீடணன், மாலியவான் முதலிய நல்லவர் சிலர் இதனை எடுத்துக் கூறி நல்லபுத்திகளைப் போதித்து வந்தார்; வந்தும் அவரை உரிமையாக உவந்து கொள்ளாமல் நிந்தனை செய்து விலக்கி விட்டான். கெட்டவர்களையே ஒட்டி நின்று கேடுகள்புரிந்து வந்தமையால் கொடிய நீசம் நெடிது ஓங்கி முடிவாய் நாசம் மூண்டு நின்றது.

பிறனுடைய மனைவியை இச்சியாதே; அது பெரும்பாவம் எனத் தம்பி கும்பகருணனும் முன்பு அன்புடன் கூறினன்; அந்த அறிவுரைகளை யெல்லாம் அவமதித்துக் கொடுமையில் நெடிது நீண்டுள்ளமையால் கடுமையான கேடு வந்தது என்று ஈண்டு வாடி வருந்தி இளையவன் மீண்டும் கடுத்து வைது இடித்து மொழிந்து அடுத்துள்ளதை எடுத்துக் காட்டினன்.

கொடுத்தனை இந்திரற்கு உலகும் கொற்றமும்;
கெடுத்தனை நின்பெருங்கிளையும் நின்னையும்

இந்த வாசகங்கள் எவ்வளவு கடுமையாய் வந்துள்ளன! சிந்தை நொந்து பேசுகின்றான் ஆதலால் முடிவுகளைத் துணிந்து முந்துற உணர்த்தினன். விளைவுகளை விழிதெரிய விளக்கினன்.

விண்ணுலக ஆட்சியை இழந்து இந்திரன் இலங்கை வேந்தனுக்கு நெடுங்காலமா அடங்கி ஆட்செய்து வருகிறான். இராவணன் அழிந்து போக நேர்ந்துள்ளமையால் இனி அவன் வானவர்பதியாய் அந்த மேலானபதவியை அடைந்து கொள்வான். அவ்வாறு அவன் மேன்மை அடைய நேர்ந்தது உன்னுடைய மடமையினலேயாம்; தாழ்ந்து பணிந்து கிடந்த பகைவனை வாழ்ந்து உயர்ந்து கொள்ளச் செய்தாய் என்பான் உலகமும் கொற்றமும் இந்திரனுக்குக் கொடுத்தனை என்றான்.

புண்ணியலோக வாசியான தேவராசனும் ஏவல் செய்யும்

படி மூவுலக ஆட்சியை நீ பெற்றது அரியபெரியபுண்ணியத்தினு லேயாம்; அதிசயமான அந்தப் புண்ணியப் பேற்றை ஒரு பதி விரதையை விரும்பிய பாவத்தால் பாழாக்கி விட்டாயே! என்று அண்ணனை நோக்கி இத் தம்பி பரிதபித்து நொந்திருக்கின்முன்.

அரக்கர்குலம் அனைத்தையும் அடியோடு நாசமாக்கி நீயும் அழிய நேர்ந்துள்ளாயே! என்று விழிநீர் மல்கி விளம்பி நின்முன் ஆதலால் நின்கிளையையும் நின்னையும் கெடுத்தனை என்முன். கிளை என்றதனுல் தன் அழிவையும் தழுவி உரைத்தான்.

முன்னதாக அழிவது குலமும் கிளையும் ஆதலால் அது முதலில் வந்தது. நேர்ந்துள்ள முடிவுகளை ஓர்ந்து கொள்ளும்படி நேரே எடுத்துக் கூறினன்.

குலத்தை அழித்துக் குடியோடு அழிந்து போகவே துணிந்து நிற்கிமுய் அண்ணு! என்று உள்ளமுடைந்து உரையாடியுள்ளான். செயல்களும் இயல்களும் வேதனைகளை விளைத்துள்ளன.

வஞ்சமும் பாவமும் பொய்யும் வல்ல நாம்
உஞ்சுமோ?

நெஞ்சம் வருந்திக் கும்பகருணன் இப்படிப் பேசியிருக்கிமுன். தன் இனத்தின் பிழைபாடுகளைத் தெளிவாக விளக்கி அழிவே அன்றி வேறு வழியில்லை என்று இவன் அலமந்திருத்தலை இதில் அறிந்து கொள்ளுகிமும்.

எதிரிகள் சிறந்த குணசீலர்கள்; உயர்ந்த தருமவான்கள் என்று புகழ்ந்து பேசித் தன்பக்கத்தவரை இகழ்ந்து வெறுத்திருக்கிமுன். எதையும் நேர்மையோடு கூர்மையாக ஓர்ந்து சீர்மை தெரியக் கூறுகிமுன்.

அவருடைய உரை செயல்கள் யாவும் உயர்நலங்கள் உடையன; இதமும் தருமமும் நீதியும் எவ்வழியும் அவர்பால் செவ்வி சுரந்துள்ளன. நம்முடைய மனம் மொழி மெய்களோ யாண்டும் வஞ்சமும் கொடுமையும் பாவமும் படிந்து பாழாயிருக்கின்றன என்று பரிதபித்து மறுகியிருக்கிமுன்.

நெஞ்சங்களில் வஞ்சங்கள் வளர்ந்திருக்கின்றன.
வாய்மொழிகளில் பொய்கள் புலையாடி நிற்கின்றன.
செயல்களில் பாவத்தீமைகள் செறிந்துள்ளன.

மனம் வாக்கு காயங்கள் ஆகிய மூன்று கரணங்களும் இப்படி நீசமாய் நாசமடைந்திருத்தலால் இனிமேல் நாம் சுகமாய் வாழவே முடியாது; பழிதுயரங்களோடு அழிந்தே போவோம் என்று முடிவாய் மொழிந்திருக்கிறான்.

உஞ்சுமோ? என்றதில் ஓகாரம் உய்யமுடியாதுஎன்பதை உணர்த்தி நின்றது. அழிவது உறுதி என்று தெளிவாக்கினன்.

நெஞ்சமும் கருமமும் உரையும்
வஞ்சமும் பாவமும் போய்யும்.

என நிரல் நிரையாய் முறையே உணர்ந்து கொள்ளும் படி வரைந்து காட்டியிருக்கிறான். நெஞ்சை முதலில் குறித்தது எல்லாத் தீமைகளுக்கும் அது நிலைக்களமாயிருத்தல் கருதி. உரையும் செயலும் உள்ளத்தின் படியே வருதலால் தலைமையான அதன் நிலைமையும் வலிமையும் தெரிய வந்தது.

மனம் தீமையாய பொழுது அவர் தீயவராயிழிகின்றார்; அது நன்மையாயபோது யாவரும் நல்லவராய் உயர்கின்றார்.

"மநஸ்யந்யத் வசஸ்யந்யத் கர்மண்யந்யத் துராத்மநாம்;
மநஸ்யேகம் வசஸ்யேகம் கர்மண்யேகம் மகாத்மநாம்."

"துராத்துமாக்களுக்கு மனம் மொழி செயல்கள் தீமையாய் மாறுபட்டிருக்கும்; மகாத்துமாக்களுக்கு அவை நன்மையாய் நேர்மையுற்றிருக்கும்" என்னும் இது இங்கே அறியவுரியது.

கீழோர் இயல்பையும் மேலோர் நிலையையும் இதனால் உணர்ந்து கொள்ளுகிறோம். கீழ்மையான தீமையை இகழ்ந்து, மேன்மையான நன்மையைப் புகழ்ந்து கூறியிருத்தலால் கும்பகருணனுடைய உள்ளப் பான்மையும் உயர் குண மாட்சியும் ஈண்டு உலகறிய வந்துள்ளன.

தீமை நன்மையை வெல்லாது; தீயவர் எவ்வளவு பெருகியிருந்தாலும் இழிந்து அழிந்தேபோவர் என உறுதியாய் இவன் கருதியிருக்கிறான். உள்ளக் கருத்துகள் தெளிவாய் வெளி வந்துள்ளன.

எதிரியினுடைய பெருமைகளை அண்ணன் எதிரே திண்மையாக எடுத்துச் சொல்லி யிருத்தலால் இவனுடைய உண்மை நிலைகளையும் உறுதி நலங்களையும் உணர்ந்து கொள்ளுகிறோம்.

கருங்கடல் கடந்த குரங்கு.

என அனுமானை இவ்வாறு நினைந்து பேசியிருக்கிறான். இத்தகைய அதிசய ஆற்றல்களுடைய வானரங்கள் பல்லாயிரக் கணக்கில் சேனைகளாய்ச் சேர்ந்துள்ளன. ஒரு குரங்கு வந்து இலங்கை புகுந்து செய்த நாச வேலைகளை நினைந்து நினைந்து அரக்கர்குலம் நெஞ்சம் கலங்கியுள்ளது. மேலும் என்ன நேருமோ? என்று யாவரும் மறுகியுள்ளனர்; நீ யாதொன்றையும் கவனியாமல் தீதொன்றியே திமிர் கொண்டு நிற்கின்றாய்! எனத் தலைவனிடம் அமைதியாகத் தகவுரைகளாடி வந்தவன் எதிரியின் அதிசய வெற்றியை ஆவேசமாய்த் துதி செய்து கூறினான்.

வாலியை உரம் கிழித்து ஏக வல்லன
கோல் உள; யாம் உளேம்.

அழிவு நிலையில் தாம் உள்ள இழிவு நிலையை விழி தெரிய இங்ஙனம் விளக்கியருளினான். எவ்வகையிலும் எதிரியை நாம் வென்று வாழமுடியாது; பொன்றி வீழவே நிற்கின்றோம்; இந்த நிலைமையை நன்கு உணர்ந்து உய்தியை உடனே விரைந்து தேடிக் கொள்ளவேண்டும் என்று உறுதியை அறுதியாய் இறுதியில் கூறினான். உய்யவுரிய வழியை விழிதெரிய விளக்கினான்.

தையலை விட்டு அவன் சரணம் தாழ்ந்துநின்
மையறு தம்பியோடு அளவளாவுதல்.

எய்தியுள்ள அபாயம் நீங்கி இராவணன் உய்தி பெற்று வாழ உரிய உபாயத்தை இவ்வாறு உரிமையுடன் உணர்த்தியிருக்கிறான். சிறையில் வைத்துள்ள சீதையை மரியாதையோடு வெளியே விட்டு இராமனை வணங்கிச் சமாதானமாய் இணங்கிக் கொள்வதே நல்லது என்று இப்படி வற்புறுத்தியிருத்தலால் இவனுடைய மனநிலையையும் நீதி நெறியையும் யூக விவேகத்தையும் உணர்ந்து நாம் வியந்து கொள்ளுகிறோம்.

மையறு தம்பி என்று வீடணனைக் குறித்துள்ளமையால் அவன்பால் இவன் கொண்டுள்ள அன்பும் மதிப்பும் அறிய வந்தன. மை = குற்றம். குற்றம் அற்ற குணக் குரிசிலான அந்தத் தம்பியை வெறுத்து வெளியே விரட்டியது கொடிய பாவம்; நெடிய பழி எனத் தன் தமையனுக்கு இத் தம்பி இப்படி அறி

வுறுத்தி யுள்ளான். நீதிமானை அந்த இளவலை மீண்டும் தழுவி அளவளாவ வேண்டும் என்று அன்புரிமையுடன் உளம் உருகிப் பேசியிருக்கிறான்.

பிறப்பின் பாசம் உள்ளத்தைப் பிணித்து நிற்றலை உரைகள் உணர்த்தி நிற்கின்றன. யாவரும் சேமமாய்ப் பிழைத்து வாழும் வழிகளை விழிகள் காண நளினமா விளக்கி நின்றான். செய்துள்ள பிழைகளை யெல்லாம் நீங்கி அண்ணன் உய்தியுறும்படி உரைத்தருளியது இவனது உள்ளத்தின் தகுதியை உணர்த்தி நின்றது. நீதி முறைமைகளைக் கூறி நேரே வாதாடியுள்ளான்.

இராவணன் சீறி வைதது.

நிலைமைகளை நேர்மையாக எடுத்துச் சொல்லி உறுதி நலங்களை உரைத்து வந்த தம்பியை இலங்கை வேந்தன் சினந்து இகழ்ந்தான். எதிரியை இவன் புகழ்ந்து பேசியது அவனுடைய உள்ளத்திற்குக் கொதிப்பை மூட்டியது ஆதலால் நெருப்பை மிதித்தவன்போல் கடுங்கோபமாய் எள்ளி மொழிந்தான்.

உறுவது தெரிய அன்று உன்னைக் கூயது
அறிவுடை அமைச்சன்நீ அல்லை.

தனக்கு நல்லது சொல்லி வந்த கும்பகருணனை நோக்கி இராவணன் இப்படிச் சினந்து பேசியிருக்கிறான். "பெரிய ஆலோசனைகளைச் சொல்லும்படி உன்னை நான் இங்கே அழைக்கவில்லை; சிறந்த மதிமந்திரியைப் போல் நீ நினைந்து பேச நேர்ந்தாய்! யாரிடம் பேசுகின்றோம் என்பதையும் அறியாமல் மரியாதையின்றி மாறுபாடுகள் கூறி நின்றாய்! உயர்ந்த புத்தி போதனைகளை அறிந்து கொள்ளவோ உன்னை ஈண்டு நான் வரும்படி செய்தது? உரிய காரியத்தை உணர்ந்து செய்யாமல் வீணே உளறுகின்றாய்! குலமானம் குன்றி நாணமின்றி நிற்கின்றாய்! வெளியேபோ!" என்று வெகுண்டு கூறி மீண்டும் இகழ்ந்தான்.

மறங்கிளர் செருவினுக்கு உரிமை மாண்டனை
பிறங்கிய தசையொடு நறவும் பெற்றனை
இறங்கிய கண்முகிழ்த்து இரவும் எல்லியும்
உறங்குதி போய்என உளையக் கூறினான். (1)

மானுடர் இருவரை வணங்கி மற்றும்அக்
கூனுடைக் குரங்கையும் கும்பிட்டு உய்தொழில்

ஊனுடை உம்பிக்கு உனக்குமே கடன்
யானது புரிகிலேன் எழுதி போதியால் (2)

தனக்கு இனிய இதங்களை எடுத்துச் சொன்ன தம்பியை இராவணன் இப்படிக் கடுத்து வைதிருக்கிறான். இராச கம்பீரமான மமதையில் மயங்கி இருத்தலால் எதையும் கேளாமல் எவரையும் துச்சமாக எண்ணி இறுமாந்து நிற்கிறான். தான் கருதியதையே பிடிவாதமாய்ச் சாதிக்கும் இயல்பு என்றும் குன்றாமல் இருத்தலால் நீதிக்கு விரோதம் என்று போதித்தபோதும் காதில் ஏருமல் மோதி முனிந்தான். "உனக்குக் குலமானம் இல்லை; போராடலை உல்லாசமான விளையாடலாக உவந்து புரிய வல்ல வீரமரபில் பிறந்தும் போருக்கு அஞ்சி மாறுபட்டு நின்றாய்; வேண்டிய உணவுகளை யெல்லாம் நன்றாக உண்டு விட்டு இரவு பகல் தெரியாமல் உறங்கிக்கிட; எனக்கு யாதொரு உதவியும் நீ புரிய வேண்டாம்; மனிதரை வணங்கிக் குரங்குகளைக் கும்பிட்டு வாழுதல் நன்றி கெட்டு முன்னம் ஓடிப்போன உன் தம்பிக்கும் உனக்குமே உரிமையாம்; எனக்கு அது எவ்வகையிலும் இயலாது. மான வீரனை நான் பகைவரை வேரோடு வென்று சீரோடு வாழ்வதையே யாண்டும் உறுதியாய்ப் பூண்டு ஊக்கி நிற்கின்றேன். நீ இங்கே நில்லாதே! எழுந்து விரைந்து வெளியே போய்விடு!" என்று சீறிச் சினந்து ஆரவாரமாய் அவன் பேசி நின்றான். பேச்சில் ஏச்சுகள் பெரு எழுந்தன.

தசையும் நறவும் உண்டு உறங்குதி போய்! என்றது வசை மொழியாய் வந்தது. வயிறு புடைக்க நன்றாகத் தின்றுவிட்டு உறங்கிக் கிடப்பதே இந்த இராசாங்கத்தில் உனக்கு உரிய தொழில் என்று பரிகாசம் செய்திருக்கிறான். உண்ட சோற்றுக்கும் உதவி செய்யாமல் இரண்டகமாய் எதிர் வாதம் பேசுகின்றான் என முதிர் கோபத்தோடு அவன் மூண்டு வைதிருத்தலை உரைகள் ஈண்டு நீண்டு வெளிப்படுத்தி யுள்ளன.

இவ்வாறு அவன் சீறி இகழவே கும்பகருணனுடைய உள்ளம் கொதித்தது. நாசகாலம் மூண்டுள்ளமையால் நல்லது செவியில் ஏறவில்லை. இனிமேல் வேறு பேசுவது விபரீதமான பிழையாம் என்று ஆறி அடங்கினன். பெரிய போர் வீரனுக்கு உரிய நீர்மையை நேரே காட்டினன். தனது மேலான சூலா

யுதத்தைக் கையில் எடுத்தான். அண்ணனுடைய காலடியில் விழுந்து தொழுதான். எழுந்து எதிரே நின்றான். "அதிசய மேன்மை வாய்ந்த அண்ணா! சிறியேன் இதுவரையும் தெரியாமல் பேசியதைப் பொறுத்தருளுங்கள். பிழைகளைப் பொறுப்பது பெரியோர் இயல்பு. தாங்கள் ஏவிய பணியை அடியேன் ஆவலோடு செய்ய நேர்ந்துள்ளேன்." என்று இன்னவாறு பணிவோடு பேசி முடித்துவிட்டுத் தான் போகவேண்டியதையும் மேலே ஆகவேண்டியதையும் அன்புரிமையுடன் கூறினான். அந்த உரைகள் உள்ளம் உடைந்து வந்தன. அயலேவருகின்றன.

வென்றிவண் வருவன்என்று உரைக்கிலேன்;விதி
நின்றது பிடர்பிடித்து உந்துகின்றது;
பொன்றுவன் பொன்றினால் பொலன்கொள் தோளியை
நன்றென நாயக விடுதி நன்றரோ? (1)

இந்திரன் பகைஞனும் இராமன் தம்பிகை
மந்திர அம்பினால் மடிதல் வாய்மையால்;
தந்திரம் காற்றுறு சாம்பல் பின்னரும்
அந்தரம் உணர்ந்துனக்கு உறுவது ஆற்றுவாய். (2)

என்னைவென்றுளர் எனின் இலங்கை காவல!
உன்னைவென்று உயருதல் உண்மை ஆதலால்
பின்னைநின்று எண்ணுதல் பிழைஅப் பெய்வளை
தன்னைநன்கு அளிப்பது தவத்தின் பாலதே. (3)

இற்றைநாள் வரைமுதல் யான்முன் செய்தன
குற்றமும் உளஎனில் பொறுத்தி கொற்றவ!
அற்றதால் முகத்தினில் விழித்தல் ஆரிய!
பெற்றனன் விடைஎனப் பெயர்ந்து போயினான். (4)

அவ்வழி இராவணன் அனைத்து நாட்டமும்
செவ்வழி நீரொடுங் குருதி தேக்கினான்;
எவ்வழி யோர்களும் இரங்கி ஏங்கினார்;
இவ்வழி யவனும்போய் வாயில் எய்தினான், (5)

(கும்பகருணன் வதை95--99)

இங்கே நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளை நோக்கி நெஞ்சம் இரங்குகின்றோம்! உணர்ச்சி உருக்கங்கள் பரிவுக்காட்சிகளாய்ப் பெருகி நிற்கின்றன. யாண்டும் கலங்காத இராவணனுடைய

கண்களிலிருந்து கண்ணீர் ததும்பி வந்திருத்தலால் உண்ணீர்மைகளை உணர்ந்து கொள்ளுகிறோம்.

நல்ல உறுதிநலங்களைத் தம்பி முதலில் உரைத்துப் பார்த்தான்; அண்ணன் திருந்தவில்லை; அவலநிலையிலேயே நிமிர்ந்து நிற்கின்றான் என்று தெரிந்ததும் மனம் உடைந்து மறுகியுளைந்தான். இனி அவன் துயரடைந்து அழிவதைப் பார்த்திருத்தல் கூடாது; முன்னதாகச் செத்துப் போவதே நல்லது என்று துணிந்து கவலைகளையெல்லாம் அடக்கிக் கொண்டு மறுபடியும் பணிந்து மரியாதையோடு எதிர் நின்று பேச நேர்ந்தான்.

கும்பகருணன் குறித்து மொழிந்தது.

"அண்ணா! தங்கள் கட்டளைப்படி இன்றே நான் போருக்குப் போகின்றேன்! மீண்டு இங்கே வருவேன் என்று சொல்ல முடியாது; பொல்லாத விதி என் பிடரைப்பிடித்துத் தள்ளுகின்றது. ஒரு நல்லகுறியும் உள்ளத்தில் தோன்றவில்லை; நாசங்களே தோன்றுகின்றன; இன்றுநான் இறந்து படுவது உறுதி; சாகவே வேகமாய்ப் போகின்றேன்; நான்செத்துப் போனால் உடனே நீங்கள் ஒன்று செய்யவேண்டும் என்று இப்பொழுதே பணிந்து வேண்டுகின்றேன்; அந்த உத்தமியை உரியவரிடம் கொண்டு போய்ச் சேர்த்துவிடுங்கள்: அவ்வாறு சேர்க்காமல் மறுபடியும் தாமதித்திருந்தால் நம்குலம் முழுவதும் அழிந்தே போகும். நான்மாண்டு போனபின் இன்னும் போராடிப் பார்க்கலாம் என்னும் ஆசையால் மீண்டும் நமது மூத்தபிள்ளை இந்திரசித்தைப் போருக்கு அனுப்பவே கூடாது; அனுப்பினால் இலக்குவன் அவனைக் கொன்றே விடுவான்; உடன் பிறந்த துணைவர் இருவரை இழந்து வருந்தியுள்ள நீங்கள் புத்திரசோகத்தால் பெருந்துயரம் அடைய நேரிடும். நேர்வதை எதிரறிந்து சொல்லுகிறேன்; படைகள் நம்பால் வெள்ளமாய் உள்ளனவே என்று களித்து நின்றால் அது இளிப்புக்கே இடமாம். பெரிய சூறைக்காற்றின் எதிர்ப்பட்ட சாம்பல் குப்பைகள் போல் அவையாவும் எதிரி எதிரே விரைந்து நாசமடைந்து போம். ஈசன்கைலையை ஊசி வேரோடு எடுத்த தாங்களே சமருக்குப் போனாலும் தவறேயாம். என்னை இராமன் வென்றான் ஆனால் அன்றே உங்களையும் வென்று தொலைத்ததாக உறுதி செய்து

கொள்ளுங்கள். நான் செத்ததோடு நிற்கட்டும்; இழவு என் அளவில் மீருமல் பாதுகாத்துக் கொள்வது நல்லது. நான் இறந்துபட்டேன் என்று கேட்டவுடனே சானகியை விரைந்து கொண்டுபோய் அம்மானவனிடம் விட்டுவிடுவதே மேன்மையாம். மறுபடியும் நசையால் பிடிவாதம் செய்யின் கொடிய வசையேயாம். சிறுவன் நமக்கு இப்படிப் புத்தி சொல்லுகிருனே! என்று சித்தம் கருதலாகாது. நேர்ந்துள்ள நிலைகளை நினைந்து நெஞ்சம் நெடிது கவலுகின்றது; பிறப்பின் பாசம் உள்ளத்தை ஊடுருவிக் கரைத்து வருகிறது. தேவரும் ஏவல் செய்ய வாழ்ந்த அரசு கேவலம் அடைய நேர்ந்ததே! என்று ஓயாமல் ஆவலித்து என் குலை துடிக்கின்றது. கொடிய ஊழ் வினை மூண்டு நெடிய வேலை செய்கின்றது; அடியேன் யாது செய்வேன்? தமையனர் என்ற உரிமையால் நெருங்கிப் பழகி வந்ததில் இதுவரையும் என்னல் ஏதேனும் பிழைகள் நேர்ந்திருந்தால் அவற்றை மன்னித்து மறந்து விடுங்கள். பெற்ற பிள்ளை குற்றம் எத்தனை செய்தாலும் பிதா பொறுத்தருளுவது போல் என்னையும் தாங்கள் சமித்தருளுங்கள். வீரப் பொலிவும் இராச கம்பீரமும் குடி கொண்டுள்ள தங்கள் திருமுக மண்டலத்தைக் கண்டு களிக்கும் பாக்கியம் எனக்கு இன்ருேடு தீர்ந்துபோயதே! அந்தோ! என் செய்வேன்? இனி நின்றுபேசுவது நெடும் பிழை. அண்ணு! இப்பொழுதே போருக்குப் போகின்றேன்; விடை பெற்றுக் கொள்ளுகின்றேன்" என்று இரண்டு கைகளையும் குவித்துத் தொழுது கும்பகருணன் வெளியே போயினன்.

தம்பி மீண்டு போகும் பொழுது இராவணனுடைய கண்களிலிருந்து தாரை தாரையாக நீர் பெருகி மார்பில் வழிந்தோடியது; அங்கிருந்தவர் யாவரும் அழுது நின்றனர். அந்த இராச மாளிகை முழுவதும் சிறிதுபோது யாதொரு ஓசையுமின்றிச் சாவின் அமைதி மேவிச் சோகம் மீதூர்ந்து நின்றது.

நேர்மையும் தீரமும் நிறைந்த பெரிய போர் வீரன். உரிய தமையனிடம் உணர்வு நலங்களைக் கூறி உய்தி நாடினன். அவ் வெய்யவன் கேளாமையால் வேண்டா வெறுப்போடு இவன் போருக்கு மூண்டு புறப்பட்டான். புறப்படும்பொழுது இவன் உரைத்த உரைகள் உள்ளத்தைக் கரைத்து வந்துள்ளன.

வென்று இவண் வருவன் என்று உரைக்கிலேன்

கும்பகருணனுடைய வாயிலிருந்து இந்தமாதிரி வார்த்தைகள் இதுவரை யாண்டும் வந்ததே இல்லை. இவன் போருக்கு எழுந்தால் அசுரர்குலம் பாழாம்; அமரர்குலம் அடியோடு குடிபோய்விடும். அத்தகைய உத்தண்டமான உக்கிர வீரன் ஒரு மனிதனோடு போர் புரிய மூண்டு எழுந்தபோது இப்படிப் பேசியிருக்கிறான். இது ஈண்டு மிகவும் சிந்திக்கத் தக்கது.

வென்று இவண் வருகிலேன் என்றது தோல்வியடைந்து அங்கே செத்தே போவேன் என்பதை உய்த்துணரச் செய்தது. அவண் நேர்வதை நேரே குறித்தான். இவண் = இங்கே.

இந்த அண்மைச்சுட்டு சில உண்மைகளை உணர்த்திநின்றது.

ஒரு கற்பரசிக்குத் தீமை செய்து அதனால் பழியும் பாவங்களும் மண்டி இழிவடைந்துள்ள இந்த இடத்துக்கு மறுபடியும் நான்வந்து சேரேன் என்பது சிந்தை தெளிய வந்தது.

நெடுங்காலமாகப் பெரும்புகழோடு விளங்கிவந்த இலங்கை சீதையைக் கொண்டு வந்து இராவணன் அங்கே சிறைவைத்தபின்பு ஏதங்கள் பல அடைந்து இழிந்து போயுள்ளது. அந்த இழிவு நிலையை ஒழிவு செய்து ஒழுகும்படி தம்பி உணர்த்தியும் அவன் உணராமல் ஊனம்புரிந்துள்ளமையால் அவ்விடம் அவனுக்கு வெவ்விடமாய் நின்றது. ஆகவே இவண் மீண்டு வாரேன் என்று போர்மேல் மூண்டு போகின்றவன் முடிவு செய்து அம்முடிவினை முன்னவனிடம் உணர்த்திக் கொண்டான்.

விதி பிடர்பிடித்து உந்துகின்றது.

ஊழ்வினையை நினைந்து இப்படி நொந்திருக்கிறான்.

தனக்குச் சிறிதும் மனமில்லாத காரியத்தில் செல்ல நேர்ந்துள்ளமையால் விதியின் விளைவு என்று அதன் வலியை வியந்து சொல்ல நேர்ந்தான். தன்னைக் கொல்லும்படி விதி வலிந்து இழுத்துக்கொண்டு போகின்றது என வேகின்ற உள்ளத்தோடு விளம்பியிருத்தலால் அவனது நிலைமையையும் நீர்மையையும் உணர்ந்து வருந்துகின்றோம். அசகாய சூரனுடைய வாயிலிருந்து வெளி வந்துள்ள வாசகங்கள் அரிய பல யோசனைக

ளோடு அடலாண்மைகளும் நிறைந்துள்ளன. எதிர்வதை எதிர் நோக்கி நெஞ்சம் துணிந்து நேரே பேசியிருக்கிறான்.

பொன்றுவன் என்றது தன் சாவைக்குறித்து அவன் உறுதியாகக் கருதியுள்ளமையை வெளிப்படுத்தி நின்றது. மூண்டுள்ள பகைவரோடு போராடி மீண்டு வரமுடியாது; ஆண்டு மாண்டு மடிந்தே போக நேரும் என்று தான் சாக நேர்ந்துள்ளதைத் தமையனிடம் அமைதியாக அறிவுறுத்தியுள்ளான்.

பொன்றினல் பொலன்கொள் தோளியை
நன்றுஎன விடுதி.

இறந்துபோக நேர்ந்துள்ள கும்பகருணன் இராவணனிடம் இந்த வரத்தை வேண்டியிருக்கிறான். பொலன் கோள் தோளி எனச் சீதையை இங்ஙனம் குறித்திருக்கிறான். அவளுடைய அழகு அமைதிகளை நினைந்து வந்தது. பொலன் = அழகு. பொன்னின் சோதிபோல் மின்னி விளங்கும் மெல்லியல் என்பது இச் சொல்லியல்பால் விளங்கியது.

அந்த அழகே இந்த இழவுகளுக்கெல்லாம் காரணம் ஆதலால் அது காண வந்தது. தான் அழிந்துபட்டதோடு அமையட்டும்; அதன்பின் அந்த அழகியை இலங்கையில் வைத்திருக்க வேண்டாம்; உடையவனிடம் உடனே விட்டு விடுவதே நல்லது எனச் சுட்டி உரைத்தான்.

விடுவதே நன்று என்றது விடாமல் மேலும் வைத்திருந்தால் பொல்லாத கேடுகள் எல்லைமீறி விளைந்து விடும் என்பது குறிப்பாய் நின்றது. கெட்டு அழியாதபடி விட்டு விடுக என்றான்.

தான் இறந்துபோனாலும் தன் அண்ணன் சுகமாய்ப் பிழைத்திருக்க வேண்டும் என்னும் பேராவலால் இந்த வேண்டுகோளைச் செய்திருக்கிறான். நாயக! என்று விளித்தது மூன்று உலகங்களுக்கும் தனி நாயகனாய் நின்று வரும் அவனது அரிய மாட்சியை உரிமையோடு காட்சிப்படுத்தி உய்தியை உணர்த்தியபடியாம். நிலைமை தெரிந்து நெடிது வாழ வேண்டினான்.

பெறலருந் திருவினைப் பெற்றுக் கொற்றமுடி மன்னனாய்க் குலாவியுள்ளவன் ஒரு பெண்ணால் இழிந்து பேதையாய் அழிந்து

போகலாகாதே என்று உள்ளம் உளைந்து உரிமை சுரந்து பரிந்து மொழிந்துள்ளமையை உணர்ந்து இரங்குகின்றோம்.

குலமானமும் பிறவிப் பாசமும் இக் குலமகனிடம் நிலையாய் நிலைத்துள்ளன. தான் மாண்டுபோனாலும் தன் குடும்பம் மகிமையோடு வாழ்ந்து வரவேண்டும் என்றே இவன் யாண்டும் ஆவலோடு சூழ்ந்து வேண்டியிருக்கிறான்.

தம்பியாகிய தன்னைப் போருக்கு ஏவியதுபோல் தனது மூத்த மகனை இந்திரசித்தை எதிரிகள்பால் அனுப்பக் கூடாது என்று அண்ணனிடம் மன்றாடி அறிவுறுத்தியுள்ளான். தான் தோல்வி அடைந்து இறந்துபோனால் அடுத்துள்ள அதிசயவீரன் அவனே ஆதலால் அவனை எவ்வகையிலும் அமர் மேல் விடலாகாது; விட்டால் அபாயமேயாம் என்று சுட்டி யுரைத்தான்.

இந்திரன் பகைஞனும் இராமன் தம்பிகை
மந்திர அம்பினால் மடிதல் வாய்மை.

இந்த எச்சரிக்கை வாசகம் மிகவும் சிந்தனை செய்யத் தக்கது. தான் வென்றி அடைந்து மீளமுடியாது; பொன்றி மாளுதல் உறுதி என்று கருதியுள்ளமையால் தான் இறந்து போனபின் மூத்த பிள்ளையை அண்ணன் போருக்கு அனுப்பநேர்வான் என்று தம்பி அனுதாபத்தோடு இதனை உரைத்திருக்கிறான்.

இந்திரன் பகைஞன் என இந்திரசித்தை இவ்வாறு இங்கே குறித்தது அவனுடைய வீரப்பிரதாபத்தையும் வெற்றித் திறங்களையும் நினைந்து. அமரரை எல்லாம் அடங்க வென்று தேவராசனைச் சிறைப்படுத்தி வெற்றி விருது பெற்றுள்ளவனே எனினும் இலக்குவனோடு எதிர்த்து நிற்கமுடியாது; மூண்டு எதிர்ந்தால் மாண்டு மடிந்தேபோவான் என்று உறுதியாக வலியுறுத்தி உண்மையை உள்ளம் தெளிய உணர்த்தியுள்ளான்.

வயதில் இளையவன் ஆதலால் இந்த இராச குமாரனோடு அந்த இளையவனே போராட நேர்வான் என்று யூகித்திருத்தலால் இராமன் தம்பி என உறுதியாக வரைந்து கூறினான். பின்னால் விளைவதை முன்னால் உணர்ந்து உளைந்து மொழிந்துள்ளான்.

தந்திரம் காற்று உறு சாம்பல்.

இராவணனுடைய சேனைகள் இராமன் எதிரே நாசமடைந்து அழியும் நிலைமையை இவ்வாசகம் வரைந்து காட்டியுள்ளது. பிரசண்ட மாருதத்தால் மோதப்பட்ட சாம்பல் புழுதிகளைப்போல் கோதண்ட வீரன் நேரே புகுந்தபோது இலங்கைப் படைகள் எல்லாம் இருந்த இடமும் தடம் தெரியாமல் பாழாய்ப் பறந்துபோம் என்பதை உவமைக்குறிப்பால் உணர்த்திநின்ருன்.

தன்னை இராமன் வென்று விடின் எல்லாவற்றையும் அவன் வென்று கொண்டதாகவே கருதி உடனே சமாதானம் செய்து கொள்ள வேண்டும்; தான் இறந்துபட்டபின் வேறு யாரையும் போருக்கு அனுப்பவே கூடாது என்னும் குறிப்புகள் உரைகள் தோறும் ஊடுருவி வந்திருக்கின்றன.

இராவணன் அழிந்து போகாமல் தெளிந்து வாழ வேண்டும் என்றே பல வழிகளிலும் பரிந்து இத்தம்பி மொழிந்து வருகிருன். இலங்கை காவல! என்றது அந்தத் திவ்விய நகரத்தின் செவ்விகருதி. அமராவதி, அளகை முதலிய போக பூமிகளும் நாணி அயரும்படி அதிசய இன்ப நலங்கள் யாவும் நிறைந்து எல்லா உலகங்களும் புகழ்ந்துவர உயர்ந்து திகழும் இந்த அழகிய இராசதானியைப் பாழாக்காமல் பாதுகாத்து வருக என்று உரிமையோடு பரிவு மீதூர்ந்து கூறினன்.

யாதொரு தீதுமின்றிச் சுகமாய் வாழ வேண்டுமாயின் சீதையை விட்டுவிட வேண்டும் என்று இறுதியில் உறுதியாக வலியுறுத்தினன். கருத்துரை கருதியுணர வந்தது.

பெய்வளை தன்னை அளிப்பது தவத்தின் பாலதே.

சீதையை இராமனிடம் கொடுத்து விடுவது அரிய தவம் செய்து பெரிய பாக்கியத்தைப் பெற்றபடியாம் என இராவணனை நோக்கித் தம்பி இவ்வாறு கூறியிருக்கிருன். கையில் பெய்த வளையல்களை யுடையவள் என அவளைச் சுட்டியுரைத்தது பத்தினித் தன்மையை உய்த்துணர. அந்தப் பதிவிரதையை அளிப்பது அரக்கர் குலம் அழியாதிருப்பதற்கு வழி ஆதலால் அதனை வலியுறுத்தி அவனுடைய உள்ளம் தெளிய உணர்த்தியருளினன்.

நெடுங்காலம் கடுந்தவம் புரிந்தே பெரும் பதவிகளை இராவணன் பெற்றிருக்கிருன். அந்தத் தவப் பேறுகளை யெல்லாம்

இழந்து அவன் அழிந்து போகாமல் இருக்க வேண்டுமானல் சானகியை இராமன்பால் அளிப்பதே ஆதலால் அது தவத்தின் பாலது என வந்தது. அவத்தம் தீர ஆவதை உணர்த்தினன்.

அந்தப் பெண்ணரசியை வெளியே விடுவது உனக்குப் பெரும் புண்ணியமாம் என அண்ணன் எண்ணியுணர்ந்து விரைந்து செய்யும்படி இத் தம்பி பரிந்து கூறியிருப்பது வியந்து சிந்திக்கத்தக்கது. துயர் நீங்கி வாழவுரிய காரணம் காண வந்தது.

நேர்ந்துள்ள அவலங்கள் எல்லாம் பெண்ஆசையாலேயாம்; அந்த ஆசையை அறவே விட்டால் ஒழிய யாவரும் நாசமடை யவே நேர்வர் என்னும் யோசனையை ஆதிமுதலே உரைத்து வரு கிருன் ஆதலால் அதனையே மீண்டும் மீண்டும் வலியுறுத்தி ஈண் டும் உணர்த்தினன். சுகமாய் வாழும் வழி விழி தெரிய வந்தது.

இவ்வாறு அறிவு நலங்களைக் கூறிவந்தவன் இறுதியில்தனது உரை செயல்களில் பிழைகள் நேர்ந்திருந்தால் பொறுதி செய் தருளுக என்று மரியாதையோடு மன்னிப்புவேண்டிப் புறப்படத் துணிந்தான். துணிந்தவன் தமையன் முகத்தை ஆவலோடு உவ ந்து நோக்கினன்; உள்ளம் உருகினன்; அந்தோ! இனி என்று இந்த அண்ணலைக் காண்பது என்று எண்ணி அலமந்தான்; கண்ணீர் மல்கியது; கதறி மொழிந்தான்.

அற்றதால் முகத்தினில் விழித்தல் ஆரிய!

ஐயோ ஐயனே! இனி எந்தப்பிறப்பில் இந்த உன் திருமுகத் தைப் பார்த்து மகிழ்வது? இன்றோடு அற்றதே! என்று தம்பி இப்படி அலறியுள்ளான். மீண்டு வந்து காணமுடியாது; இது தான் கடைசிப் பார்வை என்று உருகிக் கதறியிருக்கிருன்.

முன்னவன்பால் இப்பின்னவன் கொண்டுள்ள பேரன்பும் பெரும்பரிவும் இவ்வுரையால் உலகறிய வந்தன. இவ்வாறு பரிவு டன் தம்பி தொழுதுதிரும்பவே இராவணன் உருகி அழுதான்.

அவ்வழி இராவணன் அனைத்து நாட்டமும்
செவ்வழி நீரொடும் குருதி தேக்கினன்.

என்றதனல் அவன் அழுதிருக்கும் நிலையை அறிந்து கொள்கிறேம்.

கலங்காத கண்டனுடைய கண்களிலிருந்து நீர் பெருகி ஓடி

யிருத்தலால் பிறவிப் பாசத்தின் உருக்கமும் பிரியமும் உணர வந்தன. உள்ளம் உருகவே கண்ணீர் வெள்ளம் பெருகியது.

இவ்வாறு உரிமையுடன் அழுதவன் தம்பியைப் போருக்குப் போகவிடாமல் நிறுத்தி அவன் குறித்தபடியே சீதையைச் சிறை நீக்கி விடுத்து இராமனோடு சமாதானம் செய்திருக்கலாம்.

அவ்வாறு செய்வது தனது பெருமிதத்திற்கு இழுக்கு என்று கருதியுள்ளமையால் பிடித்த பிடியை யாதும் நழுவவிடாமல் யாண்டும் அவன் மூண்டு நின்றான். எவ்வழியும் நிலைமை தாழாமல் தலைமையாகவே வாழ்ந்து வந்தவன் ஆதலால் தாழ்ந்து போவது அவனால் யாதும் முடியாமல் நின்றது.

தமையனிடம் விடை பெற்றுத் தம்பி மீண்டபோது அந்த இராச சபையிலிருந்த யாவரும் பரிவு கூர்ந்து மறுகி நோக்கி உருகி அழுது உளைந்து நின்றனர்.

எவ்வழியோர்களும் இரங்கி ஏங்கினர்.

இவ்வீரனுடைய பிரிவுக் காட்சி எவ்வளவு பரிதாபத்தை விளைத்துள்ளது! என்பதை இது உணர்த்தியுள்ளது. சக்கரவர்த்தியோடு உடன் பிறந்த தம்பி; உக்கிர வீரமுடையவன்; யாண்டும் நேர்மையும் நீதியும் வாய்ந்து யாவரிடமும் நடுவு நிலைமையாய் நீர்மை சுரந்துள்ளமையால் எல்லாரும் இவன்பால் மதிப்பும் பிரியமும் மருவி வந்துள்ளனர். அவ்வுண்மை ஈண்டு வெளிப்பட்டு நின்றது. நல்ல நீர்மைகள் எல்லாரையும் உருக்கியுள்ளன.

## கும்பகருணனும் சிங்கமுகனும்.

அண்ணனுக்குப் புத்திபோதித்த இத் தம்பிபோலவே சிங்கமுகனும் சூரபன்மனுக்குப் புத்தி போதித்திருக்கிறான். தேவர்களைச் சிறையில் வைத்துத் துயர் இழைத்து வந்தமையால் முருகப் பெருமான் அசுர வேந்தன் மேல் போருக்கு எழுந்தருளி வந்தார். அவன் யாதும் மதியாமல் அகங்கரித்திருந்தான். அப்போது தம்பி சிங்கமுகன் அவனுக்கு அறிவுநலங்களைக் கூறினான்.

வான்செய் தேவரை நீ அலைக் கின்றதை மதியா
ஊன்செய் கின்றபல் உயிருக்கும் உயிரதாம் ஒருவன்
தான்செய் கின்றதொல் வரத்தினைத் தான் தவிர்த்திடுமேல்
ஏன்செய் தாய்என வினவியே நிறுவுவார் எவரே?

கெடுதல் இல்லதோர் வளனொடு நீயும்நின் கிளையும்
படுதல் இன்றியே வாழ்தியென்று இன்னன பகர்ந்தேன்
இடுதல் கொண்டிடு சிறையிடைத் தேவரை இன்னே
விடுதல் செய்குதி என்றனன் அறிஞரின் மிக்கான். (2)

[கந்தபுராணம்]

சூரபன்மனை நோக்கிச் சிங்கமுகன் இவ்வாறு உறுதி நலங்களை உணர்த்தியுள்ளான். கெடுத்தனை நின்பெருங் கிளையும் நின்னையும் எனக் கும்பகருணன் உரைத்துள்ளது இதனோடு இணைத்து நோக்கவுரியது. தேவரை விடுதல் செய் என்று அவன் உரைத்தான். தையலை விட்டருள் என்று இவன் குறித்தான். இவ்வாறு உறுவதை உணர்ந்து உய்தியுறும்படி அங்கு அறிவு கூறிய தம்பியை அசுரவேந்தன் சினந்து இகழ்ந்தான்.

தானவர் வழிமுறை தன்னை விட்டனை
வானவர் போன்றனை வன்மை சிந்தினை
மேனிகழ் திட்பமும் விறலும் மாண்டனை
மோனமோடு அருந்தவம் முயலப் போதிநீ! (1)

மறந்தனை இழந்தனை மானம் நீங்கினை
சிறந்திடும் அவுணர்தம் சீர்த்தி மாற்றிடப்
பிறந்தனை ஈண்டொரு பயனும் பெற்றிலை
இறந்தனை போலும்நீ இருந்துளாய் கொலோ? [2]

மந்திரி யாதியால் மற்றிதற்கு நீ
சிந்தையில் வெருக்கொளின் திசைமுகத்தர் போல்
ஐந்தியல் அகங்கம்ஒன்று அங்கை பற்றுதி
வெந்திற லேயெனப் படையும் வீசியே. (3)

கிளைத்திடு கள்ளியின் கிளைகள் ஆமென
வளர்த்தனை பலதலை வரம்பில் கைத்தலம்
நெளித்தனை சுமந்தனை நெடிது காலமா
இளைத்தனை வலியிலா யாது செயதிநீ. (4)

பூதரைத் தலைவரைப் புராரி மைந்தனை
ஏதிலர் யாரையும் யான்வென்று ஏகுவன்
நீதளர் வெய்திடல் நினது மாநகர்
போதுதி என்றனன் புலனில் புந்தியான் (5)

[கந்தபுராணம்]

தனக்கு நீதி கூறிய தம்பியைச் சூரபன்மன் இவ்வாறு மோது முனிந்துள்ளான். மறம்தலை இழந்தனை; மானம்நீங்கினை என அவன் இகழ்ந்து பேசினன்.

மறம்கிளர் செருவினுக்கு உரிமை மாண்டனை! என்று இராவணன் சினந்து கூறினன். சரித நிலைகளும் உரைகளும் நிறையொத்துள்ளதை இப் பகுதியில் இணைத்து நோக்கி இயல்புகளை உணர்ந்து கொள்ளுகிறோம். கதை நிகழ்வில் ஒருமை காணினும் கவிகளின் சுவைகளில் நுகர்வு காண்பது அரிய கலையாம். அறிவின் ரசனைகள் அதிசய போகங்களாயுள்ளன.

உறங்குதி போய்! என்று அண்ணன் இகழ்ந்து மொழிந்த பொழுது கும்பகருணனுடைய உள்ளம் துடித்தது; முடிவு நேர்ந்தது என்று கருதி அடங்கித் திருந்திய பண்போடு அன்பு கனிந்து பேசி அவன் விடை பெற்று மீண்டது அரிய பெருந் தன்மைகளை விளக்கிப் பெரிய பரிவுக் காட்சிகளாய்ப் பெருகியுள்ளது.

## கும்பகருணன் போருக்கு எழுந்தது.

அண்ணனிடமிருந்து மீண்டு வந்தவன் தனது அரண்மனையை அடைந்தான். போர்க்கோலம் பூண்டான். வெளியே வந்தான்; உரிய படைகள் யாவும் பெருகி எழுந்தன. தனது அரிய தேரில் இவன் விரைவில் ஏறினன். சேனைத் திரள்கள் யாவும் ஆரவாரித்தன. நால்வகைப் படைகளும் நூல் வகுத்தபடி அணிவகுத்து நடந்தன. கடல்போல் புடை சூழ்ந்து முன்னும் பின்னும் படைகள் செல்லப் பொன்மயமான சிறந்த இரதத்தில் ஒரு கருமலைபோல் கம்பீரமாய் அமர்ந்து திரிசூலத்தைக் கையில் ஏந்திப் போர்மேல் சென்ற இவ் வீரனது பராக்கிரம நிலைகளை நோக்கி அமரர்களும் அஞ்சினர்; பலர் தமது தமர்களோடு அரிய புகலிடங்களை நாடி அயலே ஓடினர்.

தேர்செலக் கரிசெல நெருக்கிச் செம்முகக்
கார்செலக் கைசெலப் புரவிக் கால்செல
தார்செலக் கடைசெலச் சென்ற தானைஅப்
பார்செலற் கரிதென விசும்பில் பாய்ந்ததால். (1)

தோமரம் சக்கரம் சூலம் கோல்மழு
நாமவேல் உலக்கைவாள் நாஞ்சில் தண்டெழு

வாமவில் வல்லையம் கணையம் மற்றுள
சேமவெம் படையெலாம் சுமந்து சென்றவால். (2)

கணந்தரு குரங்கொடு கழிவ தன்றிது
நிணந்தரு நெடுந்தடிக் குலகு நேருமோ
பிணந்தலைப் பட்டது பெயர்வ தெங்கினி
உணர்ந்தது கூற்றமென்று உம்பர் ஓடினர், (3)

சேனைகளோடு கும்பகருணன் தேர் ஏறிச் செருக்களம் செல்வதைக் கண்டதும் தேவர்கள் அல்லலடைந்து அலமந்து ஓடியிருக்கின்றனர்: அவ் ஓட்டம் இவனுடைய அடலாண்மைகளையும் அதிசய ஆற்றல்களையும் உணர்த்தி நின்றது. வானரங்களோடு அமையாது; வானவர் உலகம் யாவும் பாழாகி விடும் என்று இவனது படையெழுச்சியை நோக்கித் தேவர் முதல் யாவரும் பயந்துள்ளனர். நெடியதேர் கடிது விரைந்து களம் நெருங்கியது. கடல் பொங்கிவருவது போல் அடல் மண்டி வந்த ஆரவார நிலையை இராமன் கண்டான். விழைந்து நோக்கி வியந்து நின்றான். வருவது யார்? என்று கருதி விரைந்தான்.

வினவி அறிந்தது.

அதிசய நிலையில் அமரரும் நடுங்கக் கதிவேகங்களோடு வருகிற இவன் யாவனோ? என்று சிறிது போது கருதி ஆராய்ந்து அயலே நின்ற வீடணனை நோக்கி "யார் இது?" என்று பேர் முதலியன தெரிய வீரவள்ளல் விநயமாய் வினவினான்.

பாந்தளின் நெடுந்தலை வழுவிப் பாரொடும்
வேந்தென விளங்கிய மேரு மால்வரை
போந்தது போல்பொலந் தேரில் பொங்கிய
ஏந்தலை ஏந்தெழில் இராமன் நோக்கினான். [1]

தோளொடு தோள்செலத் தொடர்ந்து நோக்குறின்
நாள்பல கழியுமால் நடுவண் நின்றதோர்
தாளுடை மலைகொலாம் சமரம் வேட்டதோர்
ஆளென உணர்கிலேன் ஆர்கொலாம் இவன்? (2)

எழுங்கதி ரவனொளி மறைய எங்கணும்
விழுங்கிய திருளிவன் மெய்யினால் வெரீஇப்
புழுங்கிய நம்படை இரியல் போகின்றது
அழுங்கலில் சிந்தையாய்! யார்கொலாம் இவன்? [3]

கும்பகருணனுடைய வரவைக் கண்டு வியப்பும் விம்மிதமும் கொண்டு இராமன் இப்படி வினவியிருத்தலால் வந்துள்ள அவனது உக்கிரவீர நிலைகளை உணர்ந்து கொள்கிறோம். மருவி நின்ற உருவத் தோற்றம் பெரிய வியப்பையும் நெடிய திகைப்பையும் விளைத்துள்ளது. நீள நோக்கி நெடிது வியந்துள்ளான்.

ஒரு தோளோடு மற்று ஒரு தோளைத் தொடர்ந்து பார்ப்பதற்கு நாள்பல கழியுமால் என்றது எவ்வளவு அதிசயம்? அகன்று விரிந்து நிவந்து படர்ந்துள்ள மார்பின் மாட்சி இவ்வாறு காட்சிக்கு வந்துள்ளது. தோளைப் பார்த்தே ஆளை வியந்திருக்கிறான். கரிய ஒரு பெரிய மலைபோன்ற உருவ நிலையைக் கரிய செம்மல் கண்டு அதிசயமடைந்துள்ளது அரிய காட்சியாய் நின்றது. சிறந்த தேகவன்மையும் உயர்ந்த போர்வீரமும் ஒருங்கு வாய்ந்தவன் சேனைத்திரள்களோடு சமரபூமியின் மருங்கு வரவே நெடிய போர் நேர்ந்தது என்று கடிது துணிந்து கோதண்டவீரன் விரைந்து விழைந்து இனந்தெரிய விசாரித்து நின்றான்.

வந்தவன் நிலையைச் சிந்தை தெளியும்படி தன்னை நோக்கிக் கேட்கவே விபீடணன் வணங்கி நின்று பதில் மொழிந்தான். அவனுடைய உரைகளால் அரிய பல உண்மைகள் தெரிய வந்தன. பரிவும் பண்பும் வாய் மொழிகளில் பெருகி எழுந்தன.

வீடணன் கூறியது.

*ஆரியன் அனைய கூற அடியிணை இறைஞ்சி ஐய!*
*பேரியல் இலங்கை வேந்தன் பின்னவன் எனக்குமுன்னோன்*
*காரியல் காலன் அன்ன கழற்கும்ப கருணன் என்னும்*
*கூரிய சூலத்தான் என்று அவன்நிலை கூற லுற்றான்.* (1)

*தவனுணங்கி யவரும் வேதத் தலைவரும் உணரும் தன்மைச்*
*சிவனுணர்ந் தவரின் மேலைத் திசைமுகன் உணரும் தேவன்*
*அவனுணர்ந் தெழுந்த காலத்து அசுரர்கள் படுவர் எல்லாம்*
*இவனுணர்ந்து எழுந்த காலத்து இமையவர் படுவர் எந்தாய்!*

பொருகளம் நோக்கி வருகின்றவன் யார்? என்று தன்னை நோக்கி இராமன் கேட்ட கேள்விக்கு விபீடணன் இன்னவாறு பதில் உரைத்திருக்கிறான். "இலங்கை வேந்தனுக்குத் தம்பி; எனக்கு அண்ணன்; கும்பகருணன் என்னும் பேரினன்; பெரிய போர்வீரன்; அரியசூலத்தையுடையவன்; இமையவர் எவரையும்

எளிதேவென்றவன்; சிறந்த வரபலங்கள் வாய்ந்தவன்; நிறைந்த நீர்மைகள் தோய்ந்தவன்" என அவனது கேண்மை ஆண்மை மேன்மை முதலிய நிலைகளை விளக்கி நேரே யுரைத்தான்.

இலங்கை வேந்தன் பின்னவன்; எனக்கு முன்னோன்.

எனப் பிறப்புரிமையை முதலில் துலக்கினான். தனக்கு இனிய தமையன் என்பதை அமைதியாக் குறித்திருப்பது ஆழ்ந்து சிந்திக்கவுரியது. அதிசய ஆற்றல்கள் மதி தெளிய வந்தன.

திருமால் எழுந்தால் அசுரர் குலம் அழியும்;

இவன் எழுந்தால் அமரர்குலம் அழிந்துபடும்.

என்றது கும்பகருணனது அதிசயமான வீரப் பிரதாபங்களை உணர்ந்து கொள்ளவந்தது. தேவதேவனை திருமாலோடு ஒத்த நிலையில் எண்ணத்தக்கவன் என்பதை உய்த்துணர வுரைத்தான். உரைக்குறிப்புகள் உரிய நீர்மைகளை உணர்த்தி நின்றன.

அவன் நீரில் துயில்பவன்.
இவன் நிலத்தில் துயில்பவன்.
அவன் சக்கராயுதத்தை யுடையவன்.
இவன் சூலாயுதத்தை யுடையவன்.
அவன் அசுரர்குல காலன்.
இவன் அமரர்குல காலன்.

இன்னவாறு இயலும் செயலும் இசைந்திருத்தலால் திருமாலோடு நேராகக் கும்பகருணனை இசைத்து உரைத்தான். பின்பு அவனுடைய வரபலங்களையும் வீரப் பிரதாபங்களையும் குண நிலைகளையும் விரித்து விளக்கினான்.

ஆழியாய்! இவன் ஆகுவான்
ஏழைவாழ் வுடை எம்முனோன்
தாழ்விலா ஒரு தம்பியோன்
ஊழிநாளும் உறங்குவான். (1)

தாங்கு கொம்பொரு நான்குகால்
ஓங்கல் ஒன்றினை உம்பர்கோன்
வீங்கு நெஞ்சன் விழுந்திலான்
தூங்க நின்று சுழற்றினான். (2)

கழிந்த தீயொடு காலையும்
பிழிந்து சாறுகொள் பெற்றியான்,
அழிந்து மீளுக ஆழிநீர்
இழிந்து காலினில் ஏறுவான். (3)

ஊனுயர்ந்த உரத்தினன்
மேனி மிர்ந்த மிடுக்கினன்
தானுயர்ந்த தவத்தினன்
வானுயர்ந்த வரத்தினன். (4)

சூலம் உண்டது சூருளோர்
காலம் உண்டது கைக்கொள்வான்
ஆலம் உண்டவன் ஆழிவாய்
ஞாலம் உண்டவ நல்கினன். (5)

தருமம் அன்றிது தானிதால்
வருநமக்குயிர் மாய்வெனு
உருபின் வெய்யவனுக்குரை
திருமை மேலும் இயம்பினன். (6)

மறுத்த தம்முனை வாய்மையால்
ஒறுத்தும் ஆவது உணர்த்தினன்
வெறுத்து மாள்வது மெய்யெனு
இறுத்து நின்எதிர் எய்தினன். (7)

நன்றி தன்று நமக்கெனு
ஒன்று நீதி உணர்த்தினன்
இன்று காலன்முன் எய்தினன்
என்று சொல்லி இறைஞ்சினன். (8)

கும்பகருணனைக் குறித்து வீடணன் இவ்வாறு உரையாடியுள்ளான். உரைகளில் உள்ளப் பரிவுகள் பெருகி வந்துள்ளன.

"தரும மூர்த்தி! இங்கே வந்துள்ளவனுடைய கரும நீர்மைகளை நினைந்து என் உள்ளம் வருந்துகிறது; என்னுடைய அண்ணன்; நெஞ்சில் யாதும் வஞ்சம் இல்லாதவன். கள்ளம் கபடுகள் ஒன்றும் அறியாமல் வெள்ளை உள்ளத்தனாயுள்ள இவன் பிள்ளைமை போலவே வாழ்ந்து வந்துள்ளான். பெரிய அரச போகங்கள் நிறைந்திருந்தும் சிறிய ஏழையாகவே வாழ்வுபுரிந்து நாளும் உறங்கியிருந்தவன். பெருந்துயில் நீங்கி எழுந்தபொழுது

யாரும் அஞ்சும் வீர மேன்மையன். காலனுக்கு இவன் ஒரு காலன். சூறைக் காற்றும் இவன் எதிரே ஓட அஞ்சும்; தெய் வீகமான சூலாயுதத்தைத் தனக்கு உரிமையாகப் பெற்றவன். இவனது அருந்தவத்தை மெச்சிச் சிவபெருமான் அதனை இவ னுக்கு அளித்திருக்கிறார். அந்தத் திரிசூலத்தை இவன் சினந்து கையில் எடுத்தால் திரிலோகங்களும் அஞ்சி நடுங்கும்; யாண் டும் அஞ்சா நெஞ்சினன். அதிசயமான தேகபலமுடையவன். இந்திரனுடைய பட்டத்து யானையைக் காலைப்பற்றிச் சுற்றி வீசினவன். தேவாசுர யுத்தத்தில் இவன் ஒருவனே யாவரையும் அடங்க வென்றான். காற்றும் தீயும் கடலும் இவனுடைய அட லாண்மைக்கு அடங்கி நிற்கும். அரிய தவங்களைச் செய்து பெரிய வரபலங்களைப் பெற்றுள்ளவன். அருந்திறலினன் எனி னும் பெருந்தகவினன். நல்ல நீதிமான். தரும நெறிகளையே மருவியுள்ளவன். பிறர் மனைவியரைப் பெற்ற தாயாக எண்ணி யொழுகும் புண்ணிய நீர்மையன். அண்ணனான இலங்கை வேந்தனுடைய அவல நிலைகளைக் கவலையோடு பலமுறையும் கண்டித்தவன். பத்தினியை இச்சியாதே; நசையாய் நச்சி நின் றால் நம் குலம் நாசமாய்விடும்; கற்புத் தெய்வத்தை அற்புத வீர னிடம் கொண்டுபோய் விட்டுவிடு என்று பலமுறையும் இதமா உறுதி நலங்களை உரைத்தான். அவன் யாதும் கேளாமல் போதி முனிந்தமையால் இவன் எல்லாவற்றையும் வெறுத்து வெளி யேறியுள்ளான். இப்படி அநீதியான ஒரு தமையனோடு பிறந்து இருப்பதைவிட இறப்பதே நல்லது என்று துணிந்து வந்திருக்கி றான். துயரம் மீதூர்ந்து உயிர்வாழ்வை இகழ்ந்து நீண்ட சேனைக ளோடு மூண்டு பொரும் பாவனையாய் ஈண்டு உன் எதிரே வரு கின்றான் ஆண்டவா!'' என்று வீடணன் இங்ஙனம் கூறிநின்றான்.

அவனுடைய உரைகளைக் கேட்டதும் இராமன் உருகி நின் றான். அயலே யிருந்த சுக்கிரீவன் மறுகி உளைந்தான்.

இது தருமம் அன்று; உயிர் மாய்வு நமக்கு வரும்.

இராவணனுக்குக் கும்பகருணன் முன்னம் இடித்து அறி வுறுத்தியதை இங்ஙனம் வீடணன் எடுத்துக் காட்டியிருக்கிறான்.

சீதையை விரும்புவது பாவம்; அது நமக்கு நாசமாம் என அவன் அங்கே உரைத்ததை இவன் இங்கே குறித்தான். இரா

வணன் முன்னம் மந்திராலோசனை செய்தபொழுது அவனுக்கு இவன் புத்தி போதித்ததை இந்த இளைய தம்பி உடனிருந்து கேட்டு வந்தான். அந்த வார்த்தைகள் ஈண்டு நினைவில் வந்தன.

"என்று ஒருவன் இல்லினை நீ விழைந்தாய்!
அன்று ஒழிவதாயது அரக்கர் குலம்."

"சிட்டர் செயல் செய்திலை; குலச்சிறுமை செய்தாய்!"

என இன்னவாறு முன்னம் அண்ணனுக்கு அவன் சொன்ன உரைகளை யெல்லாம் கேட்ட பின்னரே வீடணன் பேச நேர்ந்தான். மூத்தவன் ஏசி விரட்டவே இவன் விரைந்து எழுந்து இராமனை வந்து அடைந்தான். இவன் அகன்ற அன்றே கும்பகருணன் உறங்கச் சென்றான். அந்த உறக்கத்தைக் கலைத்து எழுப்பி இராவணன் அவனைப் போருக்கு அனுப்பி யிருக்கிறான். அந்த நிலையில் அங்கே வந்துள்ளவனைச் சிந்தை மறுகி இராமனிடம் வீடணன் இங்ஙனம் தெரியப்படுத்துகிறான்.

அவனுடைய குணம் செயல்களை யெல்லாம் உடனிருந்து நன்கறிந்தவன் ஆதலால் இங்குத் தெளிவாக வெளியிடுகின்றான்.

ஏழை வாழ்வுடை எம்முனோன்

என்றது அவனுடைய வாழ்வின் நிலையை வரைந்து காட்டியவாறும். அரச திருவில் பிறந்தும் சிறந்த போகங்களை அனுபவியாமல் உறங்கியே பெரும்பாலும் நாளைக் கழித்து வந்துள்ளான் ஆதலால் அந்த வாழ்வை இரங்கி உரைத்தான். உயர்ந்த இராச கம்பீரங்களோடு வாழவில்லை; ஏழை வாழ்வே வாழ்ந்து வந்துள்ளான் என இவன்பரிந்து கூறியிருப்பதில் அவனது வாழ்வின் எளிய நீர்மைகள் தெளிய வந்தன.

## சுக்கிரீவன் உரைத்தது.

அவனுடைய நிலைமை நீர்மை நீதி முறைமைகளை அறிந்ததும் சுக்கிரீவனுக்கு உவகை மிகுந்தது. இத்தகைய உத்தமனை நாம் உரிமையுடன் விரைந்து அணைத்துக் கொள்வது நல்லது என உள்ளம் துணிந்து இராமனிடம் அவன் பணிவோடு கூறினான்.

முன்னம் வீடணனைச் சேர்க்கவே கூடாது என்று பிடிவாதமாய் எதிர்வாதம் செய்தவன் கும்பகருணனைச் சேர்த்துக்

கொள்ள வேண்டும் என்று ஈண்டு அன்புமீதூர்ந்து சொன்னது இராமனுக்கு அதிசய வியப்பாயிருந்தது. நீர்மை சீர்மைகளை அறிந்து உள்ளம் இரங்கி யோசனை புரிந்து வள்ளலுக்குத் துணைவன் சொன்ன சொல் உவகை சுரந்து நின்றது.

போருக்கு மூண்டு வருகிற அவனைப் போய் நேருக்கு நேராய் ஈண்டு அழைத்து வருவது யார்? என்று ஆலோசனைகள் நடந்தன. செல்ல உரியவனை ஒல்லையில் ஓர்ந்தனர்.

## வீடணன் சென்றது.

உரிய தம்பியை உரிமையோடு அழைத்துவரப் பிரியமான தம்பிதான் போகவேண்டும் என்று முடிவுசெய்தனர். இராமனை வணங்கி வீடணன் எழுந்தான். அதற்குள் எதிரேவந்தபடைகள் தொடர்ந்து அடர்ந்து எங்கும் பொங்கி யாண்டும் மூண்டு நின்றன. அந்தச் சேனைத்திரளை நோக்கி இவன் தனியே சென்றான்.

முன் அணியில் நின்ற சேனைத்தலைவர்கள் வீடணன் வருவதைக் கருதி நோக்கினர். கையில் யாதொரு ஆயுதமுமில்லாமல் அமைதியும் ஆவலும் பெருகித் தனியனாய் வருகின்ற இவன் யார்? என்று முதலில் ஐயுற்று நின்றவர் அருகு நெருங்கவே இனம் தெரிந்து கொண்டனர். கொள்ளவே விரைந்து கும்பகருணனிடம் சென்றனர். தம்பியின் வரவைத் தகவுடன் கூறினார். தன்னுடைய அருமைத் தம்பி தன்பால் அன்பால் வந்துள்ளான் என்று தெரிந்ததும் பின் அணியில் நின்றவன் தேரை விட்டுக் கீழிறங்கி வந்தான். அவனைக் கண்டதும் வீடணன் தரையில் விழுந்து தொழுது அவன் கால்கள் இரண்டையும் பற்றிக் கண்களில் ஒற்றி நெடிது கிடந்தான். இவனை வாரி எடுத்துத் தன் மார்போடு அணைத்து அவன் மனம் உருகி நின்றான்.

தந்திரக் கடலை நீந்தித் தன்பெரும் படையைச் சார்ந்தான்
வெந்திறலவனுக்கு ஐய வீடணன் விரைவின் உன்பால்
வந்தனன் என்னச் சொன்னார் வரம்பிலா உவகை கூர்ந்து
சிந்தையால் களிக்கின் றான்தன் செறிகழல் சென்னி சேர்த்தான்.

முந்திவந்து இறைஞ்சி னானை முகந்துயிர் மூழ்கப் புல்லி
உய்ந்தனை ஒருவன் போனாய் எனமனம் உவக்கின் றேன்தன்
சிந்தனை முழுதும் சிந்தத் தெளிவிலார் போல மீள
வந்ததுஎன் தனியே என்றான் மழைபினீர் வழங்கு கண்ணான்.(2)

போருக்கு வந்துள்ள சேனைக் கடலை நீந்தி வீடணன் கும்பகருணனிடம் வந்ததும்; அவன் பெருமகிழ்ச்சி அடைந்து எதிர்ந்ததும், தனது அடியில் வீழ்ந்து தொழுத தம்பியைத் தழுவி எடுத்து மார்பில் அணைத்து உழுவலன்போடு உருகிக் கண்ணீர் சொரிந்து அவன் நின்றதும் ஆகிய பரிவுக் காட்சிகளை இங்கே நாம் கண்டு களித்து உள்ளப் பாசங்களை ஓர்ந்து நிற்கிறோம்.

தந்திரம்=சேனை. நால்வகைப் படைகளும் அளவிடலரிய படி கடல்போல் வந்துள்ளன. அந்தச் சேனை சமுத்திரத்தைக் கடந்து உளளே புகுந்து தலைவனைக் கண்டிருக்கிற நிலைமை தெரிய வந்தது. வேறு எவரும் அந்த வீரப் படைகளுள் புகுந் திருக்கமுடியாது. மாறுபட்டுப் பிரிந்திருந்தாலும் குலத்தின் தலைவன் ஆதலால் படைத் தலைவர்கள் மரியாதையோடு வீடண னுக்கு வழிவிட்டிருக்கின்றனர். ஆயுதபாணிகளாயுள்ள அதிபதி கள் இரு புறமும் சேனைகளை ஒதுக்கி நெறி செய்து நின்றனர். அவ்வழியே சென்று அண்ணனைக் கண்டு கண்ணீர் மல்கிக் கைகுவித்து அடியில் வீழ்ந்து தொழுதிருக்கிறான்.

செறிகழல் சென்னி சேர்த்தான்.

என்றதனால் அவனுடைய பாதங்களில் இவன் பணிந்திருக் கும் நிலைமையை நேரே தெரிகின்றோம். போருக்கு எழுந்த பொழுது சிறந்த வீரக்கழலைக் காலில் அணிந்து வந்திருக்கின் றான் ஆதலால் அந்த அணி இங்கே விதந்து குறிக்கவந்தது. அடி யில் முடிபட உழுவலன்போடு தொழுதவனைத் தழுவி எடுத்து உவகை மீதூர்ந்து உரையாடி நின்றான்.

“தம்பி! நீ ஒருவன் தப்பிப் பிழைத்துள்ளாய்! என்பதை நினைந்து நினைந்து உள்ளம் உவந்துள்ளேன்; அவ்வாறு மகிழ்ந் திருந்த என் மகிழ்ச்சி முழுவதும் இழந்துபட இன்று நீ இங்கு வந்தது ஏன்?” என்று கவலையோடு கும்பகருணன் வினவியிருக் கிறான். உள்ளம் உளைந்து உரிமையோடு கேட்டுள்ளான்.

சிந்தனை முழுதும் சிந்த என்றதனால் தம்பி வந்துள்ளதில் அவன் கவலையடைந்துள்ளமை காண வந்தது. இலங்கையைப் பிரிந்துபோய் எதிரியை அவன் அடைந்திருப்பதில் இவன் அடைந்துள்ள மகிழ்ச்சி நிலை ஈண்டு மருமமாய் வெளிப்பட் டுள்ளது. மீண்டுவரநேர்ந்தது நீண்டகவலையாய்மூண்டுநின்றது.

தெளிவிலார் போல் மீள வந்தது என்?

தன்பால் வந்த வீடணனைப் பார்த்து அண்ணன் இந்த வாறு கேட்டிருத்தலால் அவன் எண்ணியிருந்த எண்ணங்களைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம். தெளிவுடையனாய் விழிதிறந்து வழிதெரிந்து போனவன் அழிவுடையவர் பால் பழையபடி மீண்டது கழிதுயரமாய் நீண்டது.

இலங்கை வேந்தன் செய்துள்ள அநியாயங்களைப் பொறுக்கமுடியாமல் இந்த இளவல் இருவரும் ஆனவரையும் அவனுக்கு அறிவு நலங்களைப் போதித்து வந்தனர். அவன்யாதும் திருந்தாமல் மோதி முனிந்தமையால் வீடணன் வெளியேறி இராமனை அடைந்து கொண்டான். "நல்ல நீதிமானைச் சேர்ந்து கொண்டான்; இனிமேல் அவனுக்கு அல்லல் இல்லை; சேமமாய் இனிது வாழுவான்" என்று கும்பகருணன் உள்ளம் உவந்திருந்தான். இளவல் உய்தியடைந்துள்ளமையில் உவகை பொங்கியுள்ளது.

உய்ந்தனை ஒருவன் போனாய் எனமனம் உவக்கின்றேன்

என்றதனால் இவனுடைய சிந்தனைமுழுவதையும் உணர்ந்து கொள்ளுகிறோம். தம்பியடைந்துள்ள நன்மையைக் கருதி இவ்வாறு உவந்து வந்தவன் இன்று அவன் மீண்டு வந்ததைக் காணவே மனம் கவன்று மறுகி நின்றான்.

உய்ந்தனை என்றதனால் அவன் ஒருவன் மாத்திரம் உய்தி பெற்றுள்ளான்; மற்றுள்ள அரக்கர் யாவரும் அழியநேர்ந்துள்ளனர் என இவன் முடிவு செய்துள்ளமை தெளிய வந்தது. வஞ்சம் இல்லாத நெஞ்சினன் ஆதலால் வருங்கால விளைவுகளை யூகமாய் உணர்ந்து உறுதி கொண்டுள்ளான்.

தன்பால் வந்த தம்பியை உழுவலன் போடு தழுவி நின்றவன் அவன் அங்கே வந்த காரணத்தை அறிய விரும்பினான்.

தனியே வந்தது என்?

நல்ல இடத்தைச் சார்ந்து உய்தி பெற்றுள்ள நீ பொல்லாத எங்கள் பால் மீண்டு ஈண்டு நீ வந்த காரணம் யாது? எனஇந்த வாறு வினவியிருக்கிறான். பிரிந்து போன அவனை மறுபடியும் நேரே கண்டதில் பெரிய மகிழ்ச்சி யிருந்தாலும் அழிவு நிலையில் மூண்டுள்ள தன்பால் அவன் வந்தது நெடியகவலையாய் நின்றது.

மழையின் நீர் வழங்கு கண்ணன்.

தம்பியைத் தழுவி வினவிய பொழுது கும்பகருணன் அழுது நின்ற நிலையை இதனால் அறிந்து கொள்ளுகிறோம். கண்களிலிருந்து நீர் தாரைதாரையாய் வழிந்து ஓடியுள்ளது. தன் குடும்பத்திற்கு நேர்ந்துள்ள அவல நிலைகளை நினைந்து நெஞ்சம் மறுகியுள்ளவன் தம்பியைக் காணவே உருகி அழுதிருக்கிருன். அண்ணனிடம் பரிந்து விடைபெற்று வருந்தி வந்தான்; ஈண்டு இளவலைக் கண்டான்; உளம்மிக உருகியது; ஆர்வம்மீதூர்ந்து அழுது நின்ருன். பிறவிப் பாசம் பெருகி மறுகச் செய்துள்ளது.

விரைந்து இறந்து போய்விடுவோம் என்று துணிந்து வந்தவன் உரிய தம்பியைக் காணவே பெரிய பரிவாயது. உடன் பிறப்பின் பாசம் உள்ளத்தை உருக்கியிருக்கிறது. தமையனால் மண்டியிருந்த துன்பம் எல்லாம் தம்பி எதிரே அழுகையாய்ப் பொங்கி வெளியே விரைந்து வந்துள்ளது.

எதற்கும் அஞ்சாத நெஞ்சன்; யாண்டும் கலங்காத அருந்திறலாளன்; அத்தகைய திண்ணிய வீரனுடைய விழிகளிலிருந்து நீர் பெருகி வந்துள்ளது. பிறவிப் பாசத்தையும் அன்பின் நிலையையும் இந்தக் கண்ணீர் உலகம் காண உணர்த்தியுள்ளது. உள்ளப் பரிவுகள் உரைகளால் உணர்த்த முடியாதன; உள்ளி உணரவுரியன. அன்புரிமைகள் என்புருகி எழுந்துள்ளன.

வந்தது என்? என்று தம்பியை நோக்கி வினவினவன் மறுபடியும் தொடர்ந்து தன் சிந்தனைகளை யெல்லாம் தெரிய உரைத்தான். கருதி யுள்ளன காட்சிக்கு வந்தன.

அவயம்நீ பெற்ற வாறும் அமரரும் பெறுதல் ஆற்ரு
உவயலோகத் தினுள்ள சிறப்பும்கேட்டு உவந்தேன் உள்ளம்
கவிஞரின் அறிவு மிக்காய்! காலன்வாய்க் களிக்கின் றேம்பால்
நவையிலை வந்தது என்நீ அமுதுண்பாய் நஞ்சுண் பாயோ? (1)

குலத்தியல்பு அழிந்த தேனும் குமரமற்று உன்னைக் கொண்டே
புலத்தியன் மரபு மாயாப் புண்ணியம் பொருந்திற் றென்ன
வலத்தியல் தோளை நோக்கி மகிழ்கின்றேன் மன்ன வாயை
உலத்தினை திரிய வந்தாய் உளைகின்றது உள்ளம் அந்தோ? (2)

அறப்பெருந் துணைவர் தம்மை அபயம்என் றடைந்த உன்னைத்
துறப்பது துணியார் தங்கள் ஆருயிர் துறந்த போதும்

இறப்பெனும் பயத்தை விட்டாய் இராமன் என்பானைப் பற்றிப்
பிறப்பெனும் புன்மை தீர்ந்தாய் நினைந்தென்கொல் பெயர்ந்த
[வண்ணம். (3)

அறமென நின்ற நம்பற்கு அடிமைபெற்று அவன்ற னாலே
மறமென நின்ற மூன்றும் மருங்கற மாற்றி மற்றும்
திறமென நின்ற தீமை இம்மையே தீர்ந்த செல்வ!
பிறர்மனை நோக்கு வேமை உறவெனப் பெறுதி போலாம்? (4)

நீதியும் தருமம் நின்ற நிலைமையும் புலமை தானும்
ஆதியங் கடவு ளாலே அருந்தவம் ஆற்றிப் பெற்றாய்;
வேதியர் தேவன் சொல்லால் விளிவிலா ஆயுப் பெற்றாய்;
சாதியின் புன்மை இன்னும் தவிர்ந்திலை போலும் தக்கோய்! (5)

ஏற்றிய வில்லோன் யார்க்கும் இறையவன் இராமன் நின்றான்;
மாற்றரும் தம்பி நின்றான்; மற்றையோர் முற்றும் நின்றார்;
கூற்றமும் நின்றது; எம்மைக் கொல்லிய விதியும் நின்ற
தோற்றளம் பக்கல் ஐய எவ்வலி தொலைய வந்தாய்? (6)

ஐயநீ அயோத்தி வேந்தற்கு அடைக்கலம் ஆகி ஆங்கே
உய்கிலை என்னின் மற்றிவ் அரக்கராய் உள்ளோம் எல்லாம்
எய்கணை மாரியாலே இறந்துபாழ் படுதும் பட்டால்
கையினால் எண்ணீர் நல்கிக் கடன்கழிப் பாரைக் காட்டாய்? (7)

வருவதும் இலங்கை மூதூர்ப் புலையெலாம் மாண்ட பின்னைத்
திருவுரை மார்ப னோடும் புகுந்துபின் என்றும் தீராப்
பொருவருஞ் செல்வம் துய்க்கப் போதுதி விரைவின் என்றான்;
கருமம் உண்டுரைப்ப என்றான் உரைஎனக் கழறலுற்றான். (8)

இந்தப் பாசுரங்களை ஊன்றி நோக்கி ஆழ்ந்து உணர்வார் எவரும் கும்பகருணனுடைய நெஞ்சத் துடிப்புகளையும் நிலைமைகளையும் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுவர். உணர்ச்சிகள் உருவங்கள் எடுத்து உரையாடுகின்றன. உருக்கங்கள் பெருக்கு எடுத்து நிற்கின்றன. மன வேதனைகளும் மானச மருமங்களும் மான வீரங்களை மருவி ஞான ஒளிகளை வெளி வீசியுள்ளன.

அன்பால் உருகித் தம்பியைத் தழுவி நின்றவன் அவனுக்கு அரியபல உறுதி நலங்களை உரிமை கூர்ந்து உரைத்திருக்கிறான்.

தமையன் வாய்மொழி.

"தம்பி! நீ இராமனை அடைந்து அடைக்கலம் புகுந்து உற வுரிமையுடன் பெற்றுள்ள அந்தப் பேறு யாரும் அடைய முடி

யாதது; அமரரும் பெறுதலரியது; மண் விண் என்னும் இருவகை உலகங்களும் தனி உரிமையாய் இனிது அமைந்த அந்த அரிய சிறப்புகளை அறிந்து பெருமகிழ்ச்சி அடைந்துள்ளேன். அவ்வாறு பெரும் பாக்கியங்களைப் பெற்றுள்ள பேரறிவாளியான நீ அறிவு கேடராய் அழிவு நிலையில் களிமிகுத்திருக்கின்ற எங்கள் பால் வந்தது ஏன்? நல்ல அமுதத்தை உண்டு மகிழ்ந்தவன் பொல்லாத நஞ்சை உண்ண நேர்ந்ததுபோல் நீ இங்கே வந்திருப்பது என் நெஞ்சை மிகவும் வருத்துகின்றது. குலத்தின்பெயரை விளக்க நீ பிழைத்திருக்கின்றாய்; உன்னால் புலத்தியன் மரபு புண்ணியம் உடையதாய்க் கண்ணியம் அடைந்துள்ளது என்று எண்ணி மகிழ்ந்து இன்புற்று வந்த என் உள்ளம் இன்று உன் வரவைக் கண்டு துன்பமடைந்து உளைகின்றது. இராமன் பெரிய தருமாத்துமா; அடைக்கலம் புகுந்த உன்னை அயலே அகலவிடான்; என்ன பிழை செய்தாலும் பொறுத்தருளுவான்; ஆருயிரை விடுத்தாலும் அடுத்தவரை விடாமல் காப்பது அவனுடைய குலதருமம். அந்த உத்தமனைச் சேர்ந்த நீ பிறவி தீர்ந்து பேரின்பம் பெற்றாய் என்று ஓரின்பமாக நான் உள்ளம் உவந்துள்ளேன்; சிறுபிள்ளைத்தனமாய் ஏதேனும் பிழை செய்து விட்டாயோ? அந்தப் பெருமானைவிட்டு நீ இங்கே பிரிந்து வந்ததற்குக் காரணம் என்ன? விரைந்து சொல்லுக. புண்ணிய சீலனை அவனுக்கு இனிய உறவினனாய்ப் பாவத் தீமைகளை யெல்லாம் அறவே ஒழிந்து பரிசுத்தவானாகியுள்ளாய்! அத்தகைய நீ நெடிய பழிகள்படிந்த கொடியபாவிகளாகிய எங்கள்பால்அன்பு கொள்வது அவலமேயாம். தருமமும் நீதியும் தகவும் கருணையும் பிறவியிலேயே நீ தனி உரிமையாகப் பெற்றிருக்கிறாய்; பிரமதேவனிடமிருந்து பெரிய வரங்களையும் அடைந்துள்ளாய். அரிய நீதிமானான உனக்குச் சாதியபிமானம் இன்னும் போகவில்லை என்று தெரிகின்றது. இரக்கமற்ற அரக்கர் குலத்தில் பிறந்த நான் அந்தப் பாவத் தீமை ஒழிந்து போகும்படி துணிந்து இறந்துபோகவே இன்று நான் இங்கு வந்திருக்கிறேன். காலன் வாய்க் கவளமாய் நிற்கின்ற என்னை நோக்கி நீ என்ன நோக்கத்தோடு வந்தாய்? பூட்டிய அம்போடு கோதண்டத்தைக் கையில் ஏந்தி அரக்கர் குலத்தை அடியோடு கருவறுக்க முடிவு செய்து இராமன் மூண்டு நிற்கின்றான்; அதிசய வீரனான இலக்

குவன் அண்ணன் அயலே கண்ணும் கருத்துமாய் நிற்கின்றான். வானர சேனைகள் மான வீரங்களோடு மருங்கே வலங்கொண்டு நிற்கின்றன. எங்கள் உயிரைப் பருகி மகிழ எமனும் எதிர் நோக்கி நின்றான்; இராட்சசப் பூண்டே இல்லாதபடி செய்ய விதியும் மூண்டு நிற்கிறது. அடியோடு அழிந்து நரக லோகத்துக்குக் குடிபோக நிற்கின்ற எங்கள்பால் என்ன பயனை அடைய இன்னவாறு நீ ஈண்டு வந்தது? அற்புத மூர்த்தியான இராமனிடம் நீ அடைக்கலம் அடைந்திருப்பது எனக்குப்பெரிய மகிழ்ச்சியை விளைத்துள்ளது. நீ ஒருவன் இல்லையானால் எங்கள் கதி என்னும்? நாங்கள் எல்லாரும் இறந்து பட்டபின் எங்களுக்கு எள்ளும் தண்ணீரும் இறைத்தற்கு ஒரு பிள்ளை இருக்கின்றான் என்று என் உள்ளம் உவந்துள்ளதை உரைகளால் உணர்த்த இயலா. அரிய மதிமானான நீ ஒருவன் நம் குலமுதலாய் உய்தி பெற்றிருப்பதை நாளும்கருதி மகிழ்ந்து வருகிறேன். அவ்வாறு உவந்து வருகிற என் உள்ளம் இன்று உன் வரவைக் கண்டதும் பலவும் நினைந்து பரிதபிக்கின்றது. நீ மீண்டு ஈண்டு வரவேண்டிய காலம் ஒன்று உண்டு. அரக்கர் குலம் முழுவதும் அழிந்து ஒழிந்து பாவப் புலைகள் எல்லாம் நீங்கியபின் புண்ணிய வீரனான இராமனுடன் நீ இலங்கைக்கு வரலாம். இராச லட்சுமி உன்னை எதிர்நோக்கி மகிழ்வாள். என்றும் குறையாத அதிசய செல்வங்களை அடைந்து அரசர் பெருமானாய் வரிசை பெற்று நீ நீடூழி வாழுவாய் என்று நான் உறுதியாய்க் கருதி உவகை பூத்து நிற்கின்றேன்.'' என இன்னவாறு கும்பகருணன் தம்பியை நோக்கி உரையாடியிருக்கிறான்.

பேசியிருக்கின்ற வார்த்தைகள் அவனுடைய உள்ளத்தை வார்த்துக் காட்டி யிருக்கின்றன. தன்னுடைய அண்ணனால் தன் குலத்திற்கு அழிவு நேர்ந்துள்ளது என எண்ணி எண்ணி அவன் உள்ளம் புண்ணாய் நொந்துள்ளமையை உரைகள் தெளிவாய் உணர்த்தி நிற்கின்றன. தம்பியின்பால் அவன்வைத்துள்ள பிரியமும் வாஞ்சையும் மொழிகள் தோறும் வெளிவந்துள்ளன. தன்னிடம் அவன் வந்ததைக் குறித்துப் பல பல சிந்தனைகள் எழுந்திருக்கின்றன. உள்ளம் மறுகி உளைந்து உழன்றுள்ளது.

''தனக்கு அபயம் தந்து தன்னை உரிமையாகத் தழுவிக் கொண்ட இராமனைக் கைவிட்டு உடன் பிறப்பின் பாசத்தால்

தன்பால் அன்பாய் வந்துள்ளானே? அல்லது ஏதேனும் நேர்ந்த பிழைகளைக்கண்டு இராமன் இவனை எள்ளித் தள்ளிவிட்டானே? பிள்ளை தனியே வந்துள்ளானே! என்னே" என்று அவன் உள்ளம் உளைந்து பெரிதும் ஊசலாடி மறுகியுள்ளது.

இளையவனுடைய குண நீர்மைகளையும் அறிவு நிலைகளையும் இளமையிலிருந்தே அறிந்து உளம் உவந்து வந்திருத்தலால் உணர்வு ஒழுக்கங்களை எவ்வழியும் வியந்து பேச நேர்ந்தான்.

கவிஞரின் அறிவு மிக்காய்!

தன் தம்பியைக் கும்பகருணன் இப்படி இங்கே விளித்திருக்கிறான். உயர்ந்த கவிஞர் பல நூல்களையும் பயின்று தெளிந்து சிறந்த அறிவு நலங்கள் வாய்ந்து தெய்வத்திருவருளும் தோய்ந்திருத்தலால் அவரோடு வீடணனை ஈண்டு இணைத்து எண்ணினான். கவிஞரைக் கருதியது சுவை சுரந்து வந்தது.

மதிநலம் மிகுந்து தனிநிலையில் உயர்ந்து மனித சமுதாயத்துக்கு உறுதி நலங்களை உணர்த்துபவர் கவிஞர் என நின்றார்

"Poet is isolated among his contemporaries." (Emerson)

"கவிஞன் தன் காலத்தவருள் தனியே உயர்ந்து எக்காலத்தவர்க்கும் இனிது போதிக்கின்றான்" என அமெரிக்க அறிஞரான எமர்சன் இவ்வாறு கூறியிருக்கிறார்.

அரிய உண்மைகளை உரிமையுடன் உலகிற்குப் போதித்து மனிதசமுதாயத்தை இனிது உயர்த்தி வருவது கவிஞர் இயல்பு. அவ்வாறே நீதி ஒழுக்கங்களில் நிலைத்து நின்று உயிரினங்களுக்கு இனியனாய் உதவி புரிந்து வருதலால் கவிஞர் என வீடணன் ஈண்டுக் கருத நேர்ந்தான். கருதிய கருத்து காட்சிக்கு வந்தது.

கவிஞரைப்போல் சிறந்த மதிநலம் வாய்ந்து மேலும் உயர்ந்த ஞானசீலம் தோய்ந்திருக்கிறான். ஆகவே இவனது மதியூகத்தையும் ஞானவிவேகத்தையும் தமையன் இங்கே வியந்து புகழ்ந்தான். சிறந்த வீரன் உயர்ந்த அறிவை உவந்து மொழிந்தான்.

"உம்பர் மந்திரிக்கு மேலா ஒருமுழம் உயர்ந்த ஞானத்தம்பி" எனப் பாட்டனை மாலியவான் முன்னம் *பாராட்டியுள்ள

* இந் நூல் பக்கம் 3781, வரி 1 பார்க்க.

தும் ஈண்டுச் சிந்திக்கத்தக்கது. தேவகுருவினும் திவ்விய ஞானம் உடையவன் என்பது எவ்வளவு மகிமை!

இவ்வளவு மதிநலமுடையவன் இழிபழிகளில் அழுந்தி அழிவு நிலையிலுள்ள தம்பால் வந்தது தகாது எனத் துணிந்திருத்தலால் உன்வரவு எனக்கு விந்தையாயுள்ளது என்று சிந்தை கவன்று தம்பி எதிரே அவன் மொழிந்து நின்றான்.

காலன் வாய்க் களிக்கின்றோம் பால் வந்தது என்?

என இந்தவாறு கேட்டிருத்தலால் கும்பகருணனுடைய சிந்தையின் நோவுகள் தெரிய வந்தன. சாகநேர்ந்தவர் மரண வேதனைகளை நினைந்து மறுகி வருந்துவர்; அவ்வாறு வருந்தாமல் நாங்கள் உவந்து நிற்கின்றோம் என்பான் களிக்கின்றோம் என்றான்.

கொடிய அழிவுநிலை எதிரே மூண்டுள்ளது; அதனை விழி திறந்து பார்த்து உய்யாமல் என்னைப் போருக்கு உன் அண்ணன் இவ்வாறு வழி அனுப்பியுள்ளான் என இலங்கைவேந்தன் மேல் உள்ள உள்ளக் கொதிப்பையெல்லாம் மெல்ல மறைத்துக் கொண்டு தன்மைப் பன்மையில் இப்படி வெப்போடு அவன் பேசியிருக்கிறான். பேச்சில் பெருந்துயரம் பெருகியுளது.

அண்ணனுடைய பழிவழிகளிலும் அழிநிலைகளிலும் தானும் ஒரு பங்காளி என்பதை உள்ளம் நொந்து உரையாடியுள்ளான்.

நல்ல அறிவோடு விலகிப் போன நீ பொல்லாத எங்கள்பால் மீண்டும் வந்து சேர்ந்தது பெரும்பிழை என்று பரிவோடுவருந்தியிருக்கிறான். வருத்தம் அவன் மேலுள்ள ஆவலை விளக்கி நின்றது.

அமுது உண்பாய்! நஞ்சு உண்பாயோ?

நிலைமைகளை அவன் நெஞ்சில் நினைந்து நன்கு சிந்திக்கும்படி இந்தக் கேள்வியை இவன் இங்ஙனம் வனைந்து கேட்டுள்ளான்.

இராமனோடு சேர்ந்து புகழும் இன்பமும் அனுபவிக்க நேர்ந்தாய்; அவ்வாறு அரிய பாக்கியங்களை அடைந்து பெரிய சுக நிலையில் உள்ளாய் என்பான் அமுது உண்பாய் என்றான்.

அங்ஙனம் இனிய அமுதை உண்டு மகிழ்ந்துள்ள நீ கொடிய நஞ்சை உண்ணவந்தது போல் ஈங்கு வந்துள்ளாயே!

இங்கே பழியும் துன்பமும் அழிவுமே பொங்கியுள்ளன. ஈண்டு நீ வரலாமா? என்று நீண்ட பரிவோடு மறுகியிருக்கிருன்.

தம்பியைக் கண்டதில் அன்பு மண்டியிருப்பினும் அடுத்துள்ள நிலைகளை நினைந்து நெஞ்சு நொந்துள்ளான். தன்குலத்துக்கு நேர்ந்துள்ள அழிவுகளிலிருந்து அவன் விலகி வாழவேண்டு என்றே உழுவலன்போடு இவன் கருதியுள்ளமையை உரைகள் உணர்த்தி வருகின்றன. உரிமைப் பாசம் உள்ளே ஓங்கியுள்ளது.

புலத்தியன்மரபு அவனால் புண்ணியம் பொருந்தியது என்று எண்ணியிருத்தலால் அவனுடைய தரும நீர்மைகளை இவன் பெரிதும் மகிழ்ந்து வந்துள்ளான் என்று தெரிய வருகின்றது. அண்ணனால் பழியும் இழிவும் அடைந்துள்ள குலம் தம்பியால் புகழும் உயர்வும் பெறும் என்று உறுதிபூண்டிருக்கிருன்.

அறப்பெருந்துணைவன் என இராமனை இவ்வாறு கும்பகருணன் கருதியிருக்கிருன். பாவிகளைத் தொலைத்துப் புண்ணியத்தை வளர்க்க வந்துள்ள புனிதவீரன் என்னும் தொனி இவ்வுரையில் ஒளிசெய்துள்ளதை உள்ளக்கண்ணால்ஓர்ந்து கொள்கிறோம்.

அத்தகைய தருமமூர்த்தியை உரிமைத்துணையாய் அடைந்துகொண்டவன் பாவத்தொடர்புடைய தங்கள்பால் மீண்டு வந்தது தவறு என்று தவித்து நிற்கின்றான்.

அறம் என நின்ற நம்பன்

என இராமனையும்; மறம் மண்டியுள்ளவர் எனத் தம்மரபினரையும் தம்பியிடம் விரித்து உரைத்து வருவது அவன் பொல்லாதவரோடு சேர்ந்து புலையுறலாகாது; நல்லவரைச் சார்ந்து நலம்பலபெற வேண்டும் என்று கருதியேயாம்.

தேவரும் புகழ உயர்ந்த செல்வங்களில் உவந்து வாழ்ந்து வந்த குடும்பம் தமையன் செய்த பிழையால் தாழ்ந்து போயது என்று உள்ளம் வருந்தியிருக்கிருன். நெஞ்சில் நிறைந்துள்ள வேதனைகள் உரைகள் தோறும் மோதி வெளிவந்திருக்கின்றன.

பிறர்மனை நோக்கு வேமை
உறவுஎனப் பெறுதி போலாம்?

இவ்வுரையை ஊன்றிக் கவனிக்க வேண்டும்.

கும்பகருணனுடைய உள்ளக் கிடக்கையை அவனுடைய வாய்மொழிகளால் உணர்ந்து வருகிறோம். ஒழுக்கத்தை அவன் எவ்வளவு விழுப்பமாகப் பேணி வந்துள்ளான்! என்பதைக் கருதிக் காணுந்தோறும் பெரிதும் வியந்து நிற்கிறோம்.

பரதாரத்தை இச்சிப்பது கொடிய பழியாம்; சீதையை விட்டுவிடு என்று அண்ணனுக்கு முன்னம் இடித்து அறிவு கூறியிருக்கிறான். இங்கே தம்பியிடம் வந்தபோது இங்ஙனம் நொந்து பேசியுள்ளான். இதில் அவன் சிந்தை தெளிய நின்றது.

பிறர் மனைவியரைப் பெற்றதாயர் என எண்ணி ஒழுகும் புண்ணிய சீலன் ஆயினும் அண்ணனோடு சேர்ந்திருத்தலால்தன்னையும் அப்பாவத்தில் ஒரு பங்காளி என்று பரிந்து நொந்துள்ளான் ஆதலால் நோக்குவேம் எனத் தன்மைப் பன்மையில் உரைத்தான். பழிநோக்குடைய பாவிகள்எனப்பரிதபித்துளான்.

தமையன் செய்துள்ள பாவம் குலநாசத்துக்கு ஏதுவாய் நின்றது; அந்த அழிவு நிலையில் இங்கே சாகவந்திருக்கிறேன்; பழிபடிந்து பாழ் படவந்துள்ள என்பால் விழுமிய நீ வரலாமா? வந்தது சிந்தையை நோகச் செய்கிறதே என்று நொந்து கலுழ்ந்துள்ளான். நோதல் நீதி நிலையில் நேர்ந்துள்ளது.

பிறர் மனைவியை நோக்குவது பெரும் பாவம் என்று கருதியிருத்தலால் இவனது சீலமும் சீர்மையும் ஞாலம் அறியவந்தன.

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறன்ஒன்றோ ஆன்ற ஒழுக்கு. (குறள், 148)

சான்றோர்க்கு அரிய ஒழுக்கமும் பெரிய தருமமும் பிறர் மனைவியரை விரும்பி நோக்காமையேயாம் எனத் தேவர் இங்ஙனம் உரைத்திருக்கிறார். குறிப்புரைகள் கூர்ந்து சிந்திக்கவுரியன. பிறன் மனை நோக்காதவரே பேராண்மையாளர்; அவரே சான்றோர்; அவரே தரும சீலர்; அவரே உத்தம ஒழுக்கமுடையவர் என்னும் தத்துவங்கள் இதில் உய்த்துணர வந்தன.

எவ்வளவு ஆண்மையாளரும் இந்தநோக்கில்கீழ்மை அடைந்துள்ளமையால் இதில் பழுதின்றித் தேறியவரே பேராண்மையாளர் எனப் பெரும் புகழ் எய்தி நேராண்மை கொண்டுள்ளனர்.

பல்லாயிரம் பகைவரை வெல்ல வல்ல வீரரும் பிறர் மனைவியரை நோக்கிப் புல்லியராய்ப் பல்லிளித்து நிற்கின்றனர். தீரர் சூரர் எவரையும் பெண் ஆசை பேடிகள் ஆக்கிவிடுகின்றது.

வெள்ளியங்கிரியை வேரோடு எடுத்தவன்; அமரர் அசுரரை அடங்க வென்றவன்; எவரும் தனக்கு நிகரில்லை என்று வீர பராக்கிரமங்களில் வீறுகொண்டவன்; அத்தகைய அடலாண்மையுடைய இராவணன் சீதையைக் கண்டதும் சித்தம் கலங்கிப் பேதையாயிழிந்துள்ளான்; அந்தப் பத்தினியின் அடியில் தன் முடிபட விழுந்து தொழுதிருக்கிறான். அவனுடைய ஆண்மையெல்லாம் இதில் அவலமாயழிந்துள்ளன; ஆகவே அவ்வாறு நோக்காமை பேராண்மை என வந்தது.

பெண்மைக்குக் கற்பு பெருமகிமை தருதல்போல் ஆண்மைக்கும் அது அதிசய மகிமையை அருளி வருகின்றது. ஒரு பெண்ணை நோக்கி "இவள் உத்தமி" என்றால் நல்ல பதிவிரதை என்று உலகம் அவளை உணர்ந்து கொள்ளுகின்றது. அவ்வாறே ஒரு ஆணை நோக்கி "இவன் உத்தமன்" என்றால் சுத்தமான ஏக பத்தினி விரதன் என்பது தெளிவாயுள்ளது. மனிதனைப் புனித நிலையில் உயர்த்தி இது தனி மகிமை புரிகின்றது. பேராண்மை சான்றாண்மை தருமம் ஒழுக்கம் என்பன எல்லாம் ஏகபத்தினி விரதத்தில் இனிது அமைந்திருக்கின்றன.

புகழும் புண்ணியமுமான இந்த ஒழுக்கத்தைக் கைவிட்டுப் பிறன் மனைவியை விழைந்ததினாலேதான் இராவணன் பழியும் பாவமும் அடைந்து இழிவுற நேர்ந்தான். "இழிந்து அழிந்து போக நேர்ந்துள்ள எங்கள்பால் ஏன் வந்தாய் தம்பி!" என்று கும்பகருணன் இங்கே கும்பி கொதித்துக் கூறியிருக்கிறான்.

அண்ணன் அயல் மனைவியை நோக்கியதால் தன் குலம் அழிவு நிலையை நோக்கியது என விழிநீர் சொரிந்திருக்கிறான். கள்ளம் கபடுகள் இல்லாத இவனது உள்ளத்தின் தூய்மையை உரைகளால் உணர்ந்து நாம் உவந்து வருகிறோம்.

நீதியும், தருமமும், நிலைமையும், புலமையும் தலைமையாகப் பெற்றுள்ளவன் எனத் தம்பியைப் பாராட்டியிருக்கிறான். அத்தகைய நீதிமான் அநீதியாளர் பக்கல் ஆர்வம் கூர்ந்து வரலா

காது என்று வந்தவனை நோக்கிச் சிந்தை நொந்து வாதாடியுள்ளான். சேர்ந்து நின்ற நிலையைத் தெளிவுறுத்த நேர்ந்தான்.

இராமன் யார்க்கும் இறையவன்.

கும்பகருணன் இப்படிக் கருதியிருக்கிறான். தன் தம்பியின்பால் அந்த நம்பியைக் குறித்து உண்மையாகவே உருகி உரையாடி வருகிறான். தருமத்தைக் காக்கும் பொருட்டே மனித உருவில் அவன் மருவி வந்துள்ளான் என்று உறுதியாகக் கருதி யுள்ளமையால் உரைகள் தெளிவாய் வந்துள்ளன.

அந்தத் தரும வீரன் கோதண்டத்தைக் கையில் ஏந்தி இலங்கையை நோக்கி நின்றபொழுதே எமனும் அரக்கர் குலத்தை எதிர் நோக்கி முதிர் வேகத்தோடு மூண்டு நிற்கின்றான்.

கூற்றமும் நின்றது; எம்மைக் கொல்லிய விதியும் நின்ற.

அழிவு நிலையை இவ்வாறு விழிதெரிய விளக்கி யிருக்கிறான். அரக்கர்குலம்நாசமாயது எனநம்பியுள்ளமைவெளியாய்நின்றது.

இலங்கையை எட்டிப் பார்க்கவும் மாட்டாமல் அஞ்சி ஒடுங்கியிருந்த கூற்றுவன் இப்பொழுது நெஞ்சம் துணிந்து நேரே கொலை நோக்கோடு வந்து நிற்கிறான் எனத் தனது சாங்காலத்தையும் அரக்கர் குலத்தின் போங்காலத்தையும் ஒருங்கே புலன் கொள உணர்த்தி இளையவன் நலன் காண விளக்கினான்.

தோற்ற எம் பக்கல் எவ்வலி தொலைய வந்தாய்?

தங்கள் முடிவினை இங்ஙனம் முடிவு செய்துள்ளான்.

தோல்வி அடையுமுன்னரே தோற்ற என்று குறித்தது தேற்றம் பற்றி வந்தது. அறம் வெல்லும்; பாவம் தோற்கும் என்பது சத்திய விதி ஆதலால் அந்த நித்திய உண்மையை நினைந்து துணிந்துள்ளான். தரும மூர்த்தியான இராமன் வென்று மேன்மை அடைவதும், பாவத் தீமைகளையுடைய தாங்கள் தோல்வியடைந்து அழிவதும் உறுதி என்று தன் உள்ளத்தில் முடிவு செய்துள்ளான். முடிந்த முடிவுகள் தெளிந்து கொள்ள வந்தன.

“வஞ்சமும் பாவமும் பொய்யும் வல்ல நாம் உஞ்சுமோ?” என்று முன்னமே முன்னவனிடம் இன்னலோடு இவன் உரைத்துள்ளதும் ஈண்டு உணர்ந்து கொள்ளத் தக்கது. எவ்வ

கையிலும் தப்பாமல் தாம் அழிந்துபடுவது நிச்சயம் என நெஞ்சம் தெளிந்திருத்தலால் மொழிகள் எங்கணும் அழிவு நிலையைக் கழிவிரக்கத்தோடு கஎறி விழி தெரியச் செய்து வருகிறுன்.

இழவு நிலையிலுள்ள எங்களோடு சேர்ந்து நீ எதை இழக்க வந்தாய்? என வேதனை மீதூர்ந்து வினவியிருக்கிறுன். இளையவன் ஒதுங்கி இனிது வாழவேண்டும் என்னும் விழைவினுல் பல வகையிலும் பரிந்து பேசி வருகிறுன்.

நேர்ந்துள்ள நிலைமைகள் நெஞ்சை நிலைகுலைத்திருந்தாலும் யாதும் கலங்காமல் நீதி நலங்களை ஓதி உணர்த்தித் தம்பியின் உள்ளத்தைத் தேற்றியிருக்கிறுன். பிறப்பின் பாசம் உரைகள் தோறும் பெருகி வந்துள்ளன. குடும்பக் கவலையும் குலமானமும் வீர கம்பீரமும் யாண்டும் தலை தூக்கி நிற்கின்றன.

தேவரும் ஏவல் செய்ய மேவிய அரச திரு ஒரு பாவத் தீமையால் வீணே அழிய நேர்ந்துள்ளதே! என்று உள்ளம் துடித்துள்ளது. குலம் முழுவதும் அழிந்துபோனாலும் தம்பி ஒருவன் நீதியோடு வாழ்ந்திருக்க வேண்டும் என்று உள்ளே ஆழ்ந்த சிந்தனை சூழ்ந்திருக்கிறது. சகோதர வாஞ்சை பெரிதும் உள்ளத்தை உருக்கியுள்ளது. நேர்மையும் தீரமும் நிலைத்த நெஞ்சில் அரிய பல நீர்மைகள் மருவியுள்ளன. அவ்வுண்மைகளை வாய் மொழிகள் தெளிவாக வெளி செய்திருக்கின்றன.

தன்பால் பிரியம் மீதூர்ந்தே அரிய துணைவரைப் பிரிந்து தம்பி வந்திருக்கிறுன் என்று தெரிந்து கொண்டமையால் அவன் தெளிந்து போகும்படி அறிவு நலன்களை மொழிந்தருளினுன். பாவத் தீமைகள் பெருகியுள்ள இடத்தில் புண்ணிய நீர்மையாளன் மருவி இருக்கலாகாது என்று மறுகியிருக்கிறுன். தருமநீதிகளையும் கரும நீர்மைகளையும் உணர்த்தி மீண்டு போகும்படி தம்பியை உரிமையோடு வேண்டியுள்ளான்.

தமையனுடைய பரிவுரைகளைக் கேட்டு வீடணன் பெரிதும் உருகினுன். பகைவர் என்று கருதி எதிரிகளை இகழ்ந்து பேசாமல் நடுவு நிலைமையோடு நீதிநிலைகளை நேரே பேசியது நெடிய வியப்பை விளைத்தது. அருந்திறலோடு பெருந் தகைமையும் உடையவன் எனக் கும்பகருணனைக் குறித்து வீடணன் பொது

வாக அறிந்திருந்தானே அன்றி தரும நீதிகளில் இவ்வளவு பிரியமும் உறுதியும் மருவி யுள்ளவன் என்பதைத் தெளிவாக அறியவில்லை. இன்று உரையாடிய உரைகளால் அவனுடைய உள்ளத்தின் மகிமைகளை நன்கு உணர்ந்து நயந்து வியந்தான்.

வீடணன் வேண்டியது

தன்னை மீண்டு போகும்படி வேண்டி நின்ற அண்ணனை நோக்கி ஒரு வேண்டுகோளுக்காக ஈண்டு வந்தேன் என்று தம்பி வேண்டி நின்றான். எனது ஆசையைப் பூர்த்தி செய்தருள வேண்டும் என ஆவலோடு கூறவே "என்ன அது?" என்று முன்னவன் வினவினான். பின்னவன் கூறினான்.

இருளுறு சிந்தை யேற்கும் இன்னருள் சுரந்த வீரன்
அருளும்நீ சேரின் ஒன்றோ அவயமும் அளிக்கும் அன்றி
மருளுறு பிறவி நோய்க்கு மருந்துமாம் மாறிச் செல்லும்
உருளுறு சகட வாழ்க்கை ஒழித்துவீடு அளிக்குமன்றே. (1)

எனக்குஅவன் தந்த செல்வத்து இலங்கையும் அரசும் எல்லாம்
நினக்குநான் தருவேன் தந்துன் ஏவலின் எளிதின் நிற்பன்;
உனக்கிதின் உறுதி யில்லை உத்தம! உன்பின் வந்தேன்
மனக்குநோய் துடைத்து வந்த மரபையும் விளக்கு வாழி. (2)

போதலோ அரிது போனால் புகலிடம் இல்லை வல்லே
சாதலோ சரதம் நீதி அறத்தொடும் தழுவி நின்றாய்
ஆதலான் உளதாம் ஆவி அநாயமே உகுத்தென் ஐய
வேதநூல் மரபுக்கு ஏற்ற ஒழுக்கமே பிடித்தல் வேண்டும். (3)

தீயவை செய்வ ராகின் சிறந்தவர் பிறந்த உற்றார்
தாயவை தந்தைமார் என்று உணர்வரோ தருமம் பார்ப்பார்?
நீயவை அறிதியன்றே நினக்கு யான் உரைப்பது என்னோ!
தூயவை துணிந்த போது பழிவந்து தொடர்வது உண்டோ?

மக்களைக் குரவர் தம்மை மாதரை மற்றுள் ளோரை
ஒக்கும் இன்னுயி ரன்னாரை உதவிசெய் தாரோடு ஒன்றத்
துக்கமித் தொடர்ச்சி என்று துறப்பரால் துணிவு பூண்டோர்
மிக்கது நலனே ஆகி வீடு பேறு அளிக்கு மன்றே. (5)

தீவினை ஒருவன் செய்ய அவனொடுந் தீங்கி லாதோர்
வீவினை யுறுதல் ஐய மேன்மையோ கீழ்மை தானே
ஆய்வினை யுடையை அன்றே அறத்தினை நோக்கி ஈன்ற
தாய்வினை செய்ய வன்றோ கொன்றனன் தவத்தின் மிக்கான்.

கண்ணுதல் நிமை செய்யக் கமலத்து முளைத்த தாதை
அண்ணல்தன் தலையின் ஒன்றை அறுக்கஎன்று அமைந்தான் அன்றே
புண்ணுறு புலவு வேலோய்! பழியொடும் பொருந்திப் பின்னை
எண்ணுறு நரகின் வீழ்வது அறிஞரும் இயற்று வாரோ? (7)

உடலிடைத் தோன்றிற்று ஒன்றை அறுத்துஅதன் உதிரமூற்றிச்
சுடருறச் சுட்டு வேறோர் மருந்தினல் துயரம் தீர்வர்
கடலிடைக் கோட்டம் தேய்த்துக் கழிவது கருமம் அன்றால்
மடலுடை அலங்கல் மார்ப மதியுடையவர்க்கு மன்னே. (8)

வீடணன் இவ்வாறு பேசியிருக்கிறான். அவனுடைய உள்ளக் கருத்துகளையும் குறிப்புகளையும் கூர்ந்து நோக்கி ஓர்ந்து நிற்கின்றோம். கும்பகருணன் இராமன்பால் வந்து சேர்ந்து கொள்ள வேண்டும் என்றே அன்புரிமையோடு உரையாடியிருக்கிறான். பல நீதி முறைகளையும் இதிகாசங்களையும் உலக அனுபவங்களையும் நேரே எடுத்துக் காட்டி அவன் நெஞ்சம் திருந்தி வருமாறு கெஞ்சி வேண்டியுள்ளான். இராமனுடைய கருணை முதலிய குண நீர்மைகளை யெல்லாம் அண்ணன் உணர்ந்து தெளியும்படி உவந்து புகழ்ந்திருக்கிறான்.

"அண்ணா! அறிவுநலங் குன்றிய சிறியவனான என்னையே அருள் சுரந்து அணைத்துக் கொண்ட இராமபிரான் உன்னைக் கண்டால் பெருமகிழ்வுடன் பேணியருளுவார். பிறவித் துன்பத்தை நீக்கிப் பேரின்பம் அருளவல்ல பெருமான் என்றே நான் அவரைக் கருதி யிருக்கிறேன். எனக்கு அவர் தந்துள்ள இலங்கைச் செல்வத்தையும் அரச பதவியையும் நான் உனக்குத் தந்து நீ ஏவிய பணியைச் செய்து உனது ஏவலாளாய் ஒழுகி வருவேன். நேர்ந்துள்ள நிலைமைகளை நினைந்து என் நெஞ்சம் கவல்கின்றது. எனது மன வேதனைகளை நீக்கியருளுக. தருமமூர்த்தியான இராகவன் அகில உலகங்களையும் வெல்ல வல்லவன். அவனை வெல்ல யாராலும் இயலாது. அவனுக்கு மாறுபட்டு எவரும் இனிது உயிர் வாழமுடியாது. நீதிமுறை தவறினவரை மோதி முனிந்து அழிக்கவே ஒரு வில்லைக் கையில் ஏந்தி வேத நாயகன் இந்த உருவில் வந்திருக்கிறான். வேத விதியின்படியே நாம் ஒழுகவேண்டும். வேதாவின் வழியில் வந்த நாம் தீதாக நடப்பது பெரிய பழியாம். தீயவர்களை வெறுத்து விலகுவதே

நல்லவர்களுக்கு அடையாளமாம். தீமையாளர் தொடர்பு யாண்டும் தீமையே பயக்கும். தாய், தந்தை, மனைவி, மக்களை யும் பாயபந்தங்கள் என்று துறந்து தூய ஞானிகள் அகன்று போய் விடுகின்றனர். தீயவர் உறவு தீயினும் தீயது ஆதலால் அந்தச் சேர்க்கை எவ்வழியும் வெவ்விய துயரங்களாய் விளைந்து என்றும் உளைந்து மாயும்படி ஊறுபடுத்தும். ஒருவன் தீமை செய்ய அவனுக்காக உயிரை அநியாயமாய் மாய்ப்பது பெரிய பரிதாபமாம். பெற்ற தாய் ஆனாலும் குற்றம் செய்தால் முற் றவும் வெறுத்து ஒறுக்க வேண்டும். சிறிய ஒரு பிழை செய் தாள் என்று தனது அருமைத் தாயையும் பரசுராமன் கொன்று தொலைத்தான். தீமை செய்தால் தேவரும் தண்டிக்கப் படுவர். உள்ளம் செருக்கியதால் பிரமன் தலை கிள்ளி எறியப்பட்டது. எவ்வளவு பெரியவராயிருந்தாலும் பிழைகள் செய்தால் பீழை களே அடைவர். உடன் பிறந்தவன் என்று கருதி இலங்கை வேந்தனிடம் நீ உரிமை பாராட்டுகிறாய்! நீதி நலம் கனிந்த உனது போதனைகளை ஏதேனும் கேட்டு அவன் உள்ளம் திருந்தி யுள்ளானா? பழிபாவங்களையே விழைந்து புரிந்து குலம் முழுவதும் அழிந்து தொலையும்படி கொடிய அவகேடுகளை விளைத்து நிற்கி றான். நீச நிலைகளில் நிமிர்ந்து நாசங்களையே செய்துவருகின்றவ னிடம் பாசம் கொண்டாடுவது பழியோடு பாதகமுமாம். உட லில் தோன்றியது என்று கழலையை வளரவிடலாமா? அறுத்துச் சுட்டு அடியோடு அகற்றிவிட வேண்டும். உடலில் தோன்றிய புண்ணை மீறவிடின் உயிர்க்கு அழிவேயாம். ஒரு தாய் வயிற்றில் உடன் பிறந்த தமையனே ஆயினும் அநீதிகளைச் செய்தபின் அவனோடு கூடி யிருப்பது நீதியாகாது. நல்ல நீதிமானான உனக்கு நான் சொல்ல வேண்டியது யாதும் இல்லை. பொல் லாத வழியில் எல்லைமீறிப் போயுள்ள அவனை இனி யாரும் திருத்தமுடியாது; உரியவர்களுடைய உறுதி மொழிகளைக் கே ளாமல் ஆங்கார ஆணவங்களோடு ஓங்கி நிற்பவன் பாங்கில் நிற்பதும் பாதகமேயாம். பழி பாவங்களைச் செய்தாலும் அண் ணன் அல்லவா! என்று அழிவது அறிவுடைமை ஆகாது. தீவினை யாளருக்குத் துணை புரிந்து சாவதால் பழியும் பாவமும் நரகமு மே வரும் ஆதலால் அவ் வழியை உடனே விட்டு விலகி விட வேண்டும்'' என்று இப்படி வீபீடணன் வாதாடியிருக்கிறான்.

வாய்மொழிகள் அவரவருடைய இயற்கை உணர்ச்சிகளை வெளிப்படுத்தி நிற்கின்றன. உரைகளால் உள்ளங்கள் தெரியவருகின்றன. பழகிய அனுபவங்கள் படர்ந்து தொடர்ந்துள்ளன.

கும்பகருணனிடம் சகோதரவாஞ்சையும் குடும்பபாசமும் குடிகொண்டிருக்கின்றன. தம்பியின் மேல் பரிவு மண்டியிருந்தாலும் அண்ணனிடமும் பேரன்பு கொண்டு பெருகி நிற்கின்றான்.

வீடணன் நிலை மாறுபட்டுள்ளது. நீதிநெறி ஒன்றையே நெடிது தழுவி நிற்கிறான். தீவினை செய்பவர் எவராயினும் அவர் பாவிகள் என்றே அவன் கருதியிருக்கிறான். தீயவர் தொடர்பு கொடியது என்று நெடிது அஞ்சியுள்ளான். பெற்றதாயேயெனினும் பிழைகள் புரிபவளேல் அவள் களைய உரியவளே என்னும் கருத்து அவனிடம் விருத்தியடைந்துள்ளது.

தருமமே உயிர்த்துணை; எவ்வழியும் அதனையே உறுதியாகப் பேணி ஒழுகவேண்டும் என்று உள்ளம் துணிந்து நிற்கிறான். தான் தெளிவாக துணிந்ததை அண்ணனிடம் ஈண்டு வெளியிட்டு அழிவு நீங்கி உய்யும்படி வழி கோலியுள்ளான்.

இலங்கைவேந்தன் தீவினையாளனாய் மாறிவிட்டான்; அவனோடு கூடியிருப்பது தீது; நன்மை தீமைகளைப் பகுத்து உணர வேண்டும்; அல்லதை நீக்கி நல்லதைக் கொள்வதே யாண்டும் நல்லது. உறவுரிமை கருதி ஊனங்கள் புரியலாகாது.

இராமன் தருமகுணசீலன்; பெரிய நீதிமான்; கருணை வள்ளல். அவனைச் சேர்ந்து அன்பு பூண்டு ஒழுகின் அது யாண்டும் நன்மையாம்; அரிய நீதியாம்; எவ்வழியும் இன்பப்பேறாம்.

மருளுறு பிறவி நோய்க்கு மருந்து.

இராமனை இவ்வாறு குறித்திருக்கிறான். பிறவி கொடிய துன்பம்; தீராதபெரிய நோய்; அது அடியோடு தீர்ந்து நெடிய பேரின்பத்தை அடைய வேண்டின் இராமனை அடைந்து கொள்ள வேண்டும் எனக் கும்பகருணனிடம் வீடணன் இங்ஙனம் வேண்டியிருக்கிறான்.

பரம்பொருளே மனித உருவில் இராமன் என்னும் பெயரோடு இப்படி வந்துள்ளது என்னும் குறிப்பு இவ்வுரையால்

உணரவந்தது. சீவர்களுடைய பிறவித்துயரை நீக்க வல்லவன் கடவுளே ஆதலால் அந்தக் காட்சியை இங்கே மாட்சியாய்க் காட்டியருளினன்.

"பிறப்பு அறுக்கும் பிஞ்ஞகன்." (திருவாசகம்)

சிவபெருமானை மாணிக்கவாசகர் இவ்வாறு துதித்திருக்கிறார்.

"பிறவிப் பெரும்பிணிக்கு ஓர்மருந்தே." (பிள்ளைத்தமிழ்)

மீனாட்சியம்மையைக் குமரகுருபரர் இங்ஙனம் குறித்திருக்கிறார்.

பவரோக வைத்தியன் எனமுருகக்கடவுளுக்கு ஒரு பெயர் வந்துள்ளது. ஆகவே பிறவி நோய்க்கு மருந்து என்று இராமனை இங்கே வீடணன் குறித்தது பரமபதநாதன் என்னும் கருத்தால் வந்தது. உரைக் குறிப்பு உரிய உண்மையை உணர்த்தி நின்றது.

சக்கரவர்த்தித் திருமகனாய் வந்துள்ள அந்தப் புண்ணிய மூர்த்தியின் பக்கல் நீ வந்து சேர்ந்து கொள்ள வேண்டும்; ஒக்கலும் உறவும் எல்லாம் ஊனமுடையன; குலமானம் ஒழிந்து நிலையான ஞானம் அடைக என நயந்து வேண்டினன்.

> தீவினை ஒருவன் செய்ய அவனொடும் தீங்குஇலாதோர்
> வீவினை உறுதல் மேன்மையோ? கீழ்மைதானோ?

இவ்வாறு வினவி யிருக்கிறான். நேர்ந்திருக்கும் நிலைமைகளை ஓர்ந்து சிந்திக்கும்படி உரிமையோடு வேண்டியுள்ளமையை இவ்வுரையால் உணர்ந்து கொள்கிறோம்.

இராவணன் ஒருவன் பாவம் செய்ய அவனோடு யாவரும் சேர்ந்து பாவிகளாய் இழிந்து அழிந்து போகவேண்டுமோ? இந்தக் கேள்வி சிந்தனை செய்து தெளிந்து கொள்ளும்படி வந்துள்ளது. அநியாயமாய் அழியலாகாது என அறிவு கூறினன்.

கும்பகருணன் தீமையை வெறுக்கின்ற நல்ல நீதிமான் ஆதலால் அவனிடம் தம்பி இதனை இங்ஙனம் விநயமாய் வினவினன். பலவும் எண்ணி ஆராய்ந்து நிலைமையைச் சீர்தூக்கி நோக்கி நீதி புரிந்தருளுக என ஓதியிருக்கிறான்.

என்னதீமைகளைச் செய்தாலும் அண்ணனே என்று கண்ணைமூடிக் கொண்டு காரியம் புரியின் அது சீரியர் சீறி இகழத்

கக்க சிறுமையேயாம். தீயவரோடு சேர்ந்து நின்றால் நல்லவரும் தீயவராகவே எண்ணப்படுவர். உண்மையை ஊன்றி உணர்க.

வீணே பழியையும் பாவத்தையும் ஏற்றுக்கொண்டு விளிந்து படுவது ஐயனே! தெளிந்தவர் செய்கை யாகுமா? எவ்வளவோ நீதிகளை எடுத்துச் சொல்லி உரிமையோடு மறுகி மன்றாடினேன்; ஒன்றையும் கேளாமல் என்னைக் கடுத்து வைது "வெளியே ஓடிப்போ! இங்கே நில்லாதே! நின்றால் கொல்லப்படுவாய்!" என்று கொதித்துச் சொன்னான்; அந்தக் கொடிய வார்த்தைகளை எண்ணுந்தோறும் என் உள்ளம் எரிந்து கரிகின்றது. உடன் பிறந்த தம்பி என்ற பாசம் ஒருசிறிதும் இல்லாமல் நாசவேலைகளைச் செய்கின்றவனை அண்ணன் என்று எண்ணிப் பாசம் கொண்டாடி நிற்பது பழிபாதகமான இழிவேயாம் எனத் தெளிவாகத் தெரிந்தே நான் ஆன்று வெளியேறி வந்தேன். இன்று உன்னையும் என்னோடு வந்தருளும்படி மன்றாடி வேண்டுகிறேன். எனது வேண்டுகோளுக்கு இசைந்தருளுக.

கடலிடைக் கோட்டம் தேய்த்துக் கழிவது கருமம்அன்று.

இப்படி ஒரு திருட்டாந்தத்தை எடுத்துக் காட்டியிருக்கிறான். இலங்கைவேந்தனுக்கு நீ துணையாய் நின்று போராடி அரிய உதவிகள் புரியினும் அதனால் சிறிதேனும் பயன் இல்லை என்பான் இந்த உவமானத்தை உய்த்துணர வுரைத்தான்.

பெரிய கடலிடத்தே சிறிய ஒரு வாசனையைக் கலக்கினால் அந்தப் பண்டம் உருவழிந்து போமேயன்றிக் கடலில் யாதொரு மாறுதலும் உண்டாகாது; நீ இராமனோடு மூண்டு பொருதால் விரைந்து மாண்டே போவாய்; வீரக்கடலான அந்தக் கோதண்ட மூர்த்திக்கு யாதொரு களைப்பும் நேராது; மாறுபட்டு நீ மடிந்துபோனாலும் இராவணன் மனந் தெளிந்து உய்தியடையான்; மறுபடியும் குலத்தையெல்லாம் அழியச் செய்து அவன் அடியோடு அழிந்தே போவான். இவ்வாறு எவ்வழியும் யாதும் பயன் இல்லாத காரியத்தைச் செய்வது பெரிய மடமையாம். இந்த மடத்தனத்தில் துணிந்து நின்று இழிந்து படாமல் தெளிந்து வருக என்று பரிந்து வேண்டியிருக்கிறான்.

அரிய உயிரை அவமே போக்காதே என்று பரிவோடு வேண்டுகின்றவன் ஈண்டு இவ் உவமையைக் குறித்துள்ளான்.

கோட்டம்=ஒரு வாசனைச் சரக்கு.

இனிய மணமுடைய இது தனியே இருந்தால் மனித சமுதாயத்துக்கு நன்கு உதவும்; கடலில் கொண்டுபோய்க் கரைத்து விட்டால் யாருக்கும் யாதும் பயன் இல்லையாம். கும்பகருணன் நல்ல நீர்மையுடையவன்; அவன் உயிர் வாழ்ந்திருந்தால் உலகிற்கு இனிய உதவியாம்; அவன் அநியாயமாய் மாண்டு படலாகாது என்று இங்ஙனம் மறுகி வேண்டியிருக்கிறான்.

கடலில் காயம் கரைத்தது போல

என்பது பழமொழி. இம் முதுமொழியை அடியொற்றி வீடணன் வாய்மொழி ஈண்டு வெளி வந்துள்ளது. உயிரைக் கொடுத்து உழைத்தாலும் பயன் இல்லை; அவ்வாறு பயன் இல்லாத கருமத்தைச் செய்யலாகாது என மருமமாய் மன்றாடியுள்ளான். காரியத்தின் பயனைக் கருதி யுணரச் செய்தான்.

பலவகை நிலைகளையும் விரித்து விளக்கி அண்ணன் எதிரே நின்று கண்ணீர் மல்கிப் பேசுகின்றான். இன்னவாறு உரையாடி வந்தவன் பின்னும் சில குறிப்புகளைக் கூர்ந்து நோக்கும் படி ஆர்ந்த அன்போடு உரைத்தான்.

காக்கலாம் நும்முன் தன்னை எனின் அது கண்டதில்லை;
ஆக்கலாம் அறத்தை வேறே என்னினும் ஆவ தில்லை;
நீக்கலாம் கொண்ட தேவர் சிரிக்கலாம் செருவில் ஆவி
போக்கலாம் புகலாம் பின்னை நரகன்றிப் பொருந்திற் றுண்டோ?

மறங்கிளர் செருவில் வென்று வாழ்ந்திலை மண்ணின் மேலா
இறங்கினை இன்று காறும் இளமையும் வறிதே போக
உறங்கினை என்ப தல்லால் உற்றதுஒன்று உளதோ? என்நீ
அறங்கெட உயிரை நீத்து மேற்கொள்வான் அமைந்தது ஐயா!

திருமறு மார்பன் நல்க அனந்தரும் தீர்ந்து செல்வப்
பெருமையும் எய்தி வாழ்தி ஈறிலா நாளும் பெற்றாய்!
ஒருமையே அரசு செய்வாய் உரிமையும் உனதே ஒன்றும்
அருமையும் இவற்றின் இல்லைக் காலமும் அடுத்தது ஐயா! (3)

தேவர்க்கும் தேவன் நல்க இலங்கையில் செல்வம் பெற்றால்
யாவர்க்கு சிறியை அல்லை; யாருனை நலியும் ஈட்டார்;
மூவர்க்கும் தலைவ ரான மூர்த்தியார் அறத்தை முற்றும்
காவற்குப் புகுந்து நின்றார் காகுத்த வேடம் காட்டி. (4)

உன்மக்கள் ஆகி யுள்ளார் உன்னொடும் ஒருங்கு தோன்றும்
என்மக்கள் ஆகி யுள்ளார் இக்குடிக்கு இறுதி சூழ்ந்தான்
தன்மக்கள் ஆகி யுள்ளார் தலையொடும் திரிவர் அன்றே
புன்மக்கள் தருமம் பூணப் புலமக்கள் தருமம் பூண்டால். (5)

முனிவரும் கருணை வைப்பர்; மூன்றுல கத்தும் தோன்றி
இனிவரும் பகையும் இல்லை; ஈறுண்டென்று இரங்க வேண்டா
துனிவரும் செருந ரான தேவரே துணைவர் ஆவர்
கனிவரும் காலத்து ஐய பூக்கொய்யக் கருத லாமோ? (6)

வேதநாய கனே உன்னைக் கருணையால் வேண்டி விட்டான்
காதலால் என்மேல் வைத்த கருணையால் கருமம் ஈதே
ஆதலால் அவனைக் காண அறத்தொடும் திறம்பாது ஐய
போதுவாய் நீயே என்னப் பொன்னடி இரண்டும் பூண்டான்.

தும்பியந் தொடையல் மாலைச் சுடர்முடி படியில் தோயப்
பம்புபொற் கழல்கள் கையால் பற்றினன் புலம்பும் பொற்றோள்
தம்பியை எடுத்து மார்பில் தழுவித் தன் தறுக ணூடு
வெம்புனீர் சொரிய நின்றான் இனையன விளம்ப லுற்றான். (8)
(கும்பகருணன் வதைப் படலம், 147--154)

இங்கே நிகழ்ந்துள்ள காட்சிகளைக் கண் ஊன்றிக் காணுகின்றோம். விபீடணன் மறுபடியும் பரிவு மீதூர்ந்து அறிவுரைகள் ஆடித் தமையனிடம் பெரிதும் வாதாடுகின்றான்.

"அருந்திறல் அண்ணலே! அவகேடுகள் நேராமல் உன் அண்ணனைப் பாதுகாக்க முயன்ற முயற்சிகள் எல்லாம் அயர்ச்சிகளாய் இகழ்ச்சிகளே அடைந்தன. உள்ளம் கரைந்து உணர்வுகூறிய நான் எள்ளி இகழ்ந்து வெளியே தள்ளப் பட்டேன். நமது குடும்ப முதல்வனான பாட்டனும் நெடும் பரிவோடு புத்திகள் போதித்தான்; மதிநலமிக்க அம் முதியவனும் பழிக்கப்பட்டான். அரசவையில் ஆலோசனை நிகழும் பொழுது நீயும் எவ்வளவோ மதி நலங்களை அதிக உரிமையோடு உரைத்தாய்! அவமதிப்பே அடைந்தாய்! இப்பொழுது உள்ளம் நொந்தே உயிரை விடத்துணிந்து வந்திருக்கிறாய்; தீவினைச் சூழலில் இருப்பதை விடச் சாவது நல்லது என்று வெறுப்புடன் ஈண்டு மூண்டு வந்துள்ளமையை உன் முகக்குறிப்புகள் நன்கு உணர்த்துகின்றன. அதிசய மதிமானான நீ அநியாயமாய் அழிய நேர்ந்துள்ளது எத்துணை அவலம்! சேனைகளோடு மூண்டு போராடி மாண்டு போனாலும் அதனால் ஏதேனும் பலன் உண்டா? தீமைக்கு

உதவியாய் நின்று மல்லாடி மடிந்தான் என்ற போல்லாத பழியே உன்னைப் பின்பற்றி வரும். நல்லோர் நகைக்கப் பல்லோரும் பழிக்க அல்லாத வழியில் சென்று அவமே நரகத்தை அடைவது வெய்ய தீமையாம். சிறந்த அரச திருவோடு நீ பிறந்திருந்தாலும் உயர்ந்த போகங்களை அனுபவிக்காமல் உறங்கியே காலத்தைக் கடத்தியிருக்கிறாய்; நீயே இனி இலங்கை வேந்தனாய் அமர்ந்து எல்லாமகிமைகளையும் அடையவேண்டும் என்று நான் உவந்து நிற்கிறேன். நீ ஒருவன் பிழைத்து நின்றால் நம் குடும்பம் தழைத்து நிற்கும். உன் மக்களும் என்மக்களும் மன்மக்களும் மகிழ்ந்து வாழுவார்கள். பிள்ளைகளை நினைந்தாவது உள்ளம் இரங்கி நீ உதவி புரிய வேண்டும். உன்னுடைய குண நலங்களையெல்லாம் கேட்டு மனம் மிகமகிழ்ந்து தன் பால் அழைத்து வரும்படி இராமனே அன்போடு இங்கே என்னை அனுப்பியருளினார். அந்தக் கருணை வள்ளலுடைய பிரியத்தைப் பெரிய பாக்கியமாக் கருதி என்னோடு எழுந்தருளி வருக'' என்று காலில்விழுந்து தொழுது கண்ணீர் சொரிந்து கிடந்தான்.

இளையவனுடைய மறுக்கமும் உருக்கமும் பிறவிப் பாசத்தோடு பெருக்கெடுத்து நிற்கின்றன. எதிர்வதை முன்னறிந்து பலவும் சூழ்ந்து நிலைமைகளைக் கூர்ந்து சிந்தித்து ஓர்ந்து உய்தி காணும்படி உரிமை கூர்ந்து உரைத்திருக்கிறான். தமையனைத் தன்னோடு சேர்த்துக்கொள்ள வேண்டும் என்னும் அவா அளவு கடந்து பெருகியுள்ளது. குடும்பக் கவலைகளை நெடும் பரிவோடு நினைவூட்டி நிலைமைகளை யெல்லாம் நேரே காட்டி யிருக்கிறான்.

நும்முன்னைக் காக்கலாம் எனின் அது கண்டது இல்லை.

இலங்கை வேந்தனுக்கு உதவியாய் நின்று அவனைப் பாதுகாக்கலாம் என்று பலவகையிலும் முயன்று பார்த்தேன்; ஒரு பயனும் இல்லை. நீயும் ஆனவரையும் நீதிநெறிகளை ஓதியுணர்த்தினாய்; நிந்தனையே கிடைத்தது. முடிவில் மனம் உடைந்து போருக்கு மூண்டு வந்துள்ளாய்; மாண்டுபடுவதைத் தவிர ஈண்டு வேறு பயனைக் காணமுடியாது. நீ மாண்டு போனாலும் அவன் மீண்டு திருந்தி உய்ய மாட்டான். உய்தியில்லாத காரியத்தை ஊக்கிச் செய்வது உணர்வு கெட்ட செயலாம்; யாவும் ஓர்ந்து சிந்தித்து உய்திகாண வேண்டும் என உணர்த்தி நின்றான்.

நம்முன் என்னுமல் நும்முன் என்றது தன்முன் நிற்கின்றவன் தனியுணரவந்தது. உன் எண்ணத்தில் இராவணனை அண்ணன் என்று கருதியிருத்தல் போல் நான் கருதவில்லை; அன்னியனுகவே எண்ணி நிற்கின்றேன் என்பதை இவ்வண்ணம் உணர்த்தினன். குலத்தோடு ஒட்டாமல் தான் தூரவிலகி வேருயுள்ள நிலைமையை நேரே நன்கு விளக்கியிருக்கிருன்.

மூத்தவனை வெறுத்து விலகினவன் இந்த அண்ணனிடம் ஆர்வம் மீதூர்ந்து நிற்கிருன். கள்ளம் கபடுகள் இல்லாத அவனுடைய உள்ளச் செம்மையில் இவன் உள்ளம் பறிபோய் உருகி மறுகியுள்ளமையை உரைகள் பெரிதும் உணர்த்தியுள்ளன.

உறங்கினை என்பது அல்லால் உற்றது ஒன்று உளதோ?

கும்பகருணனுடைய வாழ்க்கை நிலையை நினைந்து இங்ஙனம் வருந்தியுள்ளான். பெரிய அரசகுடும்பத்தில் பிறந்தும் அரிய போகங்களை நுகர்ந்து மகிழாமல் வறிதே உறங்கிக் கழித்துள்ளது உனது காலம் என இரங்கி இனைந்திருக்கிறுன். இனிய போகங்களில் தோய்ந்து சுகமாய் அவன் வாழவில்லை என்று இவன் வருந்தியிருப்பதில் சகோதரவாஞ்சை விரிந்து நிற்கிறது.

எவ்வளவோ சுகசீவியாய் வாழவுரியவன் அவ்வளவையும் மறந்து அவமே தூங்கியிருந்தான்; இனிமேலாவது நல்ல நிலையில் நவமாய் வாழவேண்டும் என்றுநயந்து வேண்டியிருக்கிருன்.

நீண்டகாலமாய்ப் புரிந்து வந்த அரக்கரது தீமையை அடியோடு ஒழிக்க மூண்டு ஆண்டவனே இந்த மனித உருவம் பூண்டு வந்திருக்கிருன். அவ்வீர மூர்த்தியிடம் தெய்வீக நிலைகளை எவ்வழியும் கண்டு மகிழ்ந்துள்ளேன்; இவ்வழியே வந்து நீயும் அவனைக் காண வேண்டும்; கண்டால் உள்ளம் உருகி உடனே அவனுக்கு உரிமையாளனுவாய்; தருமமும் நீதியும் கருணையும் வீரமும் ஓர் உருவமாய் மருவியுள்ள கரிய கோலத் திருமேனியை ஒருமுறை கண்டவர் அரிய பல மகிமைகளை அடைந்து கொள்ளுகின்றனர். நான் அனுபவித்ததை உனக்கு உரிமையோடு சொல்லுகிறேன். உன் தம்பி சொல்லை நம்புக; எம்பிரான் அருளை எய்தி இருமையும் பெருமையாய் இனிது வாழ வருக.

நீ ஒருவன் வாழ்ந்து நின்றால் நம்குடும்பம் தாழ்ந்துபடாது. உன் மக்களின் நன்மையைக் கருதியாவது எம் பக்கம் வந்து சேருக. நெடிய அரச கிளை முடிவடையாதபடி கடிது பேணுக.

தன்குடிக்கு இறுதிசூழ்ந்தான் தன்மக்கள் தலையொடுந்திரிவர்.

கும்பகருணன் இராமனோடு சேர்ந்து கொண்டால் தனது இராசகுடும்பம் அழியாதிருக்கும் என இவ்வாறு விழி தெரிய விளக்கினான். இந்திரசித்து, அதிகாயன் முதலிய அரசகுமாரர்கள் இனிது வாழும் பொருட்டாவது நீ இருந்து வாழ வேண்டும் என்று வேண்டியிருக்கிறான்.

தன்குடிக்கு இறுதி சூழ்ந்தான் என இராவணனை இவ்வாறு குறித்திருக்கிறான். சிறந்த செல்வக் குடி இழிந்து அழிந்து போகும்படி கொடிய தீமையைச் செய்து நெடிது செருக்கி நிற்கின்றானே! என்று நெஞ்சம் கொதித்திருப்பதை இந்த வார்த்தை வார்த்துக் காட்டியுள்ளது. அந்தக் குடிகேடனுக்காக மூண்டு பொருது நீ மாண்டு போகலாகாது என்று மறுகியிருக்கிறான். குடிகேடும் குலக்கேடும் நேர்ந்துள்ளனவே என்று நெஞ்சம் துடித்துள்ளது. ஒருவன் செய்த கேடு உலக நாசத்துக்கு ஏதுவாய் நின்றது என நிலைமையை நினைந்து நெடிது நொந்திருந்தலை உரைகள் யாண்டும் உணர்த்தி வருகின்றன.

ஆனவரையும் அறிவு கூறிப் பார்த்து முடியாது என்று முடிவில் கைவிட்டு வந்தவன் ஆதலால் இப்படி வாய்விட்டுப் பேச நேர்ந்தான். உறுதியழிந்து உள்ளம் நொந்துள்ளது.

மக்கள் தலை யொடுந்திரிவர் என்றது வாழ்வின் நிலை தெரிய வந்தது. இந்தப்பக்கம் நீ வந்து சேரவில்லையானால் அந்த மக்கள் எல்லாரும் ஒக்க மடிவர்; முடித்தலைகள் படித்தலத்தில் உருளும் என முடிவுகளை வடித்துக் காட்டியிருக்கிறான்.

தன்பால் வந்து சேரும்படி வந்தனைபுரிந்து சிந்தனை தெளிய உரிமையுடன் மறுகிப் பேசி வருகிறான். போரில் மூண்டு வந்தவனுடைய உள்ளம் நேரில் மீண்டு திரும்பும்படி அறிவுரைகள் பரிவு தோய்ந்து பாசம் பாய்ந்து நேசம் கூர்ந்து வந்துள்ளன.

வேதநாயகனே உன்னைக் கருணையால் வேண்டி விட்டான்.

தன்பால் வைத்துள்ள அன்பால் தம்பியே தன்னை அழைக்க வந்திருக்கிறான் என்று கும்பகருணன் எண்ணவும் கூடுமாதலால் அங்ஙனம் எண்ணி அயராதபடி இறுதியில் இந்த உரையை உறுதியாக உரைத்தான். "அண்ணா! என் இச்சையால் நானாக இங்கு வரவில்லை; இராமனே உன்னை அழைத்து வரும்படி என்னை உரிமையோடு ஈண்டு அனுப்பியருளினான்" என இங்ஙனம் இனிப்பான உண்மையை இதமா இயம்பியருளினான்.

வேதநாயகன் என இராமனை நோக்கி இங்கே குறித்திருக்கிறான்.

வேதங்கள் யாரைப் பரம்பொருள் என்று ஓதி ஓதி உவந்து வருகின்றனவோ அந்தப் பொருளே இந்த உருவில் வந்துள்ளது எனச் சிந்தை தெளிய வுரைத்தான்.

இராமன் அவதார மூர்த்தி என்பதை முதலில் பொதுவாகக் கேள்வியுற்றிருந்தான்; பின்பு அடைக்கலம் புகுந்தான்; அதிசய மகிமைகளை நேரே அறிய நேர்ந்தான்; ஊழித் தீயாய்க் கடலும் வெந்துபட அடலம்பு தொடுத்ததையும், வருண தேவன் நடுங்கி வந்து தொழுது வணங்கி அழுது துதித்ததையும் நேரே கண்டான் ஆதலால் இனி அரக்கர் குலம் பிழையாது என்று வீடணன் தெளிவாய் முடிவு செய்து கொண்டான்.

பாவிகளை அழித்து நீக்கித் தருமத்தைக் காக்கவே தேவதேவன் இவ்வாறு வந்துள்ளான் என்று உறுதி பூண்டுள்ளான்; அந்த உண்மையை உரைகள்தோறும் வலியுறுத்தி வருகிறான்.

மூவர்க்கும் தேவராய மூர்த்தியார் அறத்தை முற்றும்
காவற்குப் புகுந்து நின்றார் காகுத்த வேடம் காட்டி.

இராமனை வீடணன் எவ்வாறு கருதியிருக்கிறான் என்பதை இவ்வுரையால் உணர்ந்து கொள்ளுகிறோம். அந்தக் காப்புத் தெய்வமே தருமத்தைக் காக்க இந்த உருவில் இங்கே வந்துள்ளது எனச் சிந்தை தெளிய நன்கு விளக்கியுள்ளான்.

ககுத்தன் மரபில் பிறந்துள்ளமையால் இராமனுக்குக் காகுத்தன் என்ற ஒரு பெயரும் வந்தது. சிறந்த அரசர் குலத்தில் அவதரித்திருத்தலை வியந்து கூறினான். காகுத்த வேடம் காட்டி என்று குறித்துக் காட்டியிருக்கும் காட்சி சுவையாய் உவகையை ஊட்டி அவன் வந்துள்ள வகையைத் தொகையாச் சுட்டியுளது.

அத்தகைய அற்புதமூர்த்தி உன்னைக் காணவிரும்பி என்னை அனுப்பியுள்ளது; விரைந்து வந்து கண்டு மகிழுக; காலதாமதம் செய்வது சாலவும் தீது. இந்த அரிய சமையத்தை இனிது பயன்படுத்திக் கொள்ளுக என விரைவு படுத்தி நின்றான்.

"கனிவரும் காலத்து ஐய! பூக்கொய்யக் கருதலாமோ?"

இந்த உவமான வாசகம் ஊன்றி உணர வுரியது.

பூவிலிருந்துதான் காயும் கனியும் விளைந்து வரும்; அந்தப் பூவைக் கொய்து விட்டால் விளைவு யாதுமின்றி வெறுமையாய்ப் போம்; நீ உடலோடு நிலைத்திருந்தால்தான் அரியபல பலன்களை அடைந்து மகிழலாம்; இனிய பயன்களை எய்த உரிய அமையம் தனியே எய்தியுள்ளது; இந்தச் சமையத்தில் போரில் புகுந்து உடலைப் பாழாக்கி விடாதே என்று பரிந்து வேண்டுகிறான் ஆதலால் இங்ஙனம் நயமா மொழிந்து நின்றான்.

"கனிவரும் காலம் என்றது பலன் கைக்கு எட்டியுள்ளமை கருதவந்தது. இராமன் கருணை கூர்ந்து உன்னைச் சேர்த்துக் கொள்ள எதிர்பார்த்து நிற்கின்றான்; இந்த இனிய பருவத்தைத் தப்பவிடாதே என்று நுட்பமா எச்சரித்திருக்கிறான்.

எப்படியாவது இந்த அண்ணன் உயிர்வாழவேண்டும் என்னும் ஆவலால் பல நிலைகளையும் எடுத்துக் காட்டிப் பரிந்து வேண்டினான். அவ்வாறு வேண்டினவன் பின்பு மாறுவேறு கூறாமல் உடனே விரைந்து வருக என்று அடியில் விழுந்து தொழுதான்.

"தன்பாதத்தில் நெடிது பணிந்து கிடந்த தம்பியை உழுவலன்போடு தழுவியெடுத்து மார்போடு அணைத்துக் கும்பகருணன் மனமுருகி அழுது மறுகி அயர்ந்து நின்றான்.

> தம்பியை எடுத்து மார்பில் தழுவித் தன்தறுகண் ஊடு
> வெம்புணீர் சொரிய நின்றான்.

இந்தப் பரிவுக் காட்சியைக் கருதிக்காணுவார் எவரும் சகோதரவாஞ்சையின் நிலைமையை உணர்ந்து நெஞ்சம் உருகுவர். அவலநிலையில் கவலையடைந்து இருவரும் மறுகி மயங்கி உருகி நிற்கின்றனர். பாசப் பெருக்கினால் நேசத்தாரைகள் பெருகி வந்துள்ளன. நெஞ்சம் நெடிது கரைந்துள்ளது.

கண் ஊடு வெம்புண் நீர் சொரிய என்றதனால் கும்பகருணன் தம்பியைத் தழுவிக் கொண்டு அழுது நின்றநிலை அறிய வந்தது.

அழுகையால் கண்கள் சிவந்து நின்றன. இரத்தக்கண்ணீர் வடிந்தது போல் விழி நீர் வெளியே விரிந்து தெரிந்தது.

தறுகண் என்றது அவனுடைய அடலாண்மையைநினைந்துவந்தது.

யாண்டும் கலங்காதவன்; எதற்கும் அஞ்சாதவன்; அதிசய விசயமான உக்கிர வீரன்; அத்தகைய திண்மையாளன் ஈண்டு நெஞ்சம் கரைந்து நெடிது அழுதிருக்கிறான். பிறந்தது முதல் இதுவரையும் துன்பம் இன்னது என்று தெரியாதவன்; எவ்வகையிலும் யாதும் அழுது அறியாதவன்; இன்று இவ்வாறு அழுதிருக்கிறான். உதிர சம்பந்தம் உள்ளத்தை உருக்கியுள்ளது.

அண்ணன் அவகேடாய்க் குலநாசம் செய்ய மூண்டுள்ளான்; குடும்பம் பல வகையிலும் பரிசு குலைந்து அழிந்துபோய் விடும்; அந்த அழிவுநிலையைக் கண்ணால் பார்த்திருக்கக் கூடாது; முன்னதாகவே இறந்து போய்விட வேண்டும் என்று துணிந்து போருக்கு வந்தான்; தமையனை வெறுத்து வெளியேறிப் போயிருந்த தம்பி இடையே எதிர் வந்து தொழுது குடும்ப நிலைகளின் இடும்பைகளை யெல்லாம் குறித்துக் காட்டித் தன்னோடு சேர்ந்து கொள்ளும்படி மறுகி மன்றாடுகின்றான். இளையவனுடைய அன்புரிமைகளும் எதிர்ந்துள்ள துன்ப நிலைகளும் உள்ளத்தை உருக்கி உயிரைச் சூறையாடியுள்ளது; ஆகவே கண்ணீர் வெள்ளம் பெருகி ஓட நேர்ந்தது. “விரைந்து இறந்துபோவோம்; இனி இந்தத் தம்பியை என்று காண்போம்?” என்னும் பரிவும் பிரிவும் பாசமும் ஆர்வமும் உள்ளே பெருகி ஓங்கியுள்ளன. அந்த உண்மையை மறுகி ஏங்கி, அழுதுள்ளமை வெளியே உணர்த்தி உரிமைப் பாசங்களை நன்கு விளக்கியுள்ளது.

அன்பின் பரவசமாய்த் தம்பியைத் தழுவி விழிநீர் சொரிந்து சிறிதுபோது பேசாமல் அயர்ந்து நின்றவன் பின்புபேசலானான்.

கும்பகருணன் கூறியது.

நீர்க்கோல வாழ்வை நச்சி நெடிதுநாள் வளர்த்துப் பின்னைப்
போர்க்கோலம் செய்து விட்டாற்கு உயிர்கொடாது அங்குப் [போகேன்
தார்க்கோல மேனி மைந்த என்துயர் தவிர்த்தி ஆயின்
கார்க்கோல மேனி யானைக் கூடுதி கடிதின் என்றான். (1)

மலரின்மேல் இருந்த வள்ளல் வழுவிலா வரத்தினல் நீ
உலைவிலாத் தருமம் பூண்டாய் உலகுள தனையும் உள்ளாய்
தலைவனீ உலகுக் கெல்லாம் உனக்கது தக்க தேயால்
புலையுறு மரணம் எய்தல் எனக்கது புகழ தேயால் (2)

கருத்திலா இறைவன் தீமை கருதினல் அதனைக் காத்துத்
திருத்தலாம் ஆகினன்றே திருந்துதல் தீரா தாயின்
பொருத்துறு பொருள்உண் டாமோ பொருதொழிற்குஉரியராகி
ஒருத்தரின் முன்னம் சாதல் உண்டவர்க்கு உரிய தம்மா! (3)

தும்பியந் தொடையல் வீரன் சுடுகணை துரப்பச் சுற்றும்
வெம்புவெஞ் சேனை யோடும் வேறுள கிளைஞ ரோடும்
உம்பரும் பிறரும் போற்ற ஒருவன் மூவுலகை ஆண்டு
தம்பியர் இன்றி மாண்டு கிடப்பனே தமையன் மண்மேல். (4)

அணையின்றி அயர்ந்த வென்றி அஞ்சினர் நகைய தாகப்
பிணையொன்று கண்ணாள் பங்கன் பெருங்கிரி நெருங்கப் பேர்த்த
பணையொன்று திரள்தோள் கால பாசத்தால் பிணிப்பக் கூசித்
துணையின்றிச் சேறல் நன்றோ தோற்றுள கூற்றின் சூழல். (5)

செம்பிட்டுச் செய்த இஞ்சித் திருநகர்ச் செல்வம் தேறி
வம்பிட்ட தெரியல் எம்முன் உயிர்கொண்ட பகையை வாழ்த்தி
அம்பிட்டுத் துன்னம் கொண்ட புண்ணுடை நெஞ்சொடு ஐய!
கும்பிட்டுவாழ்கிலேன்யான்கூற்றையும்ஆடல்கொண்டேன். (6)

அனுமனை வாலி சேயை அருக்கன்சேய் தன்னை அம்பொன்
தனுவுடை யவரை வேறோர் நீலனைச் சாம்பன் தன்னைக்
கனிதொடர் குரங்கின் காலக் கடலொடும் கடந்து மற்றப்
பனிதுடைத்து உலகம் சுற்றும் கதிரெனத் திரிவன் பார்த்தி! (7)

ஆலம்கண்டு அஞ்சி ஓடும் அமரர்போல் அரிகள் ஓடச்
சூலம்கொண்டு ஓடி வேலை தொடர்வதோர் தோற்றம் தோன்ற
நீலம்கொள் கடலும் ஓடக் காலொடு நெருப்பும் ஓடக்
காலங்கொள் உலகும் ஓடக் கறங்கெனத் திரிவன் காண்டி! (8)

செருவிடை அஞ்சார் வந்துஎன் கண்எதிர் சேர்வரேல் அக்
கருவரை கனகக் குன்றம் என்னலாம் காட்சி தந்த
இருவரும் நிற்க மற்றிங்கு யாருளர் அவரை எல்லாம்
ஒருவரும் திரிய ஒட்டேன் உயிர்சுமந்து உலகில் என்றான். (9)

தாழ்க்கிற்பாய் அல்லை என்சொல் தலைக்கொளத் தக்கது என்று
கேட்கிற்பாய் ஆயின் எய்தி அவரொடும் கெழீஇய நட்பை
வேட்கிற்பாய் இனிஓர் மாற்றம் விளம்பினல் விளைவுண் டென்று
சூழ்க்கிற்பாயல்லையாரும்கொழுகிற்பாய்!என்னச்சொன்னான்.

போதுநீ ஐய பின்னைப் பொன்றினோர்க்கு எல்லாம் நின்ற
வேதியர் தேவன் தன்னை வேண்டினை பெற்று மெய்ம்மை
ஆதிநூல் மரபி னாலே கடன்மையும் ஆற்றி ஏற்ற
மாதுயர் நரகம் நண்ணு வண்ணமும் காத்தி மன்னோ! (11)

ஆகுவது ஆகும் காலத்து அழிவதும் அழிந்து சிந்திப்
போகுவது அயலே நின்று போற்றினும் போதல் செய்யும்
சேகற உணர்ந்தோர் நின்னின் யாருளர்? வருத்தல் செய்யாது
ஏகுதி எம்மை நோக்கி இரங்கலை என்றும் உள்ளாய்! (12)

என்றவன் தன்னை மீட்டும் எடுத்துமார் பிறுகப் புல்லி
நின்றுநின்று இரங்கி ஏங்கி நிறைகணால் நெடிது நோக்கி
இன்றொடும் தவிர்ந்த தன்றே உடன்பிறப்பு என்பது என்றான்
வென்றிவெந் திறலினானும் அவனடித் தலத்தில் வீழ்ந்தான். (13)
(கும்பகருணன்வதை—154—166)

இங்கே கும்பகருணன் பேசியுள்ள பேச்சுகளும் நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளும் அதிசய வியப்புகளாய்ப் பொங்கி அறிவும் அன்பும் பெருகிப் பரிவும் பண்பும் சுரந்து வந்திருக்கின்றன. பாசுரங்களை ஊன்றிப் படித்துப் பொருள் நிலைகளையும் உணர்வு நலங்களையும் உயிர் உருக்கங்களையும் ஊன்றி யுணர வேண்டும்.

உழுவலன்போடு தம்பியைத் தழுவிப் பரிவு பொங்கி உருகி நின்றவன் அறிவு நலம் கனிய உறுதி நலங்களை உரையாடியிருக்கிறான். இராமன்பால் வந்து சேர்ந்துகொள்ளும்படி தன்னை அன்பால் அழைத்த தம்பி யாவும் அறிந்து தெளிந்து கொள்ளுமாறு உரைகள் உணர்வு நலம் சுரந்து விரிந்து வந்துள்ளன.

“தம்பி! பிறவிப் பாசத்தால் நீ இங்கு வந்து மறுகி நிற்கின்றாய்; போர்மேல் மூண்டுவந்துள்ள நான் வேறுகருதுவது வீண்; நீர்மேல் எழுத்துப்போல் நிலையில்லாத இந்த உலக வாழ்வை ஒரு பொருளாக நச்சி மருளுவது மடமையேயாம்; நீண்டகாலமாக என்னை உரிமையோடு போற்றி வளர்த்து இன்று என்னை என் அண்ணன் போர்மேல் ஏவியுள்ளான். அவனுக்கு உறுதியாய் நின்று உதவி செய்வது எனது கடமையாம். உயிரை மாய்த்தேனும் அதனையே எவ்வழியும் செய்வேன். உற்றதமையனுக்கு உதவாமல் மற்றதை மறந்தும் செய்யேன். என்பால் அன்பால் மறுகி இங்குவந்து நீ துன்பம் உறுவது என் உள்ளத்தை வருத்துகின்றது. நீ நண்பாய் மருவியுள்ள அந்த இராமனிடம் விரை

ந்து போய்ச்சேர். தருமம் கருணை நீதி முதலிய அரிய நீர்மைகள் பிறவியிலேயே உனக்கு இனிதமைந்திருக்கின்றன. நீயவர்களை வெறுத்து விட்டு நல்லவர்களோடு சேர்ந்து வாழ்வது உனக்குத் தகுதியேயாம்; எனக்கு அது தகாது; உரியவனுக்கு உதவியாய்ப் பொருது மாண்டுபடுவதே எனக்குப் பெரிய புகழாம். இயற்கைச்சுபாவங்களின்படி எண்ணங்களும் செயல்களும் இசைந்து வருகின்றன. தங்கள் செய்கையே தமக்கு நீதியாய் எவர்க்கும் படுகின்றது. தன்னுடைய அரசன் தீயவழியில் சென்றால் அவனைத் திருத்தியருளவேண்டியது அமைச்சர் முதலிய துணைவர் கடமையாம். அவன் திருந்த வில்லையானால் அவனை விட்டு வேறு பிரிந்து போவது பெருந்தன்மையாகாது; அவனுக்கு உதவியாய் நின்று முன்னதாக மாண்டு போவதே மாட்சிமையாம். உறவாய் உண்டகடனுக்கு உயிரை ஈந்தவரே உயர்புகழ் பூண்டவராய் ஒளிமிகப் பெறுகின்றார். தேவரும் யாவரும் வணங்க மூவுலகங்களையும் ஆண்ட முடிமன்னன் யாதொரு துணையுமின்றித் தனியே போரில் மாண்டு கிடந்தால் அது எவ்வளவு பரிதாபம்! அந்தத் தமையனோடு உடன்பிறந்த தம்பியும் செத்தான் என்ற அந்த அதிசயக்கீர்த்தியை அடைந்து கொள்ளவே முன்னதாக மூண்டு ஈண்டு நான் வந்திருக்கின்றேன். எனது வரவு நிலையை உணர்ந்து உனது உறவு நிலையை விரைந்து போய் அடைந்து கொள்ளுக. அழியும் இயல்புள்ள உயிர்வாழ்வைஎன்றும் அழியாத புகழாக மாற்ற வழிநாடி வந்துள்ளேன்; இதனை நீ விழிநாடித் தெளிக. சிறந்த இலங்கைச் செல்வத்தோடு உலகம் முழுவதும் கிடைத்தாலும் எதிரியை வணங்கி வாழ்வதை நான் மறந்தும் நினையேன். யாண்டும் அருந்திறலோடு பெருகியிருந்த யான் மாண்டுமடிந்தாலும் மானம் அழிந்து வாழேன். சுக்கிரீவன் அனுமன் அங்கதன் முதலாக ஈண்டு வந்துள்ள வானர சேனைகளையெல்லாம் நாசம் செய்து வீர சோதியாய் நான் வீறுகொண்டு திரிவதை வானவர்களோடு சேர்ந்து நீயும் காண்பாய்! ஆலகாலவிடத்தைக் கண்டு அஞ்சி ஓடிய தேவர்களைப் போல் எனது சூலத்தைக் கண்டு வானரங்கள் யாண்டும் வெருண்டு ஓடி மாண்டுமடியும்; யாவரும் யாண்டும் மீண்டு போகாதபடி மூண்டு பொருது பிரசண்டமாருதமும் ஊழித்தீயும் நாண உக்கிர வீரமாய் நான் உலாவி வருவதைத் தேவ

தேவரும் நேரே பக்கம் நின்று காணுவர். போரில் நேர்ந்தவர் பாரில் வீழ்ந்து மாள்வரேயன்றி என் நேரில் எதிர்ந்து நில்லார். அவ்வாறு வீறேடு போராடவந்துள்ள என்னை நீ மாருய் அழைக்க வந்துள்ளாய்; கூற்றுவனும் அஞ்ச வாழ்ந்துவந்த நான் மாற்ருேேடு சேர்ந்து கெஞ்சி வாழ்வேனே? எனது மனநிலையை உணர்ந்து உனது மனநிலையை மாற்றிக் கொள்ளுக. ஒருவேளை வெல்லமுடியாமல் நாங்கள் எல்லோரும் மாண்டுமடிந்து போனல் நீ மீண்டுவந்து எங்களுக்கு எள்ளும் தண்ணீரும் இறைத்துச் சரமக்கிரியைகள் செய்து போகலாம். சாவாரை பிழைப்பிப்பாரும் வாழ்வாரை அழிப்பாரும் யாண்டும் இல்லை. ஆங்காலத்தில் யாவும் ஆகும்; போங்காலத்தில் எல்லாம்போகும்; வினையின்வழியே எவையும் நடந்து வருகின்றன. அழிவை நினைந்து அஞ்சுவதும் ஆவதை விழைந்து களிப்பதும் அறிவிலிகள் செயலாம். மாண்டுபடினும் மானம் பேணி வீரம் காத்து நிற்பதே யாண்டும் குலவீரர்களுடைய இயல்பாம். தலைமையான வீரக்குடியில் பிறந்த எனது நிலைமையைநினைந்து திருந்துக; எனக்காக ஈண்டு வருந்தி நில்லாதே; விரைந்து போய் விடுக!'' என்று தம்பியை நோக்கிக் கும்பகருணன் இவ்வாறு பரிந்து கூறிக் கெழுதகைமையோடு தழுவி விழிநீர் சொரிந்து நின்றான்.

அருந்திறலாண்மைகளோடு பொங்கி வந்துள்ள இந்த உரைகளிலிருந்து அவனுடைய உள்ளத்தையும் உணர்ச்சிகளையும் நாம் உணர்ந்து கொள்ளுகிறோம். பேசிவரும்போதே வீர கம்பீரங்கள் வீறிட்டு வெளிவந்துள்ளன. தமையன் நீதிக்கேடு செய்து நெடுந்துயரங்களை விளைத்து விட்டான் என்று நெஞ்சம் நொந்திருந்தாலும் அவன்பால் வைத்துள்ள அன்பும் மதிப்பும் குன்றவில்லை. குலமானம் நெஞ்சில் குடிகொண்டு நிற்கின்றது. எதிரியைப் பெரியவன் என்று கருதி வியந்தாலும் அவனை அடைந்து உயிர்வாழ்வது கொடியபழி என்று கடிது இகழ்ந்திருக்கிறான். மானம் அழிந்து வாழ்வது ஈனம் என முடிவுசெய்துள்ளான். உயிர் வாழ்க்கையைத் திரணமாக எண்ணியிருத்தலால் இவனுடைய வீரவாழ்க்கையின் நிலைமைதலைமைகளை நேரே தெரிந்து வியந்து உவந்து வருகிறோம். உள்ளத்தில் புதைந்து கிடந்த உண்மைகள் காலம் நேர்ந்த போது ஞாலம் அறிய வெளிவந்துள்ளன. உரைகளுள் உணர்வுநலங்கள் ஒளிபுரிந்து நிற்கின்றன.

நீர்க்கோல வாழ்வு.

உலக வாழ்வை இவன் எவ்வாறு கருதியிருந்துள்ளான்! என்பது இதனால் தெரியவந்தது. நீண்ட செல்வத்தோடு நெடிய ஆயுளைப் பெற்றிருந்தவன் இங்ஙனம் எண்ணியிருப்பது பெரிய வியப்பை விளைத்து அரிய உண்மைகளை உணர்த்தி நிற்கிறது.

உலக நிலைகளில் மயங்கி மருளாமல் உண்மையை உள்ளபடி உணர்ந்து கொள்வது ஞானம் ஆம். நிலையில்லாததை நிலையுடையது என்று கருதிக் களிப்பது அஞ்ஞானம் என நின்றது.

நில்லாதவற்றை நிலை என்று உணர்வது புல்லறிவு என்றார் தேவர். இந்தப் புல்லறிவினாலேதான் புலையானபிறவிகள்நிலையாய் வந்துகொண்டிருக்கின்றன. நல்லறிவு தெளிவாய்த் தோன்றிய பொழுதுதான் அவை அடியோடு ஒழிவடைகின்றன.

நித்திய அநித்தியங்களின் உண்மைகளைத் தெளிவாக நன்கு உணர்ந்து கொள்வதே தத்துவஞானத்தின் முதல் அடையாளம்.

"நித்திய அநித்தியங்கள் நிண்ணயம் தெரிவிவேகம்
மத்திய இகபரங்கள் வருபோகங்களில் நிராசை
சத்தியம் உரைக்க வேண்டும் சமாதிஎன்று ஆறுகூட்டம்
முத்தியைவிரும்பும்இச்சை மொழிவர் சாதனமிந்நான்கே."
(கைவல்லியம்)

ஞான சாதனங்கள் இவை என இது குறித்துள்ளது. குறிப்புகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளவேண்டும். சிரத்தையோடு தேர்ந்து சிந்திக்கும் அளவே திவ்விய தெளிவுகள் செவ்வையாய் வெளியாகின்றன. உண்மை தெளிய உய்தி வருகின்றது.

நிலையில்லாத உலக வாழ்வை நச்சிப் புலையான இழி வழியில் புகேன் என்று தம்பி எதிரே கும்பகருணன் சொல்லும் பொழுது நீர்க்கோல வாழ்வு என்றான். அதன் பேர்க்கோலம் தெளிவாகத் தெரிய உவமானத்தை நயமா எடுத்துக் காட்டி உண்மைக் காட்சியை இனிது விளக்கியிருக்கிறான்.

நீரின்மேல் விரலால் ஏதாவது கோடு கிழித்தால் அதில் யாதொரு உருவமும் தோன்றாது. ஆகவே நிலையின்றி மறைந்து போவதை நீர்மேல் எழுத்து என உலகம் வழங்க நேர்ந்தது.

பின்பு அது காவியங்களிலும் புகுந்து சீவிய ஒவியமாய் விளங்கிச் சீவகோடிகளுக்கு ஓர் போதனையாய் நின்றது.

நீரில் குமிழி இளமை; நிறைசெல்வம்
நீரில் சுருட்டும் நெடுந்திரைகள்---நீரில்
எழுத்தாகும் யாக்கை; நமரங்காள்! என்னே
வழுத்தாது எம்பிரான் மன்று. (நீதிநெறிவிளக்கம்)

இளமை செல்வம் யாக்கைகள் நிலையில்லாதன என்பதற்கு நீரில் தோன்றும் குமிழி முதலியன இதில் உவமைகளாய் வந்துள்ளன. குறிப்புகள் கூர்ந்து சிந்திக்க வுரியன.

"நீர்எழுத்துக்கு ஒத்தவுடல் நீத்தார்க்கு நீநவில்வது
ஓர் எழுத்தே." (காசிக் கலம்பகம்)

நீர்மேல் எழுத்து என உலக வாழ்வைத் துறந்து போன துறவியர்க்கு இறைவன் பிரணவ மந்திரத்தை உபதேசித்துப் பேரின்ப நிலையை அருளுகிறான் என இது உணர்த்தியுள்ளது.

மன்னுநீர் மொக்குள் ஒக்கும் மானிடர் இளமை இன்பம்
மின்னின் ஒத்து இறக்கும் செல்வம் வெயிலுறு பனியின்நீங்கும்
இன்னிசை இரங்கு நல்யாழ் இளியினும் இனிய சொல்லாய்!
அன்னதால் வினையின் ஆக்கம் அழுங்குவது என்னை? என்றாள்.
தேன்சென்ற நெறியும் தெண்ணீர்ச் சிறுதிரைப் போர்வை போர்த்து
மீன்சென்ற நெறியும் போல விழித்திமைப் பவர்க்குத் தோன்றா
மான்சென்ற நோக்கின் மாதே! மாய்ந்துபோம் மக்கள் யாக்கை
ஊன்சென்று தேயச் சிந்தித்து உருகுவதோ தகுவது என்றாள்.
(சீவகசிந்தாமணி)

வெளியே வண்டு பறந்து போன வழியும், நீரில் மீன் சென்ற நெறியும் போல உருவத் தோற்றங்கள் யாதும் தெரியாமல் மறைந்து போகின்றன; நீர்மேல் குமிழி போன்ற இந்த உலக வாழ்வை நினைந்து உள்ளம் உளைந்து கவல்வது பேதைமையாம் என இவை போதித்துள்ளன.

நீர்க்குமிழி பூண் அமைந்து நின்றாலும் நில்லாமெய்
பார்க்குமிடத்து இதன்மேல் பற்றறுவது எந்நாளோ?"
(தாயுமானவர்)

"கால்எதிர் குவித்த பூளை; காலைக்
கதிர்எதிர்ப்பட்ட கடும்பனிக் கூட்டம்;;

அந்தரத்து இயங்கும் இந்திர சாபம்;
அதிரு மேகத் துருவின் அருநிழல்;
நீரில் குமிழி; நீர்மேல் எழுத்து;
கண்துயில் கனவில் கண்ட காட்சி
அதனினும் பொல்லா மாயக் களங்கம்
அமையும் அமையும் பிரானே அமையும்"

(பட்டினத்தார்)

நீரில் குமிழியாய் நீர்மேல் எழுத்தாய் பாரில் விரைந்து மாய்ந்து மறைந்துபோகிற இந்த ஊன வாழ்வை மறந்து ஞான மடைந்து தெளிந்து உய்யுநாள் என்றோ? என்று தாயுமானவரும் பட்டினத்தாரும் பரமனை நோக்கி இவ்வாறு பரிந்து மறுகி இரங்கியிருக்கின்றனர்.

அரிய துறவிகளும் பெரியஞானிகளும் இங்ஙனம் உணர்ந்து தெளிந்துள்ள நிலைமையைக் கும்பகருணன் இங்கே தலைமையா உணர்த்தியிருக்கிறான். உரையால் அவன் உள்ளம் தெரிகின்றது.

அழிந்து ஒழிந்து போகின்ற நிலையற்ற இந்தஉலகவாழ்வை ஒரு பொருளாக விரும்பி நின்று நான் நிலை குலைந்து வாழேன் எனத் தனது தலைமைத் தன்மையைத் தம்பியிடம் வலியுறுத்தி யிருப்பது அவனுடைய மானவீரங்களையும் ஞான நீர்மைகளையும் மன வுறுதியையும் நன்கு துலக்கி நிற்கின்றது.

எவ்வளவு நாள் இருந்தாலும் ஒருநாள் அழிந்து போக வேண்டியதே; அவ்வாறு அழிவு நிலையில் உள்ள வாழ்வை என்றும் அழியாத புகழுக்கு உரிமையாக்க வேண்டும் என்று மூண்டு நிற்கின்றான் ஆதலால் நீர்க்கோலம் என அவ் வாழ்வின் நிலைமையை விழி தெரிய விளக்கினான்.

மின்னல் ஒளி, வானவில், பனிநீர் என நிலையாமைக்குரிய உவமைகளுள் வேறு எதையும் கூறாமல் நீரின் கோலத்தைக் குறித்தது அது பாரில் நேரே தோன்றும் எளிமை கருதி.

"Like the dew on the mountain,
Like the foam on the river,
Like the bubble on the fountain,
Thou art gone, and for ever!"

(Scott)

"மலையில் விழும்பனி, நதியில் எழும் நுரை, நீரில் தோன்றும் குமிழி என நீ அழிந்து போவாய்! இது என்றும் உறுதி" என ஸ்காட் என்னும் ஆங்கிலக் கவிஞர் கூறியுள்ளதும் ஈங்கு அறியவுரியது. அழிவு நிலை அறிவதால் தெளிவு விளைகிறது.

அநித்திய நிலையை அறிந்தவர் நித்திய உண்மைமைகளை உணர்ந்து கொள்ளுகின்றனர். கொள்ளவே யாண்டும் மயங்காமல் எவ்வழியும் அவர் தலைமையாய்த் தழைத்து நிற்கின்றனர்.

இலங்கைச் செல்வத்தை உனக்குத்தந்து சக்கரவர்த்தியாக உன்னை அரியணையில் எழுந்தருளச் செய்து உன் கீழ் ஊழியனாயிருந்து என்றும் நான் ஏவல் புரிந்து வருவேன் எனத் தன்னோடு சேர்ந்துகொண்டால் சேரும் சீரிய வாழ்வை வீடணன் முன்னம் விளக்கிக் கூறினன் ஆதலால் அதற்குப் பதில் கும்பகருணன் அதி விநயமாய் இங்ஙனம் உரைக்க நேர்ந்தான்.

நீர்க்கோல வாழ்வை நச்சி நான் கொச்சையாய் வாழேன் என்று குறித்திருத்தலால் அவனது உச்ச நிலை உணர வந்தது. இதில் தம்பியின் வாழ்வைப் பச்சையாப் பழித்திருப்பது போல் தெரியினும் அவன் ஒதுங்கி வாழ்வதை உண்மையாகவே இவன் உவந்திருக்கிறான்.

போர்க் கோலம் செய்து விட்டான்.

தன்னை அண்ணன் போருக்கு ஆயத்தம் செய்து அனுப்பியுள்ள நிலையை இவ்வண்ணம் உணர்த்தியிருக்கிறான். தம்பி போருக்குப் போயுள்ளான்; பகைவரை அடியோடு வென்று வருவான் என்று தன்னை உறுதியாக நம்பி எதிர்பார்த்திருப்பான்; அந்த நம்பிக்கைக்கு மோசம் செய்யலாகாது என்னும் குறிப்பு இந்த வாசகத்தில் நன்கு தொனித்துள்ளது.

நெடிதுநாள் வளர்த்து என்றதில் தான் வளர்ந்து வந்துள்ளமை உளம் தெரிய வந்தது. அரசனுக்குத் தம்பியாயிருந்தாலும் செல்வ வளங்கள் யாவும் அவனுக்குத் தனியுரிமையுடையன. அவன் உள்ளம் உவந்து பிள்ளையைப் பெற்ற தந்தை பேணி வந்தது போல் தன்னைப் போற்றி வளர்த்து வந்துள்ளான் என அவனது உரிமையையும் உதவியையும் இங்ஙனம் பெருமையாகப் போற்றி அருமை தெரியக் கூறினன்.

உள்ள நாள்வரையும் உண்டு உவந்து வந்தவன் உற்ற சமையத்தில் உரிமையாய் உதவ வேண்டும் என நன்றியறிவை வெளிப்படுத்தி வென்றிவீரோடு தம்பியிடம் விளம்பியிருக்கிறான்.

உயிர் கொடாது அங்குப் போகேன்.

என்றது துயரோடு தொடர்ந்து காண வந்தது.

எதிரிகளைக் கொன்று தொலைத்து வென்றியோடு மீளுவேன் என்று சொல்லவில்லை. வெல்ல முடியாது; சாகவே நேரும் என்று யூகம் செய்திருக்கிறான். அவ் வுண்மையை இவ்வுரை உணர்த்தி நின்றது. குறிப்புமொழி கூர்ந்து சிந்திக்க வந்தது.

"வென்று இவண் வருவன் என்று உரைக்கிலேன்." என இராவணனிடம் முன்னமே குறித்து வந்திருத்தலால் ஈண்டும் அந்த ஐயமே மூண்டு நின்றது. நிலைமைகளை யெல்லாம் நிறை நோக்கி நோக்கி இறுதியான உறுதியுடன் உரையாடியுள்ளான்.

உண்ட சோற்றுக்கு உயிரைக் கொடுக்கவே உறுதிசெய்து வந்திருத்தலால் இவனுடைய நன்றியறிவும் உள்ளத் துணிவும் நேர்மையும் சீர்மையும் நேரே தெரிய வந்தன. தம்பியின்பால் அன்பு சுரந்திருந்தாலும் அவனுடைய வேண்டுகோளுக்கு யாதும் இசையாமல் தனது ஆண்மை நிலையிலேயே உறுதியாய் இவன் ஊன்றி நிற்பது ஆன்ற மேன்மை நிறைந்துள்ளது.

பெற்ற தாயாள குந்தி வந்து பாண்டவர்களோடு சேர்ந்து கொள்ளும்படி கன்னனை வேண்டிய பொழுது அவன் மறுத்து நின்ற நிலையும் ஈண்டு இணைத்து எண்ண உரியது. தனக்குத் துரியோதனன் செய்து வந்த உபகாரங்களை நினைந்து அவன் உருகி யிருக்கிறான். அம் மன்னனுக்கு உதவியாய்ப் போரில் கன்னன் மூண்டு நின்றபொழுது நேரில் சொன்ன வார்த்தைகள் சீரும் சிறப்பும் செறிந்து நீர்மை சுரந்து நின்றன.

நஞ்சோற்றம் பெறநுகர்வுற் றிருண்ட கண்டர்
 நற்றுண்டர்வடிவம் எனநண்ணும் வெண்ணீற்று
அஞ்சோற்று மடற்கைதை கமழும் கானல்
 அகன்குருநாட் டரிஏறே யானின் றிம்பால்
வெஞ்சோற்றோடு இனிதருந்தி அமுதருந்தும்
 விண்ணவர்போல் இந்நெடுநாள் விழைந்து வாழ்ந்தேன்

செஞ்சோற்றுக் கடனின்றே கழியேன் ஆகில்
திண்டோள்கள் வளர்த்ததனால் செயல் வேறுண்டோ?

ஓர் ஊரும் ஒருகுலமும் இல்லா என்னை
உங்கள்குலத் துள்ளோரில் ஒருவன் ஆக்கித்
தேரூரும் அவர் மனைக்கே வளர்ந்த என்னைச்
செம்பொன்மணி முடிசூட்டி அம்புராசி
நீரூரும் புவிபாலர் பலரும் போற்ற
நின்னினும்சீர் பெறவைத்தாய் நினக்கே அன்றி
ஏரூரும் கதிர்முடியாய் உற்ற போரில்
யார்க்கினி என்உயிர் அளிப்பது? இயம்புவாயே!
(பாரதம்)

மன்னன் முகம் நோக்கிக் கன்னன் இன்னவாறு பேசியுள்ளான். உரைகளில் மருவியுள்ள உணர்ச்சி நிலைகள் ஊன்றி உணரவுரியன. நன்றியறிவு முதலிய மேன்மையான நீர்மைகள் சிறந்த ஆண்மையாளரிடமே யாண்டும் நிறைந்திருக்கின்றன.

நெடிதுநாள் வளர்த்த அவனுக்கு உயிரைக் கொடுப்பேன் என்று கும்பகன்னன் ஊக்கிநின்றது போல் கன்னனும் போரில் மூண்டு நின்றுள்ளான். செஞ்சோற்றுக் கடன் கழிப்பேன் என்று அவன் நெஞ்சம் துணிந்து பேசியிருப்பதில் நிலைமைகள் தெரிய வந்தன. எதிரிகள் பெருவலியுடையவர்; வெல்லுதலரிது; ஆயினும் ஆனவரையும் அமர்புரிந்து அருங்கடன் தீர்ப்பேன் என்று தீர்மானித்துள்ளான்.

உற்றபோரில் நினக்கு அன்றி என்உயிர் யாருக்கு அளிப்பது? என நண்பனிடம் வினவியுள்ள இதில் பரிவும் பண்பும்பெருகியுள்ளன. அரிய வீரத்தின் பெரிய நீர்மை தெரிய வந்தது.

போரில் இறப்பதைப் பெருஞ்சிறப்பாக வீரர் கருதியிருத்தலால் உலகவாழ்வை அவர் வெறுத்து விடுகின்றனர்.

"Heroism is almost ashamed of its body." (Emerson)

"தனது உடல் வாழ்வைப் பெரும்பாலும் வீரம் நாணுகின்றது" என்னும் இது ஈண்டுக் காணவுரியது.

மரணம் எய்தல் எனக்குப் புகழ்.

சிறந்த அரச திருவை அடைந்து உவந்து வாழலாம் என்று

தன்னை விரும்பி அழைத்த தம்பிக்குத் தமையன் இன்னவாறு தனது உறுதி நிலை தெரியப் பதில் உரைத்துள்ளான்.

வாழ்வது உனக்குத் தகவு; சாவது எனக்குப் புகழ் என்று உரைத்திருக்கிருன். இந்த உரையின் குறிப்புகள் ஊன்றி உணர வுரியன. வீரமும் மானமும் விரவி மிளிர்கின்றன.

கருத்து இலா இறைவன் என்றது இராவணனது நிலைமையைக் கருதி வருத்தமாய் வந்தது. உறுதி நலங்களைக் கருதியுணரும் கருத்து இல்லாமையால் இறுதி நேர்ந்துள்ளது என இரங்கியிருக்கிருன். வினையின் உளவு தெரிய அளவுரை அமைந்தது.

உரிய அரசன் அறிவு கேடனாய்த் தீமை புரியின் உறவுரிமையுடையார் அறிவு நலங்கள் கூறி அவனைத் திருத்தவேண்டும்; திருந்தவில்லையானால் அவனை இழந்துவிட்டு அயலே மாருய் வேறிடம் போகக் கூடாது. அந்த அரசனுக்கு அழிவுநேருமுன் எந்த வகையிலாவது இறந்து போக வேண்டும். அதுதான் உண்மையான உறவின் தன்மையாம்.

ஒருத்தரின் முன்னம் சாதல் உண்டவர்க்கு உரியது.

ஒரு அரசனோடு உறவுகொண்டிருந்தவர் அவனுக்கு இடையூறு நேர்ந்தபோது நடந்துகொள்ளவேண்டிய கடமையை இவ்வாறு வரைந்து காட்டியிருக்கிருன். தான் மருவியிருந்த அரசனை எவ்வழியும் ஒருவி நீங்கலாகாது; சுகமோ துக்கமோ அவனோடு கூடியிருந்தே அனுபவித்து அவனது மேன்மையை யாண்டும் கேண்மையாய்ப் பேணிக் கெழுதகைமை புரிய வேண்டும்.

"பிறையது வளரத் தானும் வளர்ந்துடன் பெருகிப் பின்னாள்
குறைபடு மதியம் தேயக் குறுமுயல் தேய்வ தேபோல்
இறைவனைத் தன்னை ஆக்கி யவன்வழி ஒழுகின் என்றும்
நிறைமதி இருளைப் போழும் நெடும்புகழ் விளைக்கும் என்ருன்."
(சீவகசிந்தாமணி)

அரசனோடு பழகியவர் மதியோடு மருவிய முயல்போல இருக்கவுரியர்; மதியினுடைய வளர்ச்சியிலும் தேய்விலும் அது ஒரு நிகராய் மருவி நிற்கும்; அதுபோல் அரசனுடைய வளர்வு தளர்வுகளிலும் அமைச்சர் இணையமைந்திருக்க வேண்டும்; அவ்வாறு இருந்து வரின் திருந்திய பெரும் புகழ் விளைந்து வரும் எனத் தருமதத்தன் என்னும் மந்திரி இந்தவாறு கூறியிருக்கிருன்.

மன்னனைச் சார்ந்து ஒழுகும் மந்திரிகளே இன்னவாறு என்னவகையிலும் அவனோடு பின்னிப் பிணைந்து இருக்க வேண்டும் எனின் உடன்பிறந்த தம்பியர் என்ன நிலையில் அமைந்திருக்க வேண்டும்! என்பது ஈண்டு உன்னி உணர வந்தது. அரிய இராச மரியாதையையும் உரிய உறவையும் நன்றியையும் இந்த வீரத் தம்பி இங்கே உறுதிசெய்து நின்றுள்ளான்.

தன்னுடைய அண்ணனைப் பிரிந்து அகல்வது எண்ணவும் முடியாத இழிபழி என்று கும்பகருணன் எண்ணியிருத்தலை உரைகள் உணர்த்தி நிற்கின்றன.

தம்பியர் இன்றி மாண்டு கிடப்பனோ தமையன் மண்மேல்.

உம்பர் உலகமும் இம்பர் உலகமும் ஒருங்கே ஆண்டு வந்த உயர் குல வேந்தன் துயர் நிலையில் விரைந்து மாண்டுபடுவான் என்பதை ஈண்டு இது விளக்கி நின்றது. இரண்டு தம்பியரோடு பிறந்து அகிலமும் தொழ வாழ்ந்தவன் ஒரு துணையும் இன்றித் தனியே இறந்து கிடக்க விடுவது அநியாயமாம் என அலமந்து மொழிந்துள்ளான். இளைய தம்பியாகிய நீ விலகிப் போனாலும் நான் ஒருவனாவது அண்ணனோடு துணையாய் இறக்கவேண்டும்; என்னை உன்னோடு வரும்படி வீணே அழைக்காதே என்று பின்னவனிடம் இன்னலோடு இன்னவாறு பேசியிருக்கிறான்.

இராம பாணங்களால் அடிபட்டு இறந்து இராவணன் தரையில் வீழ்ந்துகிடக்கும் பரிதாபக் காட்சியை முன்னதாகவே கும்பகருணன் கருதி மறுகி இருத்தலை இவ்வுரையால் உணர்ந்து கொள்ளுகிறோம். எதிர்வதை எண்ணி உள்ளம் ஏங்கியுள்ளான்.

அழிவு மூண்டுள்ள நிலைமையை இவனுடைய உள்ளம் தெளிவு பூண்டுள்ளமையால் உரைகள் உறுதி செய்துள்ளன.

அநாதியாய்ச் செத்தான் என்ற அவப்பழி நேராமல் சாவினும் ஒருதம்பி துணையா யிறந்தான் என்னும் பெருமையை அண்ணனுக்கு உரிமையோடு உதவுவதே நான் பிறந்து வந்ததின் சிறந்த பயனும் என்று இவன் துணிந்து நிற்றலை உணர்ந்து பரிவோடு நாம் இணைந்து இரங்கி நிற்கிறோம்.

பகையை வாழ்த்தி நான் கும்பிட்டு வாழ்கிலேன்.

இராமனிடம் வந்து சேர்ந்துகொள்; நீ சுகமாய் வாழலாம் என்று வீடணன் விழைந்து அழைத்ததற்குப் பதிலாக இந்த வீர வசனம் வெளி வந்துள்ளது. குலமானமும் தலைமையான வீரமும் நிலை உயர்ந்து நேரே நிமிர்ந்து நிற்கின்றன.

நான் என்ற குறிப்பு தன்னைத் தனிநிலையில் உயர்த்தி நின்றது. நீ குப்பிட்டு வாழ்வதுபோல் நான் வாழ முடியாது என மான உணர்ச்சியோடு தன்னைத் தனி ஒதுக்கி நின்றுள்ளான். இவனுடைய மேன்மையான மான நிலை நுணுகி யுணர வுரியது.

இராமன் பெரியவன்; அதிசய நிலையினன் என்று துதி செய்து வந்தாலும் தனது தமையனுக்குப் பகைவனாய் நேர்ந்தமையால் அவனைப் பணிந்து வாழ்வது இழிந்த பழியாம் என்று துணிந்து நின்றான். உள்ளத் துணிவை உரை வெளிப்படுத்தியது.

இவ் வீரனுடைய உறுதியும் உள்ளத்துணிவும் மான உணர்ச்சியும் மாண்பு சுரந்து மதிப்பு நிறைந்துள்ளன. தனது குடிப் பெருமையையும் குல வீரத்தையும் நிலைமை நீர்மைகளையும் பல வகையிலும் கருதி நின்று உறுதி சூழ்ந்து உரையாடி வருகிறான்.

"கூற்றையும் ஆடல் கோண்டேன்" எனத் தனது வீர பராக்கிரமத்தை இப்படிக் குறித்துக் காட்டியிருக்கிறான். தேவர் முதல் யாவரும் அஞ்சுகின்ற எமனையும் வென்று யாண்டும் வெற்றி வீரனோடு வாழ்ந்து வந்த நான் இன்று ஒரு மனிதனுக்குத் தலை வணங்கி இழி நிலையில் வாழமாட்டேன் என்று ஆவேச ஆரவாரத்தோடு பேசியிருத்தலை ஓசைக்குறிப்பால் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம். உணர்ச்சிவசமாய் உரைகள் ஓங்கிநிற்கின்றன.

தம்பியின்பால் பாசம் மீதூர்ந்து உரிமையோடு இனிமையாகப் பேசி வந்தாலும் உள்ளத்தில் நிறைந்துள்ள வீரத் திறல்கள் வெளியே ஆவேசமாய்த் தள்ளி வந்துள்ளன.

இலங்கைமேல் படையெடுத்து வந்துள்ள சேனைத் திரள்களையும் சேனாதிபதிகளையும் மிகவும் துச்சமாகவே எண்ணியிருக்கிறான். வீர மமதை யாரையும் எளிதாக இகழ்ந்துள்ளது.

அனுமன் அங்கதன் சுக்கிரீவன் முதலிய யாவரையும் எளிதே வென்று சேனைக் கடல் முழுவதையும் அடியோடு அழித்து விடுவேன் என்று தெளிவோடு தெளித்து நின்றான்.

**ஆலம்கண்டு அஞ்சி ஓடும் அமரர்போல் அரிகள் ஓட.**

தான் போரில் மூண்டு புகுந்தபொழுது ஆண்டு நிகழும் அவலக் காட்சியை இங்ஙனம் வரைந்து காட்டினன். பண்டு மூண்டு எழுந்த ஆலகால விடத்தைக் கண்டு தேவர்கள் சிதறி ஓடியதுபோல் தன்னைக் கண்டு வானர சேனைகள் மானமழிந்து உள்ளம் கலங்கித் திசைகள்தோறும் ஓடியும் ஒழியும் என்று கும்பகருணன் உறுதியாகக் கருதியிருக்கிருன்; அந்தக் கருத்தை இந்த உரையால் உணர்ந்து கொள்ளுகிறோம்.

போராட மூண்டுவந்துள்ள படைகள் மீண்டு புறங்காட்டி அஞ்சி ஓடும் நிலையைத் தெளிவுபடுத்தப் பண்டு நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியைக் கொண்டு காட்டினன். அச்சத்தின் எல்லைதெரிய ஆலத்தைக் குறித்தான். ஆலகாலம் என்னும் கொடிய விடம் எவரையும் எளிதே கொல்லும் ஆதலால் அதனோடு தன்னை நேர் நிறுத்திக் கொலைகள்விழும் நிலைமையைத் தலைமையாக உணர்ந்து கொள்ள உரைத்தான். அரிகள் = குரங்குகள்.

தேவர் யாவரையும் வென்று தொலைத்து மேன்மை எய்தி வாழ்ந்து வருகிற தன் குலத்தோடு போராட வந்த குரங்குக் குலத்தை அடியோடு தொலைத்து ஒழிப்பேன் எனத் தனது பேராற்றலையும் போராற்றலையும் நேரே துலக்கி நின்ருன்.

தன்னுடைய உள்ளத் துணிவையும் உறுதித் திறலையும் தப்பி உணர்ந்து திரும்புப்படி உரையாடியுள்ளான். எதிரியை வணங்கி வாழ யாதும் இணங்கேன் என்பதை இந்தவாறு வீர மொழிகளால் தீரமாய் விளக்கியருளினன்.

**உயிர்சுமந்து உலகில் ஒருவரும் திரிய ஒட்டேன்.**

போருக்கு வந்த யாவரும் உயிரோடு மீள முடியாது; அமர்க் களத்தில் அனைவரும் அழிந்தே படுவர் என்பதை இங்ஙனம் தெளிந்து கொள்ள பொழிந்து நின்ருன்.

தன்னுடைய உக்கிர வீரத் திறலில் எவ்வளவு துணிவும் தெளிவும் கொண்டிருந்தால் இவ்வளவு மொழிகள் வெளி வரும்! முன்னம் சென்ற இடங்களில் எல்லாம் வென்றியே கண்டு வந்தவன் ஆதலால் அந்த வெற்றிக் களிப்பில் வீறுமண்டிப் பேசியுள்ளான். சுக்கிரீவன் முதலாகச் சேனைத் தலைவர்

எவரையுமே ஒரு பொருளாக எண்ணவே இல்லை. எல்லாரையும் திரணமாகவே கருதி யிருத்தலால் இவனது போர் வெறியின் நிலை தெரிய வந்தது. அடலாண்மை புரிந்து படைகளைப் பாழ் படுத்தி விடலாம் என்று திடமாகவே தீர்மானித்திருக்கிறான். தனது உள்ளம் துணிந்துள்ளதைத் தம்பியிடம் நேரே உரைக ளால் உணர்த்தி நின்றது உறுதி நிலையை வெளிப்படுத்தியுளது.

இருவரும் நிற்க.

என்றது வரையறை செய்து கூறியபடியாம்.

இராமனையும் இலட்சுமணனையும் முடிவாக வெல்லமுடியாது என்று இவன் முடிவு செய்துள்ளான். அந்த உண்மையை இந்த உரை உணர்த்தி நின்றது. கருவரை, கனகக்குன்றம் என்றது அவ் வீரர் இருவருடைய உருவநிலைகளை முறையே நினைந்து வந் தது. யாருக்கும் அசையாத அதிசய நிலையினர் என்பதை வரை என்னும் குறிப்பால் வரைந்து கூறினான்.

கருவரை கனகவரை ஆகிய அந்த இருவர் தவிர வேறு எவ ரையும் உயிரோடு திரியவிடேன் என்றது எல்லாரையும் ஒருங்கே கொன்று தொலைப்பேன் என்றபடியாம். பகைப் படைகளை இவ்வாறு நாசம்செய்யவே நான் இங்கு மூண்டுவந்துள்ளேன்; என்னை நேசம் கொண்டாடிச் சமாதானம் செய்ய வேண்டாம் என்று தம்பியை வேண்டி நின்றான்.

தன்னுடைய உள்ளக் கிடக்கையை இங்ஙனம் உரைத்தவன் பின்பு தத்துவ நோக்கோடு சில புத்திமதிகளையும் கூறினான்.

ஆகுவது ஆகும்;
போகுவது போற்றினும் போதல் செய்யும்.

இவ்வாறு இறுதியில் போதனை செய்துள்ளான்.

கால நியதியின்படி யாவும் நடக்கின்றன. ஆவதும் அழி வதும் எவருடைய விருப்பு வெறுப்புகளையும் எதிர்நோக்கி நிகழ் வன அல்ல. இயற்கை நியமங்களை எவரும் தடுக்க முடியா.

ஆவாரை அழிப்பாரும் இலர்;
சாவாரை பிழைப்பிப்பாரும் இலர்.

எந்தக் காலத்தில் எந்தப் பொருள் அழிய உரியதோ அது அந்தக் காலத்தில் அழிந்தே தீரும்; அழிந்துபடாமல் அதனைத் தடுத்து நிறுத்த படைத்த பிரமாவினாலும் இயலாது.

தான் அழிந்துபோவேன் என்று தனக்காக இரங்கி மறுகி நிற்கும் வீடணனை நோக்கிக் கால தத்துவங்களைக் கும்பகருணன் இங்ஙனம் கூறியிருக்கிறான். "தம்பி! நான் இறந்து போவேன் என்று பரிந்து வருந்துகிறாய்! சமாதானமாய் இருந்து உயிர் வாழ வேண்டும் எனப் பாச நேசத்தால் யோசனை கூறுகின்றாய்; ஆவதும் அழிவதும் நம்முடைய கையில் இல்லை; வினைகளின் நியமனத்தின்படி அவை முடிந்து போகின்றன. உண்மை நிலைகளை உணர்ந்து உள்ளம் தேறி மீண்டுபோய் இராமனை நீ அடைந்து கொள்; ஈண்டு நின்று பலவும் கூறி நேரத்தை வீணே கடத்தாதே" என்று கடந்த ஞானியைப் போல் இங்கே இவன் துணிந்து பேசியிருக்கிறான்.

தனக்கு முடிவு காலம் நெருங்கி யிருக்கிறது; அழிவு மூண்டுள்ளது; அதனை யாரும் தடுத்து நிறுத்தமுடியாது; முடியாத ஒன்றை முடிக்க முயல்வது வீண்; நடந்தபடி நடக்கட்டும்; நீ விரைந்து போ! என்னும் குறிப்பு இதில் மருவி நிற்கிறது.

ஆம்பொருள்கள் ஆகும் அது யார்க்கும் அழிக்கொண்ணாப்
போம்பொருள்கள் போகும் அவை பொறியின் வகைவண்ணம்
தேம்புனலை நீர்க்கடலும் சென்று தரல் இன்றே
வீங்குபுனல் யாறு மழை வேண்டி அறியாதே.
(சீவக சிந்தாமணி 848)

ஆவதும் அழிவதும் வினை விளைவின்படியே நிகழ்கின்றன; அவற்றை யாரும் மாற்ற முடியா என இது உணர்த்தியுளது. பொறி = விதி. விதி ஆட்டியபடியே யாவும் ஆடுகின்றன.

தேம்போது அனைத்தும் மெய்சாயும் சிலபோது அலரும் சிலபோது
வேம்போது அங்கு வாழ்வவெலாம் வெங்கா னுடனே வேவாவோ?
ஆம்போது ஆகும் அதுவன்றி ஆய பொருள்கள் அம்முறையே
போம்போது அனைத்தும் போம்முன்னம் பொறுத்திர் இன்னம் பொ
(பாரதம், சூதுபோர் 230) [றும் என்றான்

தருமன் தம்பியரை நோக்கி இவ்வாறு புத்தி கூறியிருக்கிறான்.

சில பூக்கள் சிலகாலம் மலரும்; சிலபோது கூம்பும்; அந்த வனத்தில் தீ புகுந்தால் யாவும் ஒருங்கே வெந்துபோம். உலகில் சிலர் செல்வராய்ச் சிலகாலம் மகிழ்வர்; சிலர் அல்லலுறுவர்; அழிவு நேரும்போது எல்லாரும போய்த் தொலைவர் ஆதலால் ஆக்கம் கேடுகளை நினைந்து அலமரலுருமல் நல்லபொறுமையுடையராய் நில்லுங்கள் எனத் தம்பியர் உள்ளந் தேறி நிற்கத் தருமன் சொல்லியுள்ள இது இங்கே கருதி உணரவுரியது.

ஆவது ஆகும்; போவது போகும்; அது குறித்து இரங்காதே எனத் தம்பிக்குக் கும்பகருணன் உரைத்தது நிலைமைகளை நினைந்து நெஞ்சம் தெளிந்து தலைமையோடு வாழ வந்தது.

"ஆவன ஆவ; அழிவ அழிவன;
போவன போவ; புகுவ புகுவன;" (திருமந்திரம், 2175)

திருமூலரும் ஆதல் அழிவுகளை இவ்வாறு கூறியுள்ளார்.

வினை நிகழ்வும் விதி முடிவும் கால கதியும் கருதரிய நிலையில் யாண்டும் வேலை செய்து வருகின்றன. அவற்றின் வழியே ஞாலம் இயங்கி வருகின்றது. யாவும் மயங்கி நிற்கின்றன.

நீரிலே குமிழி தோன்றுவதும் மறைவதும் போல் பாரிலே சீவ கோடிகள் ஓயாமல் படர்ந்து வருகின்றன. ஆதலும் அழிதலும் பகல் இரவுகள் போல் நியமமாய் நிகழ்ந்து கொண்டேயுள்ளன. அழிதலுக்கு அஞ்சுதலும் ஆதலுக்கு மகிழ்தலும் தெளிவில்லார் செயல்களாம். உண்மை தெளிந்தவர் எதற்கும் கலங்காமல் எல்லாம் நன்மைக்கே என்று துணிந்து நிற்கின்றார்.

உணர்ந்தோர் நின்னின் யார் உளர்?

தம்பியை நோக்கி இவ்வாறு வினவியிருக்கின்றான்.

உண்மை நிலைகளை உணர்ந்து உறுதி கொண்டுள்ள நீ தெளிவில்லாதவர் போல் மறுகி யுழலலாகாது. எல்லாம் விதியின்படி நடக்கின்றன என்று துணிந்து செல்ல வேண்டும். பந்த பாசங்களால் சிந்தை யுளைந்து திகைத்து நிற்கின்றாய் என்று தெரிகின்றது. பிறந்த இடம் பிழைபாடுடையது என்று தெரிந்து விலகிய நீ மறுபடியும் மறந்து வந்து மயங்கி உயங்கி நிற்கின்றாய்.

எம்மை நோக்கி இரங்கலை.

நான் இறந்து போவேன் என்று எனக்காக இரங்கி வருந்தாதே என்று இளையவன் தெளிந்து மீளும்படி இவ்வாறு தெளிவு கூறியுள்ளான். பன்மையில் கூறியது பெரிய அண்ணனையும் குலத்தையும் ஒருங்கே தழுவி வந்தது. சாவதும் வாழ்வதும் அவரவருடைய தலை விதியின்படி முன்னமே முடிந்துள்ளன. அவற்றை நினைந்து அவலமாய்க் கவலையுறுவது மதிமானுன உனக்குத் தகாது என அதி விநயமாய் நேரே அறிவுறுத்தினன்.

வருந்தல் செய்யாது ஏகுதி.

என்றதனுல் வீடணன் அங்கே தமையனுக்காக வருந்தி நின்ற நிலை தெரிந்து கொள்ள வந்தது. தன்னுடைய அழிவு நிலைக்கு இரங்கி உழுவலன்போடு வந்து அவன் உருகி மறுகி நிற்கும் நிலை இவனுடைய உள்ளத்தைப் பெரிதும் உருக்கியுள்ளது. அவ்வுண்மையை உரைகள்தோறும் உணர்ந்து வருகிறோம்.

அன்பு சுரந்து இவ்வாறு அலமரலடைந்து நின்ற கும்பகருணன் பின்பு தம்பியை மார்போடு அணைத்து இறுகத் தழுவிக் கொண்டு முகத்தைக் கூர்ந்து நோக்கிக் கண்ணீர் சொரிந்து நின்றான். விரைந்து இறந்து படுவோம்; பிறந்த உரிமையோடு சிறந்து கூடியிருந்த இந்தத் துணைவனை இனிமேல் காண முடியாது என்ற பிரிவாற்றாமையும் பரிவும் உள்ளத்தைப் பெரிதும் உருக்கி நின்றமையால் கண்களிலிருந்து நீர் பெருகி ஓட நேர்ந்தது.

நின்று நின்று இரங்கி ஏங்கி நிறைகணுல் நெடிது நோக்கி.

வீடணனைத் தழுவிக் கொண்டு கும்பகருணன் நின்ற நிலையை இதனுல் நேரே கண்டு நெஞ்சம் இரங்குகின்றோம்.

மான வீரங்களால் யாதும் தளராத உறுதியுடையவனுயிருந்தாலும் பிறவிப் பாசம் பெரிதும் கலக்கியுள்ளது. நேர்ந்துள்ள இறுதி நிலைகளை நினைந்து நெஞ்சம் பரிந்து நெடுங் கவலையாய் நீண்டு நின்றது. கடுந்துயரங்கள் கதுவி நின்றன.

இன்றோடு தவிர்ந்ததே உடன் பிறப்பு என்று இரங்கி ஏங்கியிருத்தலால் இவ் வீரனுடைய உள்ளத்தில் ஓங்கியுள்ள உரிமைப் பாசங்களைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம். அருந்திறலாண்மையும் ஆர்வ நலங்களும் பெருந்தகைமைகளும் நிறைந்து திகழ்கின்றன. பிறவிப் பாசங்கள் சுரந்து சுழல்கின்றன.

மீண்டு போனது,

தமையனுடைய உறுதி நிலையைத் தெளிவாக உணர்ந்து கொண்ட வீடணன் மறுபடியும் அவனுடைய காலில் விழுந்து வணங்கினான்; மறுகி எழுந்தான்; இரு கைகளையும் கூப்பித் தொழுது நின்று உழுவலன்போடு முகத்தை நோக்கி உள்ளம் உருகினான்; கண்ணீர் வெள்ளம் பெருகியது; வாய் திறந்து யாதும் பேசவில்லை; தொழுத கையனாய் அழுது கொண்டே மீண்டு போனான். தம்பி பெயர்ந்து போகும் நிலையை நோக்கிக் கும்ப கருணன் குமுறி அழுதான். அவன் வணங்கி வாய்பேசாமல் மறுகிப் போனதும், இவன் உணங்கி நின்று உருகி நோக்கி மறுகி அழுததும் பெரிய பரிதாபமாய்ப் பெருகி நின்றன.

வீடணன் சென்ற நிலை.

வணங்கினான் வணங்கிக் கண்ணும் வதனமும் மனமும் வாயும்
உணங்கினான் உயிரோடு யாக்கை ஒடுங்கினான் உரைசெய்து இன்னும்
பிணங்கினால் ஆவதில்லைப் பெயர்வதுஎன்று எழுந்து போந்தான்
குணங்களால் உயர்ந்தான் சேனைக் கடல்எலாம் கரங்கள் கூப்ப.

கும்பகருணன் நின்ற நிலை.

கள்ளநீர் வாழ்க்கை யேமைக் கைவிட்டுக் காலும் விட்டான்
பிள்ளைமை துறந்தான் என்னப் பேதுறு நிலையனாகி
வெள்ளநீர் வேலை தன்னில் வீழ்ந்தநீர் வீழ வெங்கண்
உள்ளநீர் எல்லாம் மாறி உதிரநீர் ஒழுக நின்றான்.

இந்த இரண்டு பாசுரங்களில் பதிந்துள்ள உயிருணர்ச்சிகளை ஊன்றி நோக்க வேண்டும். உள்ளத் துடிப்புகளையும் உருக்கங்களையும் தெள்ளத் தெளிய விளக்கியுள்ளன. சரித நிகழ்ச்சியில் அரிய பல பண்பாடுகளை அறிந்து பெரிதும் வியந்து கொள்ளுகிறோம். கருதியுள்ளன யாவும் கண்கள் காண நேர்ந்தன.

தனது அழைப்பு பயன்படவில்லை; தரும நீதிகளை உணர்ந்து தீமைகளை வெறுத்திருந்தாலும் அண்ணன் குலமானம் சிறிதும் குன்றாமல் தலைமை வீறுடன் உறுதி பூண்டு நிற்கின்றான் என வீடணன் உணர்ந்து கொண்டமையால் திரும்பிப் போக நேர்ந்தான். நேர்ந்தாலும் பிறவிப்பாசம் அவனுடைய உள்ளத்தை உருக்கி நிறுத்தியதால் உணர்வு சோர்ந்து நின்றான். பலவும் நினைந்து பரிந்து மயங்கினான். உயங்கி உணங்கினான்.

கண்ணும் வதனமும் மனமும் வாயும் உணங்கினன்;
உயிரோடு யாக்கை ஒடுங்கினன்.

என்றதனால் அன்று அவன் அங்கே நின்று மறுகி நெடிது உருகியிருக்கும் நிலைமைகள் தெரியலாகும். உடன்பிறந்த தமையன் போரில் மூண்டு விரைந்து இறந்து போவான் என்ற பரிதாப இரக்கம் அவனைப் பதைக்கச் செய்துள்ளது. மேலும் மறுகி வேண்டுவதால் யாதும் பயன்படாது என்று உறுதியாகத் தெரிந்து கொண்டமையால் உள்ளக் கவலையோடு அண்ணன் முகத்தை நோக்கி விட்டுக் கண்ணீரும் கம்பலையுமாய் மீண்டான்.

சேனைக் கடல் எல்லாம் கரங்கள் கூப்ப என்றதனால் வீடணன் மீண்டு போன போது அரக்கர் படைக்குலம் முழுதும் அவனைத் தொழுது மரியாதை செய்திருக்கும் காட்சியை நேரே கண்டு மகிழ்கின்றோம். அயலே விலகி நின்றாலும் அரச குடும்பத்தவன் ஆதலால் அம் மரபினர் அவனிடம் மதிப்பும் மாண்பும் புரிந்து வருகின்றனர்; அவ்வரவு நிலை இங்கே தெரிய வந்தது.

தன்னை உரிமையோடு அழைக்க வந்த தம்பி உள்ளம் நொந்து போதலை நோக்கி நோக்கிக் கும்பகருணன் குலைதுடித்து நின்றான். "நல்லவன்; தூய நீதிமான்; தீயவர்களுடைய தொடர்பு நீங்கி உய்ந்தான்" என்று உணர்ந்து உருகிப் பரிவு மீதூர்ந்து தனக்குள்ளேயே மறுகித் தளர்ந்து பேசினன்.

உள்ளம் உருகி உரைத்தது.

கள்ளநீர் வாழ்க்கையேமைக் கைவிட்டுக் காலும் விட்டான்
பிள்ளைமை துறந்தான் என்னப் பேதுறு நிலையன்.

தன்பால் அன்பால் வந்து பெயர்ந்து போகும் தம்பியைக் குறித்துக் கும்பகருணன் இப்படிக் கருதியிருக்கிறான். மாய வஞ்சனைகளையே புரியும் தீய குழு என அரக்கர்குலத்தைஅவன் கருதியிருத்தலால் கள்ளநீர் வாழ்க்கையேம் எனத் தன்னையும் சேர்த்துப் பன்மை மொழியில் இன்னலோடு குறித்தான். பெரிய மகான்களைப்போல் பேரறிவுடையனாய் உண்மை நிலைகளை உறுதியாக உணர்ந்து கொண்டமையால் பிறப்பின் சிறுமை நீங்கி மேலான சிறப்பினை அடைந்தான் என்பான் பிள்ளைமை துறந்தான் என்றான். இதனால் அவன் உள்ளம் தெரிய வந்தது.

தனக்கு இளையவன் சிறுபிள்ளைத்தனமாய் மறுகி மயங்கிக் கொடியவர்களோடு கூடி இழிந்து போகாமல் பெரிய மதிமானாய்ப் பெரியோர்களைச் சேர்ந்து பேரின்ப நிலையை அடைந்தான் என்று உள்ளம் உவந்திருக்கிறான்.

அவன் திரும்பிப் போகும் பொழுது தலை மறையும் வரையும் அவனது உருவ நிலையையே பார்த்து நின்று உள்ளம் உருகினான். கண்ணீர் வெள்ளம் பெருகி மார்பின் வழியே வழிந்து ஓடியது. பரிவு கூர்ந்து நின்ற இவனது நிலை பரிதாபமாயது.

உள்ளநீர் எல்லாம் மாறி உதிர நீர் ஒழுக நின்றான்.

பிரிந்து சென்ற தம்பியை நோக்கிக் கும்பகருணன் அழுதிருக்கும் நிலையை இது உணர்த்தியுள்ளது. எதற்கும் கலங்காத நெஞ்சன் இங்கே இங்ஙனம் கரைந்து அழுதிருக்கிறான். உரிமைத் தம்பிபால் இவன் கொண்டுள்ள அன்பு நிலையைக் கண்ணீர் நன்கு அளந்து காட்டியுள்ளது.

பிறவிப்பாசத்தால் பேதையாய் நின்று உருகி அழுகின்றான்; குல வீரத்தால் மேரு மலைபோல் யாதும் அசையாமல் அதிசய கம்பீரமாய் நின்று அடலாண்மை கூறுகின்றான்.

அளவு கடந்த அன்பு தம்பிமேல் வைத்திருந்தாலும் அவனுடைய சொல்லைக் கேட்டுத் தனது உள்ளத்தின் உறுதியை விடவில்லை. தான் கருதிய கொள்கையையே எவ்வழியும் சாதித்து நிற்கிறான். எதிரியைச் சேர்ந்து உயிர் வாழ்வது தனக்குப் பெரிய இழிவாம் என்று தெளிவாக விளக்கி யிருக்கிறான். பகையாளியிடம் இளையவன் போய்ச் சேர்ந்து கொண்டதை இளிவு என்று வெறுக்கவில்லை; நல்லது என்றே உள்ளம் உவந்திருக்கிறான். சொல்லும் செயலும் சுத்த வீரங்களாயுள்ளன.

இவனுடைய சுபாவங்கள் திருந்திய பண்போடு பெருந்தன்மைகள் தோய்ந்திருக்கின்றன. எவரும் வியந்து புகழும்படி உயர்ந்த நீர்மைகள் நிறைந்துள்ளமையால் வீர வுலகில் அதிசய மேன்மையோடு இவன் விளங்கி யாரும் துதிசெய்ய நிற்கிறான்.

போனவன் புகன்றது.

மீண்டுபோன விபீடணன் இராமனை வணங்கி உற்றதை உரைத்தான். "என்னால் இயன்றவரையும் நீதிமுறைகளை உரைத்

துச் சமாதானமாய் வந்துசேரும்படி அழைத்தேன்; அவன் யாதும் இசையவில்லை; அமர் கருதியே ஆண்டு மூண்டு நிற்கிருன்'' என்று தூதுவன் என்ற முறையில் நேரே ஓதிநின்ருன்.

## வீடணன் விளம்பியது.

எய்திய நிருதர் கோனும் இராமனை இறைஞ்சி எந்தாய்!
உய்திற னுடையார்க் கன்றோ அறநெறி ஒழுக்கம் உண்மை?
பெய்திறன் எல்லாம் பெய்து பேசினேன் பெயரும் தன்மை
செய்திலன் குலத்துமானம் தீர்ந்திலன் சிறிதும் என்ருன்.

இராமனிடம் வந்து வீடணன் இவ்வாறு கூறியிருக்கிருன். உரைகளின் குறிப்புகளை ஊன்றி நோக்குகிறோம்; அவனுடைய உள்ளக்கருத்தை உணர்ந்துகொள்ளுகிறோம். பழகிப் படிந்த எண்ணங்களின் படியே எவரும் இயங்கி வருகின்றனர். தரும நீதிகளை உரிமையோடு ஆதரித்துவருபவன் ஆதலால் அறநெறி ஒழுக்கங்களைக்குறித்துக் கூறினன். கும்பகருணன் நல்லவன் ஆயினும் மறநெறியாளரோடு பழகி யாண்டும் திறமாய் வீறுகொண்டிருந்ததால் எனது போதனையாதும் ஏறவில்லை. நேரே போர் புரியவே மூண்டு முனைந்து ஆண்டு உறுதி கூர்ந்து நிற்கின்ருன்.

குலத்துமானம் தீர்ந்திலன் சிறிதும்.

என்றது கும்பகருணனுடைய நிலையை நன்கு ஓர்ந்துகொள்ள உரைத்தபடியாம். தீமை செய்தாலும் தன் குலத்தலைவனுக்கு உதவியாய் நின்று துணை செய்யவேண்டும்; அன்னியர்க்கு இடம் கொடுக்கலாகாது என்னும் நியமத்தில் இவன் நிலைத்திருத்தலை அவன் நேரே விளக்கியுள்ளான்.

இந்த உரைகளைக்கேட்டதும் இராமன் குறுமுறுவலுடையனாய்த் தலையைச் சிறிது அசைத்து நிலையை உணர்ந்து நெஞ்சம் உவந்தான். வீடணனை நோக்கிப்பதில் ஒன்று உரைத்தான். அவ்வுரை மதிநலம் சுரந்து அதிசய கம்பீரமாய் வெளியே வந்தது.

## இராமன் உரைத்தது.

கொய்திறச்சடையின் கற்றைக் கொந்தளக் கோலக் கொண்டல்
நொய்தினில் துளக்கி ஐய! நின்னெதிர் நும்முனேனை
எய்துறத் துணித்து வீழ்த்தல் இனிதன்றுஎன்று இனைய சொன்னேன்
செய்திறன் இனிவேறு உண்டோ விதியை யார் இீர்க்ககிற்பார்?

"அப்பா! உன்கண் எதிரே உனது அண்ணனைக் கொன்று வீழ்த்துவது நன்றாயிராதே என்ற எண்ணத்தினாலேயே அவனை இங்கே உரிமையோடு அழைத்து வரும்படி உன்னை அனுப்பினேன்; அழைப்பு இவ்வாறு பிழைப்பு ஆயின் இனிவேறு என்ன செய்வது"? என வீடணனை நோக்கி இராமன் இவ்வாறு பரிவோடு கூறியுள்ளான். உரைகளினுள்ளே வீர கம்பீரங்கள் ஆரவாரமாய் விளையாடி நிற்கின்றன.

[கும்பகருணனைத் தன்னோடு சேர்த்துக் கொண்டால் தனக்குப் பலம் அதிகமாகும்; எதிரியை வெல்ல நல்ல வசதியாயிருக்கும் என்று கருதி இந்தத் தூது காரியத்தைச் செய்ததாக ஒரு வேளை தோன்றலாம் ஆதலால் அந்தப் பிழைபாடு ஒழிந்து தெளிவடைய இவ்வுரைகள் இங்கே விளைந்து வந்திருக்கின்றன.] "வீடண! கும்பகருணனை இங்கே நான் சேர்க்க விரும்பியது உன்பொருட்டே; அவன் நல்லவன்; நீதிமான்; கள்ளம்கபடுகள் இல்லாதவன் என்று நீ சொன்னதால் அத்தகைய நன்மையாளனை அண்ணனைத் தம்பியாகிய உன் எதிரே கொல்வது நல்லாயிராதே என்று என் உள்ளம் இரங்கியதால் அவனை அழைத்து வரச்சொன்னேன்; அவன் வரவில்லை; இனி யாம் யாது செய்வது? யாவும் விதியின் விளைவின்படியே நடக்கின்றன."

விதியை யார் தீர்க்க கிற்பார்?

தான் மதித்துச் செய்த மதியின்படி காரியம் கைகூடாமையால் விதியின் வலியை நினைந்து இவ்வீரன் இங்ஙனம் வியந்து கூறினான். அவனவனுக்கு விதித்த விதியின்படியே யாவும் நடந்து முடிகின்றன. அந்த முடிவுகளை இடையே யாரும் தடை செய்யமுடியா என்று விதியின்முடிவை இங்கேமுடிவாக முடிவுசெய்திருக்கிறான். முடிந்தமுடிவுகள்மூண்டுமுடிகின்றன.

அமர் மூண்டது.

இவ்வாறு ஈண்டு இவர் பேசிக்கொண்டிருக்கும்பொழுது ஆண்டு அரக்கர் சேனைகளிலிருந்து பெரிய ஆரவாரங்கள் எழுந்தன. போர்ப்பறைகள் முழங்கவே நால் வகைச் சேனைகளும் விரைந்து மூண்டு வானரப்படைகளை வளைந்து கொண்டன. நெடும்போர் மூண்டது. கல்லையும் மரங்களையும் வாரிவீசி வான

ரங்கள் ஆரவாரமாய்ப் போராடின. வாள்வேல் முதலிய கொலைக்கருவிகளைக்கொண்டு இராக்கதர் யாண்டும் மூண்டு பொருதனர். இரு திறப்படைகளும் கடுத்து எதிர்த்துக் கொதித்துப்போராடவே கொலைகள் எங்கும் பெருகி விழுந்தன. வானவர்களையும் வென்று வீறு கொண்டு வந்த அரக்கர் திரள்கள் வானரங்களிடம் மாண்டு விழுந்தன. அந்த அழிவு நிலைகள் மாய வியப்பாய் விளைந்து யாண்டும் நீண்டு நின்றன.

## கும்பகருணன் புகுந்தது.

போராடலை நேரே பார்த்துக் கொண்டு பின்னணியில் வீர கம்பீரமாய் நின்ற கும்பகருணன் தேரினைக் கடாவி உள்ளே புகுந்தான். தன்னுடைய படை வீரர்களை வதைத்துச் சிதைத்த வானர சேனைகளைச் சின்னபின்னங்களாக்கித் திசைகள்தோறும் சிதற வீசினன். யாண்டும் கொன்று ஏறி வீறுகள் புரிந்தான்.

குன்றின்மீது எறியும் பாரில் புடைக்கும் வெங்குரங்கைப் பற்றி
ஒன்றுகொண்டு ஒன்றை எற்றும் உதைக்கும் விட்டுழக்கும் வாரித்
தின்று தின்று உமிழும் பற்றிச் சிரங்களைத் திருகும் தேய்க்கும்
மென்று மென்றிழிச்சும் விண்ணில் வீசும் மேல் பிசைந்து பூசும். (1

வாரியில் அமுக்கும் கையால் மண்ணிடை அடிக்கும் வாரி
நீரிடைக் குமிழியூட்டும்; நெருப்பிடை நிமிர வீசும்;
தேரிடை எற்றும் எட்டுத்திசையினும் செல்லச் சிந்தும்
தூரிடை மரத்து மோது மலைகளில் புடைக்கும் சுற்றி; (2

பறந்தனர் அமரர் அஞ்சிப் பல்பெரும் பிணத்தைப் புல்லி
நிறைந்தன பறவை எல்லாம் நெடுந்திசை நான்கு நான்கும்
மறைந்தன பெருமை தீர்ந்த மலைக்குலம் வற்றி வற்றிக்
குறைந்தன குரக்கு வெள்ளம் கொன்றனன் கூற்றும் கூச. (3

கும்பகருணன் புகுந்து பொருதுள்ள நிலைகளை இவை குறித்துள்ளன. வானரப்படைகளை நாசம் செய்திருக்கிறான். கூற்றும் கூசக் கொன்றனன் என்றதனால் அங்கே விழுந்துள்ள கொலைகளின் நிலைகளை உணர்ந்து கொள்ளலாம்.

இவ்வாறு எவ்வழியும் கால காலன் போல் கடுத்துக் கொல்லவே படைகள் கலங்கி உடைந்தன. படைத்தலைவர்கள் கொதித்து மூண்டனர். நீலன் என்னும் வானரவீரன் ஒரு பெரிய மலையை எடுத்துக் கும்பகருணன்மேல் வீசினன்; அதுமேலே வந்து பட்டதும் தூளிகளாயுதிர்ந்தது. நீலன் திகைத்து மேலும் ஒரு மலையை ஓச்சினன்; அதுவும் துகளாயது; ஆங்காரத்தோடு

தேர்மேல் பாய்ந்து குத்தினன்; குத்தவே அவனை இடக்கையால் பற்றி எற்றினன்; அவன் குற்றுயிராய்க் கீழே வீழ்ந்தான். அதன்பின் அங்கதன் பாய்ந்தான்; சிறிது நேரம் போராடியதில் பெரிய துயரங்களை அடைந்தான். மறுகி மயங்கினன். உள்ளம் தளர்ந்தாலும் உறுதி குன்ருமல் வீராவேசமாய்த் தேர்மேல் பாய்ந்து நேரே மல்லாட நேர்ந்தான். அவனது வீரத்திறலை வியந்து கும்பகருணன் போரை நிறுத்திக்கொண்டு "நீ யார் அப்பா!" என்று ஆவலோடு கேட்டான்.

### அங்கதன் உரைத்தது.

நும்முனை வாலில் சுற்றி நோன்திசை நான்கும் தாவி
மும்முனை நெடுவேல் அண்ணல் முளரியம் சரணம் தாழ்ந்த
வெம்முனை வீரன் மைந்தன் நின்னை என் வாலின் வீக்கித்
தெம்முனை இராமன் பாதம் வணங்கிடச் செல்வேன் என்ருன்.

தன்முன்னே அஞ்சாமல் வந்து நின்ற அங்கதனை "நீ யார்"! என்று கும்பகருணன் வினவியபோது அவன் இவ்வாறு பதில் கூறியிருக்கிருன். "என்னை இன்னன்என்று தெளிவாகத்தெரிந்து கொள்ள நீ விரும்புகின்ருய் ஆதலால் நான் ஒளியாமல் சொல்லுகின்றேன்: உன்னுடைய அண்ணனை இராவணனைத் தனது வாலால் சுற்றி வரிந்துகட்டித் திசைகள்தோறும் தாவிப்போய் நான்கு கடல் கரைகளிலும் அமர்ந்து சிவபெருமானைப் பூசித்து வந்த அதிசய வீரனுன வாலியின் மகன் நான். என் தந்தை செய்த செயலைக் குலமுறைப்படி இன்று இங்கே செய்ய வந்துள்ளேன்; உன்னை என் வாலால் கட்டி இழுத்துக் ககன மார்க்கமாய்த் தாவிச் சென்று இராமபிரான் திருவடியை வணங்கவேண்டும் என்றே ஈண்டு வந்து நிற்கின்றேன்" என்று இவ்வாறு அங்கதன் வீரகம்பீரமாய்ப் பேசவே கும்பகருணன் குறுமுறுவல் புரிந்து "நல்ல காரியம் செய்ய வந்தாய்!" என்று எள்ளல் குறிப்போடு அசதியாடினன். அதன்பின் அதற்கு மறுமொழி கூறினன். அது நிந்தனை தோய்ந்து வந்தது.

### கும்பகருணன் குறித்தது.

உந்தையை மறைந்து ஓரம்பால் உயிருண்ட உதவியோற்குப்
பந்தனை பகையைச் செற்றுக் காட்டலை என்னின் பாரோர்
நிந்தனை நின்னைச் செய்வர்; நல்லது நினைந்தாய்! நேரே
வந்தனை புரிவ ரன்றே வீரராய் வசையில் தீர்ந்தார். (1)

இத்தலை வந்தது என்னை இராமன்பால் வாலின் ஈர்த்து
வைத்தலை நுதலி அன்று; வானவர் மார்பில் தைத்த
முத்தலை அயிலின் உச்சி முதுகுற மூரிவால் போல்
கைத்தலும் காலும் தூங்கக் கிடத்தலைக் கருதி என்றான். (2)

அங்கதன் உரைத்த அந்த வசைமொழிக்கு இசைந்த பதிலாகக் கும்பகருணன் இப்படிக் கூறியிருக்கிறான். [போராட நேர்ந்தவர்களுக்குள் உரையாடல்கள் இவ்வாறு இடையே உருவாகி வந்துள்ளன. அமர்முகத்தில் நல்ல வீரர்கள் அமைதியாய் நின்று நடுவே சொல்லாடுந்திறங்கள் உல்லாச விநோதங்களாய் ஒளிபுரிகின்றன. எள்ளல் இளிவுகள் படிந்திருந்தாலும் வீரச்சுவைகள் விரிந்து வினையங்கள் சுரந்து நிற்கின்றன.]

என் தந்தை உன் தமையனை வாலால் கட்டிக்கொண்டு போனதுபோல் நானும் உன்னைப் பற்றிக்கொண்டுபோக வந்திருக்கிறேன் என்று அங்கதன் சொன்னபோது கும்பகருணன் கோபம் கொள்ளவில்லை. அதிவிநயமாய்ப் பதில் சொல்லியிருக்கிறான். "உன் தகப்பனை ஒரு பாணத்தால் கொன்ற அந்த உதவியாளனுக்கு நீ துணை நின்று உதவி செய்யவில்லையானால் உலகம் உன்னை நிந்தனை செய்யும்; அந்தப் பழியிலிருந்து நீங்கவே நீ இந்த வழியில் வேலைசெய்ய வந்திருக்கிறாய்; நல்லகாரியம்தான்; வீரவுலகம் உன்னை வியந்து கொள்ளும்" என இகழ்ச்சிக்குறிப்போடு முதலில் பேசிமுடித்துவிட்டுப் பின்பு நேர்வதை நேரே கூறினான். "நீ இங்கே வந்தது என்னை இராமன்பால் இழுத்துக்கொண்டுபோக என்றது தவறு; எனது சூலாயுதத்தை மார்பில் ஏற்றுக்கொண்டு செத்து வீழவே வந்திருக்கிறாய்; அந்த உண்மையை இப்போழுதே பார்க்கப்போகிறாய்! " என்று சொல்லிக்கொண்டிருக்கும்போதே அங்கதன் கையிலிருந்த தண்டாயுதத்தால் ஓங்கி அடித்தான். அது துண்டமாய்க் கீழே வீழ்ந்தது; கும்பகருணன் சினந்து குத்தினான்; பேரிடிபோல் வீழ்ந்த அந்த ஓர் அடியினால் அங்கதன் மாண்டவன்போல் மயங்கி மண்ணில் வீழ்ந்தான். வானரங்கள் மறுகி நின்றன.

## அனுமான் நேர்ந்தது.

அங்கதன் அடிபட்டுக் கீழே விழுந்ததைக் கண்டதும் அனுமான் மூண்டு பாய்ந்து முன் வந்துநின்றான். நின்ற

அவனது நிலையை நோக்கி நெஞ்சம் வியந்தான். தலையிலும் மார்பிலும் அம்புகள் பாய்ந்தன. பாய்ந்த பகழிகள் அயலே சிதறி வீழ உதறி ஒரு பாறைக்கல்லை விரைந்து எடுத்துக் கும்பகருணன் மீது வெகுண்டு எறிந்தான். எறிந்த பாறையை இடது கையால் அவன் எற்றித்தட்டினான். அது மீண்டு பாய்ந்து அனுமான்மீதே மோதி வீழ்ந்தது. அவனது தேகபலத்தையும் திடதைரியத்தையும் யாவரும் வியந்தனர். முன்னம் அடிபட்டுக் கீழே மயங்கிக் கிடந்த அங்கதனை வானர வீரர்கள் வாரி எடுத்து அயலே கொண்டுபோய் ஆற்றிப் போற்றினர். அனுமான் அடலாண்மையோடு ஒரு பெரிய குன்றைக் கையில் ஏந்திக்கொண்டு கும்பகருணனை நோக்கி வீரவாதம் கூறினான். "ஏ கும்பகருண! இந்த மலையால் உன்னைக் கொலைகுறித்து நான் எறிகிறேன். இதற்கு நீ தலைதப்பிப்பிழைத்தால் இனிமேல் உன்னோடு நான் எவ்வகையிலும் போராட நேரேன்" என்று வீரவுரை கூறினான். இந்தச் சொல்லைக் கேட்டதும் அவன் பல்லைத்திறந்து பெருஞ் சிரிப்புச்சிரித்தான். "ஏ குரங்கே! நீ வீசி எறிகிற குன்றை நான் சூலம் முதலிய ஆயுதங்களைக்கொண்டு தடுக்காமல் எனது இடது தோளையே நேரே கொடுத்து நிற்கிறேன்; அணுவளவேனும் என்னை அது அனுங்கச்செய்யுமானால் உனக்கு நான் முழுவதும் தோற்றவனேயாவன்; விரைந்து எறிந்துபார்" என்று எதிரே துணிந்து நின்றான். மாருதி அதிவேகமாய் வீசி எறிந்தான்; அது பல்வேறு துகள்களாய்ச்சிதறி வீழ்ந்தது. அனைவரும் அதிசயித்து அயர்ந்து ஒதுங்கினர். அனுமான் வியந்து புகழ்ந்து அயலே பெயர்ந்து போயினான்.

### அனுமான் அயர்ந்து போனது.

இளக்கம் ஒன்றின்றி நின்ற இயற்கைபார்த்து இவனது ஆற்றல்
அளக்குறற்பாலுமாகா குலவரை அமரின் ஆற்ரு
துளக்குறு நிலையான் அல்லன் சுந்தரத் தோளன் வாளி
பிளக்குமேல் பிளக்கும் என்ன மாருதி பெயரப் போனான்.

கும்பகருணனது போராற்றலை வியந்து முன்னம் கூறிய சபதத்தின்படி தான் நேரே தோல்வியடைந்தவனாய் அனுமான் இங்ஙனம் ஒதுங்கிப்போயிருக்கின்றான். வேறு யாராலும் இவனை யாதும் செய்யமுடியாது; இராமன் ஒருவனே இவனை வென்று

தொலைக்கவல்லவன் என்று கருதி அவன் உறுதி செய்து போயிருத்தலை உரைகளால் நன்கு உணர்ந்து கொள்ளுகிறோம்.

சுந்தரத்தோளன் வாளி பிளக்குமேல் பிளக்கும் என்று அவன் உள்ளம் துணிந்து ஒதுங்கியுள்ளமையால் அவ்வீரனுடைய அதிசய ஆண்மைகள் உலகறிய நின்றன.

அரிய போர்வீரர்களான பெரிய சேனைத்தலைவர்களும் நிலைகுலைந்துபோகவே கும்பகருணன் படைகளிடையே புகுந்து அடுதிறலாடினன். படுகொலைகள் எங்கும் நெடிது விளைந்தன. நேரே மூண்டு போராடினவர் எல்லாரும் உடல்கள் சிதைந்து உயிர்கள் இழந்தனர். படைகள் அழிந்துபடவே தேரோடு அவன் வீறுகொண்டு மீறி ஏறி வீரப்போர் புரிந்தான்.

எழுபது வெள்ளத்துள்ளார் இறந்தவர் ஒழிய யாரும்
முழுமுதல் மாள்வர் இன்றே இவன்வலத்து அமைந்த முச்சூல்
கழுவினின் என்று வானோர் கலங்கினார் நடுங்கி னாரால்
பொழுதினின் உலகமூன்றும் திரியும் என்று உள்ளம்பொங்கி.

தாக்கினர் தாக்கினர்தம் கைத்தலம் சலித்த தன்றி
நூக்கினர் இல்லை யாரும் நோவுசெய் தாரும் இல்லை
ஆக்கினன் களத்தின் ஆங்கோர் குரங்கினது அடியுமின்றிப்
போக்கினன் ஆண்மையோடும் புதுக்கினன் புகழை அம்மா! (2)

சங்கத்தார் குரங்கு சாயத் தாபதர் என்னத் தக்கார்
இங்குற்றார் அல்லரோதான் வேறும் ஓர் இலங்கையுண்டோ?
எங்குற்றார் எங்குற்றார் என்றெடுத்தழைத்து இமையோர் அஞ்சத்
துங்கத்தோள் கொட்டியார்த்தான் கூற்றையும் துணுக்கம்
கொண்டான். (3)

பறந்தலை யதனின் வந்த பலபெருங் கவியின் பண்ணை
இறந்தது கிடக்க நின்றது இரிதலின் யாரும் இன்றி
வறந்தது சோரி பாய வளர்ந்தது மகர வேலை
குறைந்தன உவாவுற்று ஓதம் கிளர்ந்துமீக் கொண்டதென்ன

கும்பகருணனது போர் வெற்றியும் உக்கிர வீர நிலையும் இவற்றால் நேரே தெரியவந்தன. சேனைத்திரள்களைச் சிதைத்துச் சின்னபின்னமாக்கிச் செருக்களத்துள் வீரச்செருக்கோடு

வெறிகொண்டு திரிந்தான். கடல்போல் நிறைந்த படைகள் விரிந்துபரந்துள்ள இடம் ஆதலால் எதிர்ப்பட்ட வானரங்களை அழித்து ஒழித்தமையால் முற்றும் வெற்றி பெற்று விட்டதாகக் களிப்புமீக் கொண்டான். அரக்கர்கள் எங்கணும் ஒருங்கே நெருங்கி ஆரவாரங்கள் செய்தனர். அமரின் நிலைமையைக்கண்டு அமரர்கள் அஞ்சினர். யாவரும் அலமந்து நின்றனர்.

## இலக்குவன் மூண்டது.

தமது படைகள் அழிந்து படுவதைக்கண்டதும் துமிந்தன் முதலிய வானரத்தலைவர்கள் சிலர் விரைந்து சென்று இலக்குவனிடம் முறையிட்டனர். அக்குலமகன் வில்லை நாண்ஏற்றி ஒல்லையில் உருத்துவந்தான். அவ்வரவு வென்றிவீரமாய் விளங்கி நின்றது.

குன்றும் கற்களும் மரங்களும் குறைந்தன குரங்கின்
வென்றி யம்பெரும் சேனையோர் பாதியின் மேலும்
இன்று தேய்ந்தது என்று உரைத்தலும் அமரர்கண்டுவப்பச்
சென்று தாக்கினன் ஒருதனிச் சுமித்திரைச் சிங்கம்.

நாண் எறிந்தனன் சிலையினை அரக்கியர் நகுபொற்
பூண் எறிந்தனர் படியிடை இடிபொடித் தென்னச்
சேணெறிந்தெழு திசைசெவிடு எறிந்தன அலகை
தூணெறிந்தன கைஎடுத்து ஆடின துணங்கை.

தன் படைகள் அழிந்து படுகின்ற நிலையினை அறிந்ததும் இலக்குவன் வில்லோடு விரைந்து வந்து புரிந்துள்ள அருந்திறலாடல்களை இவை விளக்கியுள்ளன. தனுவேதத்தையும் போர்க்கலைகளையும் அதிசய நிலையில் பயின்று தெளிந்துள்ளவன் ஆதலால் அமர்தொடங்கியபோதே அமரரும் வியந்தனர்; அகிலமும் மகிழ்ந்தன. வீரம்வந்தது விசயவெற்றியாய் விரிந்து விளங்கியது.

இவ்வாறு மூண்டு புகுந்தவன் அரக்கர் சேனைமேல் பாணங்களைக்காலமாரிபோல் கடுத்துப் பொழிந்தான். பகழிகள் பாய்ந்த திசைகளில் எல்லாம் தலைகள் துள்ளி எழுந்தன; உடல்கள் பிணங்களாய் உருண்டன; உதிரவெள்ளங்கள் யாண்டும் பெருகி நீண்டு ஓடின.

வேனிலான் அன்ன இலக்குவன் கடுங்கணை விலக்க
மானவேல் எயிற்றுஅரக்கர்தம் படைக்கலம் வாரிப்

போன போயின திசைதோறும் பொறிக்குலம் பொடிப்ப
மீனெலாமுடன் விசும்பினின்று உதிர்ந்தென வீழ்ந்த. (1)

அலைபடைத்தவாள் அரக்கரைச் சிலகழுத்து அரிவ;
சிலசிரத்தினைத் துணித்தவை திசைகொண்டு செல்வ
கொலைபடைத்த வெங்களத்திடை விழாக்கொண்டு போவ
தலைபடைத்தன போன்றனவாம் நெடுஞ் சரங்கள். (2)

மருப்பிழந்தன களிறெலாம் வால்செவி இழந்த;
நெருப்புகும் கண்கள் இழந்தன; நெடுங்கரம் துணிந்த;
செருப்புகுங்கடுங் காற்றுரஞ்சிந்தின சிகரப்
பொருப்புருண்டன வாமெனத் தலத்திடைப் புரண்ட. (3)

கரங்குடைந்தன தொடர்ந்து போய்க் கொய்யுளைக் கடுமாக்
குரங்குடைந்தன வெரிநுறக் கொடிநெடுங் கொற்றத்
தரங் குடைந்தன அணிநெடுந் தேர்க்குலம் குடைந்த
அரங் குடைந்தன அயில்நெடு வாளிகள் அம்மா! (4)

ஒருவரைக்கரம் ஒருவரைச்சிரம் மற்றங்கொருவர்
குரைகழல் துணை தோளிணை பிறமற்றும்கொளலால்
விரவலர்ப் பெரு வறுமைய வாயின வெவ்வேறு
இரவு கற்றன போன்றன இலக்குவன் பகழி. (5)

துரக்கு மெய்யுணர் விருவினை களைஎனும் சொல்லில்
கரக்கும்வீரதை தீமையை எனுமிது கண்டேம்
இரக்கம் நீங்கினர் அறத்தொடுந்திறம்பினர் எனினும்
அரக்கர் ஆக்கையை அரம்பையர் தழுவினர் விரும்பி. (6)

மறக்கொடுந்தொழில் அரக்கர்கள் மறுக்கிலா மழைபோல்
நிறக்கொடுங்கணை நெருப்பொடு நிகர்வன நிமிர
இறக்கம் எய்தினர் யாவரும் எய்தினர் எனின் அத்
துறக்கம் என்பதிற் பெரியதொன்றுளதெனச் சொல்லேம். (7)

அறத்தின் இன்னுயிர் அனையவன் கணைபட அரக்கர்
இறத்தும் இங்கிறை நிற்பின் என்று இரியலின் மயங்கித்
திறத்திறம்படத் திசைதொறும் திசைதொறும் சிந்திப்
புறத்தின் ஓடினர் ஓடின குருதியே போல. (8)

இலக்குவன் புரிந்துள்ள போராடல்களையும், அரக்கர் படைகள் அழிந்துபட்டுள்ள நிலைகளையும், படுகளக்காட்சிகளையும் இவை காட்டியுள்ளன. பாணப்பிரயோகங்களும் அவைபாய்ந்து போய்க் கொலைபுரிந்திருக்கும் வேகத்திறல்களும் அதிசய வியப்

புகலை விளைத்து நிற்கின்றன. நால்வகைச் சேனைகளும் நாசமடைந்துபட அம்புகள் வேலை செய்திருக்கின்றன. தான் நேரே இராமன் தம்பி என்பதை அம்பு தொடுப்பதிலும் அடலாண்மை புரிந்து பகைவரை அழிப்பதிலும் இந்த இளவல் உலகறிய நன்கு உணர்த்தியுள்ளான். தனுவேதத்தின் கலைநிலை இக்குல மகனிடம் தலைமையாய் அமைந்துள்ளது. அமரரையும் ஆடல் கண்ட கொடிய திறலுடைய அரக்கர் நெடிய சூறைக்காற்றின் எதிர்ப்பட்ட சிறிய சருகுகள்போல் இவனுடைய பாணங்கள் எதிரே பாழாய் அழிந்துள்ளனர். எவரும் எதிர்ந்து போர் புரிய முடியாமல் இழிந்து தொலைந்து போயிருப்பது அதிசயமான ஒரு மாயவியப்பாயுள்ளது. போரில்நேரே இறந்துபட்டமையால் படைவீரர் பலர் வீர சுவர்க்கத்தை அடைந்து கொண்டனர்.

## வீர சுவர்க்கம்.

இரக்கமற்ற கொடியவராயிருந்தும் அரக்கர் துறக்கத்தை அடைந்திருப்பதற்குக் கவி இங்கே சுவையாகக் காரணத்தைக் காட்டி வீர நீர்மையின் மேன்மையை நன்கு விளக்கியிருக்கிறார்.

*மெய்யுணர்வு இருவினை துரக்கும்!*
*வீரதை தீமையைக் கரக்கும்!*

தத்துவஞானம் இருவினைகளையும் நீக்கி உயிர்களை முத்தியில் சேர்க்கும், அதுபோல் வீரம் தீவினைகளை ஒழித்துச் சீவர்களைச் சுவர்க்கத்தில் செலுத்தும் என இது உணர்த்தியுள்ளது. தெளிந்த ஞானம் ஒருவனுக்கு அமைந்தால் வினைத்தொடர்புகள் யாவும் ஒழிந்து அவன் பேரின்ப நிலையை அடைகிறான்; சிறந்த வீரமும் தன்னையுடையானது தீவினைகளையெல்லாம் நீக்கி அவனை உயர்ந்த சுவர்க்கத்தில் அமர்த்தியருளுகிறது. ஞானமும் வீரமும் இங்கே நன்கு பார்வைக்கு வந்துள்ளன.

மெய்ஞ்ஞானியைப் போலவே சுத்தவீரனும் உத்தமகதியை அடைந்து கொள்கிறான் என்னும் தத்துவத்தை ஈண்டு உய்த்துணரவைத்திருப்பது உவந்து சிந்திக்கத்தக்கது. கருதிய கருத்தைக் கலையின் சுவையோடு கவி இனிது விளக்கி யுள்ளார்.

இரக்கம் நீங்கினர் அறத்தொடுந் திறம்பினர் எனினும்
அரக்கர் ஆக்கையை அரம்பையர் தழுவினர் விரும்பி.

இரக்கமற்ற கொடுமையும் பாவத்தீமையும் உடையவராயினும் போரில் தீரமாய் இறந்து பட்டமையால் அரக்கர் வீர சுவர்க்கத்தை மேவினர் என இவ்வாறு கூறியிருக்கிறார். அமரில் மாண்ட அரக்கர் துறக்கத்தை அடைந்து திவ்விய உருவம் எய்தினர்; ஆகவே அவரை நாயகராக விழைந்து அரம்பையர் தழுவி மகிழ்ந்தனர்; அந்த அதிசய நிலை இங்ஙனம் துதி செய்யவந்தது.

இலக்குவனுடைய பாணங்களால் அடிபட்டு மாண்டவர் மண்ணுலக வாழ்வை இழந்து விண்ணுலகை அடைந்தனர் என்றது புண்ணிய நிலையுடன் வீரக் காட்சியையும் விளக்கி நின்றது.

இந்தச் சுத்த வீரனைச் சூழ்ந்து மொய்த்து மூண்டு பொருத சேனைத்திரள்கள் செத்து வீழவே அயலே எஞ்சி நின்றவர் அஞ்சி ஓடினர். அச்சம் அறியாத அரக்கர் அலமந்து ஓடியது அவலமாய் நின்றது. தன் படைகள் அழிந்து படுவதையும் உடைந்து ஓடுவதையும் கண்டு கும்பகருணன் உள்ளம் கனன்றான். தனது சேனைக்கு இழிவு நேர்ந்ததை நினைந்து மானத்தால் புழுங்கினும் இலக்குவனுடைய போராடலையும் வீரத்திறலையும் நோக்கி ஆர்வம் கூர்ந்து புகழ்ந்து வியந்தான்.

செருவில் மாண்டவர் பெருமையும் இலக்குவன் செய்த
வரிவில் ஆண்மையும் நோக்கிய புலத்தியன் மருமான்
திரிபுரம் செற்ற தேவனும் இவனுமே செருவில்
ஒருவிலாளர் என்று ஆயிரக் கால்எடுத் துரைத்தான்.

படர்நெடுந் தடந்தட்டிடைத் திசைதொறும் பாகர்
கடவுகின்றது காற்றினும் மனத்தினும் கடியது
அடல்வயங்கொள் வெஞ்சீயம் நின்று ஆர்க்கின்றது அம்பொன்
வடபெருங்கிரி போல்வதேர் ஓட்டினன் வந்தான். (2)

இலக்குவனது அதிசய ஆண்மைகளை வியந்து புகழ்ந்து தனது தேரை விரைந்து கடாவி நேரே கும்பகருணன் மூண்டு வந்திருக்கும் காட்சிகளை இவை காட்டி நிற்கின்றன. தன் படைகளை அழித்துள்ள எதிரியை அவன் உள்ளம் உவந்து புகழ்ந்திருப்பது பெரிதும் வியப்பாயுள்ளது. போர் முகத்தில வீரப் பிரதாபங்களைக் கண்டபொழுது உண்மையான வீரர்கள் பகைமையையும்மறந்து எதிரியைப் புகழ்ந்துகொள்ளுகின்றனர்.

திரிபுரம் செற்ற தேவன் என்றது சிவபெருமானை.

மாயா வல்லபங்கள் நிறைந்த மூன்று நகர வாசிகளான அந்த அசுரர்கள் எல்லாரையும் ஒருங்கே எளிதில் அழித்து ஒழித்த சிவபெருமானே இவனுக்கு நிகர் என்று அவன் உவமை கூறியிருப்பது ஊன்றி உணர வுரியது. சங்கார மூர்த்தியை இங்கே சான்று காட்டினன். ஆன்ற வீரக் காட்சிகளை நன்கு ஆராய்ந்து கொண்டு ஈண்டு நேர்ந்துள்ள கொலை நிலைகளை யெல்லாம் நேரே கூர்ந்து ஓர்ந்து கொள்ள வந்தது.

இலக்குவன் மனித உருவில் மருவியிருப்பினும் அவனது அமராடல் அமரரிடமும் காண முடியாத அதிசய நிலையில் நின்றமையால் அதனை வியந்து துதிசெய்து நின்றான்.

இவ்வாறு மதித்துத் துதித்தவன் உள்ளம் கொதித்துத் தன் தேரைச் செலுத்தி நேரே மூண்டு புகுந்து இலக்குவனை எதிர்த்தான். அடலாண்மையோடு இளையவன் விளையாட நேர்ந்தான்.

அனுமான் அமைந்தது.

நெடிய தேரைக் கடாவிக் கொடிய கோபத்தோடு கும்பகருணன் கொதித்து வரவே அனுமான் விரைந்து பாய்ந்து இலக்குவன் முன்னே வந்து நின்று தன் தோளில் மீது ஏறியிருந்து போர் புரியும்படி ஆர்வம் மீதூர்ந்து வேண்டினன். எதிரி பெரிய தேர்மேல் நிற்றலால் இளையவன் கீழே நிற்பது இளிவாம் என எண்ணிப் பேரன்போடு வந்து நேரே பேணி மொழிந்தான்.

இளைய வள்ளலே! ஏறுதி தோள் மிசை என்றான்.

உரிய சமையத்தில் வந்து அனுமான் இவ்வாறு ஆதரவாய் வேண்டவே இலக்குவன் முதலில் மறுத்தான். "தரையில் நின்று கொண்டே எதிரியைப் பொருது வீழ்த்துவன்; நீ அயலே நின்று பார்!" என்று இவ் வென்றி வீரன் விளம்பினன். "கீழே நிற்கலாகாது; என் மேலே ஏறியருளுக" என்று அவன் மாறி வேண்டவே இவ் வீர இளவல் ஏறி வில்லோடு நேரே வீறு கொண்டு நின்றான். அந்த ஏற்றம் அதிசயத் தோற்றமாய்த் துலங்கியது.

ஏறினன் இளங் கோளரி இமையவர் ஆசி
கூறினர் எடுத்து ஆர்த்தது வானரக் குழுவும்

நூறுபத்துடைப் பத்தியின் நோன்பரி பூண்ட
ஆறு தேரினும் அகன்றதவ் அனுமன்தன் தடந்தோள்.

தன்னின் நேர்பிறர் தானலா தில்லவன் தோள்மேல்
துன்னு பேரொளி இலக்குவன் தோன்றிய தோற்றம்
பொன்னின் மால்வரை வெள்ளிமால் வரைமிசைப் பொலிந்தது
என்னு மாறன்றிப் பிறிதெடுத்து இயம்புவ தியாதோ?

அனுமானுடைய தோள்மேல் ஏறி அமர்ந்து இலக்குவன் போர்புரிய நேர்ந்த காட்சியை இவை காட்டி நிற்கின்றன. ஒரு மலையில் தாவிய சிங்கக் குருளைபோல் இளையவன் அந்த வீரன் தோள்மேல் வீர கம்பீரமாய் ஏறினன் ஆதலால் அத்தோற்றம் அதிசயமான ஓர் ஏற்றமாய் நின்றது.

இளங்கோளரி என்றது பருவமும் உருவமும் பான்மையும் மேன்மையும் ஆண்மையும் அடலும் கூர்மையா அறிய வந்தது.

பொன் மலைமேல் ஒரு வெள்ளி மலை வீற்றிருந்தது போல் அனுமான் தோள்மேல் இலக்குவன் அமர்ந்திருந்தான் என்றது இருவரது நிலைமை தலைமைகளை நேரே விளக்கி நின்றது. யாண்டும் அஞ்சாத நெஞ்சமும் அரிய போர் வீரமும் மருவியுள்ள பெரிய ஆண்மையாளர் அரிய கேண்மையோடு அமைந்து நின்றனர். அஞ்சனைச் சிங்கத்தின் மீது அமர்ந்து சுமித்திரைச் சிங்கம் அடலாண்மை கொண்டு நின்றது அதிசயக் காட்சியாய் விளங்கியது. அமரரும் அதனைத் துதிசெய்து நின்றனர்.

இவ்வாறு இவ்வீரன் வீறோடு போராட நேரவே, தேர்மேல் நின்ற கும்பகருணன் நேரே வீர வாதம் கூறினன். போர் புரியுமுன் அவன் உரையாடியது வீர விநயங்களாய் விரிந்து வந்தது.

கும்பகருணன் கூறியது.

இராமன் தம்பி நீ இராவணன் தம்பிநான் இருவேம்
பொரா நின்றேம் இது காணிய வந்தனர் புலவோர்
பராவும் தொல்செரு முறைவலிக் குரியன பகர்ந்து
விராவும் நல்லமர் விளைக்குதும் யாமென விளம்பா: (1)

பெய்தவத்தின் ஓர் பெண்கொடி எம்முழைப் பிறந்தாள்
செய்த குற்றம் ஒன்றில்லவள் நாசிவெஞ் சினத்தால்
கொய்த கொற்றவ மற்றவள் கூந்தல் தொட்டு ஈர்த்த
கைதலத் திடைக் கிடத்துவன் காக்குதி என்றான். (2)

அல்லினால் செய்த நிறத்தவன் அனையது பகர
மல்லினால் செய்த தோளினான் மாற்றங்கள் நும்பால்
வில்லினால் சொல்லின் அல்லது வெந்திறல் வெள்கச்
சொல்லினால் சொலக் கற்றிலம் யாமெனச் சொன்னான்.(3)

போராட நேர்ந்த கும்பகருணன் இலக்குவனை நோக்கிக் கூறியதும், அதற்கு இவன் மாறு கூறியுள்ளதும் வீரச் சுவைகளாய் விளைந்து வந்துள்ளன. வில்லாடல் நேருமுன்னரே சொல்லாடல்கள் நேர்ந்திருப்பது உல்லாச விநோதங்களாய்த் தோன்றுகின்றது. விற்போர் மூளுமுன் சொற்போர் மூண்டுள்ளது.

இலக்குவனைக் கண்டதும் கும்பகருணனுக்குக் கோபம் மூளவில்லை என்று தெரிகின்றது. நல்ல அழகன் ஆதலால் இந்த இளவலை நேரே காணவே கொஞ்சம் பேசிப் பார்க்கலாம் என்னும் ஆசையால் அவன் பேச நேர்ந்தான். பேச்சுகள் உல்லாசமான சல்லாபங்களாய் ஒளிபுரிந்து வெளி வந்தன.

இராமன் தம்பி நீ;
இராவணன் தம்பி நான்.

இந்த வார்த்தை எவ்வளவு சுவையாய் எழுந்துள்ளது!

போராட நேர்ந்த சோடிகள் எவ்வழியும் தகுதியுடையன என்று உவகை கூர்ந்திருக்கிறான். உன் அண்ணன் என் அண்ணனோடு போராட மூண்டு வந்திருக்கிறான். நீ என்னோடுபோர் செய்ய நேர்ந்திருக்கிறாய். பிறப்புரிமையிலும் சிறப்பு நிலையிலும் சீர்மை நிறைந்துள்ளமையால் போர்முறைமை அதிக மேன்மையாக வாய்ந்து அரிய பல உரிமைகள் தோய்ந்துள்ளது.

பெருவீரர்களுக்குத் தம்பியர்களா அமைந்துள்ள நாம் இன்று பொருதிறலோடு போர்க்களத்தில் எதிர்ந்துள்ளோம்; நாம் பயின்று ,தெளிந்துள்ள போர் முறைகளும் திறல்களும் வெளிவர நேர்ந்துள்ளன. நமது போராடல்களைக் காண விழைந்து தேவர்கள் யாவரும் மேலே ஆவலோடு திரண்டு நிற்கின்றனர். நாம் விரைந்து போர் செய்ய வேண்டும். எங்களோடு உடன் பிறந்திருந்த எனது அருமைத் தங்கையை வீணே மூக்கை அறுத்த வெற்றி வீரன் அல்லவா நீ; அவளது கூந்தலைத் தொட்டு இழுத்த அந்தக் கையைத் துணித்துத் தரையில் வீழ்த்

துகிறேன்; நீ நல்ல வீரன் ஆனால் அதனைத் தடுத்து நில் என்று வீர வாதம் கூறினான். கும்பகருணன் இவ்வாறு ஆரவாரமாய் அடலாண்மை காட்டிப் பேசவே இலக்குவன் சிறுநகைசெய்து மறுமொழி சொல்லினான்; அது பெருமிதநிலையாய்ப் பெருகியது.

வில்லினால் சொல்லின் அல்லது,
சொல்லினால் சொலக் கற்றிலம்.

இலக்குவன் சொன்ன பதில் மொழி யிது.

வாயால் வீணாகப் பேச எனக்குத் தெரியாது; என் வில்லினாலேயே உனக்கு நான் பதில் சொல்லுகிறேன் என்று இளையவன் சொல்லியுள்ள இதில் இவனது உள்ளத் துணிவும் உறுதி நிலையும் உரையாடுந்திறனும் வெளியாயுள்ளன.

அல்லினால் செய்த நிறத்தவன் எனக் கும்பகருணனையும், மல்லினால் செய்த தோளினன் என இலக்குவனையும் கவி வடித்துக் காட்டியிருக்கிறார். படித்துப் பார்த்த அளவில் இக் காட்சியை விடுத்துப் போகாமல் அடுத்து மடுத்து நுனித்து நோக்க வேண்டும். நேர்ந்த இருவரது நிலைகளும் கூர்ந்து உணர வந்தன.

கரிய பெரிய உருவமுடைய அவனும் அரிய திறலுடைய இவனும் நேரே போர் புரிய மூண்டது அதிசயமான ஒரு வீர விளையாடலாய் நீண்டு நிலவியது. பழம் பகைமையை அவன் உளம் துணிந்து கிளர்ந்து கூறியது நினைந்து சிந்திக்க வுரியது.

உன் அண்ணியை என் அண்ணன் எடுத்து வந்தான் என்று உன் அண்ணனும் நீயும்படைகளோடு கடுத்து வந்து கொடும்பழி கூறி அடுந்தொழில் புரிய ஆர்த்து நிற்கின்றீர்; நீவிர் செய்துள்ள பெரும் பிழையை நினைந்து சிந்திக்கவில்லை; அதனை நன்கு சிந்தனை செய்க என்று நிந்திக்கும் முறையில் சூர்ப்பநகையின் அங்கபங்கத்தைக் குறித்துக் கும்பகருணன் இங்கே பேசி யிருக்கிறான்.

பெய்தவத்தின் ஓர் பெண் கோடி எனத் தன் தங்கையை இங்ஙனம் புகழ்ந்து கூறியுள்ளான். மூன்று ஆண் பிள்ளைகளோடு ஒரு பெண் பிள்ளை அருமையாக அரச குடியில் பிறந்திருக்கிறாள் என்பான் இப்படிப் புனைந்து கூறினான். பிறப்புரிமையில் அன்பும் ஆர்வமும் பெருகியுள்ளமையை இவ் வுரை சிறப்பாக விளக்கியுள்ளது. தன் குலத்திலும் குடியிலும் உறவிலும்

மிகுந்த அபிமானமுடையவன் என்பதைக் கும்பகருணனுடைய உரைகள் தோறும் நன்கு உணர்ந்து வருகிறோம்.

ஒரு குற்றமும் செய்யாத எனது அருமைத் தங்கையை அநியாயமாய்ப் பிடித்து நாசியை அறுத்தாயே! என்று ஆங்காரத்தோடு வீறிட்டிருக்கிறான். சூர்ப்பநகை இராமன் மீது காதல் மீக்கொண்டு அடாத செயலைச் செய்துள்ளதை அவன் அறியவில்லை என்று தெரிகின்றது. தான் காதலித்து விளைத்த பிழையினாலேதான் தனக்கு அப்பழி நேர்ந்தது என்று அவள் யாரிடமும் வெளியிடவில்லை. வேறுவழியில் வினையை மூட்டியுள்ளாள்.

வனத்தில் தனியே கண்ட இளங்குமரியை உளங்கூசாமல் வலிந்து பற்றி இளையவன் ஊறு செய்துள்ளான் என்றே அவன் சீறியிருக்கிறான். அந்தச் சீற்றத்தால் மாற்றம் கொதித்துவந்தது.

அவள் கூந்தல் தொட்டு ஈர்த்த கை தலத்திடைக் கிடத்துவன் என்றது பழிக்குப்பழி செய்து வஞ்சினம் தீர்ப்பேன் என்று அவன் வாது கூறியபடியாம். கோய்த கோற்றவ என்றது இகழ்ச்சிக் குறிப்பு. பேதைப் பெண்ணைத் தனியே பிடித்து மூக்கு அரிந்த பெரிய சுத்த வீரன் எனக் கிண்டல் செய்தபடியிது.

கூந்தல் தொட்ட கையைத் துணித்து வீழ்த்துவேன் என்றது தனது வீரக் குடியின் வீறு தோன்ற வந்தது. அவளுடைய கூந்தலைப் பற்றியது இடது கை; நாசியைக் கொய்தது வலது கை. மூக்கை அறுக்க உதவியாக முன்னுறக் கூந்தலைப் பிடித்து நின்றது ஆதலால் அந்த இடக்கையை முதலில் துணித்து வீழ்த்துவேன் என்று துணிவுரை கூறினான்.

இவ்வாறு அவன் கூறவே "வீணே ஏன் வாய் பேசுகின்றாய்; வில்லால் பேசு; அதனாலேயே நான் பதில் சொல்லுவேன்" என்று இலக்குவன் சொல்லினான். இங்ஙனம் சொல்லி வாய் மூடும் முன்னமே அவன் கடுத்து அம்புகளைத் தொடுத்தான். அவன் எய்த பகழிகள் எல்லாம் இழிந்து சிதறி அழிந்து பட இளையவன் அம்புகளை ஏவி அதிசய ஆடல்கள் புரிந்தான். போராடிய சிறிது நேரத்துள் கும்பகருணன் ஏறியிருந்த தேர் வேறாய் உடைந்து சிதைந்தது. தேரில் பூட்டியிருந்த பரிகளும் மாண்டன; செலுத்திவந்த பாகனும் செத்து வீழ்ந்தான். ஏறு தேரி

ழுந்து கும்பகருணன் சீறி எழுந்தான்; எழும்போதே அவன் கையில் பிடித்திருந்த வில் ஒடிந்து வீழ்ந்தது; கணைகள் வந்து பாய்வதை யாரும் காணவில்லை; தேர் பரி சாரதி வில் முதலியன நாசமானதையே யாவரும் காண நேர்ந்தனர். இலக்குவனுடைய பாணப் பிரயோகங்களின் விசித்திர வேகங்கள் யாண்டும் வியப்புகளை விளைத்தன. எதிரியும் திகைத்து எதிரே குதித்தான்.

ஏறி வந்த வாகனம் இழந்து போனமையால் கும்பகருணன் தரையில் பாய்ந்து வறியனாய் நின்றான்; நிற்கவே அனுமானது தோளிலிருந்து கீழே தாவி இலக்குவன் நேரே எதிர்ந்தான். எதிரவே தன் கையில் பிடித்திருந்த சூலாயுதத்தை இவன்மேல் அவன் கொதித்து எறிந்தான். ஊழித்தீ போல் உருத்து வந்த அது இவன் அம்பால் பாழாய் உதிர்ந்தது. அந்த அதிசய வெற்றியை நோக்கி உம்பரும் இம்பரும் உவகை மீக்கூர்ந்தனர். தன்னுடைய தோல்வியையும்மறந்துகும்பகருணன்வியந்து நின்றான். எவ்வழியும் அழியாத திவ்விய சூலம் இவ்வழி இவனால் இவ்வாறு அழிந்ததே! என்று அவன் அயர்ந்து அலமந்தான். அவ்வமையம்அங்கே புதிய சேனைகள்அதிசயமாய் வந்து சேர்ந்தன.

## புதிய படைகள் புகுந்தன.

இராமன் தம்பியும் இராவணன் தம்பியும் இவ்வாறு போராடல்கள் புரிந்து கொண்டிருக்கும் பொழுது இலங்கையிலிருந்து மேலும் பல சேனைகள் ஆரவாரமாய்ப் பொங்கி வந்து எங்கும் வளைந்தன. வெள்ளம் போல் புதிதாய் வந்த படைகளை நோக்கி இளையவன் உள்ளம் உளைந்தான் ஆயினும் சினந்து தொலைக்கவே செரு முகத்தில் ஒரு முகமாய் ஊக்கி நின்றான்.

தனக்கு உதவியாய் வந்த அந்தப் படைகளைக் கண்டதும் கும்பகருணன் உவந்து கொள்ளாமல் இகழ்ந்து நாணி அரக்கர் குலம் அழிந்தது என அயலகன்றான். நல்ல சுத்தவீரன் ஆதலால் தனக்கு ஆதரவாக இலங்கை வேந்தன் அனுப்பிய சேனை அவமானமாய் நின்றது. தன்னம்தனியே சென்று தேவர் எவரையும் வென்றவன் சேனைகளோடு வந்து மனிதனோடு போராடியதில் மானக்கேடு நேர்ந்தது என்று மறுகி நொந்தான். கால வேற்றுமைகளையும் வினை விளைவுகளையும் நினைந்து வெறுத்து உளைந்தவன்

கடுத்து அயலே போனான். அடுத்துவந்த சேனைகள் கொதித்து மூண்டு இலக்குவனைச் சூழ்ந்து வளைந்து கொண்டன.

### இளவலது வீரப் போர்.

கொடிய போர் வீரர்களான நெடிய அரக்கர் படைகள் கடிது வந்து வளையவே அடுதிறலோடு இளையவன் படுகளம் முழுவதையும் பாழாக்கினான். யாண்டும் கலங்காத இலங்கைப் படைகள் ஈண்டு மூண்ட போரில் ஈசல் மடிந்ததுபோல் நாச மாய் மாண்டு மடிந்தன. இளையவனுடைய வில்லாடலில் வீர தேவதை உல்லாச விநோதமாய் எவ்வழியும் விளையாடி வந்தது. அதனால் எல்லா இடங்களிலும் எல்லை கடந்த அழிவுகள் ஒல்லை யில் விளைந்தன. நால்வகைப் படைகளும் நாசமாயின.

கரியின் கைகளும் புரவியின் கால்களும் காலின்
திரியும் தேர்களின் சில்லியும் அரக்கர்தம் சிரமும்
சொரியும் சோரியும் துறைதொறும் துறைதொறும் சுழிப்ப
நெரியும் பல்பிணப் பெருங்கரை கடந்தில நீத்தம்.

கொற்ற வாள்எழுத் தண்டுவேல் கோல்மழுக் குலிசம்
மற்றும் வேறுள படைக்கலம் இலக்குவன் வாளி
சுற்றும் ஓடுவ தொடர்ந்திடை துணித்திடத் தொகையா
அற்ற துண்டங்கள் படப்படத் துணிந்தன அநந்தம்.

இலக்குவனுடைய போராடலில் அரக்கர் சேனைகள் அழிந்துபட்டுள்ள அழிவு நிலைகளை இவை விழி தெரிய விளக்கி யுள்ளன. அரிய திறலுடைய பெரிய போர் வீரர்கள் அனைவரும் பரிதாபமாய்ப் பட்டு மாய்ந்திருக்கின்றனர். மாய அரக்கர்கள் மாய்ந்து மடிந்திருப்பது மாய வியப்பாயிருந்தமையால் வானவர் தானவர் யாவரும் ஆனவகை யாதும் அறியாமல் அயர்ந்து மயங்கினர். புதிதாய் வந்து வளைந்த சேனைகளோடு இலக்குவன் இவ்வாறு போராடிக் கொண்டிருந்தபொழுது அயலே சென்ற கும்பகருணனைச் சுக்கிரீவன் கண்டான். உக்கிர வீரமாய் உருத்து எதிர்த்தான். அவன் கொதித்தான்; கொடும் போர் மூண்டது.

### கும்பகருணனும் சுக்கிரீவனும்

அருந்திறலுடைய இந்த இருவரும் பொருந்திறலில் புகுந்து எதிர்ந்தது அரிய பெரிய வீரக்காட்சியாய்ப் பெருகி நின்றது.

மலைகளில் செழித்துத் திரிந்த மதயானைகள் இரண்டு மதம் மீறிக் களித்து மல்லாடியதுபோல் மாறிக் கொதித்துப் போராட நேர்ந்தார். சுக்கிரீவன் கடுத்து எறிந்த தண்டங்களையும் கல்லுகளையும் அவன் கடுந்துகளாக்கி நெடுந்தொலையில் வீசினன். நெடு நேரம் போராடியும் ஒருவரை ஒருவர் யாதும் செய்ய முடியாமல் இருவரும் கறுவுகொண்டு கடுத்து நின்றார். அடுத்து ஒரு சூலத்தை அரக்கர் தலைவன் எடுத்தான்; அது வரபலத்தால் வந்தது; எவரையும் கொல்ல வல்லது; மந்திரமுறையோடு கூடிய அதனை எடுத்துச் சுக்கிரீவன் மீது கடுத்து வீசினன். நெருப்புப் பொறிகள் பறக்க அது சீறி வருவதை நோக்கிச் சுக்கிரீவன் இறந்தான் என்று தேவரும் துணுக்கமடைந்து துடித்து நின்றார்.

வானவீதி வழியே அது கடுத்து வருங்கால் இடையே பாய்ந்து அனுமான் அதனைப் பிடித்து ஒடித்து எறிந்தான். அவ் வீரத்தைக் கண்டு விண்ணும் மண்ணும் வியந்து புகழ்ந்தன. கும்பகருணனும் வாய்விட்டு "வானர வீரா! நீ ஒருவனே உலகில் அரிய போர் வீரன்; உன்னால் முடியாதது யாண்டும் யாதும் இல்லை; உன்னை ஒரு துணைவனாகப் பெற்றவன் எவனாயினும் அவன் வெற்றிமாலை சூடி வீரப் புகழோடு விளங்கி நிற்பான்" என்று வியந்து புகழ்ந்தான்.

செல்வன்ஓர் நெடுநீகிரி இன்னும் தேர்ந்தெனா
எல்லவன் கான்முளை உணரும் ஏல்வையில்
கொல்என எறிந்தனன் குறைவில் நோன்பினோர்
சொல்லெனப் பிழையிலாச் சூலம் சோர்விலான். (1)

பட்டனன் பட்டனன் என்று பார்த்தவர்
விட்டுலம்பிட நெடு விசும்பிற் சேறலும்
எட்டினன் அதுபிடித்து இறுத்து நீக்கினன்
ஒட்டுமோ மாருதி அறத்தை ஓம்புவான். (2)

சித்திர வனமுலைச் சீதை செவ்வியால்
முத்தனார் மிதிலையூர் அறிவு முற்றிய
பித்தன்வெஞ் சிலையினை அறுத்த பேரொலி
ஒத்தது சூலமன்று இற்ற ஓசையே. (3)

நிருதனும் அனையவன் நிலைமை நோக்கியே
கருதவும் இயம்பவும் அரிதுன் கைவலி

அரியன முடிப்பதற்கு அனைத்து நாட்டினும்
ஒருதனி உளை இதற்கு உவமம் யாது? என்றான். (4)

சுக்கிரீவனைக் கொல்லும் பொருட்டுத் தான் கோதித்து எறிந்த சூலத்தை நடுவே தாவிப் பிடித்து ஒடித்து எறிந்த அனுமனைக் கும்பகருணன் இப்படிப் புகழ்ந்திருக்கிறான். மிதிலையில் அரிய வில்லை ஒடித்து அங்கே இராமன் சீதையைப் பெற்றான். இங்கே அதிசயமான சூலத்தை ஒடித்து அனுமான் வெற்றித் திருவைப் பெற்றுள்ளான் என்பது உய்த்துணர வந்தது. திரியம்பகம் என்னும் அவ்வில் சிவபெருமான் திருவருளால் அமைந்தது; இந்தத் திரிசூலமும் அவன் அருளால் வந்தது ஆதலால் இவ்வாறு இணைத்து உறவின் செவ்வியை உணரக் கூறினான்.

அறிவு முற்றிய பித்தன்.

சிவபெருமானைச் சுட்டிச் சொல்லியிருக்கும் இந்த வாக்கியத்தின் சுவை நோக்கி நுகரத் தக்கது. உலகப் பித்தர் அறிவு மயங்கி அவலமாயிருப்பர்; இந்தப் பித்தன் எல்லாம் அறிய வல்லவனாய் என்றும் குன்றாத ஞான சித்தனாய் நிலவி நிற்கிறான். அந்த நிலையைக் கலையின் சுவை கனிய இங்ஙனம் இடையே கவி காட்டியிருக்கிறார். பித்தன் சூலம் இங்கே இற்று ஒழிந்தமையால் அதனோடு ஒத்திருந்த சிலையையும் உடன் எண்ண நேர்ந்தான். அந்த வில்லை ஒடித்தவனோடு இந்தச் சூலத்தை முடித்தவனையும் இணைத்து எண்ணியதால் இருவருடைய அருமை பெருமைகளும் உரிமை நிலைகளும் ஒருமுகமாய் உணர வந்தன.

அனைத்து நாட்டினும் அரியன முடிப்பவன் என அனுமானைக் குறித்துக் கும்பகருணன் இப்படி உறுதியாக் கருதியிருக்கிறான். யாரும் செய்ய முடியாத அரிய காரியங்களை எளிதே செய்து முடிக்க வல்லவன் என்று புகழ்ந்து கொண்டாடியது தனது அதிசய சூலத்தை ஒடித்து எறிந்த அற்புத ஆண்மையை நோக்கியேயாம். அரிய காரியம் செய்தது பெரிய மகிமை ஆயது.

சுக்கிரீவன் மீது ஏவிய சூலாயுதத்தை இடையே பாய்ந்து பற்றிப் படுநாசம் செய்து வீசி அயலே அனுமான் தாவிப் போனான். அவன் போகவே கும்பகருணன் மீது வேகமாய்ப் பாய்ந்து சுக்கிரீவன் வீரேறு குத்தி வீராவேசமாய் மல்லாடினான். தன்னை வந்து தாக்கினவனை அவ் வீரன் மாறித் தாக்கி

ஞன். அந்தத் தாக்குதலைத் தாங்கமாட்டாமல் சுக்கிரீவன் தளர்ந்து மயங்கினன். மறுகி மயங்கிய வானர வேந்தன் மறுபடியும் மான வீரத்தோடு நேரே பாய்ந்து போராடினன். சீறிப் பொருத அவனைக் கும்பகருணன் சினந்து பற்றினன். தன் கையில் நன்கு அகப்பட்டபொழுது அவன் சிறிதும் நழுவாதபடி அதிவேகமாய் இவன் அணைத்து இறுக்கினன். கொடிய அந்தப் பிடியால் சுக்கிரீவன் நெடிது மயங்கினன். உடல் ஒடுங்கிக் கண்கள் பிதுங்கி அடலாண்மைகள் யாவும் அடங்கி அயர்ந்து மயங்கினன். அவனது நிலை கொடிய அபாயமானது.

### நகரை நோக்கி நடந்தது.

தன் கையில் சிக்கிக் கதிகலங்கி நின்ற சுக்கிரீவனைக் கடுத்து எடுத்துக் கொண்டு இலங்கையை நோக்கிக் கும்பகருணன் விரைந்து சென்றான். வானர வீரர்கள் யாவரும் யாதும் செய்ய முடியாமல் ஐயகோ! என்று அரற்றி அலறினர். அனுமானும் கையைப் பிசைந்து கொண்டு ஒன்றும் செய்ய முடியாதவனாய் உள்ளம் உடைந்து உடன்தொடர்ந்து சென்றான். பூனை வாயில் அகப்பட்ட தாய்ப்பறவையை நோக்கிக் குஞ்சுகள் கூவியலறுவது போல் குரங்குகள் எல்லாம் அஞ்சி ஓலமிட்டன. அமரர் முதல் யாவரும் முடிவு நேர்ந்ததே! என்று நெடிது மறுகி நிலைகுலைந்து பலவழிகளிலும் நின்று பரிந்து புலம்பினர்.

நடுங்கினர் அமரரும் நாவும் வேர்த்து உலர்ந்து
ஒடுங்கினர் வானரத் தலைவர் உண் முகிழ்த்து
இடுங்கின கண்ணினன் எரிந்த நெஞ்சினன்
அடங்கினனும் உயிர்ப்பு என்னும் அன்பினர். (1)

புழுங்கிய வெஞ்சினத்து அரக்கன் போகுவான்
அழுங்கலில் கோள்முகத்து அரவம் ஆயினன்
எழுங்கதிர் இரவிதன் புதல்வன் எண்ணுற
விழுங்கிய மதிஎன மெலிந்து தோன்றினன். (2)

திக்குற விளங்குவான் சிறுவன் தீயவன்
மைக்கரு நிறத்திடை மறைந்த தன்உரு
மிக்கதும் குறைந்தது மாக மேகத்துள்
புக்கதும் புறத்துமா மதியும் போன்றனன். (3)

ஒருங்கமர் புரிகிலேன் உன்னொடு யான்என
நெருங்கிய உரையினை நினைந்து நேர்கிலன்
கருங்கடல் கடந்தஅக் காலன் காலன்வாழ்
பெருங்கரம் பிசைந்துஅவன் பின்பு சென்றனன். (4)

சுக்கிரீவனைப் பற்றி எடுத்துக் கொண்டு கும்பகருணன் போர்க்களத்தை நீங்கி இலங்கைக்குச் சென்றதும், வானரங்கள் மறுகி அழுததும், யாதும் செய்ய இயலாதவனாய் அனுமான் மாத்திரம் பின் தொடர்ந்து மறுகிப் போனதும் நெடிய பரிதாபங்களாய் நின்றன. வெற்றி பெற்றோம் என்று அரக்கர்கள் ஆரவாரங்கள் செய்தனர். அமரர்கள் அலமந்து நொந்தனர்; தமர்கள் யாவரும் தளர்ந்து தவித்தனர். இராகுவின் வாயில் அகப்பட்ட சந்திரன் போல் சூரிய புத்திரனான சுக்கிரீவன் வீரியம் இழந்து கும்பகருணன் கையில் சிக்கி வெம்பி மயங்கி மெய்மறந்து மெலிந்து கிடந்தான்; அந்தக் கிடையால் அவனது அவலநிலை நன்கு அறிய வந்தது. உயிர் உள்ளதோ இல்லையோ என்று ஐயுறும்படி செயலிழந்து மயலடைந்திருந்தான்.

கருங்கடல் கடந்த அக் காலன்.

என அனுமானை இங்கே காட்டியிருக்கும் காட்சி காரிய மாட்சியாய் வந்தது. கடல் கடந்து காரிய சித்தி பெற்றவன் கும்பகருணனுடைய அடலைக் கடக்க முடியாமல் அலமந்து நின்றான். இனிமேல் உன்னோடு நான் போர் செய்வதில்லை என்று கும்பகருணன் எதிரே முன்னம் உறுதி கூறியுள்ளமையால் அந்த வாக்கு நிலையை மீறாமல் ஏக்கமடைந்து சென்றுள்ளான். உரிய அரசைப் பிரியாது சென்றது பரிதாபமாயிருந்தது.

காலன்வாழ் பெருங்கரம் பிசைந்து அவன்பின்பு சென்றனன்.

செயலிழந்து அனுமான் சென்றுள்ள நிலையை இது நன்கு காட்டியுள்ளது. காலன்வாழ் கரம் என இந்த வீரன் கையை விளக்கியிருக்கும் வித்தகம் உய்த்துணரத்தக்கது. பல்லாயிரம் அரக்கர்களைத் தன் கையால் கொன்று தொலைத்திருக்கிறான் ஆதலால் காலன் வாழ் நிலையம் என அதன் கோலமும் குறியும் ஞாலம் காண வந்தன. வெற்றிக் கை வெறுமையாய்ச்சென்றது.

எத்தகைய வீரரையும் எளிதே வெல்லவும் கொல்லவும் வல்

லவன் ஒத்துரைத்த சபதத்தால் ஒன்றும் செய்ய மாட்டாதவனாய்ப் பித்தன் போல் அவன் பின்னே இன்னலுழந்து போயுள்ளான். கடல் கடந்த காலும், அரக்கர் அடல் கடந்த கையும் உடைய அம்மெய்யன் தனது குலத்தலைவனை வெய்யவனிடம் பறிகொடுத்து விட்டு மறுகிப் போனது பரிபவமாய் நின்றது.

கையைப் பிசைந்து சென்றது எதிரியின் மெய்யைப் பிசைய முடிய வில்லையே! என்னும் ஏக்கத்தால் எய்தியது.

## இராமன் வந்தது.

இவ்வாறு நேர்ந்த அபாயத்தைச் சில குரங்குகள் விரைந்து ஓடிப்போய் இராமனிடம் கூறின. இவ்வுரைகளைக் கேட்டதும் அவ் வீரமூர்த்தி வில்லோடு அதி வேகமாய் வந்தான். அதற்குள் கும்பகருணன் இலங்காபுரியை நெருங்கி விட்டான். அவன் நகருக்குள்ளே புகாதபடி அம்புகளை ஏவி வடதிசை மதில் முழுவதும் சரக்கூடத்தை வரைந்து கொண்டே விரைந்து பின் தொடர்ந்தான். அவன் வடக்குக் கோட்டை வாசலுள் புகுந்தபொழுது பாணங்களால் அமைந்த வேலி வானுற ஓங்கி வளர்ந்து நின்றது. திகைத்து நின்றான்; திரும்பிப் பார்த்தான்; பிடித்த வில்லோடு இராமன் அடுத்து நிற்பதைக் கண்டான்; அதிசயமடைந்தான்; ஆங்காரத்தோடு அடர்ந்து சினந்து தொடர்ந்து விரைந்தான்.

உடைப் பெருந் துணைவனை உயிரிற் கொண்டுபோய்க்
கிடைப்பரும் கொடிநகர் அடையின் கேடெனத்
தொடைப்பரும் பகழியின் மாரி தூர்த்துற
அடைப்பன் என்று அடைத்தனன் விசும்பின் ஆறெலாம்.

மாதிரம் மறைந்தன வயங்கு வெய்யவன்
சோதியின் கிளர்நிலை தொடர்தல் ஓவின
யாதும்விண் படர்கில இயங்கு கார்மழை
மீதுநின் றகன்றது விசும்பு தூர்த்தலால். (2)

மனத்தினும் கடியதோர் விசையின் வான்செல்வான்
இனக்கொடும் பகழியின் மதிலை எய்தினான்
நினைத்தவை நீக்குதல் அருமை யின்றெனச்
சினக் கொடுந் திறலவன் திரிந்து நோக்கினான். (3)

கண்டனன் வதனம்வாய் கண்கை கால்எனப்
புண்டரீகத் தடம் பூத்துப் பொற்சிலை

மண்டலம் தொடர்ந்து மண்வயங்க வந்ததோர்
கொண்டலிற் பொலிதரு கோலத்தான் தனே. (4)

இங்கே நிகழ்ந்துள்ளன அதிசய வியப்புகளாய் விளைந்திருக்கின்றன. சுக்கிரீவனைப் பற்றிக் கொண்டு கும்பகருணன் ஊருக்குப் போகின்ருன் என்றதைக் கேட்டவுடனே கோதண்ட வீரன் அதி வேகமாய் விரைந்து வந்தான்; பகைவன் மிஞ்சிப் போய்விட்டான் என்று தெரிந்ததும் முன்னதாகச் சரக்கூடம் வளைந்து கொண்டே பின்னுறத் தொடர்ந்து நெருங்கினன்.

சுக்கிரீவனை அவன் பற்றிக்கொண்டு போனது தன் உயிரைப் பறித்துக் கொண்டு போனது போல் படுதுயரமாயிருந்தமையால் அடுதிறலோடு கடிதின் முடுகி வந்தான். இலங்கைக்குள் புக முயன்றவன் அம்பால் ஆன வேலியை முட்டினன்; அதிசயித்துத் திரும்பினன்; பின்னே வளைத்த வில்லோடு அம்பு பூட்டி அடலாண்மை கொண்டு நிற்கின்ற இராமனைக்கண்டான்.

சிலை மண்டலம் தொடர்ந்து மண் வயங்க வந்தது ஓர் கொண்டல் கும்பகருணனைத் தொடர்ந்து அதி வேகமாய் அடர்ந்து வந்து கோதண்டவீரன் நின்ற காட்சியை இது காட்டியுள்ளது. வான வில்லோடு தோன்றிய காளமேகம் பூமியில் விளங்கி நின்றது போல் நின்ருன் என்றது அவனது உருவநிலையும் எழிலும் இயல்பும் தெரிய. பசிய ஒரு சோதி அயல் எங்கும் ஒளி வீச வில்லை ஏந்திய கையோடு வீர கம்பீரமாய்த் தரையில் நின்ற இவ் வீர மூர்த்தியை அத் தீரன் வியந்து நோக்கினன்.

இராமன் ஒரு கணம் பிந்தினலும் அவன் ஊருள் புகுந்திருப்பான்; சுக்கிரீவனைக் கொன்றிருப்பான்; குடிகேடு நேர்ந்திருக்கும்; அந்த அவலம் நேராதபடி விரைந்து முடுகி வந்து இவ் வில் வீரன் தடுத்தது அவனுக்குக் கொடிய துயரமாயும் நெடிய தோல்வியாயும் நீண்டு நின்றன. கோபம் மூண்டு வந்தது.

தனக்குப் பெரிய வெற்றி கிடைத்தது என்று உள்ளம் களித்துச் சென்ற அவன் நேர்ந்த தடையை நினைந்து நெஞ்சம் கடுத்தான். இராமனை வெகுண்டு நோக்கி வீர வாதங்கள் கூறினன். பேசிய வார்த்தைகளில் பேராண்மைகள் பொங்கி நின்றன. ஊக்கமும் மானமும் உறுதியும் ஊடுருவி வந்தன.

கும்பகருணனது வீர மொழிகள்.

மாக்கவந் தனும்வலி தொலைந்த வாலியாம்
பூக்கவர்ந் துண்ணியும் போலும் என்றெனைத்
தாக்க வந்தனை இவன் தன்னை இன்னுயிர்
காக்க வந்தனை எனக் கழறல் மெயினன். [1]

உம்பியை முனிந்திலேன் அவனுக்கு ஊர்தியாம்
தும்பியை முனிந்திலேன் தொடர்ந்த வாலிதன்
தம்பியை முனிந்திலேன் சமரம் தன்னில்யான்
அம்பியல் சிலையினாய்! புகழன்று ஆதலால். [2]

தேடினன் திரிந்தனன் நின்னைத் திக்கிறந்து
ஓடியது உன்படை உம்பி ஓர்ந்தொரு
பாடுற நடந்தனன் அனுமன் பாறினன்
ஈடுறும் இவனைக் கொண்டு எளிதின் எய்தினேன். (3)

காக்கிய வந்தனை என்னின் கண்டஎன்
பாக்கியம் தந்தது நின்னைப் பன்முறை
ஆக்கிய செருவெலாம் ஆக்கி எம்முனைப்
போக்குவன் மனத்துறு காதல் புன்கணோய். [4]

ஏதிவெந் திறலினோய்! இமைப்பிலோர் எதிர்
பேதுறு குரங்கையான் பிணித்த கைப்பிணி
கோதைவெஞ் சிலையினால் கோடி வீடெனின்
சீதையும் பெயர்ந்தனள் சிறைநின் றுமென்றான். [5]

வீர சபதமாய் வெளிவந்துள்ள இந்த வார்த்தைகளில் அரிய பல கருத்துகள் மருவி நிற்கின்றன. அச்சமும் திகிலும் தோன்றும்படி உச்ச நிலையில் ஊக்கிப் பேசியிருக்கிறான். "ஓ இராமா! என் கையில் சிக்கிய இவன் உயிரைக் காக்கும் பொருட்டு என்னை நீ தாக்க வந்துள்ளாய்! உன் நோக்கம் பிழைபாடுடையது; கவந்தன், விராதன், கரன், வாலி முதலானவர்களை வென்று எளிதே வெற்றி கண்ட அந்த வீறு உன் உள்ளத்தில் மீறியுள்ளது; அதனால் என்மேல் சீறி வர நேர்ந்தாய்; அவர்பால் அங்கே பெற்றுவந்த பேரெல்லாம் இழந்து இங்கே நேரே என்பால் சிதழிய வந்தாய்; இந்தப் போரில் நான் யாரையும் எதிர்பார்த்து வரவில்லை; உன்னையே நோக்கி வந்தேன்; உன்னோடு போராடி வெல்லவே விரைந்து புகுந்தேன்; போர்க்களத்

தில் உன்னைக் காண வில்லை; இடையே உன் தம்பி வந்து போரா டினன்; விரைவில் உடைந்து போனன்; அனுமான் ஓடி ஒளிந் தான்; அங்கதன் அடிபட்டு விழுந்தான்; வானர சேனைகள் நாசமடைந்தன; பொருகளம் முழுவதும் உன்னைத் தேடித் திரிந் தேன்; யாண்டும் காணுமையால் இடையே வந்து சிக்கிய இந்த வானர வேந்தனைப் பற்றிக் கொண்டு இலங்கை புக நேர்ந்தேன்; எமன் வாயில் அகப்பட்ட உயிர்போல் என் கையில் இவன் பிடிபட்டுள்ளான்; இவனை மீட்டிக் கொண்டு போகலாம் என்று பூட்டிய வில்லோடு நீ வந்திருக்கிருய்; இந்த உன் வரவு நான் செய்த பாக்கியமேயாம்; உன்னைக் கொன்று வென்றி பெற வேண்டுமென்றே வந்தேன்; யாண்டோ ஒளிந்திருந்தாய்: ஈண்டு எதிர்கண்டேன்; இனிமேல் அண்ணன் காதல் நோய் நீங்கிக் கண்ணியமாய் வாழுவான்; இந்த உண்மையை விரைந்து காட்டுவேன்; நீ சிறந்த வீரன் ஆனல் என் கையில் அகப்பட்டுக் கதி கலங்கியுள்ள இந்தக் குரங்கை மீட்டி விடவேண்டும்; அவ் வாறு மீட்டுவாயாயின் சீதையும் சிறையிலிருந்து மீண்டபடி யாம்; உனது ஆடலாண்மையை உடனே காட்டுக; காலதாம தம் செய்தால் இவன் உயிர் காலனுக்கு இரையாய்ப் போம்; விரைவாய் வேலை செய்'' என்று இன்னவாறு கும்பகருணன் இராமனை நோக்கி வீறேடு பேசி நின்றன். அவனது நிலையும் பேச்சும் நெஞ்சத்திண்மையும் தலைமையோடு தருக்கேறி நின் றன. குறிப்பு மொழிகள் கூர்ந்து சிந்திக்க வந்தன.

பூக் கவர்ந்து உண்ணி என்று வாலியைக் கேலி செய்திருக் கிருன். செடிகளிலுள்ள பூக்களைத் தின்று மரங்களில் வாழ்ந்து வந்த ஒரு குரங்கை மறைந்து நின்று கொன்று அதனல் தன்னைப் பெரிய போர்வீரன் என்று நினைந்து செருக்கேறி நிற்கின்ருய்; அந்த இறுமாப்பு அறியாமையால் அமைந்தது என இராமனு க்கு அறிவித்தபடியாய் இந்த வார்த்தையை ஆரவாரமாய்க் கூறி யிருக்கிருன். வாலியைக் கீழ்மையாக்கியது தன்மேன்மை காண.

தன்னுடைய ஆடலாண்மையை வலியுறுத்த அயலாரை யெல்லாம் எள்ளலாக எதிரெடுத்துக் காட்டினன். இப்பொழுது தான் செய்து வந்துள்ள செயலுக்குரிய காரணத்தைப் பூரண மாக அறிவித்தான். நேர்ந்ததை ஓர்ந்துணரும்படி உரைகள் வந்தன.

தேடினன் நின்னை; உன் படை ஓடியது.

போர்க் களத்தில் உன்னைத் தேடித் திரிந்தேன்; என்னைக் கண்டதும் உன் படைகள் அஞ்சி நடுங்கி அயலே ஓடின. நீயும் எனக்கு எதிர்ப்பட இல்லை; ஆதலால் என் கையில் அகப்பட்ட இவனைக் கடிது பற்றி வந்தேன் எனத் தான் செய்து மீண்ட செயலுக்குத் தெளிவு கூறினன். சமையம் வாய்த்தது; கிடைத்ததை எடுத்துக் கொண்டு தப்பிப் போய் விட வேண்டும் என்று தான் விரைந்து மீண்டிருப்பதாக இராமன் நினைந்து கொள்ளவும் கூடும் ஆதலால் அந்தக் கருத்தை மாற்றும்படி அவன் கருதி உரைத்திருக்கிறான்; அவ்வுண்மை நுனித்து நோக்கத் தக்கது.

நான் யாருக்கும் அஞ்சேன்; எவரையும் பொருளாக மதியேன்; போரில் யாவராயினும் அவர் பொன்றி ஒழிய வென்று மீளுவேன் என்னும் குறிப்பில் உரைகள் கதித்து வந்துள்ளன.

என் பாக்கியம் தந்தது நின்னை.

தன்னைக் கொல்ல வந்து நிற்கும் இராமனை நோக்கிக் கும்பகருணன் இப்படிச் சொல்லி யிருக்கிறான். இந்தச் சொல்லில் பலவகையான பொருள்கள் பதிந்திருக்கின்றன. ஒன்றைக் கருதி உரைப்பதில் வேறு பலவும் உள்ளே ஒன்றி மிளிர்கின்றன.

பொரு களத்தில் உன்னைத் தேடித் திரிந்தேன்; யாண்டும் காணேம்; கருதி வந்த எதிரி காணுமல் போனனே; காரியம் கைகூட வில்லையே! என்று மறுகி மீண்டேன்; ஈண்டு உன்னைக் கண்டேன்; நான் முன் செய்துள்ள பாக்கியமே உன்னை இவ்வாறு கொண்டு வந்து தந்துள்ளது என்று குறித்து நின்றான்.

எம்முன் மனத்துறு நோய் போக்குவன்.

என் தமையன் மனவேதனை நீங்கி எவ்வழியும் சுகமாய் மகிழ்ந்து வாழும்படி செய்வேன் என்று இங்ஙனம் கிளர்ந்து கூறியிருக்கிறான். தன் செயலின் பயனை நயமா விளக்கினன்.

இராமா! உன்னை நான் வென்று தொலைப்பேன்; உன் படைகள் அழிந்து ஒழிந்து போம்; போகவே இலங்கை வேந்தன் யாதொரு பகையுமின்றிச் சீதையோடு இன்பமாய் உவந்து வாழுவான் என்பான் காதல்நோய்போக்குவன் என்றான்.

நல்ல நீதிமானாய் நிலவி நின்ற கும்பகருணன் இங்கே இப்படித் தீதுபடியப் பேசி யிருப்பது சிந்தை வெகுண்டு நிற்கும் சீற்றத்தாலேயாம். கோபம் மூண்டு கொதித்த பொழுது எவனும் மதிகேடனாய் மருண்டு வாய்க்கு வந்தபடி பேச நேர்கின்றான். போரில் மூண்டபின் அவன் வீர வெறி மண்டி நிற்கின்றான் ஆதலால் வாய்மொழிகள் ஆரவாரமாய் அடல்கொண்டு வருகின்றன. உற்ற காரியத்தில் வெற்றி ஒன்றையே கருதி ஊக்கி நிற்கின்றான். அவ் ஊக்கத்தால் உரைகள் மேல் நோக்கி வருகின்றன. வீரவெற்றியை விழைந்துள்ளமை விளங்கிநின்றது.

நேர்ந்த சத்துரு எப்படியும் நிலைகுலைந்து தாழும்படி பகைமையாளர் இகல் மீதூர்ந்து பேசுவர் என்பதை அவன் பேச்சு இங்கே தொகை வகையாய்த் தொடர்ந்து உணர்த்தி நிற்கிறது. இவ்வாறு பேசி வந்தவன் முடிவில் நேரே வீரவாதம் கூறினான்.

குரங்கை யான் பிணித்த பிணி கோடிவீடு எனின்
சீதையும் பெயர்ந்தனள் சிறை நின்று.

கும்பகருணன் இறுதியில் இவ்வாறு உறுதி கூறியிருக்கிறான்.

"ஏ இராமா! இதோ என் கையில் அகப்பட்டுச் செத்துக் கொண்டிருக்கிற இந்தக் குரங்கை நீ மீட்டி விடுவாயானால் சிறந்த வெற்றி வீரனே யாவாய்! உலகம் புகழும் உயர்ந்த மதிப்பு உனக்குத் தனி உரிமையாம்; சீதையும் சிறையிலிருந்து மீண்டவளே ஆவள்; உனது அருந்திறலாண்மையையும் பெரும் போர் வீரத்தையும் எங்கே காட்டு பார்ப்போம்!" என்று இங்ஙனம் அவன் வீரச் செருக்கோடு ஆரவாரமாய்ப் பேசவே இவ் வீர மூர்த்தி குறுமுறுவல் கொண்டு மறுமொழி கூறினான். வென்றி வீரன் உரைத்த வீரமொழி என்றும் எவரும் வியந்து சிந்தித்து உவந்து கொள்ள வந்தது.

என்றலும் முறுவலித்து இராமன் யானுடை
இன்துணை ஒருவனை எடுத்த தோளிணைக்
குன்றினை அரிந்துயான் குறைக்கிலேன் எனின்
பின்றினன் உனக்குவில் பிடிக்கிலேன் என்றான்.

கும்பகருணன் முன்னே கூறியதற்கு இவ் வீரியன் இன்னவாறு மாறு கூறியிருக்கிறான். "என்னுடைய அருமைத் துணைவனைக் கடுமையாய்ப் பிணித்துள்ள தோள்களைத் துணித்துத்

தரையில் வீழ்த்தவில்லையானல் உனக்கு நான் தோற்றவனேயாவன்; இனிமேல் யாண்டும் நான் வில்லே பிடிப்பதில்லை'' என்று இவ் வில் வீரன் சொல்லியுள்ள இதில் உள்ளத்திறலும் உறுதி நிலையும் ஒளி செய்து நிற்கின்றன. உரைகளில் பொதிந்துள்ள வீரச் சுவைகள் வியந்து நுகர வுரியன.

எவர்க்கும் அச்சம் தோன்றும்படி அவன் ஆங்காரமாய்ப் பேசியதைக் கேட்ட போது இவன் புன்னகை செய்துள்ளான். அந் நிலைமையை முறுவலித்து என்னும் குறிப்பால் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம். இந்த இளஞ்சிரிப்பு இகழ்ச்சிக் குறிப்போடு வீரச் செருக்கையும் நேரே விளக்கி நிற்கிறது.

தான் விரைந்து இறந்துபட நேர்ந்து நின்றும் இவ்வளவு தைரியமாய்ப் பேசுகின்றானே! என்ற வியப்பு நகைப்போடு வெளி வந்துள்ளது. அந்த நகை அதிசய முடையது.

தன் கையில் அகப்பட்டவனை மீட்ட முடியாது என்று அவன் வீம்பு காட்டி நீட்டினன். பிடிபட்ட துணைவனை மீட்டுவதோடு பிடித்த தோள்களையும் துணித்து வீழ்த்துவேன் என்று இவன் வீரசபதம் கூறினன். கூற்றின் ஏற்றம் கூர்ந்து காண்க.

இவ்வாறு வீரவாதங்கள் நடந்து கொண்டிருக்கும்போதே கையில் சிக்கியிருந்த சுக்கிரீவனைக் கசக்கிக் கொல்ல அவன் கடுத்து முயன்றான்; அந்தக் கொடுமையை உணர்ந்த இவன் கடுமையாக அம்பு தொடுத்தான். ஏவிய பாணங்கள் அவனுடைய நெற்றியில் பாய்ந்து வேகமாய் ஊடுருவிப் போயின. போகவே இரத்தங்கள் பொங்கிப் பாய்ந்து முகத்தில் வழிந்து ஓடியன. குருதி நீர் பெருகி மார்பில் வழியவே பிணித்திருந்த கைகள் சிறிது தளர்ந்தன. தளரவே மயங்கியிருந்த சுக்கிரீவன் மயக்கம் தெளிந்து மெல்ல விழித்தான். அயலே நோக்கினன்; இராமனைக் கண்டான்; உள்ளம் நாணினன்; மேலே துள்ளி எழுந்து கும்பகருணன் மூக்கை வாயால் கவ்வினன்; காதுகள் இரண்டையும் கைகளால் பற்றினன்; விரைந்து கடித்து வெகுண்டு பறித்து லகுபாய்ந்து தாவி வந்து சேனைத் திரளுள் சேர்ந்தான். சுக்கிரீவன் மீண்டு வந்ததைக் கண்டதும் உக்கிரவீரமாய் உருத்து நின்றவன் உள்ளத்தே பேரானந்தம் அடைந்தான்.

காந்திகல் அரக்கன்வெங் கரத்துள் நீங்கிய
ஏந்தலை அகமகிழ்ந்து எய்த நோக்கிய
வேந்தனும் சானகி இலங்கை வெஞ்சிறை
போந்தனள் ஆமெனப் பொருமல் நீங்கினன்.

மாண்டுபட நேர்ந்தவன் மீண்டு வந்தபோது கோதண்ட வீரன் உள்ளம் உவந்து நின்ற காட்சியை இது உணர்த்தியுள்ளது. கும்பகருணனுடைய கையிலிருந்து நழுவிச் சுக்கிரீவன் பிழைத்து வந்தது இராவணன் வைத்த சிறையிலிருந்து சீதை மீண்டு வந்தது போலவே கருதி மகிழ்ந்துள்ளான். அந்த வானர வேந்தன்பால் இந்த மான வீரன் கொண்டுள்ள அன்புரிமையும் நண்பு நிலையும் அறியலாகும். இவனை என் கையிலிருந்து மீட்டி விட்டால் சீதையையும் சிறையிலிருந்து மீட்டியபடியாம் எனக் கும்பகருணன் முன்பு சபதம் கூறியதும் அதற்கு இசைய மீட்சியைக் கவி காட்சிப்படுத்தி யிருப்பதும் கருதியுணர வுரியது.

சானகி போந்தனள் ஆம் எனப் பொருமல் நீங்கினன் என்றது சுக்கிரீவனை இழந்து நின்றபோது இராமன் தவித்துள்ள தவிப்பும், அவன் வந்து சேர்ந்த பொழுது நேர்ந்த மகிழ்ச்சியும் ஒருங்கே தெரியவந்தன. உரியவனிடம் அரியபிரியம் பெருகியுளது.

நெற்றியில் அம்புகள் பாய்ந்ததனால் மயங்கி நின்ற கும்பகருணன் பின்பு மூக்கும் காதும் பறிபோனதை அறிந்ததும் பெரிதும் வருந்தி வீர வெறி மண்டி ஆரவாரங்கள் செய்து கொடிய வாளும் நெடிய கேடகமும் கையில் கொண்டு வானர சேனைகளை நாசம் செய்தான். படைகள் படியில் சாய்ந்தன.

அங்கபங்கமானதால் அவமானமடைந்து ஆங்காரத்தோடு அடலாண்மை செய்கின்றான் என்று சிறிது பரிவோடு இராமன் பொறுத்து நின்றான். அந்த நிலையில் குரங்குகள் பாழாயழிந்தன. அவனுடைய வாளாடலால் மாண்டு மடிந்த படைகள் நீண்டு குவிந்தன. சாம்பவன் விரைந்து வந்து இராமனை வணங்கி "அந்தோ அண்ணலே! இவ்வாறு பேசாது நின்றால் நம் படைகள் யாவும் நாசமாய் விடுமே! நீசன் வாளால் நெடுங்கொலைகள் விழுகின்றனவே! விரைந்து தடுத்து அவனை அழித்தருளுங்கள்" என்று தொடுத்து மொழிந்து அடுத்துத் தெளித்து நின்றான்.

உக்கிர வீரமாய்க் கொதித்து அமராடி வருகிற அவனைத் தடுத்து இம் மான வீரன் கடுத்து அம்புகள் தொடுத்தான். அவனுடைய கையில் இருந்த வாளும் கேடகமும் துண்டங்களாய்த் தரையில் வீழ்ந்தன. அவன் வேறு ஒரு வீர வேலை விரைந்து எடுத்தான்; எடுத்த அதையும் இவன் துணித்து வீழ்த்தினன்.

அரிய படைகள் அடைந்தன.

கும்பகருணன் கொதித்து ஆயுதங்களை எடுக்குந்தோறும் இராமன் அறுத்து வீழ்த்தி வந்தான்; அவ்வமையம் இலங்கையிலிருந்து இராவணன் ஏவிய சேனைகள் கடல்போல் பொங்கி அடலோடு புகுந்தன. ஆரவாரங்கள் யாண்டும் நீண்டன.

சூழிவெங் கடகரி புரவி தூண்டுமால்
ஆழியந் தேரொடு மிடைந்த ஆர்கலி
ஏழிருகோடி வந்து எய்திற்று என்பரால்
ஊழியின் ஒருவனும் எதிர்சென்று ஊன்றினன்.

அதுபொழுது புதிதாய் வந்து புகுந்த சேனைகள் பதினாலு கோடிகள் என்றதனல் அவற்றின் பெருக்கும் செருக்கும் அறிய நின்றன. இவ்வாறு மூண்ட சேனைகளைக் கண்டதும் இந்த ஆண்டகையின் கோதண்டம் வேண்டிய வேலைகளை விரைந்து செய்தது. பாணங்கள் பாய்ந்த திசைகளிலெல்லாம் நால்வகைச் சேனைகளும் பாழாய் அழிந்து குவிந்தன. யானைகள் குதிரைகள் தேர்கள் பதாதிகள் யாவும் யாண்டும் அழிவடைந்து விழுந்தன; எங்கும் பிணமலைகள் எழுந்தன; உதிரவெள்ளங்கள் பெருகி ஓடின. ஏந்திய ஒரு வில்லோடு தன்னம் தனியே நின்று வந்த சேனைகளையெல்லாம் சின்ன பின்னங்கள் செய்து இவ்வீரன் சிதைத்து அழித்தது அதிசய வியப்பாயிருந்தது. மூண்டு திரண்டு வந்த படைகள் மாண்டு புரண்டு விழவே கும்பகருணன் சினமும் சீற்றமும் குன்றி மனம் மருண்டு நின்றான். அங்ஙனம் நின்றவனை இவ் வென்றி வீரன் விழைந்து நோக்கினன்; நெஞ்சம்நெகிழ்து இரங்கியது; ஆதரவோடு சில உரைகளாடினன்.

இராமன் வினவியது.

ஏதியோடெதிர் பெருந்துணை இழந்தனை எதிர்ஒரு தனிநின்றாய்
நீதியோனுடன் பிறந்தனை ஆதலின் நின்உயிர் நினக்கு ஈவேன்

போதியோ பின்னை வருதியோ அன்றெனின் போர்புரிந்துஇப்போதே
சாதியோ? உனக்கு உறுவது சொல்லுதி சமைவுறத் தெரிந்தம்மா!(1)

இழைத்த தீவினை இற்றில தாகலின் யானுனை இளையோனால்
அழைத்த போதினும் வந்திலை அந்தகன் ஆணையின் வழி நின்றாய்!
பிழைத்த தாலுனக்கு அருந்திரு நாளொடு பெருந்துயில் நெடுங்காலம்
இழைத்து வீடுவ தாயினை என்னுனக்கு உறுவது ஒன்றுரை என்றான்.

போர்க்களத்தில் தனித்து நிற்கும் கும்பகருணனை நோக்கி இராமன் இப்படிப் பேசியிருக்கிறான். நீதியும் இரக்கமும் பேச்சில் நிலவி நிற்கின்றன. வீரன் கருணையை வியந்து காண்கிறோம்.

"கும்பகருண! உனக்குத் துணையாய் வந்த படைகளையெல்லாம் இழந்தனை; தனியே நிற்கின்றாய்! நீதிமானான வீடணனோடு பிறந்தவன் ஆதலால் உன்னைக் கொன்று வீழ்த்த எனக்கு மனம் வரவில்லை; உன் உயிரை உனக்கே உரிமையாக அருளியுள்ளேன்; இங்கிருந்து இலங்கைக்குப் போய் விடுகின்றாயா? போய் உடம்பைத் தேற்றிக் கொண்டு மீண்டும் ஈண்டு போருக்கு வருகின்றாயா? அல்லது இப்பொழுதே போர் புரிந்து இங்கேயே செத்துப் போகின்றாயா? உன் கருத்து என்ன? உறுதியாகக் கருதுவதை விரைந்து சொல்! உன் தம்பியை முன்னமே அனுப்பி அன்புடன் உன்னைச் சமாதானமாக அழைத்தேன்; நீ வரவில்லை; சாக நேர்ந்துள்ளமையால் உனக்கு யூக விவேகங்கள் நேராமல் போயின; உனது வாழ்வு பரிதாபமுடையது; என்றும் நன்றாய் உறங்கிக் கழித்தாய்! இன்று இப்படிவீணே இறக்க நேர்ந்தாய்! உன்மேல் இரக்கம் மீதூர்ந்து என் உள்ளம் பரிவு கொண்டுள்ளது; நேரே பொருது சாகின்றாயா? அல்லது என்னோடு சேர்ந்து வாழ்கின்றாயா? உன் விருப்பம் என்ன? உண்மையைத் தெளிவாகச் சொல்லிவிடு!" என இன்னவாறு இவ்வில் வீரன் வினவியிருக்கிறான். வீடணனோடு உடன்பிறந்த தமையன் என்ற அந்த உரிமை ஒன்றே இராமனுக்குப் பெரும் பரிவை நல்கியுள்ளது என்று தெரிகின்றது. உரிமையாளன் தொடர்பு உறவுமேயது.

நின் உயிர் நினக்கு ஈவேன் என்றது இருவர் நிலையும் ஒருங்கே தெரிய வந்தது. கும்பகருணன் சாவின் வாயில் நிற்கிறான்; அவன் உயிர் இராமன் கையில் இருக்கிறது என்பதை ஈவேன் என்ற சொல் ஈண்டு நன்கு தெளிவாக்கி நயம் சுரந்து நின்றது.

"நாளை வா என நல்கினன்" * என முதல் நாள் போரில் இராவணனை நோக்கி இராமன் கூறியுள்ளதும் ஈண்டு இணைத்து எண்ணத் தக்கது.

போர் முகத்தில் இரங்கி நின்று இராமன் அபிமானமாய்க் கூறியது கும்பகருணனுக்குப் பெரிய அவமானமா யிருந்தது. அவன் பதில் உரைத்த மொழிகள் அதிசய கம்பீரங்களாய் வெளி வந்தன.

மற்றெலாம் நிற்க வாசியும் மானமும் மறத்துறை வழுவாத
கொற்ற நீதியும் குலமுதல் தருமமும் என்றிவை குடியாகப்
பெற்ற நுங்களால் எங்களைப் பிரிந்துதன் பெருஞ்செவி மூக்கோடும்
அற்ற எங்கைபோல என்முகம் காட்டிநின்று ஆற்றலன் உயிரம்மா!

நோக்கிழந்தனர் வானவர் எங்களால் அவ்வகை நிலைநோக்கித்
தாக்கணங்கனை யவள்பிறர் மனைஎனத் தடுத்தனன் தக்கோர்முன்
வாக்கிழந்ததென்று அயர்வுறுவேன் செவி தன்னொடு மாற்றாரால்
மூக்கிழந்தபின் மீளல் என்றால் அது முடியுமோ முடியாதாய்! (2)

உங்கள் தோள்தலை வாள்கொடு துணித்துயிர் குடித்து எம்முன் உவந் [தெய்த
நங்கை நன்னலங் கொடுக்கிய வந்தநான் வானவர் நகை செய்யச்
செங்கை தாங்கிய சிரத்தொடும் கண்ணினீர் குருதியி னொடுந் தேக்கி
எங்கைபோல்எடுத்து அழைத்துநான்வீழ்வனோ இராவணன் எதிரம்மா

ஒருத்தன்நீ தனி உலகொரு மூன்றிற்கும் ஆயினும் பழியோரும்
கருத்தினல் வரும் சேவகன் அல்லையோ சேவகர் கடன் ஓராய்
செருத்திண் வாளினல்திறத்திறன் உங்களை அமர்த்துறைசிரங்கொய்து
பொருத்தினல் அது பொருந்துமோ தக்கது புகன்றிலைபோல்என்றான்.

இராமன் முன்னம் கூறியதற்குக் கும்பகருணன் இன்னவாறு எதிர்வாதம் கூறியிருக்கிறான். இந்த உரைகளால் அவனுடைய உள்ளத் திறலும் குலமானமும் தலைமைத் தன்மையும் நிலை தெரியலாகும்.

"இராமா! தரும நீதியும் வீரத்திறலும் என்றும் நிலையாகப் பெற்ற குலநலமுடைய நீ போர் முகத்தில் என்னை நோக்கிப் பேசிய பேச்சுகள் பிழைபாடுடையன. தேவர் யாவரும் எங்கள் எதிரே தலைவணங்கித் தாழ்ந்து ஏவல் செய்து வரப் பெருமித நிலையில் நாங்கள் வாழ்ந்து வந்துள்ளோம். அத்தகைய உயர்குடியில் தோன்றிய அரசன் தவறு செய்ய நேர்ந்தான். பிறர் மனைவி

* இந் நூல் பக்கம் 3926, வரி 23 பார்க்க.

யை விரும்புவது பிழை என்று அண்ணனுக்கு அறிவு கூறித் தடுத்தேன்; அவன் யாதும் கேட்கவில்லை; அதனால் உலக அறிஞர் முன்னிலையில் வாய் பேச நீதியில்லாமல் வாக்கு இழந்து நின்றேன்; இன்று இங்கே மூக்கும் காதும் இழந்தேன். கழிபேரிழிவாய் இவ்வாறு பழி அடைந்துள்ள என்னை உன்னோடு சேர்ந்து உயிர் வாழலாம் என்று நீ உரைத்தது எனக்கு வியப்பாயுள்ளது. எனது தங்கை முன்பு அடைந்த அங்கபங்கமான அவமானத்தை ஈண்டு நான் எய்தியுள்ளேன்; இனி வேண்டிய வீரத் திறல்களை விளைத்து மாண்டு படுவதே அன்றி மீண்டு உயிர் வாழ அணுவளவும் கருதேன்; மகா வீரனான நீ எனது வீர நீர்மையைக் கூர்மையோடு உணர்ந்து கொள்ள வேண்டும்; போரில் சாவதே வீரர்க்குப் பேரின்ப வீடாம். அந்த அரிய பேற்றை இன்று உரிமையாக அடைய நேர்ந்துள்ளேன்; அதற்கு மாறாக வேறு கூறுவது மடமையாம்; என்னுடைய கடமையைச் செய்தே சாவேன்'' என இவ்வாறு கும்பகருணன் குறித்து நின்றான்.

அவள் பிறர்மனை எனத் தடுத்தனன் என்றது சீதையை இராவணன் விரும்பி நின்றது பெரும்பழி எனப் புத்தி கூறி முன்னம் இவன் தடுத்துள்ளதை உய்த்துணரச் செய்தது. தனது தமையன் செய்த தீமையே தன் குடிக்கும் குலத்துக்கும் தனக்கும் ஒருங்கே அழிவாய் மூண்டது என உள்ளம் உளைந்து யாண்டும் உயிர் துடித்து வருகின்றவன் ஈண்டும் அதனைத் துயரத் துடிப்போடு சுட்டி நின்றான். உள்ள நிலை உய்த்துணரத்தக்கது.

தக்கோர்முன் வாக்கு இழந்தது என்று அயர்வுறுவேன்.

கும்பகருணன் அடைந்துள்ள மன வேதனைகளும் சஞ்சலங்களும் இதனால் அறிய வந்தன. தக்கோர் என்றது தரும நீதிகளில் தலை சிறந்து தகுதி வாய்ந்துள்ள மேலோர்களை. நல்லோர் எதிரே பேசக் கூசி உள்ளம் நாணித் தலை குனிந்து நிற்கும்படி அண்ணன் செய்துள்ள அநியாயம் அவலப்படுத்தியுள்ளது என இவன் கவலையாய்த் துடித்திருப்பது இங்கே காட்சிக்கு வந்திருக்கிறது. நேர்மையான வீரன் நெஞ்சம் நொந்து நிற்கிறான்.

பழி இழிவுகள் இல்லாதவரே எவ்வழியும் தைரியமாய்த் தலை நிமிர்ந்து வாழ முடியும்; பிழையுடையவர் விழுமியோர்

எதிரே தலைமையாளராய் நிற்க முடியாது. அந்தத் தரும நிலைமையும் மனித இயல்பும் ஈண்டு மருமமாய்த் தெரிய வந்தன.

தக்கோர் முன் வாய் பேச நீதியின்றி வாக்கு இழந்து நின்ற நான் இன்று மூக்கையும், செவிகளையும் இழந்தேன் எனத் தனக்கு நேர்ந்துள்ள இழவுகளையும் இழிவுகளையும் இவ்வாறு விழி தெரிய விளக்கினான். இவ் வீரனது நோக்கும் போக்கும் நுனித்துணர வுரியன.

போரில் மெலிந்து தளர்ந்து நின்ற தன்னைத் தன்னோடு வந்து சேர்ந்து வாழும்படி இராமன் நேரில் அழைத்தது தனக்குப் பெரிய அவமானமாயிருந்தமையால் அவ் வீரன் அதனை மறுத்துத் தனது நிலைமைகளை யெல்லாம் தலைமையாக எடுத்து உரைத்து நேரே அடலாண்மை புரிவதையே அவாவி நின்றான்.

## கடும் போர் புரிந்தது.

இவ்வாறு பேசி வந்தவன் பின்பு வீராவேசம் கொண்டு ஆயுதங்களை எடுத்து வீசிக் கடுத்துப் போராடினான். வாரி வீசிய படைக்கலன்களையெல்லாம் தடுத்துச் சிதைத்து இராமன் அடலாண்மை புரிந்தான். வர பலத்தால் கிடைத்த ஓர் சூலத்தை எடுத்து மந்திர முறையோடு அவன் குறி வைத்து ஏவினான். இராமபாணத்தால் பல துண்டங்களாய் அது கீழே உதிர்ந்தது. அவன் சீறிச் சினந்து ஒரு தண்டாயுதத்தை எடுத்து எறிந்தான். அதையும் துண்டித்து வீழ்த்திக் கும்பகருணன் மார்பில் நான்கு அம்புகளைக் கடுத்துத் தொடுத்தான். அவை ஊடுருவிச் செல்லாமல் மாறிக் கீழே வீழ்ந்தன. இராமன் திகைத்தான். தான் ஏவிய பாணங்கள் ஊண்டு செல்லாமல் மீண்டு வருவதைக் கண்டதும் இவ் வீரன் ஊன்றி நோக்கினான். சிவபெருமானிடமிருந்து உரிமையோடு பெற்ற அரிய கவசத்தைத் தன் மார்பில் கும்பகருணன் அணிந்திருந்தான் ஆதலால் அதனைக் கடந்து செல்ல மாட்டாமல் அம்புகள் மடங்கி வந்தன என்று தெரிந்தான்; விரைந்து சிவாத்திரத்தை எடுத்துத் தொடுத்தான்; அந்தக் கவசத்தை உடைத்தெறிந்து போயது. போகவே அவன் வேகமாய்க் கொதித்துத் தண்டப்போர் புரிந்தான்; அது துண்டமாய் விழுந்தது; விழவே அரிய தவத்தால் பிரமனிடமிருந்து பெற்ற

நெடிய வாளை எடுத்துக் கடுமையாய்ப் போராடினான். வானரப் படைகள் பல அழிந்து பட்டன. உக்கிர வீரமாய்க் கொதித்து அவன் அமராடி அழித்து வருவதை நோக்கி இராமன் கடுத்தான். வாள் எடுத்த வலக்கை அடியோடு அற்று விழும்படி ஓர் அம்பு தொடுத்தான். ஊழித்தீ எனப் பகழி உருத்துப் பாயவே கை துண்டமாய் வாளோடு கீழே வீழ்ந்தது. வீழ்ந்த அந்தக் கையை இடக்கரத்தால் எடுத்துக் கொண்டு படைகளை அடித்தான். இடி வீழ்ந்தது போன்ற அந்த அடிகளால் குரங்குகள் பல மடிந்து வீழ்ந்தன. அவனுடைய அடலாண்மையையும் அருந்திறலையும் வியந்து நின்ற இராமன் அந்த இடது கையை

அலக்கண் உற்றது தீவினை நல்வினை
ஆர்த்தெழுந்தது வேர்த்துக்
கலக்கம் உற்றனர் இராக்கதர் காலவெங்
கருங்கடல் திரைபோலும்
வலக்கை அற்றது வாள்ஒடும் கோளுடை
வானமா மதி போலும்
இலக்கை அற்றதுஅவ் இலங்கைக்கும் இராவணன்
தனக்கும் என்று எழுந்தோடி. (1)

மற்றும் வீரர்கள் உளரெனற்கு எளிதரோ
மறத்தொழில் இவன் மாடு
பெற்று நீங்கின தாமெனின் அல்லது
பேரெழில் தோளோடும்
அற்று வீழ்ந்தகை அருதவெங் கையினால்
எடுத்தவன் ஆர்த்தோடி
எற்ற வீழ்ந்தன எயிறிளித்து ஓடின
வானரக் குலம் எல்லாம். (2)

வள்ளல் காத்துடன் நிற்கவும் வானரத்
தானையை மறக் கூற்றம்
கொள்ளை கொண்டிடப் பண்டையின் மும்மடி
குமைக்கின்ற குறிநோக்கி
வெள்ளம் இன்றொடும் வீழ்ந்துறும் என்பதோர்
விம்மலுற் றுயிர்வெம்ப

உள்ள கையினும் மற்றவெங் கரத்தையே
அஞ்சின உலகெல்லாம். (3)

ஈற்றுக் கையையும் இக்கணத்து அரிதியென்று
இமையவர் தொழுது ஏத்தத்
தோற்றுக் கையகன்று ஒழிந்தவன் நாளவை
தொலையவும் தோன்றாத
கூற்றுக்கு ஐயமும் அச்சமும் கெடநெடுங்
கொற்றவன் கொலை அம்பால்
வேற்றுக் கையையும் வேலையில் இட்டனன்
வேறும் ஓர் அணையாக. (4)

கும்பகருணன் வீர வெறி மண்டிப் போராடி வானர சேனைகளைக் கொன்று குவித்து வருங்கால் அவனுடைய வலக் கையையும் இடக்கையையும் அப்புகளால் துணித்து வீழ்த்தி இராமன் நிற்கும் கம்பீர நிலையை இவை காட்டியுள்ளன. அடலாண்மையுடன் அவன் ஆற்றிய போர் அதிசய நிலையை விளைத்துள்ளது. கோதண்ட வீரனும் அவனது வீரப் பிரதாபத்தை வியந்து புகழ்ந்து நின்றான். வாள் ஒடு வலக்கை கீழே விழுந்து துடித்த பொழுது தீவினையும் துடித்திருக்கிறது. அந்த வீரக்கை துணிபட்டு வீழவே அரக்க வீரர்கள் யாவரும் மறுகி ஓடியிருக்கின்றனர். கை அறுபட்டுத் தரையில் வீழ்ந்ததைக் கண்டதும் தேவரும் அதிசயித்து நின்றனர். இலங்கை அடியோடு அழிந்தது; இராவணன் ஒழிந்தான்; என்றே அவர் உவந்து கூடி ஓலமிட்டுள்ளனர். காலனும் திகைத்துக் கருதி நோக்கி நின்றான்.

வாளோடு துணிபட்ட கையை இடது கையால் எடுத்துக் கொண்டு வானரங்களை அடித்து அவன் வதைத்திருப்பது அதிசய வியப்பாய் நின்றது. தேவர் முதல் யாவரும் கண்டு திகைத்து அந்த வீரத்திறலை வியந்து பாராட்டியுள்ளனர்.

மறத்தொழில் இவன்மாடு பெற்று நீங்கினது.

போர்முகத்தில் யாதும் அஞ்சாமல், எவ்வழியும் தளராமல் வெவ்வலியோடு வீறு கொண்டு புரியும் வீரச்செயலை இவனிடமிருந்தே வீர வுலகம் ஆசையுடன் கற்று யாசகமாய்ப் பெற்றுள்ளது என விண்ணும் மண்ணும் வியந்து எண்ணிக் கும்பகருண

னை இவ்வண்ணம் புகழ்ந்து கொண்டாடி நின்றன என்றால் அன்று அவன் அங்கே போராடி நின்ற நிலையை யார் அளந்து சொல்ல வல்லார்? சுத்த வீரத்தின் உத்தம நிலைக்கு அவன் ஒளி புரிந்து வழி திறந்து எழில் சுரந்துள்ளமை உணர வந்தது.

இராமன் உக்கிர வீரமாய்ப் போராடி நின்றும் இவன் எதிரேயே வானர சேனைகளை அவன் நாசம் செய்திருக்கிறான். ஆலை வாயில் அகப்பட்ட கரும்புகள் போல் அவன் எதிர்ப்பட்ட குரங்குகள் சின்ன பின்னங்களாய்ச் சிதைந்து இறந்து பட்டுள்ளன. அழிவு நிலை அங்கே நெடிது நீண்டு நின்றது.

வள்ளல் காத்து நிற்கவும் வானர வெள்ளம் இன்றோடு வீந்தறும் என்னும்படி அன்று மாய்ந்திருத்தலால் அவன் காய்ந்து கொன்றிருக்கும் கடு வேகங்கள் காணலாகும். இவ்வாறு எவ்வழியும் வெவ்வலியாளனைப் பொருது வந்த அவன் கைகள் இரண்டையும் இழந்து விடவே கண்கலங்கி நின்றான். கடுஞ் சினம் மூண்டு அடுந்திறலோடு குரங்குகள் மேல் தாவித் தாவி மிதித்துக் கொன்றான். சூலம் வேல் வாள் முதலிய ஆயுதங்களும் இன்றிக் கைகளும் இழந்து பரிதாப நிலையில் நின்றும் வீரத்திறல் யாதும் குன்றாமல் பாய்ந்து குதித்து யாண்டும் மிதித்து வதைத்து வானரங்களை அவன் அழித்து வருவதை நோக்கி இராமன் கொதித்தான். எதிரியின் நிலைமையை நோக்கி உள்ளம் இரங்கி நின்றாலும் அவன் கொன்று வருகிற கொலை நிலைகள் இவ் வென்றி வீரனுக்கு வெகுளியை மூட்டின. மூட்டவே வில்லில் பூட்டியிருந்த அம்பை வலது காலை நோக்கி நீட்டி விடுத்தான். அது கடிது பாய்ந்து காலைத் துணித்துப் போயது. அடித் தொடையிலிருந்து அடியோடு அற்று வீழவே உதிரம் நெடிது பெருகி ஓடியது. மூதிர் வேகம் கடிது நீடியது.

வலக்கால் அற்று வீழவும் நிலத்தில் ஊன்றிநின்ற இடக்கால் ஒன்றினாலேயே யாதும் நிலை குலையாமல் அவன் நின்றிருந்த காட்சி அரிய வென்றி வீரமாய் விளங்கி நின்றது. அந்த ஒற்றைக் காலினாலேயே குந்திக் குந்திப் பாய்ந்து குதித்து வானரங்களைக் கொன்று குவித்தான். ஒரு நிமிடத்தில் அவ் ஒரு கால் செய்த வேலையைப் பல காலர்கள் கூடிப் பல காலமும் செய்தாலும் செய்ய முடியா என வையமும் வானமும் வாய் திறந்து

அலறின. உரலுள் அகப்பட்டு உலக்கையால் இடிபடுகின்ற புல்லிய பொருள்கள் போல் அவன் காலில் அகப்பட்ட குரங்குகள் கடுந் துயரங்களை அடைந்து செத்தன. அவனுடைய அடுந்திறலாண்மைகள் யாவர்க்கும் நெடுந்திகில்களை விளைத்தன. இராமனும் நெஞ்சம் திகைத்து நெடிது வியந்தான். கடிது ஒரு பகழியைத் தொடுத்து இடது காலையும் துணித்தான். அந்தக் கால் அற்று விழவே நெடிய தண்டம் போல் அவன் தரையில் விழுந்தான். விழுந்தவன் உருண்டும் புரண்டும் ஊதியும் கடுத்தும் உருத்தும் கொதித்தும் ஆங்காரமாய் அடலாண்மைகள் புரிந்தான். அவனது அருந்திறல்களையும் அதிசய நிலைகளையும் நோக்கி வியந்து இராமனும் யாதொன்றும் செய்யாமல் மெய்மறந்து அயர்ந்து நின்றான். வீர வில்லி எதிரே கோரக் கொலையில் நேர்ந்துள்ளவனது தீரத்தைநோக்கி யாவரும் வியந்து மறுகிநின்றனர்.

கையிரண்டொடு கால்களும் துணிந்தன கருவரைபொருவும்தன்
மெய்யிரண்டுநூ றுயிரம் பகழியால் வெரிநுறத் தொளைபோன
செய்ய கண்பொழி தீச்சிகை இருமடி சிறந்தது தெழிப்போடும்
வையம் வானிடை இடியினும் பெருத்தது வளர்ந்தது பெருஞ்
[சீற்றம் (1)

பாதம்கைகளோடுஇழந்தனன்படியிடைஇருந்துதன்பகுவாயால்
காதம் நீளிய மலைகளைக் கடித்திறுத்து எடுத்துவெங் கனல்
[பொங்கி
மீதுமீதுதன் அகத்தெழு காற்றினால் விசைகொடு திசைசெல்ல
ஊதவூதப்பட்டு உலந்தன வானரம் உருமின்வீழ் உயிர்என்ன.

தீயினால்செய்த கண்ணுடை யான்எழுஞ் சிகையினால் திசைதீய
வேயினால்திணி வெற்பொன்று நாவினால் விசும்புற வளைத்து
[ஏந்திப்
பேயின்ஆர்ப்புடைப் பெருங்களம் இரிந்தெழப் பிலம்திறந்தது
[போலும்
வாயினால்செல வீசினன் வள்ளலும் மலர்க்கரம் விதிர்ப்புற்றான்.

மூண்டு பொருத கும்பகருணன் இராம பாணங்களால் அடிபட்டு உறுப்புக்களை இழந்து கீழே உருண்டு கிடக்கும் பரிதாப நிலையை இங்கே பார்த்து வருந்துகிறோம். யாதும் தளராத அருந்திறலாண்மையும் அடுந்தொழில் வேகமும் நெடுந்திகில்களாய் நீண்டு நேரே அதிசய வியப்புகளை விளைத்துள்ளன.

கைகள் அழிந்தன; கால்கள் ஒழிந்தன; பல்லாயிரம் பாணங்கள் உடலை ஊடுருவிப் போயுள்ளன; அந்த நிலையில் தரையில் உருண்டு கிடக்கிறான்; உள்ளக் கொதிப்பு ஓங்கியுள்ளது; கண்கள் தீப்புகைகளைக் கக்குகின்றன; அதட்டி வெருட்டுகிற ஆங்கார ஒலி இடி முழக்கம் போல் வாயிலிருந்து எழுகின்றது; தரையோடு தலையைச் சாய்த்துக் கொண்டு இரண களத்தில் சிதறிக் கிடக்கிற தண்டங்களையும் பிண்டிபாலங்களையும் வாயால் ஊதுகிறான்; அவை பறந்து பாய்கின்றன; அவற்றால் வானரங்கள் இறந்து படுகின்றன. பார்வையாலும் மூச்சாலும் வாயின் ஆர்ப்பாலும் பயங்கரமான சாவுகள் யாண்டும் நீண்டு நேர்ந்துள்ளன. இது எவ்வளவு வியப்பு! எத்துணை அதிசயம்!

அதிசய வீரர் எவரும் துதி செய்யும்படியான வீரக்காட்சியைக் கவி ஈண்டு நன்கு விளக்கிக் காட்டியிருக்கிறார். சுத்த வீரத்தின் அற்புத நிலைகள் வியப்பையும் விம்மிதத்தையும் விளைத்து நிற்கின்றன. வீரப்பாடு வியன்பாடாய் விளங்கியுளது.

அதிசய வீரம்.

தலையில் ஓர் அடி வீழ்ந்தாலும், உடலில் சிறிது ஊறு நேர்ந்தாலும் மன நிலை குலைந்து மனிதன் மறுகி அயர்கின்றான். கைகளும் கால்களும் இழந்து உடல் முழுவதும் பாணங்களால் துளைபட்டு உதிரம் பெருகி ஓடவும் உள்ளம் கலங்காமல் உருத்து ஊக்கிக் கும்பகருணன் போர் முகத்தில் அடலாண்மைகள் செய்திருக்கிறான்; இந்த வீரச் செயல்கள் பேரதிசயங்களை விளைத்து நின்றமையால் தேவர் முதல் யாவரும் வியந்து புகழ்ந்தனர். கோதண்ட வீரனும் மயங்கி நின்றான்.

வள்ளலும் மலர்க்கரம் விதிர்ப்புற்றான்.

கும்பகருணன் புரிந்த வீரத்திறலைக் கண்டு இராமனும் அதிர்ச்சியடைந்துள்ளான்; அந்த உண்மையை இதனால் அறிந்து கொள்கிறோம். மெய் நடுங்கிக் கையை உதறியிருப்பது அரிய வியப்பால் விளைந்து நின்றது. விதிர்த்தல் = நடுங்கல், அசைதல். எவ்வழியும் யாதும் அஞ்சாத அருந்திறலாளனும் இங்கே நெஞ்சம் நடுங்கி வியந்திருத்தலால் உம்மை அவனது இயல்பையும் உயர்வையும் செயல் நிலையையும் உணர்த்தி நின்றது.

பொல்லாத அரக்கர் குலத்தை ஒழித்து நல்ல கருமங்களை உலகத்தில் நிலை நிறுத்த வந்துள்ளவன் இங்கே தலையான ஒரு கருமத்தைச் செய்து முடிக்கின்றான் ஆதலால் வள்ளல் எனை இராமனை ஈண்டு வரைந்து காட்டினார். போராற்றலுடைய அவனது போராற்றல்களை நோக்கி வியந்து கொண்டாலும் இவ்வள்ளலின் உள்ளம் அவன்மேல் பெரும் பரிவாய் இரங்கியே நின்றது.

## கும்பகருணன் நினைந்து நொந்தது.

பாணங்கள் ஊடுருவிப் போன புழைகளின் வழியே உதிரம் பெருகி வெளியே ஓடவே ஆற்றல்கள் தேய்ந்தன; அடலாண்மைகள் ஓய்ந்தன. தனது உடல் சிதைந்துள்ள நிலைமையைக் கண்டு உள்ளம் நாணினான். நேர்ந்துள்ள முடிவுகளையெல்லாம் எண்ணி நெடிது உளைந்தான். பிறப்பின் பாசம் பெரிதும் மறுகச் செய்தது. இறப்பினையும் மறந்து எதிர்வதை நினைந்து கவன்றான்.

ஐயன் வில்தொழிற்கு ஆயிரம் இராவணர்
அமைவிலர் அந்தோ யான்
கையும் கால்களும் இழந்தனன் வேறினி
உதவலாம் துணை காணேன்
மையல் நோய்கொடு முடிந்தவன் நாள்என்றும்
வரம்பின்றி வாழ்ந்தானுக்கு
உய்யுமாறு அரிதென்று தன் உள்ளத்தின்
உணர்ந்தொரு துயர் உற்றான்.

தன் அண்ணன் இனி வாழ முடியாது; விரைந்து அழிந்து படுவான் என இவ் வீரன் இவ் வண்ணம் எண்ணி உளைந்திருக்கிறான். இராமனுடைய வீரப் பிரதாபங்களும், பாணப் பிரயோகங்களும் பேரதிசயங்களை விளைத்திருக்கின்றன. "ஒரு இராவணன் அல்லன்; பல்லாயிரம் இராவணர்கள் பெரும் படைகளோடு ஒருங்கு திரண்டு வந்தாலும் இராமன் எதிரே சூரியனைக் கண்ட பனிபோல் வீரியம் இழந்து நாசத்தையே அடைவர்; ஐயோ! நான் என்ன செய்வேன்? கைகளும் கால்களும் இழந்து போனேனே; யாதொரு வகையிலும் உதவ முடியாதே; எனது அருமைத் தமையன் சிறுமையாய் இறந்துபடவே நேர்ந்தான்; உள்ளத்தைக் கவ்விய காமநோய் எவ்வகையிலும் விடாமல் உயிரைக் குடித்தே முடித்ததே!" என்று இன்னவாறு துயரத்துடிப்பு

களோடு தரையில் கிடந்து தளித்திருக்கிறான். சாவின் வாயில் புகுந்து உயிர் ஊசலாடிக் கொண்டிருக்கும் பொழுது உடன் பிறந்தவன்பால் படிந்த பாசத்தால் உள்ளம் பரதவித்துள்ளது.

ஐயன் வில்தொழிற்கு ஆயிரம் இராவணர் அமைவிலர்.

இராமனையும் இராவணனையும் ஒருங்கே நிறை தூக்கி நோக்கிக் கும்பகருணன் உள்ளம் உடைந்து உளைந்துள்ளதை இதனால் உணர்ந்து கொள்ளுகிறோம். ஐயன் என இராமனை இங்கே மரியாதையோடு கருதி யிருக்கிறான். அதிசயமான தெய்வீக நிலைகளை நேரே அறிந்து கொண்டான் ஆதலால் அன்பு மீதூர்ந்து பரவசமாய்ப் பேச நேர்ந்தான்.

கோதண்ட வீரன் எதிரே எவரும் எவ்வகையிலும் போராட முடியாது என்று முடிவு செய்திருக்கிறான். மூண்டு வந்துள்ள எதிரியையும் ஈண்டுள்ள எதிர்ப்பையும் இணைத்து எண்ணி ஏங்கி இணைந்திருப்பது நினைந்து சிந்திக்க வுரியது.

வெள்ளி மலையை வேரோடு பெயர்த்து எடுத்துத் தேவர் யாவரையும் வென்று பெரிய வெற்றி வீரனாய் வீறு கொண்டுள்ளவன் ஆயினும் இராமன் எதிரே அவன் நீறுபட்டழிவான் என நினைந்து வருந்தி நெடிது மறுகியுள்ளான்.

கோதண்ட வீரனோடு நேரே போராடி அவனுடைய வில் ஆற்றலையும் வீரத் திறலையும் நன்கு தெரிந்தவன் ஆதலால் அவனது அதிசய நிலையை இங்ஙனம் துதி செய்ய நேர்ந்தான்.

ஆயிரம் இராவணர்கள் ஒருங்கு கூடி ஏக காலத்தில் எதிர்த்தாலும் இராமன் எதிரே செத்து வீழ்வரே அன்றி வேறு ஒன்றும் அவரால் செய்ய முடியாது என்று உறுதி செய்து அறுதியிட்டுள்ளான். ஊழித் தீபோல் உருத்து வந்து பாய்ந்து ஊடுருவிப் போயுள்ள இராமபாணங்கள் அவனுடைய உள்ளத்தில் பெரிய திகில்களை விளைத்திருக்கின்றன. இராமனுடைய வில்லிலிருந்து வருகிற ஓர் அம்பே ஆயிரம் இராவணர்களை ஒருங்கே கொல்ல வல்லது என்று குறித்துக்கொண்டு தன்னுள்ளேயே சொல்லி யுளைந்திருப்பதை நம் உள்ளச் செவிகளால் கூர்ந்து ஓர்ந்து அவனது உள்ளத்தை நன்கு உணர்ந்து கொள்ளுகிறோம்.

அசகாய சூரன் ஆன தன்னையே சின்ன பின்னம் செய்து

சொழித்துள்ளன ஆதலால் இனி யாரையும் போரழித்துப் பேரழிக்கும் எனக் கோதண்டத்தின் கொற்றத் திறலையும் அம்புகளின் வெற்றி நிலைகளையும் வியந்து கொண்டாடி நின்றான்.

எதிரியின் ஏற்றத்தை எண்ணுந்தோறும் தன்னுடைய அண்ணனது அழிவு கண் எதிரே தோன்றிக் கடுந்துயர் விளைத்துள்ளது. தான் அவனுக்கு உதவி செய்ய முடியாதபடி உறுப்புகள் அறுப்புண்டு போயினவே என்று வெறுப்புண்டு நெருப்புண்டவன் போல் நெஞ்சம் துடித்திருக்கிறான்.

அந்தோ! யான் கையும் கால்களும் இழந்தனன்;
வேறு இனி உதவலாம் துணை காணேன்.

தமையனுக்கு உதவி செய்ய முடியாமல் ஊறு நேர்ந்ததே! என்று அவ் வீரன் பரிதபித்துள்ள பரிதாப நிலையை இதனால் அறிந்து வருந்துகிறோம். அவனுடைய உள்ளம் நொந்து உளைந்து ஏங்கியுள்ள துயரங்கள் யாவும் அந்தோ! என்ற ஒரு அவலச் சொல்லால் அறிய வந்தன. கவலைகள் நெஞ்சைக் கதுவி நிற்கின்றன. நெடிய ஆயுளுடையனாய் மூவுலகங்களையும் ஏக போகமா ஆண்டு வந்த மன்னன் மாண்டு பட மூண்டுள்ளான் என்னும் துன்பம் மீண்டும் மீண்டும் நினைவிற்கு வந்து நெஞ்சைத் துடிக்கச் செய்துள்ளது. தான் செத்தாவது அவனைச் சாகாமல் வாழச் செய்ய வேண்டும் என்று நீள நினைந்து வந்தான். தனக்கு இங்கே சாவு நேர்ந்தமையால் அவனுடைய அழிவு கழி பெருந் துயரமாய் விழி எதிரே தோன்றியது.

மையல் நோய்கோடு முடிந்தவன் என இராவணனை இப்படி வெப்போடு கருதியிருக்கிறான். காம மோகத்தாலேயே கடையாய் அழிய நேர்ந்தான் என அவனது அழிவின் மூல காரணத்தைக் குறித்து மறுகியுள்ளான். மையல் நோயைத் தானாகவே வரவழைத்துக் கொண்டு அநியாயமாய்ச் சாக நேர்ந்தானே! என்று அந்தச் சாவை நினைந்து வேகமாய் வைது இகழ்ந்திருத்தலை நுணுகி உணர்ந்து கொள்கிறோம்.

நல்ல சுத்த வீரன் ஆதலால் பிழைபாடான செயலைச் செய்து அண்ணன் அழிய நேர்ந்தது அவமானமே என்று புழுங்கியிருக்கிறான். சீதை மீது காதல் கொள்வது தீது எனப் பல முறையும் இவன் அவனுக்குப் போதனை செய்து வந்திருத்தலை இடங்கள்தோறும் முன்பு நாம் நன்கு அறிந்து வந்திருக்கிறோம்.

நல்ல குல வீரனுக்குப் பொல்லாத பழிச்சாவு மூண்டதே! என்று நீண்ட துயரம் நெஞ்சை வருந்தி யிருத்தலை உரைக் குறிப்பால் உணர்ந்து கொள்ளுகிறோம். தனது வீரக்குடி வீணே அழிய நேர்ந்ததே! என மானம் மீதூர்ந்து மறுகி யுளைந்து உருகியிருக்கிறான். அழிவு நிலை கழிபேரிரக்கமாய்ப் பெருகிவந் துள்ளது. அண்ணனை எண்ணி எண்ணி அலமந்திருக்கிறான்.

உய்யுமாறு அரிது.

என்றது இராவணன் இனிமேல் உயிர்வாழ முடியாது; செத்தே ஒழிவன் என்னும் முடிவை முடிவு செய்தபடியாம். இராமனது பேராற்றலை நேரே தெரியவே தனது குடியும் குல மும் அடியோடு அழிந்தேபோம் என்று தெளிந்துகொண்டான். அந்தத் தெளிவு உள்ளத்தை உருக்கி உயிரை வருத்தியிருக்கிறது.

தான் இறந்து போவதற்காக இவன் யாதும் வருந்தவில்லை; "அண்ணன் அழிந்து போவானே!" என்று அதனை எண்ணியே ஏங்கியிருக்கிறான். கண்ணீரும் கம்பலையும் கதுவி யுள்ளன.

இவனது பிறப்பின் பாசமும் பேரன்பும் பெருந்தகைமை யும் அதிசய நிலையில் உயர்ந்திருக்கின்றன. நேர்மையும் தீரமும் நீதியும் சீர்மையோடு செழித்துள்ளன. தமையன்பால் விடை பெற்றுப் போருக்கு வரும்பொழுது சந்தேகமாகவே சொல்லி வந்தான்: "மீள முடியாது; மாளவே நேரும்; நான் மாண்டுபட் டால் உடனே வேண்டிய சமாதானத்தை நீ விரைந்து செய்து கொள்ளவேண்டும்" என அண்ணனிடம் அறிவு கூறியே செரு முகம் வந்து புகுந்தான். இடையே இளையவன் வந்து மறுகி வேண்டியும் யாதும் மாறாமல் ஒருமுகமாய் நின்று ஊக்கி அம ராடினான். அடலாண்மைகள் அதிசய நிலைகளில் ஓங்கி நின்றன. கடல்போல் வந்திருந்த வானர சேனைகளைக் கலக்கி யழித்தான்; வானர வேந்தனை நிலை குலைத்துப் பிடித்துப் போனான்; இடை யேவந்து தடுத்து இராமன் கடுத்து அமர் புரிந்தான். அந்தக் கோதண்ட வீரனோடு நெடுநேரம் உக்கிரமாகப் போராடி னான்; முடிவில் கைகளும் கால்களும் இழந்து பரிதாபமாய்ப் பாரில் வீழ்ந்து படுதுயருழந்தான். அந்த நிலையிலும் அண்ணனை நினைந்து உள்ளம் உளைந்து உருகி மறுகிப் பரிவு கூர்ந்துள்ளான்.

## முடிவில் வேண்டியது.

இறந்துபோவான் என்று தமையனுக்காகப் பரிந்து வருந்தினவன் பின்பு அதனை அறவே மறந்துவிட்டு இளையவனை நினைந்து வருந்தி உளைந்தான். அவன்போய் அடைக்கலம் புகுந்துள்ள அமைதியை எண்ணி ஆறுதலடைந்தான். அடையினும் தனது இளவலைப் பேணி வரும்படி எதிரியிடம்முறையிட்டான்.

வில்லில் பூட்டிய அம்போடு வெற்றி நிலையில் வீர கம்பீரமாய்த் தன் எதிரே நிற்கின்ற இராமனை விரும்பிப் பார்த்தான். விரைந்து பேசினன்: "தன்பால் வந்து அடைக்கலம் புகுந்த ஒரு பறவைக்காகத் தனது உடலுயிரையும் உதவிப் பாதுகாத்தருளிய நீதி மன்னர் மரபில் வந்துள்ள ஓ வீர மூர்த்தியே! உன்னிடம் நான் ஒன்று வேண்டுகிறேன்; எனது வேண்டுகோளுக்கு இசைந்தருளவேண்டும்" என முதலில் விநயமாய் வேண்டுதல் செய்துகொண்டு உரிமையோடு உரையாடினன்.

நீதியால் வந்ததொரு நெடுந்தரும நெறியல்லால்
சாதியால் வந்தசிறு நெறிஅறியான் என்தம்பி
ஆதியாய் உனை அடைந்தான் அரசர்உருக் கொண்டமைந்த
வேதியா! இன்னும் உனக்கு அடைக்கலம்யான் வேண்டினேன்.

வெல்லுமா நினைக்கின்ற வேலரக்கன் வேரோடும்
கல்லுமா முயல்கின்றான் இவன்எனாலும் கறுவுடையான்
ஒல்லுமாறு இயலுமேல் உடன்பிறப்பின் பயன்ஓரான்
கொல்லுமால் அவன்இவனைக் குறிக்கோடி கோடாதாய்! (2)

தம்பிஎன நினைந்திரங்கித் தவிரான்அத் தகவில்லான்
நம்பிஇவன் தனைக்காணின் கொல்லும்இறை நல்கானல்
உம்பியைத்தான் உன்னைத்தான் அனுமனைத்தான் ஒருபொழுதும்
எம்பிபிரி யானாக அருளுதியான் வேண்டினேன். (3)

மூக்கிலா முகம்என்று முனிவர்களும் அமரர்களும்
நோக்குவார் நோக்காமை நுன்கணையால் என்கழுத்தை
நீக்குவாய் நீக்கியபின் நெடுந்தலையைக் கருங்கடலுள்
போக்குவாய் இதுநின்னை வேண்டுகின்ற பொருள்என்றான். (4)

(கும்பகருணன் வதைப்படலம், 356-359)

இராமனை நோக்கிக் கும்பகருணன் இறுதியில் இவ்வாறு

வேண்டியிருக்கிறான். விரும்பி வேண்டியிருப்பன அவனுடைய மானச மருமங்களை வெளியிட்டுள்ளன. அதிசய வீரனை அவன் சகோதர வாஞ்சைகளால் பெரிதும் மறுகியிருக்கிறான்.

முன்னம் அண்ணனது முடிவை எண்ணிக் கண்ணீர் அரும்பிக் கருதி உளைந்தான்; இப்பொழுது தம்பியின் நிலைமையை நினைந்து தவித்திருக்கிறான். இருவரிடமும் ஒருமுகமாய் மறுகி யுருகினாலும் இளையவன்பால் கொண்டுள்ள பாசம் மிகவும் பெருகியுளது. குடும்பத்தைவிட்டுத் தனியே பிரிந்துபோனவன்; அரச செல்வங்களை யெல்லாம் இழந்து வரிசை குலைந்து எதிரியிடம் போய் அநாதையாய்ச் சேர்ந்திருக்கிறான். அவனது போக்கும் நோக்கும் இராவணனுக்குப் பெருஞ் சீற்றத்தை விளைத்துள்ளது. அந்த விளைவுகளையெல்லாம் எண்ணி மேலே என்ன விளையுமோ? என்று வீடணன்பால் கும்பகருணன் பேரிரக்கமும் பெரும் பரிவும் கொண்டு மறுகியுள்ளான். அவ்வுண்மைகளை உரைகள் நேரே உணர்த்தியுள்ளன. தன் அருமைத்தம்பி அல்லலின்றி இருக்கவேண்டுமே! என்று இவனுடைய உள்ளம் உருகியுளது. அவ் வுண்மையை உரைகள் காட்டியுள்ளன.

புக்கு அடைந்த புறவு ஒன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெரியவன் தன் மரபில் வந்தவன் என இராமனை இங்கே அரிய கருத்தோடு குறித்து அழைத்திருக்கிறான். தன்னைத் தஞ்சம் என்று அடைந்தவர் எவராயினும் அவரை எவ்வகையாலும் கைவிடாமல் ஆதரித்துக் காத்தருளும் உத்தம குலத்தவன் ஆதலால் அடைக்கலம் புகுந்த தன் தம்பியை யாண்டும் இராமன் பாதுகாத்துக்கொள்ளுவான் என்று உறுதியாக நம்பி உள்ளம் உவந்திருந்தாலும் ஆற்றாமையால் மேலும் போற்றி வேண்டினான். "இராமநாதா! நீ தருமமூர்த்தி; பாவிகளை அழித்து ஒழித்துப் பூமியைப் புனிதமாப் பரிபாலிக்கும் பொருட்டுப் பெரிய அரசர் குடியில் ஒரு மனிதனாய் வந்து நீ அவதரித்திருக்கிறாய். அந்த அவதார காரியங்களைச் செய்ய ஈண்டு மூண்டுவந்துள்ளாய்; உன்பால் வந்து என் தம்பி அடைக்கலம் புகுந்துள்ளான். பிறப்பில் அரக்கன் என்று பிழையாக அவனை நீ எண்ணிவிடலாகாது. சாதி வாசனை யாதும் அறியாதவன். சிறந்த நீதிமான்; உயர்ந்த தருமகுண சீலன்; உங்களோடு வந்து சேர்ந்துகொண்டான்

என்ற கோபத்தால் இலங்கை வேந்தன் அவனைக் கொன்று தொலைக்கவேண்டும் என்று குறிக்கொண்டு நிற்கின்றான். சமையம் வாய்த்தால் கொன்றேவிடுவான்; உடன் பிறந்த தம்பி என்ற பாசம் அவனிடம் அறவே கிடையாது; அவன் கையில் அகப்படாதபடி இளவலைக் காத்தருளுக. எப்பொழுதும் உன்பக்கமே வைத்துக்கொள்ளவேண்டும்; அல்லது இலக்குவன் அனுமான் என்னும் இருவருள் எவரிடமாவது ஒருவர் பாதுகாப்புள் இருக்கும்படி செய்க; முன்னமே என்பால் அன்பால் வந்து அபயம் புகுந்த அடைக்கலப் பொருளை இன்றும் நான் அடைக்கலமாகத் தந்திருக்கிறேன். எனது அருமைத் தம்பியை உரிமையோடு பாதுகாத்தருளும்படி மீண்டும் ஆவலாய்வேண்டுகின்றேன்; ஐயனே! இனி இறுதியாக எனக்கும் ஓர் உதவி செய்தருளுக; மூக்கு இழந்தவன் என்று என்னை நோக்கி வானவர் ஏளனம் செய்வர்; எனக்கு ஏவல் புரிந்துவந்த அந்தத் தேவர்கள் சிரிக்க இனிமேல் நான் வெளியே இருக்கக் கூடாது; உனது பாணத்தால் எனது தலையை அறுத்து நடுக்கடலில் வீசிவிடுக; ஈசனே! இது நான் உன்னிடம் ஆசையோடு வேண்டுகின்ற வரம்; இதனை உடனே செய்து எனக்கு உய்தி புரிந்தருளுக'' என்று உரைத்து நின்றான்.

இந்த உரைகளைக் கேட்டு இராமன் உள்ளம் மிக மறுகினான். அவனுடைய மன நிலைகளையும் மான ஞானங்களையும் நினைந்து வியந்து நெடிது இரங்கினான். எவ்வழியும் உறுதி குன்றாத அரிய சுத்த வீரன் அநியாயமாய்ச் சாக நேர்ந்தானே என்ற பரிவு பெருகி நின்றது. அவனது சகோதரவாஞ்சையை எண்ணியுருகி நின்றான். பாச உரிமைகள் பரிதாபங்களாய்த் தோன்றின.

என் தம்பி உனக்கு அடைக்கலம்.

முன்னமே வந்து இராமனிடம் அடைக்கலம் புகுந்துள்ள வீடணனை மறுபடியும் கும்பகருணன் பரிவுடன் அவன்பால் உரிமைசெய்து யாதும் பிழை நேராமல் யாண்டும் அவனை நன்கு பாதுகாத்தருளும்படி இவ்வாறு மறுகி வேண்டியிருக்கிறான்.

அண்ணன்பாலும் தம்பி மீதும் அவன் வைத்துள்ள அன்புரிமைகள் உய்த்துணர வந்தன. மூத்தவன்பால் கொண்டிருந்த அன்பு முழுதும் தேய்ந்து மாய்ந்தது; சீதையை விரும்பித் தீது

புரிந்தது பெரிய வேதனையாய் வெறுப்பை விளைத்து வந்தது ஆதலால் அந்தத் தமையன் மேல் நீண்டிருந்த பாசம் எல்லாம் நிலைகுலைந்து போயது. நீதிமானான இளையவன்பால் கொண்டிருந்த பாசம் முழுவதும் நிலையாய் நீண்டு வந்தது. அந்த வரவு நிலைகளை இறுதியில் வார்த்தைகள் உறுதியாக வரைந்து காட்டி யிருக்கின்றன. உள்ளக் கவலைகள் வெளியுறிய வந்தன.

வெல்லுமா நினைக்கின்ற வேல் அரக்கன்.

என்று இராவணனைக் குறித்து இங்ஙனம் சொல்லியிருக்கிறான். உடன் பிறந்த தமையன் என்னும் உரிமைப் பாசம் இப்பொழுது ஒருவிப் போயது என்று தெரிகின்றது. வாயிலிருந்து வெளியே வந்துள்ள சொல் உள்ளத்தைத் தெளிவாகக் காட்டியுள்ளது. அரக்கர் பதியின் அவல நிலையை விளக்கியருளினான்.

யாரும் வெல்ல முடியாத வீரனை வெல்லலாம் என்று கருதித் தன் குலத்தவர் எல்லார்க்கும் அல்லலையும் அழிவையும் வீணே விளைத்துக் கொண்டிருக்கிற அவகேடன் என அவனை இவன் வெறுத்திருப்பது உரைக் குறிப்பால் உணர வந்தது. மையல் நோயால் முடிந்தவன் என்று முடிவு செய்திருத்தலால் அவனது வெய்ய தீமை இவனுக்கு வேதனையை விளைத்துள்ளமை விளங்கி நின்றது. வெறுப்பும் கவலையும் விரவியுள்ளன.

கொடுமையைக் கடுமையாக நெடுமையும் வளர்த்து வந்துள்ளவன் ஆதலால் தம்பியைக் கண்டால் கொன்றே விடுவான் என்று கும்பகருணன் குலை கடித்திருக்கிறான். மூண்டுள்ள நிலைகளையெல்லாம் நீண்டு சிந்தித்து நெடிது மறுகியிருப்பது தெரிய வந்தது. இருவர் நிலைகளையும் கருதிக் கவன்றுள்ளான்.

எதிரியோடு சேர்ந்து கொண்டு தன்னை அடியோடு கெடுக்க நேர்ந்துள்ளான் என வீடணனை அவன் கடுத்திருத்தலால் கொலை புரிந்து அழித்து விடுவான் என்று கருதி இவன் அலமந்துள்ளான். அந்த அழிவு நிலையிலிருந்து தப்பிப் பிழைக்கும்படி தம்பியை எவ்வழியிலும் விழியூன்றிப் பாதுகாத்து வர வேண்டும் என்று இராமனிடம் மறுகி வேண்டியிருக்கிறான்.

அரக்கன் என்று குறித்தது இரக்கமின்றிச் செய்யும் அவனது தீமையைக் கூர்மையாக உணர்ந்து கொள்ள வந்தது.

உடன் பிறப்பின் பயன் ஓரான் என்றது தன்பால் அவன் நடந்து கொண்ட கொடுமையின் அநுபவம் குறிக்க நேர்ந்தது.

தான் எண்ணியதையே எவ்வழியும் துணிந்து செய்வான்; புண்ணிய பாவங்களைக் கருதித் தண்ணளி புரியான்; உறவுரிமைகளை நினைந்து உளம் உருகியருளான் என அவனது நெஞ்சத் திண்மைகளையும் நெடிய கொடிய நிலைமைகளையும் நேரே தெரிய வுரைத்தான். உடனிருந்து பழகியதால் உள்ள நிலை உணர வந்தது.

ஒல்லுமாறு இயலுமேல் கொல்லும்.

வீடணன் வாய்ப்பாய் வந்து கிடைத்தால் அவனை இராவணன் கொன்றே விடுவான் என்பதை இங்ஙனம் குறித்துக் காட்டினன். அந்தக் கொலைகாரன் கையில் என் தம்பி சிக்காத படி யாண்டும் கண்ணூன்றி நன்கு காத்தருள வேண்டும் என்று இராமனை வேண்டி யிருக்கிறான். இந்த வேண்டுகோளைக் கூறும் பொழுது கும்பகருணன் கண்களிலிருந்து நீர் பெருகி வழிந்தது. அன்பின் பெருக்காய் அது அயலே தெரிந்தது.

தம்பி என நினைந்து இரங்கித் தவிரான்.

உடன்பிறந்த தம்பியே என்று உள்ளம் இரங்கி விடான்; வீடணனைக் காண நேர்ந்தால் இலங்கை வேந்தன் கொன்றே விடுவான்; அக் கொடியவன் கண்ணில் படாதபடி பிள்ளையைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள் என்று இங்ஙனம் இராமனிடம் கும்பகருணன் மறுகி வேண்டியிருக்கிறான். இவனுடைய பரிவும் பண்பும் தம்பிமேல் வைத்திருக்கும் பாசமும் ஆர்வமும் ஓர்ந்து சிந்திக்க வுரியன. தகவு இல்லான் என இராவணனை இங்கே குறித்திருக்கிறான். நடுவு நிலைமையில்லாதவன், மிகவும் கொடியவன், நீதி நெறிகளைக் கடந்தவன், நெறிகேடன், மனம் போன படி எதையும் துணிந்து செய்பவன் என்னும் குறிப்புகள் எல்லாம் தகவில்லான் என்ற இந்த ஒரு சொல்லால் உணர வந்தன.

தரும நீதிமான் எனத் தம்பியையும், கொடிய அநீதியாளன் எனத் தமையனையும் கும்பகருணன் கருதியிருக்கிறான். இருவருடைய நீர்மைகளையும் உடனிருந்து நெடுநாள் பழகி உணர்ந்துள்ளவன் ஆதலால் உள்ள நிலைமைகளை ஒளியாமல் உரைத்தான். உண்மைகள் உலகம் அறிய வந்தன.

அடுத்த தம்பியான தான் இறந்து படுவேன் என்று இரங்காமல் போருக்குப் போ! என்று நேருக்கு நேரே இகழ்ந்து கூறிச் சினந்து விடுத்தான் ஆதலால் இளைய தம்பியையும் கருணையின்றிக் கொன்று விடுவான் என்று மறுகி நின்றான். இளையவன் இடையூறின்றி இனிது வாழ வேண்டுமே என்று இவ் வீரன் இறுதியில் கருதி மறுகி யிருப்பது காண வந்தது.

உம்பியை உன்னை அனுமனை எம்பி பிரியான் ஆக.

இராவணனுடைய கையில் சிக்கி மாளாதபடி வீடணனைப் பாதுகாத்து வர வேண்டும் என்று முறையிட்டு வேண்டுகின்றவன் இவ்வாறு வேண்டியிருக்கிறான். போர் முடியும் வரையும் இன்ன இன்னரோடே அவன் இருக்க வேண்டும் என்று முடிவு செய்துள்ளான். மூவரை மட்டும் தேர்ந்து எடுத்துள்ளமையால் வந்துள்ள வானர சேனைகளுள் வேறு எவரையும் ஒரு பொருளாக இவன் மதிக்கவில்லை என்று தெரிகின்றது.

இராமன் இலக்குவன் அனுமன் என்னும் இந்த மூவரே தன் தம்பியைக் காத்தருள வல்லவர் என்று உறுதியாய்த் தெளிந்திருக்கிறான். இராமன் போராட மூண்டு போனால் வீடணனை இலக்குவனிடம் ஒப்புவித்து விட்டுப் போக வேண்டும்; இளைய பெருமாளும் போர்க்களம் புக நேர்ந்தால் அனுமானிடம் அவனை அடைக்கலமாக வைத்துப் போக வேண்டும் என்னும் குறிப்போடு வலியுறுத்தி வேண்டியிருக்கிறான்.

இராமனை முதலில் குறியாமல் உம்பியை என இலட்சுமணனை முன்னதாக இன்னவாறு உரைத்தது உன்னி யுணர வுரியது. பின்னே நிகழ்வது முன்னே உரிமையாய்ப் பேச நேர்ந்தது.

தன் அயலே நின்ற வீடணனைக் கொல்லும் பொருட்டு இராவணன் ஒரு வேலாயுதத்தை ஏவினான். அது பிரமாவினுடையது; அரிய வர பலத்தால் வந்தது; எவர் மேல் எறிந்தாலும் அவரை உயிர் வாங்கிப் போவது; அத்தகைய வித்தகமான வெற்றி வேலைத் தம்பி என்றும் இரங்காமல் இலங்கை வேந்தன் சினந்து வீசினான். அது கொதித்து வந்தது; அதன் வேகத்தைக் கண்டதும் இலக்குவன் வீடணனுக்கு முன்னே விரைந்து பாய்ந்து போய் தன் மார்பில் ஏற்றான்; அது ஊடுருவிப் போ

யது; இவன் மூர்ச்சைபோய் மயங்கிக் கீழே வீழ்ந்தான். பின்பு சஞ்சீவி மருந்தால் தெய்வாதீனமாய்ப் பிழைத்தான். இதனைப் பின்னே வரும் வேல் ஏற்று படலத்தில் காணலாம். தன் உயிரைக் கொடுத்தும் வீடணனைப் பாதுகாத்தவன் ஆதலால் காப்புக்கு உரிமையாக இலக்குவன் இங்கே தலைமை நிலையில் தனியே வந்தான். உறுதி உண்மைகள் கருதி உணர நேர்ந்தன.

தன்பால் அன்பால் வந்து அடைக்கலம் புகுந்தவனை அமையம் நேர்ந்தபோது அடைக்கலமா நிறுத்திப் போக உரியவர் இருவரே என்பதை இராமனுக்கு முன்னும் பின்னும் நிலையாக நிறுத்தி நேரே குறித்துக் காட்டியிருக்கும் காட்சியும் குறியின் மாட்சியும் கூர்ந்து நோக்கி ஓர்ந்து சிந்திக்க வுரியன.

இராவணனுடைய கோபத் தீயினால் யாதொரு ஆபத்தும் நேராமல் விபீடணனைப் பாதுகாத்தருள வல்லவர் மூவர் என்று சுட்டிக் காட்டியது அவனைக் காக்கும் கருத்தோடு வந்தது.

முன்னமே அடைக்கலம் புகுந்தவனைத் தானும் அடைக்கலமாகத் தந்து அவனை உரிமையோடு பேணி வரும்படி இராமனிடம் பரிவு கூர்ந்து வேண்டினான். தம்பியிடம் இவன் கொண்டிருக்கும் அன்பும் பிரியமும் யாருக்கும் அதிசய ஆர்வங்களை விளைத்திருக்கின்றன. இளையவன்பால் உளம் உருகி இவ்வாறு வேண்டிமுடித்தவன் முடிவில் தனக்கும் ஒரு வரம் வேண்டினான்.

மூக்கு முதலிய உறுப்புகளை இழந்து அயலார் நோக்க வெளியே கிடப்பது இவ் வீரனுக்குப் பெரிய வெட்கமாயிருந்தது. "இராமா! என் தலையைத் துணித்துக் கடலில்வீழ்த்திவிடுக; முடிவில் எனக்கு செய்ய வேண்டிய பெரிய உபகாரம் இது; விரைவில் செய்தருள்!" என்று வீரகம்பீரமாய்க் கேட்டான். இவனுடைய அடலாண்மைகளையும் வீரத்தையும் வியந்து பரிந்த இராமன் சிறிது போது மறுகிநின்றான். முடிவில் இவன் வேண்டிய படியே அம்பு தொடுத்துத் தலையை நீக்கி அலைகடலிடையே ஆழ்த்தினான்.

மாக்கூடு படர்வேலை மறிமகரத் திரைவாங்கி
மேக்கூடு கிழக்கூடு மிக்கிரண்டு திக்கூடு
போக்கூடு கவித்திருகண் புகையோடு புகையுயிர்க்க
மூக்கூடு புகப்புக்கு மூழ்கியதம் முகக் குன்றம்.

கும்பகருணனுடைய தலைபோய் விழுந்தபொழுது கடல் பட்ட பாட்டை இது காட்டியுள்ளது. அரிய பெரிய அதிசய வீரன் இவ்வாறு படுதுயரில் முடிந்தான். இவனுடைய முடிவு கண்டதும் அமரர்கள் ஆடி ஆரவாரங்கள் செய்தனர். அரக்கர்கள் ஓடி இலங்கை புகுந்து நிகழ்ந்ததை யெல்லாம் வேந்தனிடம் நேரே உரைக்க நேர்ந்தார். அப்பொழுது அங்கே அரண்மனையில் இராவணன் இல்லை. மையல் நோயால் மயங்கி அவ்வெய்யவன் செய்த வினைச் செயல்களை அயலே காண வருகின்றோம்.

## வஞ்சம் சூழ்ந்தது.

கும்பகருணனைப் போருக்கு அனுப்பிவிட்டு ஓர் அழகிய மாளிகையில் இராவணன் தனியே அமர்ந்திருந்தான். சீதையின் உருவ அழகை எண்ணி எண்ணி உள்ளம் உருகினன். காமதாபம் பெருகிநின்றது. இராமனோடு போராடிச் சீரழிந்து திரும்பி வந்தவன் காமனோடு போராடிக் கடுந்துயருழந்தான். மூண்டுள்ள நாசங்களை யெல்லாம் முழுதும் மறந்து ஆசை நோயால் அலமந்துழந்தது அவலவியப்பாயிருந்தது. அவ்வமையம் அங்கே மகோதரன் வந்தான். அந்த மாய வஞ்சனைக் கண்டதும் இத்தீய நெஞ்சன் உவகை மீக்கொண்டான். உள்ளம் கருதியதைக் கள்ளமின்றி யுரைத்தான்: "சானகியை எப்படியும் நான் கை வசப்படுத்த வேண்டும்; அதற்கு ஆன உபாயங்களை ஆராய்ந்து சொல்லுக! அந்த அழகி என் வசமாய்விடின் வந்த பகைவன் மானமழிந்து மாண்டோ, அல்லது மீண்டோ போய் விடுவான்; ஈண்டு விரைந்து வேலை செய்ய வேண்டும். சீதையை நான் அடைந்தால் அன்றி என் உள்ளம் உடைந்து உயிர் ஒழிந்தே போய் விடும்; உண்மை தெளிந்து உய்தி செய்க!" என்று இன்னவாறு கூறவே அவன் உன்னி ஆலோசித்தான். ஓர் உபாயம் கூறினன்: "இராமனைப் போல் வடிவம் எடுத்துப் போனால் தன் நாயகனே என்று நம்பிச் சீதை சேர்ந்து விடுவாள்; அவ்வாறு செய்வதே எவ்வகையினும் இனியது" என்று அவ் வெவ்வினையாளன் விரகுடன் கூறினன். அதனைக் கேட்டதும் இவன் வாட்டமாய்ச் சிரித்தான். முன்னம் நேர்ந்ததைச் சொன்னன்: "சாரமேயன் என்னும் மாயா வல்லவன் உதவியால் சீதையை மருவி மகிழ விழைந்து இராமனைப்போல் உருவம் கொண்டேன்.

அந்த உருவம் மருவியதும் "பிறன்மனைவியை விரும்புவது பெரும்பிழை; கொடும் பாவம்" என என் உள்ளம் நெடுந்திகிலே யே அடைந்தது. மாறி மாறிப் பல முறையும் மருவிப் பார்த் தேன்; மனம் இசையவே இல்லை. அந்த உபாயம் யாதும் பயன் படாது; வேறு எந்த வழியாலேனும் என் சிந்தை நோய் தீர வழி கூறுக" என்று அந்தப் பழிகாரனிடம் பணிவோடு கூறி ஞன். அவன் ஆராய்ந்து தெளிந்து துணிந்து சொன்ஞன். குறித்து மொழிந்த அவ்வுரைகள் கருத்தைக் கவர்ந்து வந்தன: "மருத்தன் என்னும் பேரினையுடைய ஒருவன் நம் ஊரில் இருக்கி ருன்; மாய விஞ்சைகள் யாவும் அவன் நன்கு கற்றவன்; அதி சய சாதுரியங்கள் வாய்ந்தவன்; சிந்தை கருதியபடியே எந்த உருவையும் எடுத்து அவரைப் போலவே பேசவல்லவன். வடிவ நிலையிலும் வாய் மொழியிலும் அவன் மாயம் புரிய நேர்ந்தால் யாரும் யாதும் வேறுபாடு காண முடியாது. மிதிலை மன்னஞன சனகனைப் போல் அவனை வடிவம் எடுத்து வரும்படி செய்கி றேன்: சீதை நேரே கண்டால் தன் தந்தை என்றே முழுதும் நம்பி விடுவாள்; அவனைக் கொண்டே இவளை உங்கள் வசம் செய்து கொள்ளலாம்; பின்னே நான் அவனை அழைத்து வருகி றேன்; நீங்கள் முன்னதாக அசோக வனத்துக்குப் போயிருங் கள்" என அத் தீயவன் உரைத்தான். அவ்வுரைகளைக் கேட்ட தும் இப் பேயன் பெரு மகிழ்வடைந்தான். அவனை உவந்து தழுவி உபசரித்து விரைந்து வரும்படி சொல்லி வேண்டிய ஆயத்தங்களோடு சீதையைக் காண விழைந்து அசோக வனத் தை நோக்கி அதிசய ஆடம்பரங்களோடு இவன் எழுந்து சென் ருன். மையல் நோயோடு வெய்யவன் போனது வியப்பாயது.

இராவணன் சென்ற நிலை.

என அவன் உரைத்தலோடும் எழுந்துமார்பு இறுகப் புல்லி
அணையவன் தன்னைக் கொண்டாங்கு அனுமதி அன்பஎன்னுப்
புனைமலர்ச் சரளச்சோலை நோக்கினன் எழுந்து போஞன்
வினைகளைக் கற்பின் வென்ற விளக்கினை வெருவல் காண்பான்.

மின்ஒளிர் மகுடகோடி இளவெயில் எரித்து வீசத்
துன்னிருள் இரிந்து தோற்பச் சுடர்மணித் தோளில் தோன்றும்
பொன்னரி மாலை நீல வரையின்வீழ் அருவி போர்ப்ப
நன்னெடுங் களிமால் யானை நாணுற நடந்து வந்தான். (2)

விளக்கொரு விளக்கம் தாங்கி மின்அணி அரவில் சுற்றி
இளைப்புறு மருங்குல் நோவ முலைசுமந்து இயங்கும் என்ன
முளைப்பிறை நெற்றி வான மடந்தையர் முன்னும் பின்னும்
வளைத்தனர் வந்து சூழ வந்திகர் வாழ்த்த வந்தான். (3)

பண்களால் கிளவி செய்து பவளத்தால் அதரம் ஆக்கிப்
பெண்களானார்க்குள் நல்ல உறுப்பெலாம் பெருக்கி யீட்டி
எண்களால் அளவா மானக் குணந்தொகுத்து இயற்றினாைக்
கண்களால் அரக்கன் கண்டான் அவளையோர் கலக்கம் காண்
பான். (4)

(மாயாசனகப் படலம், 4-7)

இராவணன் அசோக வனத்தை நோக்கி வந்துள்ள நிலைகளையும் அங்கேயிருந்த கற்பரசியின் நீர்மைகளையும் குறித்துக் காட்டி யிருக்கும் இந்தப் பாசுரங்களைக் கூர்ந்து பார்க்கிறோம். அரிய பல காட்சிகளையும் மாட்சிகளையும் ஓர்ந்து கொள்ளுகிறோம். உணர்வின் சுவைகள் உவகை புரிந்துள்ளன.

சரித நிகழ்ச்சிகளும் மன வுணர்ச்சிகளும் வியப்புகளை விளைத்து வருகின்றன. மகோதரன் கூறிய மாய வழியால் தனது தீய ஆசையைப் பூர்த்தி செய்து கொள்ளலாம் என்று உள்ளம் களித்தே இராவணன் ஊக்கி எழுந்து சோலையை நோக்கி வந்துள்ளான். அவனது மையல் மயக்கம் வெய்ய நிலையில் விரிந்து நிற்கிறது. மதிகேடு அதிகேடாய் நீண்டுக் குடியும் குலமும் நாசமாய் அடியோடு முடிய நெடிதோங்கி நிமிர்ந்துள்ளது.

பெரிய சுத்த வீரனை தம்பி சித்தம் கொதித்து வேண்டா வெறுப்போடு போருக்குப் போய் ஆண்டு மூண்டு மாண்டுபட நேர்ந்துள்ளான்; மனம் மாறுபட்டு மறுகிப் போயுள்ள அவனது நிலைமையைக் குறித்து ஒரு சிறிதும் கவலாமல் தனது ஈன இச்சையில் இழிந்து இழிதொழிலை விழைந்து வழி நாடி வந்திருப்பது பழிகொடுந் தீமையாய்க் கதித்து நீண்டுள்ளது. அழிகேடுகள் பல அடைந்தும் விழி திறந்து பாராமல் களி மீறி வந்திருக்கிறான். உயர்ந்த இரத்தின கிரீடங்கள் சிறந்த ஒளிகளை நவ நவமாய் அயலே வீச, நீல மலைமேல் மருவி மிளிரும் அருவி போல மார்பில் முத்துமாலைகள் புரள, அரிய பல அணிகள் பெரிய சோதிகள் புரிய, அழகிய தெய்வ மங்கையர் நெய்த்

தீபங்களைக் கைகளில் ஏந்தி இருமருங்கும் பெருமருங்காய் மரியாதைகள் புரிந்து வர, அதிசயமான அலங்கார ஆடம்பரங்களோடு இராச கம்பீரமாய் இராவணன் நடந்து வந்திருக்கிறான். எத்தனை வீரர்களையும் எவ்வளவு அறிவாளிகளையும் காமமோகம் பித்தராக்கிப் பேதைப்படுத்தும் என்பதை இவன் பட்டுவரும் பாடுகள் ஓதி உணர்த்தி வருகின்றன. சிறையில் இருப்பவள் விரைவில் விரும்பித் தன்னை மதித்துப் பிரியம் கொள்ள வேண்டும் என்றே அழகிய அரம்பையர் ஊழியம் புரிய அதிசய அலங்காரங்களோடு ஆவல் மீதூர்ந்து பூவலர் சோலையுள் புகுந்தான். காரிய சாதனையில் கருத்தோடு வந்திருக்கிறான்.

காமப்பித்தனாய்க் கடுமையலோடு வந்த இலங்கை வேந்தனை வரைந்து காட்டிய கவி முடிவில் சீதையை எழுதிக் காட்டியுள்ளார். உருவ அழகும் உள்ளப் பண்பும் குண நீர்மைகளும் குலாவி ஒளிரும் அந்த இனிய சீவிய ஓவியத்தை உள்ளக் கண்களால் ஊன்றி நோக்குந்தோறும் உவகை வெள்ளம் பெருகி எழுதலை யாரும் நேரே உணர்ந்து கொள்ளுவார்.

பெண்களுக்குரிய பேரழகுகளும் பெருநலங்களும் ஒருநிலையமாய் ஒருங்கே குவிந்து பல உலகங்களும் வியந்து கண்டு உவந்து மகிழும்படி மண்ணில் விளைந்து வந்துள்ள பெண்ணரசினைக் கண்ணும் கருத்தும் கருதிக் காணக் காட்டியிருக்கும் காட்சி கலை நிலையில் தலைசிறந்து அரிய மாட்சியாய் மிளிர்கிறது.

அளவிடலரிய உயர்ந்த குண நலங்கள் யாவும் ஒருங்கே திரண்டு பெண் உருவமாய்ச் சானகி என்னும் பெயரோடு மருவியுள்ளன என்பார் எண்களால் அளவா மானக் குணம் தொகுத்து இயற்றினாள் என்றார். சொல் இனிமை, உருவ அழகு, பருவ நிலை, குண நீர்மைகள் யாவும் விழிதெரிய வந்தன.

"அழகு இவளைத் தவம் செய்து பெற்றது;
குணங்கள் சேர்ந்து உய்யப் பிணங்குவன."

சீதையைக் குறித்துச் சதானந்தர் முன்னம் * இன்னவாறு கூறியுள்ளதும் ஈண்டு அறிய வுரியது. அழகும் குணங்களும்

* இந் நூல் பக்கம் 1140, வரி 4 பார்க்க.

விழுமிய நிலையில் கெழுமியுள்ள பெண்கள் நாயகம் கண்கள் காண வந்து ஈண்டு அதிசய மாட்சியாய் நின்றுள்ளாள்.

வினைகளைக் கற்பின் வென்ற விளக்கு.

சீதையை இப்படி விளக்கி யிருக்கிறார். இந்த அற்புத விளக்கம் அரிய பல சிந்தனைகளை விளக்கிப் பெரிய கலை விளக்க மாய்ப் பெருகியுளது. உண்மையைக் கருதி உணர வேண்டும்.

வினைகளை யாராலும் வெல்ல முடியாது; அவற்றை வென்ற வள் என்றது வியப்பை விளைத்துள்ளது. உலையா முயற்சியால் ஊழையும் ஒரோ வழி வெல்லலாம் ஆயினும் எல்லாராலும் அவ் வெற்றியை எய்த முடியாது. மார்க்கண்டர் மாத்திரம் பெரிதும் முயன்று ஊழை அரிதின் வென்றிருக்கிறார். தமக்கு நேர்ந்து நின்ற அகால மரணத்தை அவர் முயற்சியால் வென்றதுபோல் அந்த மரணத்திலும் கொடிதாய்த் தனக்கு நேர்ந்திருந்த மானக் கேடுகளையெல்லாம் தன் நெஞ்சக் கற்பினால் நெடிது விலக்கிக் கடிது வென்று வந்துள்ளாள் ஆதலால் வினைகளைக் கற்பால் வென்றவள் எனச் சனகியை இங்கே விளக்கியருளினர்.

தீயவனான இராவணன் செய்கிற மாய வினைகளையெல் லாம் இத் தூயவள் உள்ளக் கற்பால் வென்று ஒளிபெற்று வரு கிறாள். அந்த வரவு நிலையின் உளவு தெரிய விளக்கு என்றார். தன் கற்பைக் காத்துவரும் அற்புதக் கீர்த்தியால் உலகமெல் லாம் உயர் பேர் பெற்று ஒளியுற்று நிற்றலால் விளக்கு என விளக்க வந்தாள். பெண்மையுலகமும் பேருலகமும் பெரு மகி மை பெற இப் பெண்ணரசி இலங்கைச் சிறையில் இருந்துவரும் இருப்பும் சிறப்பும் குறிப்போடு ஈண்டு தெரிய வந்தன.

விளக்கை விழைந்து வந்து வீழ்ந்து மடியும் விட்டில் போலச் சீதையை இராவணன் விழைந்து வருகிறான். அவன் நாசமாய் அழிந்துபடுவது உறுதி என்பதை விநயமா விளக்க விளக்கு என்றார். அவனது விளிவு நிலை விழி தெரிய வந்தது.

இருள் எவ்வளவு திரண்டு வந்தாலும் விளக்கின் எதிரே விளிந்து ஒழியும்; காம இருள் மண்டி உள்ளம் மருள் கொண் டுள்ள இராவணன் இந்தப் பெண் விளக்கின் முன்னே பிழை யா யிழிந்து பழியோடு அழிந்து ஒழிவான் என்க.

தனக்கும் தன் குலத்துக்கும் ஒருங்கே நாசத்தை விளைக்க வந்திருப்பவனை ஆசையால் அவாவி வந்தான் என அவனது நீச நிலைமையை இவ்வாறு விளக்கி யருளினர். சிறையில் இருப்பவளை நிறை காத்து நிற்கிறது; அந்தக் காப்பு நிலையை உணராமல் காமப் பேயன் களிப்பு மீதூர்ந்து வந்தான்.

கண்களால் கண்டான்.

என்றது கருதி புணர வந்தது. எண்களால் எப்பொழுதும் சீதையைத் தன் உள்ளத்தே கண்டு கொண்டிருப்பவன் ஆதலால் இப்பொழுது நேரே கண்களாலும் காண நேர்ந்தான் என்பதை ஈண்டு இங்ஙனம் காட்டியருளினர். பல மானச மருமங்களை நாம் கண்டு தெளியுமாறு கவி காட்டி வருவது கலையின் சுவைகளை நீட்டி உணர்வு வகைகளை ஊட்டி வருகிறது.

இனிய பெண்கள் நாயகத்தைக் கொடிய அரக்கன் கண்களால் கண்டான்; அந்தக் காட்சியால் இவளுக்குக் கடுந்துயரங்கள் நேர்ந்தன; தீயவன் கண்பார்வையால் தூயவளுக்குநேர்ந்த துயரத் துடிப்புகளையெல்லாம் உய்த்துணர்ந்து தத்துவங்களைத் தெளிந்து கொள்ள உரைகள் உருவாகி வந்துள்ளன.

சீதை இருந்த நிலை.

அழகிய அசோக வனத்தில் இனிய ஒரு குளிர் தருவின் அடியில் அதிசய எழிலோடு மெலிந்து வாடித் துயரமே உருவமாய்ச் சீதை மருவி யிருந்தாள். தனது அருமை நாயகனை எப்பொழுது காண்போம் என உழுவலன்பால் ஏங்கி உருகி மறுகி உயிர் பதைத்து எவ்வழியும் உய்தி நாடி நின்றாள். கொடிய அரக்கிகள் புடை சூழ்ந்து கடுமையாகப் பாதுகாத்திருந்தாலும் இடையிடையே திரிசடை ஆறுதல் கூறி வந்தது அரிய உதவியாயிருந்தது. அனுமான் வந்து போனபின் உள்ளத்தில் உறுதியும் ஊக்கமும் பெருகி யிருந்தன; ஆயினும் குறித்த தவணை நெருங்க நெருங்க நெடுந்திகிலும் பெருகி வந்தது. இலங்காபுரி பல காவதங்கள் அமைந்த நெடிய நகரம் ஆதலால் இராமன் படைகளோடு வந்து வட திசை வாயிலில் போர் மூண்டு நிற்கும் நிலைமையை இக் குலமகள் அறிந்து கொள்ள வில்லை. நகரின் தென் கோடியில் தனியே சிறையில் தங்கி யிருத்தலால் அங்கே

நேர்ந்த அமராடல்கள் யாதும் அறிய முடியாமல் போயது.

### இராவணன் அடைந்தது.

இந்த நிலையில் மறுகியிருந்த சீதையிடம் இராவணன் வந்தான். வரவே காவல் காத்திருந்த அரக்கிகள் எல்லாரும் ஒல்லையில் எழுந்து தொழுது அயலே ஒதுங்கி நின்றார். பேரழகுடைய அரம்பையர்கள் அருகே நின்று உபசாரங்கள் புரிந்தார். மணிகள் இழைத்த தங்க ஆசனத்தைச் சீதை முன்னே இட்டார். அதில் இராவணன் அமர்ந்து வலது காலை இடது தொடைமேல் இடைமடுத்து இராச கம்பீரமாயிருந்தான். அருகே ஆலவட்டம் முதலியன வீசிப் பணிகள் புரிந்து நின்ற தேவ மாதர் யாவரையும் அயலே விலகிப் போய் விடும்படி குறிப்போடு பார்த்தான். எல்லாரும் மறைவாய் ஒல்லையில் ஒதுங்கிப் போயினர்.

### எதிர் அமர்ந்து பேசியது.

தன் எதிரே இட்ட பொன் பீடத்தில் இராவணன் வந்து அமர்ந்திருக்கவே சீதை மனம் கலங்கி முகத்தை மறுபக்கம் திருப்பி மறுகியிருந்தாள். மையல் வெறி மண்டி வந்த அவன் தையலை வசப்படுத்தும் வகையில் பையப் பேசினன். வாய் மொழிகள் காம தாபங்களை வெளிப்படுத்திக் களிப்போடு வரலாயின. அன்று அவன் பேசிய உரைகள் அயலே வருகின்றன.

என்றுதான் அடியனேனுக்கு இரங்குவது? இந்து என்பான்
என்றுதான் இரவியோடும் வேற்றுமை தெரிவது? என்பால்
என்றுதான் அநங்க வாளிக்கு இலக்கலா திருக்க லாவது?
என்றுதான் உற்றது எல்லாம் இயம்புவான் எடுத்துக் கொண்
[டான். (1)

வஞ்சனேன் எனக்கு நானே மாதரார் வடிவு கொண்ட
நஞ்சுதோய் அமுதம உண்பான் நச்சினேன் நாளும் தேய்ந்து
நெஞ்சு நேராது உம்மை நினைப்புவிட்டு ஆவி நீக்க
அஞ்சினேன் அடியனேன் நும் அடைக்கலம் அமுதின் வந்தீர்!

தோற்பித்தீர் மதிக்கு மேனி சுடுவித்தீர் தென்றல் தூற்ற
வேர்ப்பித்தீர் வயிரத்தோளை மெலிவித்தீர் வேனில் வேளை
ஆர்ப்பித்தீர் என்னை இன்னல் அறிவித்தீர் அமரர் அச்சம்
தீர்ப்பித்தீர் இன்னம் என்என் செய்வித்துத் தீர்திர் அம்மா!

பெண்எலாம் நீரே ஆக்கிப் பேரெலாம் உமதே ஆக்கிக்
கண்எலாம் நும்கண் ஆக்கிக் காமவேள் என்னும நாமத்து
அண்ணல் எய்வானும் ஆக்கி ஐங்கணைக்கு அரியத் தக்க
புண்ணெலாம் எனக்கே ஆக்கி விபரீதம் புணர்த்தி விட்டீர்! (4)

ஈசனே முதலா மற்றை மானுடர் இறுதி யாகக்
கூசமூன் றுலகும் காக்கும் கொற்றத் தென் வீரக் கோட்டி
பேசுவார் ஒருவற்கு ஆவி தோற்றிலேன் பெண்பால் வைத்த
ஆசைநோய் கொன்றது என்ன ஆண்மை மாசுண்ணு தன்றே.

நோயிடை நுகரவேயும் நுணங்கி நின்று உணங்கும் ஆவி
நாயுயிர் ஆகுமன்றே நாள்பல கழித்த காலைப்
பாயிரம் உணர்ந்த நூலோர் காமத்துப் பகுத்த பத்தி
ஆயிரம் அல்ல போன ஐயிரண் டென்பர் பொய்யே. (6)

அறந்தரு செல்வம் அன்னீர்! அமிழ்தினுமினியீர்! என்னைப்
பிறந்திலன் ஆக்க வந்தீர்! பேர்எழில் மானம் கொல்ல
மறந்தன பெரிய போன வருமெனும் மருந்து தன்னல்
இறந்து இறந்து உய்கின்றேன் யான் யாரிது தெரியுமீட்டார்.

அந்தரம் உணரின் மேனள் அகலிகை என்பாள் காதல்
இந்திரன் உரத்தை நல்கி எய்தினள் இழுக்குற் றுளோ?
மந்திரம் இல்லை வேறோர் மருந்தில்லை மையல் நோய்க்குச்
சுந்தரக் குமுதச் செவ்வாய் அமுதலால் அமுதச் சொல்லீர்! (8)

இராவணன் பேசியிருக்கும் வார்த்தைகளை இந்தப் பாசுரங்கள் வார்த்துக் காட்டி யிருக்கின்றன. பாடல்களை ஊன்றிப் படிக்க வேண்டும். மொழிகளில் வெளியாயுள்ள பொருள்களோடு உணர்ச்சி நிலைகளையும் உள்ளக் குறிப்புகளையும் உண்மைக் கருத்துகளையும் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுவது நல்லது.

அரிய போர் வீரன்; அகிலமும் ஆளுகின்ற பெரிய மன்னன். காம தாபத்தால் கதிகலங்கி மதியழிந்து மானம் குன்றி நாணமின்றி வீணவாவோடு விளப்ப நேர்ந்தான். கொச்சையான இச்சைகள் உள்ளத்தில் குடிபுகுந்துள்ளமையால் இலச்சைகளை யிழந்து கூசிக் கூசிப் பேசியிருக்கிறான்.

முன்னமும் பலமுறை வந்து சீதையிடம் வாதாடியுள்ளான்; ஆனல் அவற்றிற்கும் இன்று பேசுவதற்கும் வேறுபாடு விரிந்துள்ளது. செருக்கும் திமிரும் துணிவும் துடுக்கும் முன்பு

மிகவும் பெருகி யிருந்தன; இப்பொழுது அவை அடங்கியிருக் கின்றன; ஆசையால் ஊசலாடி அமைதியாய் மறுகுகிருன். அடியனேன் என்று தொடங்கி யிருக்கிருன். குரலில் வேகம் குன்றி யிருப்பதை யூகமாய் உணர்ந்து மானச மருமங்களை விவேகமாய்த் தெளிந்து கொள்ள வேண்டும். சுரம் இறங்கி யிருப்பினும் காமச் சுரம் கடுவேகமாய் நீண்டிருத்தலால் மூண்டு மூண்டு ஆசை மீதூர்ந்து ஆவலோடு பேச நேர்ந்தான்.

மறுகி வேண்டியது.

"சீதா! உன்னுடைய அடிமைக்கு நீ என்று இரங்கி அருள் புரிவதாக முடிவு செய்திருக்கிருய்? ஐயோ! நான் படுகிற துயர நிலைகளை ஒருசிறிதாவது உணர்ந்திருந்தால் உள்ளம் கல்லாய் இப்படி உறைந்திருக்க மாட்டாய்; சந்திரன் ஒருபுறம் நின்று தகிக்கிருன்; மன்மதன் மறுபுறம் நின்று வதைக்கிருன்; தென் றல் புலிபோல் பாய்ந்து சீறுகின்றது; அந்திப் பொழுதைக் கண்ட பொழுது பேயைக் கண்டது போல் பேதுறுகின்றேன்; கடல் முழக்கம் கேட்ட போதெல்லாம் என் உடல் நடுக்கம் கொள்கிறது. எனக்கு ஏவல் செய்து வருகிற தேவர்கள் யாவ ரும் என்னைக் கேவலமாக நினைந்து மறைந்து சிரிக்கின்ருர். அகில உலகங்களையும் வென்று அதிசய வீரனுய் விளங்கியிருந்த நான் உன்னைக் கண்டது முதல் கடையனுயிழிந்து கதி கலங்கி யுழலுகின்றேன்; மதியழிந்து மானம் கெட்டு நான் மறுகியுழ லும்படி செய்வது உனக்குப் பெரிய பாவமாம். உனது பேரழகு எனது ஆருயிரைக் கொள்ளை கொண்டு எனக்குப் பேரிழவைக் காட்டியுளது. உள்ளே கொடிய நஞ்சு தோய்ந்துள்ள இனிய அமுதத்தை உண்ண விரும்பிய முழுமூடன் போல் நான் உன்னை விழைந்து தவிக்கின்றேன். நான் இறந்து போகலாம் என்ருலும் உன்னை மறந்து சாக முடியவில்லை; திசைகள் தோறும் வென்ற நான் வசைகள் மீற வாழுகின்றேன். என் வாழ்வு ஒரு வாழ்வா? எவ்வளவு இழிவுகள்! எவ்வளவு பழிகள்! எத்தனை அழிவுகள்! உய்த்துணர்ந்தால் உள்ளம் உருகுவாய். என் பெயரைக் கேட் டாலே அஞ்சி நடுங்குகின்ற எவரும் இப்பொழுது அச்சம் நீங்கி உச்ச நிலையில் ஓங்கி நிற்க நேர்ந்தார். சானகியால் வந்த மானக்கேடு என்று வைது வானமும் வையமும் என்னை

இகழ்ந்து வருகின்றன. என்னுடைய கண்ணும் மனமும் உன்னையன்றி வேறு ஒன்றையும் காணவில்லை. காணுகின்ற யாவும் உனது எழில் உருவங்களாகவே காட்சி தருகின்றன. உன்னையன்றி எனக்கு வேறே உயிர் இருப்பதாகவே தெரியவில்லை. பெண் எல்லாம் சீதை; கண் எல்லாம் சானகி என்றால் நான் என்ன பண்ணுவேன்? ஈசன் கைலையை எடுத்துத் தேவர் யாவரையும் வென்று அண்ட கோடிகள் எங்கணும் புகழ் மண்டி ஓசை பெற்று உயர்ந்துள்ள இராவணன் ஒரு பெண் ஆசையால் நாசமானான் என்ற இந்த நீசப் பேரை நீ அடையலாமா? உன் ஆசை நோயால் என் ஆவி பரிதாபமாய் அலமருகின்றது; கணந்தோறும் செத்துச் செத்துப் பிழைக்கின்றேன். காம நோய் ஏம வாதனையாய் இடர் புரிவதால் நாயின் உயிராய் நைந்து படுகின்றேன்; எனது நோய்நிலையைவாய்விட்டுச்சொல்ல முடியாது; புண்ணியவான் புதல்வியாய்ப் பிறந்து எண்ணரிய மகிமைகள் நிறைந்து அமுதினும் இனியளாய்ச் சிறந்துள்ள நீ என்பால் தண்ணளி புரியாமல் இருப்பது பெண்ணின் குலத்திற்கெல்லாம் பெரிய பழியாம். காமப் பித்தால் நான் செத்துப் போனால் உன்னை வையம் வையும். "இரக்கங் கெட்டவள்; இலங்கை வேந்தன் பதைத்துச் சாகும்படி படுகொலை புரிந்தாள்" என்று உன்னை உலகம் பழித்து வெறுக்கும்; நிலைமைகளைச் சிறிது சிந்தித்துப்பார்! உலக வழக்கங்களையும் நீதி நிலைகளையும் அறியாமல் இருப்பது பெரிய பேதைமையாம். அருமையான சிறந்த அழகிய பொருள் எங்கிருந்தாலும் அது அரசனுக்கே உரிமையாம் என்பது மனு நீதி முறைமையாம். அந்த முறையில் எனக்கு உன் உருவம் சொந்தமேயாம். இந்திரன் அகலிகையை விரும்பினான்; அவள் இசைந்து மகிழ்ந்தாள்; அதனால் அவளுக்குப் புகழே அன்றிப் பழி ஏதும் இல்லையே! எவ்வழியாலும் என் உயிர் உன் கைவசமேயுள்ளது; நீயே உய்யச் செய்ய வேண்டும்; உன் செவ்வாயின் இதழ் அமுதமே என் வெவ்விய காம நோய்க்கு மருந்தாம்; உரிய மருந்தை உதவிக் கொடிய பிணியைத் தீர்த்தருள்" என்று இவ்வாறு கூறி முடித்தான். முடித்தவன் முடிவில் எழுந்து அவள் அடியில் விழுந்து தொழுதான். அவனுடைய பேச்சும் செயலும் தொழுகையும் விழுகையும் பிழைகள் தோய்ந்து பெரும் பேதைமைகளாய்த்தோன்றின.

நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகள் காம தாபத்தின் மையல் மயக்கங்களை நன்கு விளக்கி நிற்கின்றன. தான் மிகவும் உருகிக் காதலித்த மங்கையை ஒருவன் மருவ முடியாத போது அவன் பரிதாபமாய்ப் பதைத்துப் படுதுயரங்களை அடைகின்றான். இரும்பு போன்ற மன வலிமைகளை யுடையனாயினும் காயச் சுழலில் அகப்படின் சூறைக் காற்றில் அகப்பட்ட துரும்புபோல் அவன் சுழன்று சுற்றி உழன்று படுகின்றான். விரகதாபம் உள்ளத்தில் ஏறிய போது உலகிலுள்ள நல்ல பொருள்கள் எல்லாம் அவனுக்குப் பொல்லாதனவாய்த் தோன்றி அல்லல்கள் புரிகின்றன.

இனிய நிலவொளியை வீசி இன்பம் தருகிற சந்திரன் கொடிய சுடு வெயிலாய்க் கொதிப்பைத் தருவது வியப்பாய்த் தோன்றுகிறது. மையல்நோய் வெய்ய துயரங்களாய் விரிகிறது.

"பட்டுப்படாத மதனாலும்
பக்கத்து மாதர் வசையாலும்
சுட்டுச் சுடாத நிலவாலும்
துக்கத்துள் வாடி உழல்வேனோ?" (திருப்புகழ்)

விரக வேதனை அடைந்தவர் மன்மதனையும் சந்திரனையும் குறித்து இப்படிப் புலம்புவது இயற்கை வழக்கமாயுள்ளது. காதலரது கூட்டுறவில் காமனும் சோமனும் இன்பம் விளைப்பவர் ஆதலால் பிரிவு நிலையில் துன்பம் தருபவராயினர். காம இச்சையால் மனம் மலினமடைந்து சலனமுறுகிறது; உறவே யாவும் அவலமாய்த் தோன்றுகின்றன; கவலைகள் சூழ்ந்து கொள்ளுகின்றன. மதன விதனங்கள் மானச வேதனைகளாய் மருவி வருதலால் மதி மருண்டு செயலிழந்து மறுகி யுழலுகின்றார்.

பசி நோய்க்கு உணவை நாடி ஓடுதல் போல் காம நோய்க்குக் கலவியை நாடிச் சீவகோடிகள் ஆவலாய் அலைகின்றன. அவாவியது அமையாதபோது ஆவி அலமந்து உலைகின்றது. "காமக் கலவி சேமக் கலமாய் உய்தி தந்ததால் உயிர் வந்தது" என ஒரு காதலன் உரையாடியுள்ளது ஈண்டு உணரவுரியது.

காம நோய் முற்றிய போது கடுந்துயருழந்து படுகிறான்; மதியும் மானமும் ஒழிந்து போகின்றன. போகவே எவனும் பேயா யிழிந்து நாயாயுழந்து பிதற்ற நேர்கின்றான். மத்து எறி

உடைதயிர் போல் காமப் பித்தால் மனம் உடைந்து போகவே மதியிழந்து மயல்மிகுந்து செயல் குறைந்துமறுகி மொழிகிருன்.

அடியனேனுக்கு இரங்குவது என்று?

தேவர்களை அடக்கி மூவுலகங்களையும் ஆண்டு யாண்டும் ஆண்டவன் என அதிசய மேன்மைகொண்டுள்ள இராவணன் ஈண்டு ஒரு பெண்ணின் எதிரே அடியன் என்று தன்னை இன்னவாறுகூறியிருக்கிருன். வாய்மொழி நோய்நிலையைவிளக்கியுளது.

மடவார் ஆசைப் பித்து ஏறின் மத்து ஏறி உடைதயிர் போல் எவரும் நிலை குலைந்து இழிவர் என்பது இங்கே விழி தெரிய வந்தது. எத்தகைய சூரரையும் காம நசை கடையராக்கி விடும் என்பதை உலகம் காண உணர்த்தியுள்ளமையால் காமக் கேட்டுக்கு ஏமச் சான்ருய் இலங்கை வேந்தன் துலங்கி நின்ருன். விரக தாபத்தால்ஆபத்தாய் வெந்து தவித்திருக்கின்ருன்.

கரும்பு வில்லால் இரும்பு மலையையும் துரும்பு செய்வேன் என்று வீரவாதமாய்க் காமன் ஆரவாரம் செய்திருத்தலை யாண்டும் அனுபவத்தில் காட்டி அடல் நீட்டி வருகிருன்.

“மேரு மலையும் விரிகடலும் நேருமெனச்
சீரும் சிறப்பும் செறிந்துமே---பாருலகில்
ஓங்கி யிருந்தாலும் உள்ளத்தே காமமுறின்
ஏங்கி அழிவர் இழிந்து.”

காமதாபத்தின் அதிசய வெற்றியை இது காட்டியுள்ளது.

மேருகிரி அனைய தீரரையும் துரும்பாக்கிச் சீரழியச் செய்யும் என்றதனல் பெண்கள் ஆசையால் ஆண்கள்படும் அவல நிலை அறியலாகும். பொல்லாத இந்த மையல் எல்லை மீறி எழுந்துள்ளமையால் இராவணன் அல்லல் உழந்து அலமந்து தவிக்கின்ருன். பலவும் பிதற்றிப் பரிதாபமாயுழல்கின்ருன்.

நஞ்சு தோய் அமுதம் உண்பான் நச்சினேன்.

தனது நசையின் நாச நிலையை இவ்வாறு கூசாமல் கூறியிருக்கிருன். உருவக உரை அவனது உள்ளத்தின் பருவரலையும் பரிதாபத்தையும் மருமமாக வெளியிட்டுள்ளது. என் ஆசையைச்

செருப்பால் அடிக்க வேண்டும் என்று தன் நசையை உள்ளி யுளைந்து எள்ளி இகழ்ந்து ஏசிய படியாய்ப் பேசி யிருக்கிறான்.

தான் இன்பமாய் இனிது வாழலாம் என்று சீதையை விரும்பினன்; அந்த விருப்பம் நிறைவேருமல் துயரங்கள் உயிர் வேதனைகளாய்த் தொடர்ந்திருத்தலால் உள்ளம் துடித்து உணர்வு சிதைந்து இங்ஙனம் உரைக்க நேர்ந்தான்.

சீதையின் பேரழகு அமுதமாய் இன்பம் தருகிறது; யாதும் இசையாமல் அவள் நிறைகாத்து நிற்கும் நிலை கொடிய துன்பமாய் உயிரைச் சூறையாடி வருகிறது. ஆகவே நஞ்சு தோய்ந்த அமுதம் என்று நெஞ்சு நொந்து பேசினன். இந்த அமுதத்தைக் கண்ட அளவிலேயே நாசம் அடைய நேர்ந்துள்ளவன் உண்டு கொள்ளவும் ஊசலாடி வருவது ஊன ஈனமாய் நீசம் படிந்துள்ளது. அழிவு நிலைக்கே அவாவி விழிகுருடாய் உழல்கின்முன்.

மதன விதனம் எம வாதனையாய் உயிரை வதைத்து வருகிறது. கொடிய துயரில் ஆழ்ந்து முடிவுதெரியாமல் கடிதுழன்று வருபவன் நேரே நெடிது பிதற்றி நிலை குலைந்து நிற்கின்முன்.

**உம்மை நினைப்பு விட்டு ஆவி நீக்க அஞ்சினன்.**

"காமதாபம் என் உயிரைத் துயராக்கிச் சூறையாடி வருகிறது; துன்பத் தீ சகிக்க முடியாதபடி தகிக்கின்றது; நான் செத்துப் போக வேண்டும்; அங்ஙனம் சாகாமல் இந்த உயிரை வைத்துக் கொண்டு இப்படி இருப்பதற்குக் காரணம் என்ன தெரியுமா? பிரியாதுள்ள பிரிய நிலையை நீ அறிய வேண்டும் சானகி!" என்று பரிதாபமான மரியாதையோடு மறுகி விளித்து மானம் குன்றி இந்த வாசகத்தைப் பேசி யிருக்கிருன்.

உன்னுடைய விழுமிய எழில் உருவம் என்னுடைய உள்ளத்தில் குடிபுகுந்துள்ளது; அந்த நினைப்பை மறந்து விட்டு இறந்து போக என் மனம் யாதும் இசைய வில்லையே; நான் என்ன செய்வேன்? எனது பரிதாப நிலையையும் உரிமைப் பாசத்தையும் ஒரு சிறிதேனும் உணர்ந்தால் நீ உள்ளம் உருகாமல் இருக்க முடியாது; உணராமையால் கல்லாயிறுகிக் கடும்பாறையாய்க் கொடுமை மண்டி நெடுமை கொண்டு நிலைத்திருக்கிருய்! என்று பரிவு தோன்றப் பரிந்து பேசியுள்ளான்.

**அடியனேன் உம் அடைக்கலம்**

"எப்படியும் என்னைக் காப்பாற்றியருள வேண்டும். எனது உயிர் போய் விட்டால் அந்தக் கொலைப்பழி உம்மையே சாரும். ஒரு பெரிய அரசனைக் கொன்று முடித்த கொலை பாதகி என உலகம் உன்னைப் பழித்து இகழாதபடி என்னைப் பாதுகாத்தருளுக" என்பான் அடியன் என்றும் அடைக்கலம் என்றும் இப்படி அபயம் புகுந்து உபாயம் நாடி உரையாடியிருக்கிறான்.

யாருக்கும் தோலாமல் எவருக்கும் தலை வணங்காமல் உயர் புகழோடு வாழ்ந்து வந்த நான் உன்னால் பல தாழ்வுகளை அடைய நேர்ந்தேன்; அந்தத் தாழ்வுகளையெல்லாம் ஒருங்கே நீக்கி என்னை மருங்கோடு வாழ்வித்தருள் என்று தனது நிலைமைகளையெல்லாம் நேரே தெரியப்படுத்தி அழுத்தமாய் வழுத்தி நின்றான்.

பெண் எலாம் நீரே ஆக்கிப்
பேர் எலாம் உமதே ஆக்கி.

தான் ஆகி இருக்கும் நிலைமையை இங்ஙனம் வரைந்து குறித்தான். குறிப்புகள் கூர்ந்த சிந்தனைகளையுடையன.

சீதையைக் கண்டது முதல் இராவணன் வேறு எந்தப் பெண்ணையும் விரும்ப வில்லை. மண்டோதரி முதலிய உரிய மனைவியரிடமும் பிரியம் கொள்ள வில்லை. அந்தப் புரத்துள் பள்ளியறைக்கே செல்ல வில்லை என்பதைத் தெரியச் செய்துள்ளான். தன் கண்களால் காணுகின்ற பெண்கள் எல்லாரும் சீதையாகவே தோன்ற நேர்ந்தனர். தனக்கு ஊழியம் புரிகிற வேலைக்காரிகளைப் பேர் சொல்லி அழைக்க நேர்ந்தால் சீதா என்றே கூறி விடுவான். சானகி! எனவும் கூப்பிடுவான். இது என்ன காமப் பைத்தியம்! என்று பணிப்பெண்கள் தமக்குள்ளேயே நகைத்துக் கொள்ளுவர். நெஞ்சம் பெரிதும் அஞ்சி நிற்பர் ஆதலால் வெளியே யாதும் பேசார். இரவு வேளைகளில் சீதா! சீதா! என்று பிதற்றுவதைக் கேட்டு அயலே வெருவி ஒதுங்கி நிற்பர். எண்ணம் எல்லாம் சீதையின் எழில் வண்ணமே; பேச்சு எல்லாம் அவள் பேரே; காட்சி எல்லாம் அவளது காமர் வடிவமே; இன்னவாறு சீதையின் மயமாகவே மையலும் மயக்கமும் எய்திக் காம வெறியனாய் மறுகி வாழ்ந்து வருகிறான் ஆதலால் தனது உண்மையான வாழ்வு நிலைமையை அப் பெண்ணரசியிடம் கூறிப் பேரருள் செய்யும்படி மருளோடு வேண்டினான்.

உருவெளித் தோற்றத்திலும் கண் எதிரேயும் சீதையின் வடிவத்தையே கண்டு வருகிறான்; ஆகவே கண் எலாம் நும்கண் ஆக்கி என்றான். உன்னைத் தவிர என் கண்கள் வேறு ஒன்றையும் காணவில்லையே! என்று தன் காட்சி நிலையை இங்ஙனம் காட்டியிருக்கிறான். கடுங்காதலில் உளம் கரைந்து போயுளது.

இராமனையே கருதிக் காண விழைந்து இரவும் பகலும் துயிலின்றிச் சீதையின் கண்கள் பருகியிருத்தல் போல் இராவணன் கண்களும் அவள் மேல் கொண்ட ஆசை மயக்கால் அவலமடைந்துள்ளன. அவ்வுண்மை கண்எலாம் நும் கண் ஆக்கி என்றதில் குறிப்பாகத் தெரிய வந்தது. கருவி கரணங்கள் யாவும் அவள்மயமாகவே மருவியிருக்கின்றன; பிரியமான அந்த மையல் நிலையை உரிமையோடு பரிதாபமாய் உருகி உரைத்துள்ளான்.

ஈசனே முதலா ஒருவற்கு ஆவி தோற்றிலேன்.

தனது வீரத் திறலையும் வெற்றி நிலையையும் விழுமிய ஆற்றலையும் வியந்து சுட்டி இவ்வாறு விளக்கிக் காட்டினான்.

இப்படி அதிசய வெற்றி வீரனாயிருந்து வந்த நான் இப்பொழுது அவல நிலையில் இழிந்து மதிகெட்டு மானமிழந்து உழலும்படி செய்து விட்டாயே! உனக்கு இரக்கமில்லையா? கண்ணோடிக் கருணை புரியாயாயின் மண்ணோடு மண்ணாய் நான் மாண்டு போகவேண்டியதுதான் என்று நீண்ட துயரோடு நேரே வேண்டியிருக்கிறான். நாச நிலையை நசையாக் காட்டினான்.

பெண்பால் வைத்த ஆசைநோய் கொன்றது.

உன்பால் வைத்த ஆசை நோயால் நான் செத்துத் தொலைந்தால் அந்த அவப்பழி உன்னைச் சும்மா விடுமா? இதனைக் கொஞ்சம் யோசனை செய்து பார்! ஒரு பெரிய அரசன் அநியாயமாய்ப் பதைத்துச் சாகும்படி செய்வது பாவம்; மரண வேதனையிலும் கொடிய துயரங்களை அடைந்து துடிக்கிறேன். எனது அழிவு நிலையை நோக்கியேனும் கொஞ்சம் அளிபுரிந்தருளுக.

நுணங்கி நின்று உணங்கும் ஆவி நாய் உயிர் ஆகும் அன்றே.

காம வேதனை தகித்து வர நாளும் துயரங்களால் துடித்து உழலுகிற தனது உயிர் வாழ்வை இவ்வாறு இழிவாக இகழ்ந்து கூறியிருக்கிறான். நாய்உயிர் என்றது மானம் கெட்டு இழிந்து

மிகவும் கொடிய துன்பங்களால் நலிந்து வதைவாளாய்ப் பதை பதைத்துப் பழியோடு உழந்து கிடக்கும் பாடு தெரிய வந்தது.

(நுணங்கல் = கரைந்து தேய்தல். உணங்கல் = வருந்தி மாய்தல்.

உயிர் தேய்ந்து தேய்ந்து மாய்ந்து மறுகி ஓய்ந்து ஊசலாடி உலைகின்றது; நாளும் நாளும் மீள மீள அலைகின்ற ஆவியின் அந்த அவல நிலைமையை அறிய விளக்கினான். தனது துயரம் பொறுக்க முடியாதது; யாதும் சகிக்க இயலாதது என்பதாம்.)

நூலோர் ஐயிரண்டு என்பர் பொய்யே.

காமத்தால் விளைகின்ற துயரக் குறிகள் பத்து எனக் காம நூல்களில் குறிக்கப் பட்டுள்ளன. அகப் பொருள் இலக்கணங் களும் அவ்வாறே உரைத்திருக்கின்றன. உரைக் குறிப்புகள் எல்லாம் நேர்ந்த நிகழ்ச்சிகளை ஓர்ந்து வந்துள்ளன.

"காட்சி வேட்கை உள்ளுதல் மெலிதல்
ஆக்கம் செப்பல் நாணுவரை இறத்தல்
நோக்குவ எல்லாம் அவையே போறல்
மறத்தல் மயக்கம் சாக்காடு என்ற
ஐயிரண்டு அவத்தையும்" (இலக்கண விளக்கம்)

"காட்சி முதலாச் சாக்காடு ஈறுக்
காட்டிய பத்தும் கைவரும் எனினே
மெய்யுறு புணர்ச்சி எய்துதற்கு உரித்தே."
(அகப்பொருள் விளக்கம்)

விரக தாபங்களின் மெய்ப்பாடுகளை இவை விளக்கி யிருக் கின்றன. ஒருவன் ஒருத்தியைக் காணுகின்றான்; அது காட்சி யாய் நின்றது. அவளை அடைய வேண்டும் என்று ஆசையுறு கின்றான்; அது வேட்கை ஆய் நேர்ந்தது. நேரவே அவளையே நினைந்து மெலிந்து புலம்பி நாணமிழந்து வேறு ஒன்றையும கரு தாமல் மறுகி மயங்கி மரண வேதனைகளை அடையும்படி வரு கின்றன. அவ் வரவுகள் ஈண்டு உறவாய் அறிய நேர்ந்தன.

இராவணன் சீதையைக் கண்டதும், வேட்கை கொண்ட தும், நினைந்து, மெலிந்து, புலம்பி, நாணம் இழந்து, கண் எல் லாம் அவளாய்ப் பெண் எல்லாம் அவளாய்ப் பேதுற்றலைந்து, யாவும் மறந்து, ஆவிமயங்கிச்சாவு நிலையில் அலமந்து உழலுகின்

றுன். அந்த மன்மத அவத்தைகள் இங்கே குறிக்க வந்தன. மதன விதனங்கள் பத்து என நூல்கள் வரம்பு செய்து உரைத்திருப்பது தப்பு. அளவிடலரியதுயரங்களை நான் அநுபவித்திருக்கிறேன்; அவை ஆயிரங்களுக்கும் மேலாம்; இவ்வாறு காமவேதனைகள் எண்ணிறந்தனவாய் விரிந்திருக்க ஐயிரண்டு என்று நூலோர் நுவன்றது பொய்யே என்று தான் மெய்யாக அநுபவித்துள்ள அவலத் துயரங்களை வையம் அறிய உரைத்தான்.

எல்லையில்லாத அல்லல்களில் அழுந்தி மானம் முதலியன இழந்து நாயுயிராய் நைந்து வருகிறேன்; என்பால் இரங்கி என்னை உய்வித்தருள் என்று உருகி நொந்து மறுகிவேண்டினுன்.

அறந்தரும் செல்வம் அன்னீர்! அமுதினும் இனியீர்!

சீதையை இப்படி உவந்து விளித்திருக்கிருன். புண்ணியம் தந்த பொருள்; அண்ணிய அமுது என அப் பெண்ணரசியை எண்ணி ஏங்கியிருத்தலால் இவ்வண்ணம் பேச நேர்ந்தான். அரிய பெரிய அரச செல்வத்தினும், இனிய தெய்வ அமுதத்தினும் பெரிதும் இனியவள் என மனம் உருகி மறுகியுள்ள மருமம் உரைகளில் வெளியாய் அவனது நிலைமை தெரிய வந்தது.

பேரின்ப நிலையமாய்ப் பெருகியுள்ள எழில் உருவே! விழுமிய திருவே! தமியேன் அழலிடைப்பட்ட வெண்ணெய் போல் உருகி உன்னல் நிலைகுலைந்து தவித்திருக்கிறேன்; என்னைத் தலை நிமிர்ந்து பார்த்துத் தண்ணளி புரிந்தருள் என்று தாழ்ந்து வேண்டி ஆழ்ந்த துயரோடு அலமந்து நின்றுன்.

இறந்து இறந்து உய்கின்றேன் யான்.

தனது உயிர் வாழ்வின் துயர நிலையை இங்ஙனம் தெரியவுரைத்தான். பெரிய வேந்தன் பேரிழவில் வீழ்ந்துள்ளான்.

மருவி மகிழலாம் என்று தான் கருதியது நிறைவேருது என்று எண்ணியவுடனே உயிர் போய் விடுகின்றது; எப்படியும் பெண்ணரசி இணங்கியருளுவாள் என்று நினைந்தவுடனே போன வுயிர் திரும்பி வருகிறது; இவ்வாறு நாளும் கணம்தோறும் காமப்பித்தால் செத்துச் செத்துப் பிழைக்கின்றுன் ஆதலால் இறந்து இறந்து உய்கின்றேன் எனத் தனது அவல வாழ்வைத் துலக்கி மொழிந்தான். ஒரே அடியாய் இறந்து போயி

னும் நல்லதே; வீண நகையால் மானம் கெட்டு ஈனமாய் உழந்து உழலுகின்றேனே! என அனுதாபம் உறும்படி பரிதாபமாய்ப் பரிந்து கூறினன். மையல் மோகம் மரண வேதனையாய் நின்றது.

பேர் எழில் மானம் கோல்ல என்றதனல் சீதையின் உருவ அழகில் உள்ளம் பறிபோய் எள்ளலடைந்து அல்லலுழந்து அலமந்து வருதலை நன்கு அறியலாகும். எழில் கொல்ல, மானம் கொல்ல எனத் தனித்தனி கூட்டி நோக்கி அவன் கொலையுண்டு வரும் நிலையைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும். கோல்ல என்னும் சொல்லால் கொலை வேதனைகள் எல்லாம் நேரே அறிய வந்தன. பரிதாப நிலையில் பதை பதைத்து உழல்கின்றான்.

என்னைப் பிறந்திலன் ஆக்க வந்தீர்!

இராவணனுடைய வாயிலிருந்து இப்படி வார்த்தை வந்திருக்கிறது. உயிர் வேதனைகள் உரைகளில் வெளியாயின.

சிறந்த அரசனாய்ப் பிறந்து உயர்ந்த செல்வங்களோடு ஒளி பெற்றுள்ளவன் இவ்வாறு உள்ளம் உடைந்து உரைத்திருப்பது அவனுடைய நிலைமைகளைத் தெளிவாக உணர்த்தியுள்ளது. தனது பிறவிக்குப் பயன் சீதையை உரிமையாகப் பெற்று மகிழ்வதே என அவன் முடிவு செய்திருக்கிறான். அந்த இனிய பேறு கிடையாவிடின் தன் பிறப்பு பயன் அற்றது; பாழ்பட்டது; தான் பிறந்தும் பிறவாதவனே எனத் தன்னுடைய தோற்றத்தை இங்ஙனம் எள்ளி இகழ்ந்து இனைந்து மொழிந்தான்.

இராவணன் பிறந்து அரிய பல செல்வங்களை அடைந்து தேவரினும் சிறந்து உயர்ந்து இருந்தான்; அந்த இருப்பெல்லாம் நெருப்பில் விழுந்த பஞ்சுப் பொதிகள் போல் நிலைகுலைந்து போயின; அந்தப் போக்கும் புலையும் தெரிய என்னை இலன் ஆக்க வந்தீர்! எனச் சீதையை நோக்கி இந்த வாக்கு வந்தது.

அழிவு நிலையைத் தானகவே போய் வலிந்து கவர்ந்து வந்து பழி நிலையைச் சீதையின் மேல் சுமத்தி இழுதையாய்ப் பிதற்றுகின்றான். அவள் வரவு இவன் அழிவுக்கு மூலகாரணமாய் நேர்ந்தது. அவ்வுண்மை ஈண்டு உலகம் அறிய வந்தது.

தன்னலம் கருதி இன்னவாறு பலவும் பேசி வந்தவன் முடிவில் காரியசித்தியைக் கைகூடும்படி கூரிய நோக்கோடு

கூறினான். உரைகள் உள்ளச் சிறுமைகளை உணர்த்தி எள்ளல் இழிவுகள் நிறைந்து ஈன நிலையில் ஊனம் படிந்து வந்தன.

அகலிகை என்பாள் இந்திரன் உரத்தைப் புல்லி எய்தினாள்.

தனக்கு அனுகூலமான இதனை இப்படி எடுத்துக் காட்டினான்.

அகலிகை இந்திரனைத் தழுவி இன்பம் எய்தினாள்; அதனால் அவளுக்கு என்ன இழிவு நேர்ந்தது? புகழே அன்றிப் பழி யாதும் இல்லையே. பெண்கள் குழுவில் அவள் உயர்ந்துதான் விளங்குகிறாள். அவளுடைய பெயரை மகளிர் எவரும் மகிமையாகவே புனைந்து வருகிறார். இதனை நீ நினைந்து சிந்திக்க வேண்டும். இன்ப நலனை இழந்து நிற்பது துன்பமேயாம்.

இந்திரன் எனக்கு ஏவல் செய்கின்றவன்; அவனை விட நான் எவ்வளவோ பெரியவன்; என்னை நீ உவந்து கொண்டால் உனக்குப் பேரும் கீர்த்தியும் பெருகுமேயன்றி யாதொரு பிழையும் நேராது. சீரும் சிறப்புமாய்ச் சிறந்து வாழலாம். உயர்ந்த சுக போகங்களில் வைத்து உன்னைப் பேண வேண்டும் என்றே வேணவாவோடு என்றும் நான் விழைந்து வருகிறேன். என் உள்ளன்பையும் உரிமைப் பாசத்தையும் உணர்ந்து விரைந்து இரங்கியருள்; வேறு யாரும் எனக்குத் துணை இல்லை; நீயே துணை என நெஞ்சம் கனியத் தஞ்சம் புகுந்து நெடிது மொழிந்தான்.

மையல் நோய்க்கு மருந்து இல்லை; மந்திரம் இல்லை.

தனது காம நோயின் நிலைமையை இவ்வாறு காட்டியிருக்கிறான். உடல்களில் தோன்றுகின்ற நோய்களுக்கு அவற்றிற்குத் தக்கவாறு உலகத்தில் மருந்துகள் உள. தையலார் மையலாய் உள்ளங்களில் மூளுகின்ற காம நோய்க்கு அவரது சேமச் சேர்க்கையே அன்றி வேறு யாதொரு மருந்தும் கிடையாது; மந்திரமும் இல்லை; ஆதலால் எனது நோயைத் தீர்ப்பதற்கு உனது வாயமுதமே மருந்து; அதனை நான் அருந்தி உய்ய அருள் புரிந்தருளுக என்று மருள்கொண்ட பேயன் மறுகிவேண்டினான்.

சுந்தரக் குமுதச் செவ்வாய் அமுது.

தீராத வெவ்விய நோயாய்த் தன்னை வருத்தி வதைத்து வருகிற காமப் பிணிக்குச் சேமமான மருந்து இன்னதுதான்

என்பதை இன்னவாறு நன்னயமாய் நவின்றான். நோய் கொண்டவன் பேய் கொண்ட பித்தனாய்ப் பிதற்றியிருக்கின்றான்.

அமுதச் சொல்லீர்! என்று சீதையை இப்படி விளித்திருக்கிறான். அக் குலமகளுடைய வாய்மொழியின் இனிமையை முதலில் கேட்டு மகிழ்ந்துள்ளான். சந்நியாச வேடம் பூண்டு வஞ்சிக்க மூண்டபோது சூது வாதுகள் யாதும் அறியாமல் சிறிது போது பேசிய அந்தப் பேச்சின் சுவையில் உள்ளம் பறிபோயுள்ளவன் ஆகலால் அமுதச் சொல்லீர் என இங்கே ஆவலாய்ப் பேசநேர்ந்தான். ஆசைநிலையை வாசகம் வடித்துக் காட்டியுளது.

சிறை அடைந்தபின் தன்னை எள்ளி இகழ்ந்து ஏசி வைதாலும் பழைய குரலோசை உள்ளத்தைக் கவர்ந்திருத்தலால் சொல்லை உவந்து புகழ்ந்து பேசி வருகிறான். உயிரை வாழ்விக்கும் அரிய இனிய தெய்வீக முடையது அமுதம்; அதனினும் இனியவள் எனச் சனகியை மனமுவந்து துதித்து வருதலால் அமுதினும் இனியீர்! என்று ஆசை மீதூர்ந்து பேசினான். பரியாதையாகவே இப்பொழுது எவ்வழியும் பன்மையில் பேசி வருகிறான். எப்படியும் கைவசப் படுத்தக் கருதியுழல்கின்றான்.

### காலில் விழுந்தது.

பணிவும் பரிவும் கனிய இவ்வாறு பேசி வந்தவன் முடிவில் எழுந்து சீதையின் எதிரே அடியில் விழுந்து தொழுதான். யாருக்கும் யாண்டும் தலைவணங்காத அதிசய வீரன் ஈண்டு மண்ணில் முடிபட விழுந்து பெண்ணின் காலைத் தொழுதது பேரதிசயமாயிருந்தது. பெண்ணாசை பெருகி எழுந்தால் ஆண்மை மானம் முதலிய மேன்மைகள் யாவும் அடியோடு குடிபோய் விடும் என்பதை அவன் செயல் படியறியச் செய்தது. கருங்கல் அனைய வலிய நெஞ்சரும் காம தாபத்தால் தரும்பாயிழிவர் என்பதற்கு உலகம் அறிந்த சான்றாய் அவன் நிலவி நின்றான்.

"ஒன்றிய காமநோய் உள்ளத் துறுமாயின்
குன்றின் அனையாரும் குன்றுவார்---வென்றிமிகு
தென்னிலங்கை மன்னவனும் சீதை அடிவிழுந்து
பன்னித் தொழுதான் பணிந்து."

காமதாபத்தால் நிலைகுலைந்து தலை வணங்கி இராவணன் புலையடைந்துள்ள நிலையை இதனால் உணர்ந்து கொள்ளுகிறோம்.

நசை படிந்த அளவு வசை படிகின்றது: அதனை வென்ற அளவு இசை விளைகின்றது. ஆசையை வென்றவர் உயர்ந்த பெரியோராய் ஒளிபெறுகின்றார்; அதன் வசமாய் நின்றவர் இழிந்த சிறியோராய் எவ்வழியும் தாழ்ந்து இழிவுறுகின்றார்.

பொன் ஆசையினும் மண் ஆசையினும் பெண் ஆசை மிகவும் கொடியது. அந்த ஆசை நெஞ்சு புகுந்தால் எவரும் பஞ்சு படாதபாடு படுவர். ஞான யோகிகளும் மான வீரர்களும் அதனால் ஈனமடைந்துள்ளனர் என்றால் அதன் வேகமும் விறலும் எவ்வளவு அதிசய நிலையில் ஓங்கியுள்ளன! என்பதை ஊன்றியுணர்ந்து காமத்தின் கடுந்துயரை ஓர்ந்து கொள்ளலாம்.

பசி வந்தால் மானம் குலம் கல்வி முதலிய பத்தும் பறந்து போம் என்றார் ஔவையார். காமம் வந்தால் யாவும் நாசமாய் ஒழிந்து போம் என்பதை இலங்கை வேந்தன் இங்கே நன்கு விளக்கி நின்றான். அவனுடைய மையல் நோய் வெய்யதாயது.

சீதை பதைத்தது.

வணங்கா முடியனான அவன் சீதை இணங்கியருளும்படி அவளது அடியில் நெடிது விழுந்து தொழவே அக்குலமகள் குலை துடித்தாள். கொடிய புலியைக் கண்ட புள்ளிமான் போல் உள்ளம் நடுங்கி அல்லலுழந்து அலமந்து பதைத்தாள்.

"வல்லியம் மருங்கு கண்ட மான் என மறுக்கம் உற்று
மெல்லியல் ஆக்கை முற்றும் நடுங்கினள்."

இராவணனைக் கண்டு சீதை நடுங்கியுள்ள நிலையை இதனால் அறிந்து கொள்ளுகிறோம். வல்லியம் = புலி. கொல்லும் இயல்பினையுடைய வலிய புலியை அருகே கண்ட மெல்லிய மான் போல் மறுகினாள் என்றதனால் அந்த மறுக்கத்தையும் கலக்கத்தையும் மன நிலையையும் குறிப்பாகக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளலாம்.

துடுக்காய்த் துணிந்து தன்னைத் தொட்டு விடுவானோ? என்று உள்ளம் துடித்திருக்கிறாள். அவ்வாறு கலங்கி நடுங்கினவள் நெஞ்சம் துணிந்து நேரே பேச நேர்ந்தாள். சாக நேர்ந்தா

லும் சரி என்று துணிந்து விவேகங்களைப் போதிக்க நேர்ந்தவள் எதிரே கிடந்த சிறிய துரும்பு ஒன்றை நோக்கியே சொல்லலானாள். அவன் முகத்தைப் பார்த்துப் பேசாமல் புல்லை நோக்கிப் பேசியது இம் மெல்லியலின் நல்லியல்பை விளக்கி நின்றது.

பேசிய நிலை.

வெட்கமும் வெறுப்பும் துக்கமும் நிறைந்துள்ளமையால் அவனுடைய முகத்தை நோக்கக் கூசினாள். துரும்பை நோக்கிப் பேசினாள். பேசிய மொழிகள் உள்ளத்தின் உறுதி நிலைகளைத் தெளிவாக்கி வெளியே ஒளி வீசி வீறுகொண்டு வந்தன.

சானகியின் மான மொழிகள்

பழியிது பாவம் என்று பார்க்கிலை! பகரத் தக்க
மொழியிவை அல்ல என்பது உணர்கிலை! முறைமை நோக்காய்;
இழிகிலை நெஞ்சம் வஞ்சக் கிளையொடும் இன்றே காறும்
அழிகிலை என்ற போதுஎன் கற்பென்னும்? அறந்தான்என்னும்?

வானுள அறத்தில் தோன்றும் சொல்வழி வாழும் மண்ணின்
ஊனுள உடம்புக் கெல்லாம் உயிருள உணர்வும் உண்டால்
தானுள பத்துப் பேழ்வாய் தகாதன உரைக்கத் தக்க
யானுளன் கேட்க என்றால் என் சொல்லாய் யாது செய்யாய்!

வாசவன் மலரின் மேலான் மழுவலான் மைந்தன் மற்றைக்
கேசவன் சிறுவர் என்றித் தன்மையோர் தம்மைக் கேளாய்
பூசலின் எதிர்ந்தேன் என்றாய் போர்க்களம் புக்க போதென்
ஆசையின் கனியைக் கண்ணில் கண்டிலை போலும் அஞ்சி. (3)

ஊணிலா யாக்கை பேணி உயர்புகழ் சூடாதுன்முன்
நாணிலாது இருந்தேன் அல்லேன் நவையறுகுணங்கள் என்னும்
பூணெலாம் பொறுத்த மேனிப் புண்ணிய மூர்த்தி தன்னைக்
காணலாம் இன்னும் என்னும் காதலால் இருந்தேன் கண்டாய்!

சென்று சென்று அழியும் ஆவி திரிக்குமால் செருவில் சேமக்
குன்றுநின் றனைய தம்பி புறக்கொடை காத்து நிற்பக்
கொன்றுநின் தலைகள் சிந்தி அரக்கர்தம் குலத்தை முற்றும்
வென்றுநின் றருளும் கோலம் காணிய கிடந்த வேட்கை. (5)

எனக்குயிர் பிறிதும் ஒன்றுண்டு என்றிரேல் இரக்கம் அல்லால்
தனக்குயிர் வேறின்றாகித் தாமரைக் கண்ண தாகிக்

தனக்கரு மேகம் ஒன்று கார்முகம் தாங்கி யார்க்கும்
மனக்கினி தாகி நிற்கும் அஃதன்றி வரம்பிலாதாய்! (6)

(மாயா சனகப் படலம், 19-24)

தன்னிடம் வந்து வீணே வாதாடி ஈன இச்சையால் தன்னைக் கெஞ்சித் தொழுத இராவணனை இகழ்ந்து வெறுத்துச் சானகி பேசியுள்ள வீர மொழிகளை இங்கே விழைந்து கேட்டு வியந்து நிற்கிறோம். அன்னியமான அயலிடத்தே தன்னந் தனியளாயிருந்தும் கொடிய மன்னவன் எதிரே யாதும் அஞ்சாமல் மோதி முனிந்து கூறியிருக்கும் இப் பதிவிரதையின் அதிசய மன நிலை யாரும் துதிசெய்து தொழும்படி தோன்றியுள்ளது.

உள்ளத்தில் உண்மையான கற்பு உறைந்திருத்தலால் யாதும் தளராத திண்மையும் உறுதியும் ஊக்கமும் வீரமும் பெரிதும் ஓங்கியுள்ளன. உயர்ந்த அரசர் குடியில் பிறந்த சிறந்த சத்திரியகுல மங்கை என்பதை உரைகள் நன்கு உணர்த்தி நிற்கின்றன. எவ்வளவு பெரிய வீரரும் எதிர் நிற்க அஞ்சுகின்ற அருந்திறலுடைய அரசனை ஒரு துரும்பாக இகழ்ந்து துச்சமாகப் பேசியிருக்கிறாள்: "ஏ அரக்கப்பதரே! அறிவுகேடனாய் அவமே நீ அழிய நேர்ந்துள்ளாய்? பழி இது, பாவம் இது என்று விழி திறந்து நீ யாதும் உணரவில்லை. ஒரு பெண்ணின் எதிரே பேசத் தக்கவார்த்தைகள் இவை; தகாதன இன்ன; என்பதை என்ன வகையிலும் ஏதும் தெரியவில்லை. மானம் மரியாதை ஒழுங்கு நீதி முறைகளுள் ஒன்றையும் கருதாமல் ஒரு சிறிதும் யோசியாமல் நெஞ்சத்துடுக்கோடு நீசத்தனமாய் வாய்க்கு வந்தபடியெல்லாம் பேசுகின்றாயே! நீ விளங்குவாயா? பேசிய வாய்புழுத்து நெஞ்சம் கிழிந்து நாக்கு அழுகிக் குலத்தோடு நீ நாசமாய்ப் போகாமல் நீசமாய் நேரே நிலைத்து நிற்கின்றாயே! தருமதேவதையும் பொறுத்து நிற்கிறதே; நான் நல்ல பதிவிரதையானால் நீ இப்படிச் சொல்லுவாயா? பொல்லாத புலைமொழிகளைப் பேசியும் நீ பொன்றி ஒழியாமல் நிற்பாயானால் நான் கற்புடையவள் என்று எப்படிச் சொல்வது? என் கற்பும் நெறியும் அற்பங்களாய் அவமதிக்க நின்றன. எனது இழி நிலையே நீ பழிமொழிகளை நெஞ்சம் துணிந்து நேரே பேசும்படி செய்துள்ளது. உடல் எடுத்த உயிரினங்கள் எல்லாம் பெரும்பாலும் உணர்வு

கள் உடையனவாக உள்ளன; அந்த உயிருணர்வு உன்னிடம் யாதும் காணோம். மடமையும் கொடுமையும் மண்டி நிற்கின்றன. நீசவார்த்தைகளை ஆசையோடு பேச உனக்கு வாய்கள் பல இருக்கின்றன; அவற்றைக் கேட்க நான் ஒருத்தி பிறந்திருக்கிறேன். நீ எதைத்தான் பேசாய்? என்னதான் செய்யாய்! ஐயோ! உன் அறிவுகேடு இருந்தபடி என்னே! எனது அருமை நாயகனுடைய வீரப்பிரதாபத்தை அறிந்திருந்தும் சிறுமை நீங்கி உய்யாமல் சீரழிந்து செத்துத் தொலைய மூண்டுள்ளாயே! அந்தச் சுத்தவீரனது அதிசய நிலையை உனக்கு யாரும் சொல்லுவார் இல்லையா? தேவர் முதல் யாவரையும் வென்றுள்ளதாகச் செருக்கி நிற்கும் உன்நெஞ்சத் திமிர் எல்லாம் பிரசண்டமாருதத்தின் எதிர்ப்பட்ட பஞ்சுத்துய் போல் அந்தக் கோதண்ட வீரன் எதிரே நாசமடைந்து போவதை நீ விரைந்து அறிந்து கொள்வாய்! ஊண் இழந்து உறக்கம் துறந்து இந்த ஊன உடலை நான் பேணி வருவது எல்லாம் குணநலங்கள் நிறைந்த அந்தப் புண்ணிய மூர்த்தியைக் காணலாம் என்னும் ஆசையினாலேயாம். எனது இருப்பையும் குறிப்பையும் ஒருசிறிதும் உணராமல் நீச நிலையில் வந்து வந்து வாதாடி வீணே புலம்பி உழல்கின்றாயே! பசியகோலத் திருமேனியாய் பருவியுள்ள எனது ஆசையின் கனியை மீளவும் கண்டு மகிழலாம் என்னும் காதலினாலேயே இந்த உடலை விட்டுப் போகாமல் என் உயிர் ஊசலாடிக்கொண்டிருக்கிறது. அரக்கர்குலத்தை அடியோடு கருவறுத்துக், கிளைகளை அழித்து, உன் தலைகளைத் தரையில் உருட்டி விசயகோதண்டத்தைக் கையில் தாங்கி உரியதம்பி அருகே நிற்க இரணகளத்தில் வெற்றிப் பொலிவோடு வீரகம்பீரமாய் நிற்கின்ற அந்தக் கொற்றக் குரிசிலின் திருமுகமண்டலத்தை ஒரு முகமாய்க் கண்டு உள்ளம் களிக்கலாம் என்று வெள்ளம் போல் பெருகியுள்ள அப்பேராசையாலேயே நான் உயிர் பிழைத்திருக்கின்றேன்; எனக்கு உயிர் தனியே வேறு ஒன்று இருப்பதாக எண்ணாதே; ஏ பண்ணாய்! என் உயிர் நிலையைக் கொஞ்சம் எண்ணிப்பார்; என்னுடைய உயிர் இராமன் என்னும் பெயரையுடையது; கருணை நிறைந்தது; தருமம் சுரந்தது; மரகத வண்ணமாய் ஒளிவீசி எழில் சுரந்து மிளிர்வது; நீருண்டு சூல் கொண்டகாள மேகம் நீளமான ஒரு வில்லோடு வானில் உலாவி நிற்பதுபோல்

வையத்தில் நிலாவிக் கண்டவருடைய கண்ணையும் கருத்தையும் கவர்ந்து, காணுந்தோறும் கருதுந்தோறும் பேரானந்தங்களைவிளைத்து ஓரானந்தமாய் உள்ளது. [இந்த உண்மையை உணர்ந்து உன் புன்மையை ஒழிந்து புலை நீசங்களை மறந்து உய்தி பெறுக" என்று சீதை இவ்வாறு பேசி முடித்தாள்.

வார்த்தைகளில் உள்ளக் கொதிப்பும் உணர்ச்சிகளும் உறுதியுண்மைகளும் ஊடுருவி யுள்ளன. இச்சைமீதூர்ந்து அவன் பேசிய பேச்சுகள் கொடிய கொதிப்பை மூட்டினமையால் உரைகள் கடுமையாய்க் கதித்து வந்தன.]

(நெஞ்சம் கிழிகிலை! கிளையோடும் அழிகிலை!
என் கற்பு என்னும்? அறம்தான் என்னும்?

இந்த வார்த்தைகளில் சினமும் சீற்றமும் வீறும் வேகமும் விரவிநிற்றலை ஊன்றி உணர்ந்து கொள்கிறோம். அடலாண்மை கொண்டுள்ள அசகாயசூரனை நோக்கி இவைபாய்ந்திருக்கின்றன.

"எனக்கு எப்பொழுது இணங்குவாய்? இந்திரனுக்கு இணங்கி அகலிகை இன்பம்பெறவில்லையா?" என்று இன்னவாறு அவன் கூறிய ஈனமொழிகள் உள்ளத்தைச் சுட்டு உயிரைத் துடிக்கச் செய்துள்ளமையால் வார்த்தைகள் கடுத்துக் கொதிப்பேறி வந்தன. [ஆ பாதகா! பழிபாவங்களை அஞ்சாமல் பேசத்தகாதபேச்சுகளை யெல்லாம் என்எதிரே பேசுகின்றாயே!" என்று உள்ளம் கொதித்திருத்தலை உரைகள் உணர்த்தி நிற்கின்றன. (நீச வார்த்தைகளைத் துணிந்து சொன்ன நீ நாசமாய்ப் போகவில்லையே! இன்னும் உயிரோடு என்எதிரே நிற்கின்றாயே! என்று துயரோடு துடித்தாள் ஆதலால் நெஞ்சம் கிழிகிலை அழிகிலை என ஆவேசமாய் ஆயாசம் அடைந்து விரைந்து விரைந்து பேசினாள்.]

(கெட்டவார்த்தைகளைப் பேச அவன் வாயைத்திறக்கும் போதே நெஞ்சம் பிளந்து நேரே தலை வெடித்துச் செத்துவிழுந்திருக்கவேண்டும்; அவ்வாறு சாகவில்லையே! என்று வேகமாய்த் தவித்துள்ளமையால் தன்னையும் தருமத்தையும் இகழ்ந்து சொன்னாள். என் கற்பு என்னும்? என்றது உள்ளம் நொந்து வந்துள்ளது.] நான் நல்ல பதிவிரதையானால் பொல்லாத புலைமொழியை இவன் இப்படி என்னை நோக்கிப் பேசுவானா? அவ்வாறு பேசினவன் உடனே அழிந்து படாமல் உயிரோடு நிற்பானா? இவன்

நிலையாய் நிற்றலால் என் கற்புநிலை இழிந்ததே என்று ஏங்கித் தவித்திருக்கிறாள். அநியாயம் செய்தவனை எரித்து அழிப்பதற்கு என் கற்புக்கு ஆற்றல் இல்லை எனினும் தருமமும் செயலிழந்து வீணே நின்றதே! என்று அதனையும் கடுத்து வெறுத்தாள்.

கற்பும், அறமும் அற்புத ஆற்றல்களை யுடையன. அநீதிகளை அழித்து ஒழிப்பன; நீதிகளை நிலை நிறுத்தி வருவன என்னும் உண்மை இங்கே நுண்மையாக உணர வந்தது.

நீதிக்கேடான நீசமொழிகளைப் பேசினவன் உடனே நாசமடையவில்லையே! என்று நைந்து துடித்தது, உள்ளம் நொந்து தவித்துள்ள நோவுகளால் நேர்ந்தது. தூயபதிவிரதை ஆதலால் தீய வார்த்தைகளைச் சகிக்க முடியாமல் கொதித்திருக்கிறாள். உள்ளம் கொதிக்கவே உரைகள் கடுமையாய் வந்தன. மடமையும் கொடுமையும் மானக்கேடும் உடையவன் என அவனை ஈனமாக எண்ணி இகழ்ந்து இப் புண்ணியவதி நொந்திருக்கிறாள்.

தருமத்தையே தனக்கு என்றும் உறுதித்துணையாக உரிமையோடு கருதி இருப்பவள் என்பது அறம் என்னும்? என்றதனால் தெரிய வந்தது. நல்லவர்களுக்கு அல்லல் நேர்ந்தால் தருமதேவதையைக் கருதி யுருகுவர் என்னும் உண்மையும் ஈண்டுஉணர நேர்ந்தது. உறுதித்துணை உரிமையோடு உணர வந்தது.

என் ஆசையின்கனி என இராமனைக் குறித்திருக்கும் வாசகம் அதிமதுரமாய் இனிமை சுரந்து வந்துளது. தனது நாயகன் பால் தான் வைத்துள்ள ஆசை நிலையை அத்தீயவன் தெரிந்துணருமாறு இத்தூயவள் இவ்வாறு பேசியருளினாள். உலகத்தில் தனக்கு வேறு எதிலும் ஆசையில்லை; இராமனைக் கண்டு களித்துக் கருதி உருகி மருவி மகிழ்வதே பெருகிய ஆசையாய் உருவு கொண்டு பேரின்பத்தை விளைத்து வந்துள்ளது.

அன்பினில் விளைந்த அமுது என இறைவனைத் திருவாசகம் குறித்தது; ஆசையில் விளைந்த கனிஎன இராமனை இந்த ஒருவாசகம் உரைத்தது. தனது ஆசைபழுத்த அருங்கனியையே அவாவி அல்லும் பகலும் உள்ளம் உருகி வருபவளிடம் நீசப்பழுத்தவன் வந்து நெறிகேடான மொழிகளைப் பேசிப் பரிதாபமான பழி நிலைகளில் இழிந்து பாழாய் நாசமடைய நேர்ந்துள்ளான்.

பலமுறையும் வந்து தன்பாழ்வாய் திறந்து பழிமொழிகளைப் பேசும் அழிமதியாளன் விழிதிறந்து தெளியும்படி தனது வாழ்வையும் சூழ்வையும் வரைந்து காட்டினாள். “எனது பிராணநாயகனைப் பிரிந்த போதே நான் இறந்து போயிருப்பேன்; அவ்வாறு இறவாமல் இவ்வாறு இருந்துவாழ்வதற்கு உரிய காரணத்தை நீ உணர்ந்து கொள்ளவேண்டும்” என நேரே உணர்த்தியருளினாள்.

புண்ணிய மூர்த்தி தன்னைக் காணலாம் என்னும்
காதலால் இருந்தேன் கண்டாய்!

தன் இருப்பின் குறிக்கோளை இங்ஙனம் உணர்த்தினாள்.

அறிவு கெட்டு நாணம் இன்றி மானம் குன்றி நான் வாழவில்லை: எனது உயிர்வாழ்வு இன்னவகையில் இந்த உடம்பில் மன்னியுள்ளது என அவன் உன்னி யுணர வுரைத்தாள்.

இராமனை இங்கே புண்ணியமூர்த்தி என்றது இராவணனைப் பாவப் பழியன் என்று குறித்தபடியாம். தருமமே வடிவமான அந்தப் புனிதமூர்த்தியைக் கண்டு மகிழலாம் என்னும் ஆசையினாலேயே நான் உயிர் வாழ்ந்து வருகிறேன். என்னிடம் நீசமான வார்த்தைகளைப் பேசி நாசமடையாதே என அவன் நாவடங்கப் பேசினாள். உரைகள் உள்ளத்தின் உறுதி நிலையை உணர்த்தி உயர்ந்தபெண்மையின் உண்மைநீர்மையை விளக்கிநின்றன.

நவை அறுகுணங்கள் என்னும் பூண்எலாம் பொறுத்தமேனி.

என்றது அகிலமங்களகுணகண சொரூபி என அவனது திவ்விய நீர்மைகள் தெரியவந்தது. குணங்களையும் புண்ணியத்தையும் வரைந்து கூறியது இராவணனது குற்றங்களையும் பாவத்தையும் விரைந்து காட்டியபடியாம். மாணிக்கம் வயிரம் முதலிய நவமணிகளால் அமைந்த உயர்ந்த அணிகளை உடல்முழுதும் அணிந்து அரசகோலமாய் ஆடம்பரத்துடன் வந்துள்ளான் ஆதலால் அந்தப் பூண்களின் புலைநிலைகளை இகழ்ந்து தன் தலைவனைப் புகழ்ந்து பேசினாள். இழிந்தஅவன்தெளிந்து விலக மொழிந்தாள்.

துறவியாய் வனவாசம் செய்ய வந்திருத்தலால் இராமன் யாதொரு அணியும் திருமேனியில் அணியவில்லை: அப்படியிருந்தும் அரியபல அணிகள் அவன் அணிந்திருப்பதாகச் சீதை புனைந்து புகழ்ந்து இங்கே உவந்து கூறியது வியந்து சிந்திக்க வந்தது.

அமைதி அடக்கம் அன்பு பொறுமை கருணை சீலம் சத்தியம் முதலிய உத்தம குணங்கள் எல்லாம் இராமனிடம் உவந்து குடிகொண்டுள்ளன ஆதலால் குண நிலையம் என உலகம்புகழ அவன் ஒளிபெற்றுள்ளான். பூண் எலாம் பொறுத்த என்றது குணங்களுக்கெல்லாம் ஆதாரமாய்த் தாங்கி நிற்கும் தகைமை தெரிய வந்தது. இனிய நீர்மைகள் இங்கே சீர்மையாக வந்தன.

நீ உடலில் மினுக்கி வந்துள்ளவை ஊனமான பிண அணிகள் என இராவணனை இகழ்ந்து கூறும் குறிப்பில் இராமனது குணநலங்களை அணிகள் என்று குறித்தாள். புனிதமான குண நலங்களையுடைய புண்ணிய சீலனையே எண்ணி உருகி யிருக்கும் என்னிடம் வந்து கொடியபாவியானநீ இப்படி மடமையாகப் பேசுகின்றாயே! என்று ஏசுகின்ற முறையில் பேச்சுகள் வந்துள்ளன. நசையாய் வந்தவன் வசையாய் இழிந்தான்.

தனது ஆசைப் பொருளை அறிந்து தெளிந்து நீசமருள் ஒழிந்து பேசாமல் அவன் ஒதுங்கிப் போம்படி உரைகள் அரும்பி நிற்கின்றன. குறிப்பு மொழிகள் கூர்ந்த நோக்குடையன.

புண்ணிய மூர்த்தியைக் காண வேண்டும் என்று வேணவாவோடு விரதம் பூண்டுள்ள என் கண் எதிரே வந்து நின்று பாவி பழிமொழி ஆடுகின்றனே! என்று கழிபெருந்துயரோடு இக் குலமகள் ஆவி பதைத்து அலமந்து தவித்திருக்கிறாள்.

தனது ஆவி அலமந்திருக்கும் நிலையை இத்தேவி தெளிவுறுத்தியிருப்பது பேரிரக்கமாய்ப் பெருகியிருக்கிறது. உயிரின் அவத்தை துயரின் நிலைகளைத் துலக்கி அயலே சூழலையும் விளக்கி நின்றது. அந் நிலைமையை வாய்மொழி ஈண்டு நேரே உணர்த்தியது.

சென்று சென்று அழியும் ஆவி.

சீதை இலங்கைச் சிறையில் உயிர் வாழ்ந்து வரும் நிலையை இது உணர்த்தியுள்ளது. தனது நாயகனைப் பிரிந்தபின் சானகியின் உயிர் ஒரு நிலையில் இல்லை. உள்ளும் புறமும் ஊசலாடியே உள்ளது; அவ்வுண்மை உரையால் தெரிய வந்தது.

நெடியகடல் இடையே ஆழ்ந்து அகன்று கிடத்தலால்இனிமேல் தனது நாயகனைக்காண முடியாது என்று எண்ணுவாள்; எண்ணவே உயிர் துடித்து உடலை விட்டு வெளியே போகநேரும்;

எப்படியும் அவ்வீரன் வந்தருளுவான் என்று ஆவலோடு கருது வாள்; கருதவே போகநேர்ந்த உயிர் மீளவந்துசேரும். இவ்வாறு கணந்தோறும் செத்துச் செத்துப் பிழைக்கின்றாள் ஆதலால் ஆவி சென்று சென்று அழியும் என்றாள்.

இங்ஙனம் அவல நிலையில் கவலை தோய்ந்துள்ள உயிர் நிலை யாக உடலில் நிலைத்துவருதற்குத் தலையாய காரணத்தை நேரே குறித்துக் காட்டினாள். போரில் யாவரையும் அடியோடு அழித்து விசயகோதண்டத்தோடு வீரகம்பீரமாய் நிற்கும் அந்த ஜெயராமனுடைய வெற்றிக் கோலத்தைக் காணலாம் என்னும் பேராசையே எனது ஆருயிரை அயலே போக ஒட்டாமல் தடுத்துக் காத்து வருகிறது எனத் தன் சீவிய நிலையை ஓவியமாகக் காட்டினாள். இத்தேவியின் வாழ்வு இங்கு நன்கு தெளியவந்தது.

'கோலம் காணிய கிடந்த வேட்கை அழியும் ஆவி திரிக்கும்.' என்றது தன் உயிர் வாழ்வை ஞாலம் காணக்காட்டியபடியாம்.

அரக்கர்குலம் முழுவதையும் அழித்து ஒழித்து இராவணனை வென்று அதிசய வெற்றியாளனாய்ச் சமரபூமியில் தம்பி அயலே நிற்க இராமன் வில் ஏந்தி நிற்கும் வீரக் கோலத்தை மானச நோக்கால் சானகி கண்டு கொண்டிருக்கும் காட்சியை இங்கே மருமமாய் நாம் கண்டு மகிழ்கின்றோம். இளையவன் அண்ணன் அருகே வில்லோடு கண்ணியமாய் நிற்கும் வண்ணத்தை வடித்துக் காட்டித் தன் எண்ணத்தை வெளிப்படுத்தினாள்.

தம்பி புறக்கோடை காத்து நிற்ப நின்று அருளும் கோலம்.

கோதண்டவீரனது வெற்றிக் கோலத்தை இப்படிப் பாவனை செய்து சீதை தியானம் புரிந்து கொண்டிருக்கிறாள். அருளும் என்றதில் பொருள் நலம் பொலிந்துளது. கொடியவர்களைத் தொலைத்து நல்லவர்களைக் காத்து அருளவே வில்லும் கையுமாய் அவ்வீரவள்ளல் வெளிவந்துள்ளான். அரக்கர் குலத்தை அழித்தவன் தன்பால் இரக்கம் கொண்டு தன்னைச் சிறைநீக்கி அருளுவான் என்று அவாவி நிற்றலால் அருளும்கோலம் என அவனது உருவத் திருமேனியையும் உள்ளப் பரிவையும் ஒருங்கே கருதி உவந்து மொழிந்தாள். இன்ப நினைவுகள் அன்பு கனிந்துள்ளன.

இவ்வாறு பலவும் கூறிவந்தவள் முடிவில் தனது இனிய உயிர் இராமனே என்பதைத் தெளிவுற உரைத்தாள். அவன் விழி

திறந்து உய்ய வழியும் போதித்தாள். "உனக்கு அழிவு காலம் நெருங்கியுளது; மேலும் பழி மொழிகளைப் பகர்ந்து பாவம் படிந்து பாழாகாதே; வெளியே போய்விடு" என்று வெகுண்டு கூறினாள். தூயவள் உரை தீயவனுக்குத் தீயாய் நேர்ந்தது.

இராவணன் சீறி நின்றது.

தான் அன்போடு பரிந்து பேசிப் பணிந்து வேண்டியும் தனது வேண்டு கோள்களை யாதும் மதியாமல் இகழ்ந்து வெறுத்துத் தன்னைச் சீதை ஏதமா இழித்துப் பழித்தது இலங்கைவேந்தனுக்குக் கொடிய கோபத்தை நெடிது மூட்டியது.

கொன்று நின் தலைகள் சிந்தி என்ற இந்த வாசகம் நெருப்பைக்காய்ச்சி வார்த்தது போல் அவன் செவியில் பாய்ந்தது. பாயவே அவன் ஆங்காரத்தோடு சீறி உருத்துக் கோரமாய் வீறிட்டு எழுந்தான். வெகுண்டு மொழிந்தான்:" அறிவுகெட்ட பேதையே! உன்னைப் போல் முழுமூடமானவளை உலகத்தில் கண்டிலேன்; எனது மகிமையை ஒரு சிறிதும் உணராமல் வீணவார்த்தைகளை வாய்த்துடுக்காய்ப் பேசினாய்! என்னை இராமன் வென்றுவிடுவான்; பின்பு அவனோடு கூடிவாழலாம் என்று நீ நாடியிருக்கிறாய்; உன்னுடைய உள்ளப் போக்குகள் எள்ளி நகைக்கத்தக்கன. தேவரும் எனக்கு அஞ்சி ஏவல் செய்கின்றனர்; மூவுலகங்களிலுள்ள யாவரையும் நான் வென்றிருக்கிறேன். அற்ப மனிதனான இராமனை எளிதே கொன்று தொலைத்துப் படைகளையும் அடியோடு அழித்து விடுவேன்; வானரசேனைகளோடு வந்திருக்கிறான் என்று களித்திருக்கிறாய் போலும்! யாவரையும் அழித்து விட்டு அயோத்திக்கும் மிதிலைக்கும் போய் அங்குள்ளவரைப் பாழாக்கி முடித்துச் சனகனைக் கையோடு கட்டிப் பிடித்து வரும்படி பெரிய அரக்கர் சேனைகளை அனுப்பியிருக்கிறேன். நீ பிறந்த இடமும் புகுந்த இடமும் அடியோடு அழிந்து போயின என்று அறிந்து கொள்! எனது நிலைமையையும் உணர்ந்து தெளிந்து கொள்!" என இவ்வாறு ஆங்காரமாய்ப் பேசினான்.

அவனுடைய *கோபக் கொதிப்புகள் காமதாபங்களைக் கடந்து கடுமையாய் வந்தன. சீதை திகிலடைந்து நடுங்கும்படி கொடிய சுடுமொழிகளைப் படுமோசமாய்க் கூறினான். சினமும் சீற்றமும் உரைகளில் ஒலித்து உக்கிர வீரமாய் ஓங்கி நின்றன.

இனத்துளார் உலகத் துள்ளார் இமையவர் முதலினோர்என்
சினத்துளார் யாவர் தீர்ந்தார் தயரதன் சிறுவன் தன்னைப்
புனத்துழாய் மாலை யான்என்று உவக்கின்ற ஒருவன்புக்குன்
மனத்துளான் எனினும் கொல்வேன் வாழுதி பின்னை மன்னோ(1)

வளைத்தன மதிலை வேலை வகுத்தன வரம்பு வாயால்
உளைத்தன குரங்கு பல்கால் என்றகம் உவந்த துண்டேல்
இளைத்தநுண் மருங்குல் நங்காய்! என்எதிர் எய்திற்றெல்லாம்
விளக்கெதிர் வீழ்ந்த விட்டில் பான்மையே வியக்க வேண்டா(2)

கொற்றவாள் அரக்கர் தம்மைஅயோத்தியர் குலத்தைமுற்றும்
பற்றிநீர் தருதிர் அன்றேல் பசுந்தலை கொணர்திர் பாரித்து
உற்றதொன் றியற்றுவீர் என்று உந்திலேன் உந்தை மேலும்
வெற்றியர் தம்மைச் செல்லச் சொல்லினன்விரைவின் என்றான்.

சீறி எழுந்து இராவணன் ஆங்காரத்தோடு பேசியுள்ள நிலைகளை இவை காட்டியுள்ளன. நெடுஞ்செருக்கும் கடுந்துடுக்கும் கொடுந் தீமையும் பேச்சில் பெருகி யிருக்கின்றன. 'தன்னைத் திருமாலின் அம்சம் என்று சொல்லிக் கொண்டு உலகத்தை ஏமாற்றி வருகிற அந்தத் தசரதன் மகன் எனக்குப் பயந்து இனி எங்கே போய் மறைந்திருந்தாலும் அவனைக் கொல்லாமல் விடேன்; உன் உள்ளத்தில் புகுந்து ஒளிந்தாலும் துள்ளத் துடிக்கக் கொல்லுவேன்; கடலைக் கடந்து குரங்குப் படைகள் ஈண்டு வந்திருப்பினும் என்னைக் கண்டதும் விளக்கில் வீழ்ந்த விட்டில்கள் போல அழிந்து ஒழிந்தே போம்; அழிவு நிலை அந்த அளவோடு நிற்கவில்லை; அயோத்திக்கும் மிதிலைக்கும் பெரிய போர் வீரர்களோடு நெடிய படைகளை அனுப்பியுள்ளேன்; இராமன் குடியிலுள்ள அனைவரையும் கொன்று அங்கே தலைமையாயுள்ளவர்களுடைய தலைகளை அறுத்துக் கொண்டு வரும் படி பணித்திருக்கிறேன். மிதிலா நகரத்தை அழித்துப் பாழாக்கிச் சனகனைச் சிறையாகப் பிடித்து வருமாறும் குறித்து விடுத்துள்ளேன். என்னுடைய ஆணையின்படி யாவும் விரைவில் முடிந்து வரும்; உன் கண்ணால் நீ நேரே காண்பாய்; அதன் பின்னராவது என் வீரப்பிரதாபத்தைத் தெளிவாயாக!'' என இன்னவாறு அவன் சொன்னதைக் கேட்டதும் சீதை உள்ளம் துடித்தாள். துயரமாய் உயிர் பதைத்து உளைந்தாள்.

*அயோத்தியர் குலத்தை முற்றும் பற்றுதிர்!*
*பசுந்தலை கொணர்திர்!*

என அரக்கரை அவன் ஏவி விட்டிருப்பதாக அறிந்ததும் ஆவி பதைத்து இத் தேவி நடுங்கினாள். அஞ்சாத படுபாதகன். நெஞ்சம் துணிந்து எதையும் செய்து விடுவானே! என்று அஞ்சி அலமந்தாள்; அது கொடிய அவலமாய் நெடிய கவலையை விளைத்தது.

சீதை வருந்தியது.

என்று அவன் உரைத்தகாலை என்னை இம் மாயம் செய்தாற்கு
ஒன்றும் இங்கு அரியதில்லை என்பதோர் துணுக்கம் உந்த
நின்று நின்று உயிர்த்து நெஞ்சம் வெதும்பினாள் நெருப்பைமீளத்
தின்று தின்று உமிழ்கின்றாரின் துயருக்கே சேக்கை ஆனாள்.

இத்தலை இன்ன செய்த விதியினார் என்னை இன்னும்
அத்தலை அன்ன செய்யச் சிறியரோ வலியர் அம்மா!
பொய்த்தலை யுடையது எல்லாம் தருமமே போலும் என்னாக்
கைத்தனள் உள்ளம் வெள்ளக் கண்ணினீர் கரையிலாதாள். (2)

சீதை கருதி மறுகிப் பதைத்துத் துடித்திருக்கும் நிலைகளை இவை உணர்த்தியுள்ளன. இலங்கை வேந்தன் வெருட்டியும் மருட்டியும் பேசியது பெரிய கலக்கத்தை விளைத்தது. வஞ்ச மாயங்களில் வல்ல பொல்லாத கொடியவன் ஆதலால் எல்லாத் தீமைகளையும் எளிதே செய்யக்கூடும்; அங்கே என்ன கேடுகள் நேர்ந்தனவோ? என நெஞ்சம் நிலை குலைந்து கலங்கினாள்.

நெருப்பைத் தின்று தின்று உமிழ்கின்றவள் போல் துயரடைந்தாள் என்றதனால் அவள் உள்ளம் துடித்துள்ள துன்பப் பதைப்புகளை ஓரளவு ஊகித்துணர்ந்து சோகித்து நிற்கிறோம். தனது தலை விதியை நினைந்து நொந்து தவித்திருக்கிறாள். தன்னாலே அல்லவா இந்த இன்னல் இழிவுகள் பிறந்த குடிக்கும் புகுந்த குடிக்கும் நேர்ந்துள்ளன என்று நெஞ்சம் துடித்து நெடிது பதைத்தாள். தரும நீதிகளோடு என்றும் மருவி வருகிற உயர்ந்த அரச குடும்பங்களுக்குக் கொடிய ஒருவன் இப்படி இடர்களைகள் செய்ய அதனைத் தெய்வங்களும் பார்த்துப் பொறுத்து நிற்கின்றனவே என்று வருத்தம் மீதூர்ந்து துடித்தாள்.

தருமம் பொய்த்ததோ? என்று தவித்திருத்தலால் தருமம் யாண்டும் பொய்யாகாது; எவ்வழியும் தலைகாக்கும்; என்றும்

உறுதித்துணையாம் என நம்பி எங்கும் நிலையாய்த் துணிந்து வந்துள்ள உண்மை இங்கே நன்கு உணர்ந்து கொள்ள வந்தது. புண்ணியவதி ஆதலால் தருமத்தை இங்ஙனம் கருதி மறுகினுள்.

தரும நெறிகளையே தழுவி எவ்வழியும் ஒழுகி வருபவர் இடையே ஏதேனும் அல்லல்கள் நேர்ந்தால் அத் தருமத்தை நோக்கி முறையிட்டு நொந்து உள்ளம் கலங்கி உளைந்து புலம்புவது இயல்பு. அந்தச் சீவ சுபாவம் இங்கே தெரிய வந்தது.

"O virtue! I have followed thee through life, and I find thee at last but a shade." (Euripides)

"ஓ தருமமே! என் வாழ்நாள் முழுதும் நான் உன்னைப்பின் பற்றியே வந்திருக்கிறேன்; முடிவில் ஒரு நலமும் காணேன்; அவலமேகண்டேன்" எனஒருஆங்கிலத் தலைவன்ஏங்கியுள்ளதும் ஈங்கு அறியவுரியது. உற்றமறுக்கம் உள்ளத்தைஉணர்த்தியுளது.

தனக்கு அல்லலும் அவமானமும் அடைந்ததோடு அமையாமல் நல்லவழியிலேயே என்றும் நடந்து வந்துள்ள தன்குடும்பங்களுக்கும் பொல்லாத துன்பங்கள் தொடர்ந்தனவே!என்று உள்ளம் கலங்கித் துடித்திருத்தலால் தருமத்தை இகழ்ந்து சொல்ல நேர்ந்தாள். பூரணமாக நம்பியிருந்த தருமதேவதையும் பொய்யாயதோ! ஐயோ! தெய்வமே! என்று அலறியிருக்கிருள்.

கண்ணின் நீர் கரையிலாதாள்.

என்றதனுல் சீதை அப்பொழுது அழுதிருக்கும் பரிதாப நிலை தெரியலாகும். தீமையைத் திடமாய் எதிர்க்கும் உறுதியுள்ளம் படைத்திருந்தாலும் உற்ற உறவினர்க்கு இடர் நேர்ந்தது என அறிந்ததும் இளகி உருகி மறுகி மயங்கி அழுதுபுலம்பினுள்.

மாயச் சனகன் வந்தது.

இராவணன் வஞ்சச் சூழ்ச்சி செய்து மகோதரனுடன் பேசி முடித்து முன் ஏற்பாட்டுடன் சீதையிடம் வந்திருக்கிறுன். அதற்கு இசையப் பொய்யும் சூதும் புனைந்து பேசினுன்; அதனை மெய்யென நம்பி இப்பேதை ஐயோ என்று கலங்கி நின்றுள். அந்த நிலையில் சனகனே என்று நம்பும்படி வடிவம் கொண்ட மருத்தன் என்னும் மாய அரக்கனைச் சிறை பிடித்ததுபோல் பாசத்தால் கட்டி இலங்கை வேந்தன் எதிரே மகோதரன் கொ

ண்டு வந்தான். அசோகவனத்தின் வாசலை அடைந்தபோது அம்மாய வஞ்சன் அவலமாய்ப் புலம்பினான். அந்த ஒலி சனகனது வாய்மொழிபோலவே சானகி காதுக்குக் கேட்டது. கேட்கவே திடுக்கிட்டுத்திரும்பினாள். கெடுக்கலங்கினாள். உள்ளம் துடித்தது; உயிர் பதைத்தது. தூயவள் பதறித் துடித்த துடிப்புகள் துயரக் கொடுமைகளாய் நீண்டன.

ஆயதோர் காலத்து ஆங்கண் பருந்தனைச் சனகன் ஆக்கி
வாய்திறந்து அரற்றப் பற்றி மகோதரன் கடிதின் வந்து
காய்எரி அனையான் முன்னர்க் காட்டினன் வன்கண்டான்
தாய்எரி வீழக் கண்ட பார்ப்பு எனத் தரிக்கிலாதாள். (1)

கைகளை நெரித்தாள் கண்ணில் மோதினாள் கமலக் கால்கள்
நெய்யெரி மிதித்தால் என்ன நிலத்திடைப் பதைத்தாள் நெஞ்சால்
மெய்யென எரிந்தாள் ஏங்கி விம்மினாள் நடுங்கி வீழ்ந்தாள்
பொய்யென உணராள் அன்பால் புரண்டனள் பூசல்இட்டாள்.

தெய்வமே! என்னும் மெய்ம்மை சிதைந்ததோ? என்னும் தீய
வைவனோ உலகை என்னும் அஞ்சமோ வலியது என்னும்
உய்வலோ இன்னம் என்னும் ஒன்றல துயரம் உற்றாள்
தையலோ தருமமேயோ யாரவள் தன்மை தேர்வார்? (3)

[மகோதரன் வஞ்சமாய்க் கட்டிக்கொண்டுவந்த மாயா சனகனைத் தன் தந்தை என்றே நம்பிச் சானகி உள்ளம் கலங்கித் துள்ளித் துடித்துப் பதைத்துப் பரதவித்திருக்கும் பரிதாபங்களை இக் கவிப்படங்கள் நன்கு காட்டியிருக்கின்றன.] நேர்ந்துள்ள அவல நிலைகளை நேரே கண்டு நாமும் நெஞ்சம் வருந்துகிறோம்.

## சீதை துடித்தது.

அயோத்திமீதும், மிதிலைமீதும் படைகளை அனுப்பியிருக்கிறேன் என்று முன்னம் இராவணன் கூறியதைக் கேட்டு மனம் கலங்கி மறுகி யிருந்தாள் ஆதலால் அதற்கு ஏற்றபடியே கண் எதிரே வந்த தோற்றத்தைக் கண்டதும் ஆற்றாது அலமந்தாள்.

தாய்ப்பறவை தீயில் விழக்கண்ட இளம் குஞ்சுபோல் தந்தை நிலையைக் கண்டு சீதை தவித்திருக்கிறாள். கைகளை நெரித்துக் கண்களில் மோதி நெஞ்சம் பதைத்து நிலத்தில் விழுந்து நெடிது துடித்து விம்மி ஏங்கி அயர்ந்து நடுங்கிப் புரண்டு உருண்டு புலம்பி யிருத்தலால் அந்த உயிர் வேதனைகள் அளவிடலரியனவாய் விரிந்து நின்றன. ஒன்று அல துயரம் என்றது அன்று அவள்

அடைந்த துன்பங்கள் எல்லை இல்லன என்று சொல்லியபடி யாம். அளவிடலரிய துயரங்கள் உயிரைச் சூறையாடி நின்றன.

தையலோ? தருமமேயோ?

சீதையைக் குறித்து வந்துள்ள இது சிந்தனைக்கு உரியது. ஒரு பெண் பதைத்துத் துடிக்கின்றாளா? அல்லது தரும தேவதையே ஒரு தையலாய் மருவி இப்படி வெப்பமாய் அழுகிறதா? என்று கருதி மறுகுமாறு அந்தப் பரிதாபக்காட்சி பெருகி யிருந்தது.

[புண்ணியமே வடிவமான பெண்ணரசி எண்ணரிய துயரங்களை எய்தி ஏங்கித் துடித்தாள். தருமசொரூபியான இந்த உத்தமி இப்படிப் பதைத்து நொந்து பரிதபிக்க நேர்ந்ததே! என்று கவி பரிந்து வருந்தி யிருப்பது இங்கே தெரிந்து கொள்ள வந்தது.]

தனது அருமைத் தந்தையைப் படுபாதகனான இராவணன் கொடுமையாகப் பிடித்து வரும்படி செய்துள்ளான் என்று உள்ளம் துடித்து உயிர்பதைத்துக் கண்ணீர் வெள்ளம் சொரிந்து கதறி அழுது பதறிப் புலம்பினாள். அயலே வருவன காண்க.

எந்தையே!எந்தையே! இன்று என்பொருட்டு உனக்கும் இக்கோள்
வந்ததே! என்னைப் பெற்று வாழ்ந்தவா றிதுவோ? மன்னோர்
தந்தையே! தாயே! செய்த தருமமே! தவமே!என்னும்
வெந்துயர் என்றும் தீவீழ் விறகென வெந்து வீழ்ந்தாள். (1)

இட்டுண்டாய் அறங்கள் செய்தாய் எதிர்ந்துளோர் இருக்கைஎல்லாம்
சுட்டுண்டாய் உயர்ந்த வேள்வித் துறையெலாம் தொலைவு கண்டாய்!
மட்டுண்டார் மனிசர்த் தின்ற வஞ்சரால் வயிரத் தோள்கள்
கட்டுண்டாய் என்னே யானும் காண்கின்றேன் போலும் கண்ணால்.

பிறையுடை நுதலார்க்கு ஏற்ற பிறந்த இக்கடன்கள் செய்ய
இறையுடை இருக்கை ஆதார் என்றும் வந்து இறுக்க லாதீர்
சிறையிடைக் கானை நீருட் சிறையொடும் சேர்ந்த வாறே
மறையுடை வரம்பு நீங்கா வழிவந்த மன்னர் ஏறே! (3)

வன்சிறைப் பறவை பூரும் வானவன் வரம்பில் மாயப்
புன்சிறைப் பிறவி தீர்ப்பான் உனையனைப் புலவர் நின்றார்;
என்சிறை தீர்க்கு வாரைக் காண்கிலேன் எனினின் வந்த
உன்சிறை விடுக்கற் பாலர் யாருளர் உலகத் துள்ளார்? (4)

பண்பெற்றார் ஓடு கூடாய் பகைபெற்றாய் பகழி பாய
விண்பெற்றாய் எனினும் நன்றால் வேந்தராய் உயர்ந்த மேலோர்

எண்பெற்றாய் பழியும் பெற்றாய் இது நின்னால் பெற்ற தன்றால்
பெண்பெற்றாய் அதனால் பெற்றாய் யார்இன்ன பேறுபெற்றார்?

சுற்றுண்ட பாச நாஞ்சில் சுமையொடும் சூடுண்டு ஆற்ற
எற்றுண்டும் அளறு நீங்கா இழுசிறு குண்டை என்னப்
பற்றுண்ட நாளே மாளாப் பாவியேன் உம்மை யெல்லாம்
விற்றுண்டேன் எனக்கு மீளும் விதியுண்டோ நரகின் வீழ்ந்தால்.

இருந்துநான் பகையை எல்லாம் ஈறுகண்டு அளவில் இன்பம்
பொருந்தினேன் அல்லேன் எங்கோன் திருவடி புனைந்தேன் அல்லே
வருந்தினேன் நெடுநாள் உம்மை வழியொடு முடித்தேன் வாயால்
அருந்தினேன் அயோத்தி வந்த அரசர்தம் புகழை அம்மா!

கொல்எனக் கணவற்குஆங்கோர் கொடும்பகை கொடுத்தேன்; எங்
கல்எனத் திரண்ட தோளைப் பாசத்தால் கட்டக் கண்டேன்;
இல்எனச் சிறந்து நின்ற இரண்டுக்கும் இன்னல் சூழ்ந்தேன்;
அல்லனே எளியனே யான் அளியற்றேன் இறக்க லாதேன்.

இணையறு வேள்வி மேனாள் இயற்றி யீன் றெடுத்த எந்தை
புணையுறு திரள்தோள் ஆர்த்துப் பூழியிற் புரளக் கண்டேன்;
மணவினை முடித்து என்கையை மந்திர மரபில் தொட்ட
கணவனை இனையேன் காண்டல் இன்றியே கழிகின்றேனோ?

அன்னையீர்! ஐயன்மீர் என் ஆருயிர்த் தங்கை மீரே!
என்னையீன்று எடுத்த எந்தைக்கு எய்தியது யாதும் ஒன்றும்
முன்னம்நீர் உணர்ந்திலீரோ? உமக்குவேறு உற்றதுண்டோ?
துன்னரு நெறியின் வந்து தொடர்ந்திலீர் துஞ்சி னீரோ? (1

மேருவிற்கு உம்பர் சேர்ந்து விண்ணினை மீக் கொண்டாலும்
நீருடைக் காவல் மூதூர் எய்தலாம் நெறியிற் றன்றால்
போரிடைக் கொண்டாரேனும் வஞ்சனை புணர்த்தாரேனும்
ஆருமக்கு அறையற் பாலார் அனுமனும் உளனே நும்பால். (1

சரதமற் றிவனைத் தந்தார் தவம்புரி ஆற்றல் சான்ற
பரதனைக் கொணர்தற்கு ஏதும் ஐயுற வில்லைப் பன்னாள்
வரதனும் வாழ்ந்தான் அல்லன் தம்பியும் அனையன் வாழா
விரதமுற்று அறத்தினின்றார்க்கு இவை கொலாம் விளைவமென்மே

அடைத்தது கடலை மேல்வந்து அடைந்தது மதிலை ஆவி
துடைத்தது பகையைச் சேனை எனச்சிலர் சொல்லச் சொல்லப்
படைத்ததோர் உவகை தன்னைவேறொரு வினையம் பண்ணி
உடைத்தது விதியே என்றென்று உளைந்தனள் உணர்வு சோர்ந்தா

(மாயாசனகப்படலம் 34—4

சானகி மனம் உடைந்து மதிஅழிந்து கதிகலங்கிப் புலம்பியுள்ள பரிதாப நிலைகளை இவை உணர்த்தியுள்ளன. புண்ணிய சீலன் ஆன தன் அருமைத் தந்தைக்கு நேர்ந்துள்ள சிறுமைகளை எண்ணி எண்ணித் துடித்து ஏங்கித் தவித்தாள். பரதவிப்புகள் கொடிய துயரங்களாய் நெடிது நிமிர்ந்தன: "எந்தையே! உலகிற் கெல்லாம் தந்தையே! உனக்கும் இந்த நிலை வந்ததே! கொடிய பாவி ஆகிய என்னைப் பெற்று அதனால் நீ அடைந்த பயனு இது? அந்தோ! என் பிறப்பால் சிறப்பாயிருந்த அரச குலங்கள் சிறுமை அடைய நேர்ந்தனவே! தானதருமங்களைச் செய்து யாண்டும் ஊனங்களை ஒழித்து ஞானசீலங்களை வளர்த்து அரிய வேள்விகளை முடித்து வானமும் வையமும் புகழப் பெரிய மகிமைகளோடு வாழ்ந்து வந்த நீ ஈனர்கள் கையில் அகப்பட்டு இழிவாய் இப்படிவரப் பழிகாரி நான் காணநேர்ந்தேனே! தாம் பெற்ற பெண்களுக்கு உலகத்தந்தைகள் உரிமையாச் செய்யும் சீர் வரிசைகளை நேரே வந்து உவந்து செய்வர்; உரிமையான அந்தக் கடமையைச் செய்யவும் உன் சம்பந்தி ஊருக்கு நீ வந்தது இல்லையே! அருமை மருமகனுடைய பெரிய அரண்மனையில் ஒரு பொழுதும் புகாமல் வருபொழுதெல்லாம் ஞான சீலங்களில் மருவி மகிமையோடு வாழ்ந்து வந்தாயே! அத்தகைய அதிசய நிலையில் எவரும் துதி செய்ய உயர்ந்த மானியாய் இருந்து வந்த நீ இழிந்த பாவிகள் கையில் சிக்கி ஈனமாய் இவ்வாறு சேர்ந்துள்ளாயே! ஐயோ! இது எவ்வளவு பழி! எத்துணை இழிவு! பரமபத நாதனை திருமால் சீவகோடிகளுடைய பிறவிச்சிறையை நீக்கி அருளுவான்; எனது நாதன் என்னுடைய ஈனச்சிறையை நீக்கி எப்படியும் பாதுகாப்பான் என்று நாளும் நாளும் எண்ணிஎண்ணி ஏங்கித் தவித்துக் கொண்டிருக்கிறேன்; என்சிறை நீங்கிய பாடில்லை; இவ்வாறு இழி சிறையில் அகப்பட்டுப் பழிதுயரங்களோடு நான் பதைத்துள்ளேன்; உன்னைச் சிறை நீக்கிக் காப்பார் உலகத்தில் யார் உள்ளார்? மகள் அடைந்த சிறுமையைத் தந்தையும் அடைந்தான் என நிந்தையும்பழியும் நேரே நேர்ந்தனவே! பகைவர்களோடு போராடிப் போர்க்களத்தில் எதிரிகள் கையால் நீ இறந்து பட்டாலும் நல்லதே! படுபாதகர்கள் கையில் சிக்கி அவமானம் அடைய அமைந்தாயே! உத்தமச் சத்திரியனை உனக்கும் இத்தகைய இழிவுகள் எய்தினவே! என்னைப்

பெற்ற பிழையினாலே தான் இந்தப் பழிகள் எல்லாம் உன்னைப் பற்றலாயின; கொடிய பாவி நான் உயிர்வாழ்ந்திருக்கலாமா? தீய பாதகன் மாயவேடம் தரித்து வந்து என்னைச் சிறைபிடித்த போதே நான் உயிர் விடுத்திருக்க வேண்டும்; அவ்வாறு நான் அன்று செத்திருந்தால் இவ்வாறான மானக்கேடுகள் உங்களுக்கு உளவாயிரா. சாகவேண்டிய இடத்தில் சாகாமல் விவேக சூனியமாயிருந்தமையால் பிறந்தகுடிக்கும் புகுந்தகுடிக்கும் பெருந்துயரங்களையும் நெடும்பழிகளையும் விளைத்துக் கொடும் பாவியாயினேனே. ஐயோ! என்பிழைப்பு எவ்வளவு பிழைகளைப் பெருக்கியுள்ளது. பழிசுமந்து துயருழந்து இருந்தாலும் இந்த என் இருப்பு ஒரு பயனையும் அடையவில்லை; என்னைக் கவர்ந்து வந்தவன் அடியோடு அழிந்து எம்பெருமானை நான் அடைந்து மகிழ்ந்தால்நான் வருந்தியிருந்து வாழ்ந்து வந்ததற்குப் பயனும்; அவ்வாறு ஒருபயனையும் அடையாமல் வறிதே வதை வானாளாய் வாழ்வதைவிடச் சாவதுஎவ்வளவோ நல்லதே;சாகாமல் செத்த சவமாயிருந்து கொண்டு உத்தமமான அயோத்தி அரசர்களுடைய அரியபுகழ்களை யெல்லாம் வாரி வாரி விழுங்கி வசைகளை நீட்டி வருகிறேன். என் பிறப்பும் இருப்பும் பெருங்கேடுகளுடையன; உரிமையாய் வந்து கைப்பிடித்த அருமைநாயகனுக்குக் கொடிய துயரமாக நெடிய பகையைமூட்டி விட்டேன்; பெற்ற தந்தை பெரும்பழியாக் கட்டுப்பட்டுக் கடுந்துயரடையக் கொடுங்கேட்டைக்கூட்டியுள்ளேன். நெடுங்காலமாக உயர்ந்த கீர்த்திகளையே அடைந்து எவரும் புகழ்ந்து போற்றச் சிறந்து வந்த இரண்டு குடிகளுக்கும் இழிந்த அவமானங்களை விளைத்து ஈனமாய் வளர்ந்து நிற்கிறேன்; ஆ! என்நிலை புலைமிக வுடையது.

அந்தோ! என் தாய்மாரே! தங்கைகளே! பெரியோர்களே! மிதிலை நகர்வாசிகளே! என் தந்தைக்கு நேர்ந்த இந்த இழி நிலையை நீவிர் அறிவீர்களா? அறிந்தால் உயிர் வாழமாட்டீர்களே! அனைவரும் துடித்து மடிந்து போயிருப்பீர்களே! மிதிலை வேந்தை இவ்வாறுசெய்த படுபாவி இனிஅயோத்தியிலிருந்து பரதனையும் கொண்டு வரக்கூடும்; அதைக் கண்டால் என் ஆருயிர் நாயகன் உயிர் வாழ்வாரா? தம்பி சகிக்குமா? யாவரும் ஆவலித்து அழிந்து படவே வினை விளைந்துளது; கடல் கடந்து கரை அடைந்து இலங்கையை வளைந்து வானரசேனைகள் மானவீரங்களோடு

மூண்டுள்ளன என்று கேள்வியால் அறிந்து அறிந்து ஆனந்தம் அடைந்து வந்தேன்; அந்த மகிழ்ச்சியைத் தீய ஊழ் புகுந்து கெடுத்து விட்டது; என் தலைவிதி தொலையாத துயரமாய் நிலை நீண்டு நின்றது; இனி மாண்டு மடிவதே மூண்ட முடிவு" என முடிவுசெய்து நெடுமூச் செறிந்து நிலைகுலைந்து மயங்கினாள்.

சீதை பதைத்துப் புலம்பியுள்ள துடிப்புகளைக் கவிகள் வடித்துக் காட்டியிருக்கின்றன. துயரக் காட்சிகளைக் கருதிக் காணுவார் எவரும் உள்ளம் மறுகி யுருகி அயர்வார்.

மிதிலையில் பிறந்து அயோத்தியில் புகுந்து சுகபோகங்களை அநுபவித்து வந்த ஒருபெண்ணரசி இடையே நாயகனைப் பிரிந்து இலங்கைச் சிறையை அடைந்து எண்ணரிய துயரங்களில் அழுந்தி முடிவில் விடுதலையை எதிர்பார்த்திருந்தவள் எதிர்பாராத படி தந்தை பிடிபட்டு வந்ததைக் கண்டதும் உயிர் துடித்துக் கண்ணீர் வடித்துக் கதறி அழுது பதறிப் புலம்பி யிருக்கிறாள்.

அந்த அவலக்காட்சியைக் கவி காவிய ஓவியமாய்த் தீட்டிக் காட்டி யிருக்கிறார். அந்தக் கரணங்கள் பதைத்துப் பரிதபித்திருக்கின்றன. அந்தச் சோகத்துடிப்புகள் வேகமாய் வெளியாயின.

தீ விழ் விறகு என வெந்து வீழ்ந்தாள்.

சீதையுற்ற சோக நிலையை இவ்வாறு சுட்டிக் காட்டிப் பதைப்பின் பரிதாபங்களைத் தொடர்பாக விழிதெரிய விளக்கி யிருக்கிறார். கொடிய துயரங்கள் உவமையால் உணர வந்தன.

தீயுள் விழ்ந்து விறகு எரிந்தது போல் துயரத்தீயில் ஆழ்ந்து இவள் உயிர் எரிந்துள்ளது. துன்பத்தீ உயிரைச்சுட்டு எரித்துள்ளமையால் பொறுக்கமுடியாமல் துடித்துப் பதைத்துப் பிதற்ற நேர்ந்தாள். துயரப் புலம்பல்கள் உயரியல்புகளை உணர்த்தின.

இட்டு உண்டாய்! அறங்கள் செய்தாய்!

என்றது சனகனுடையகொடைதரும நீதி வீரம் முதலிய இனிய நீர்மைகளை எல்லாம் நினைந்து நெஞ்சம் பரிந்துள்ளமை தெரிய வந்தது. பிற உயிர்களுக்கு என்றும் இதமே புரிந்துவந்த உனக்கு இவ்வாறு இடர்புகுந்ததே? என்று படருழ்ந்துள்ளாள். இட்டு உண்டாய்! என முதலில் குறித்தமையால் சனகனிடம்

அது தலைமையாய் நிலவியிருந்தமை தெரிய வந்தது. பிறரை ஊட்டி உண்பது பெரிய புண்ணியம்; விருந்து புரிந்து அருந்தும் அந்தப் பெருந்தகைமை அம்மன்னன்பால் எவ்வழியும் செவ்வையாய்ச் சிறந்து நின்றது; ஆகவே அது முன்னுற வந்தது.

பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை. (குறள், 322)

உண்ணும் உணவைப் பசித்தவர்கட்குப் பகுத்துக் கொடுத்துப் பின்பு புசித்து எல்லா உயிர்களிடமும் அன்பு சுரந்து பேணிவரின் அது உயர்ந்த புண்ணியம் ஆம் என இது உணர்த்தியுள்ளது. உதவி புரிவது தெய்வ சம்பத்தாய் திகழ்ந்து வருகிறது.

"ஐயம் இட்டு உண்" என்று ஔவையார் அருளியதும் மனித வாழ்வின் தனியான புனித நிலையை இனிது உணர்த்தி நின்றது. ஓரறிவுமுதல் ஆறறிவு ஈறுகவுள்ள எல்லாவுயிர்களிடமும் கருணை புரிந்து யாண்டும் எதையும் கண்ணோடிப் பேணி அறங்கள் பல புரிந்து எவ்வழியும் இட்டு உண்டு வாழ்ந்து வந்த ஓ புண்ணியத் தந்தையே! நீயும் பாவிகள் கையால் கட்டு உண்டாயே! என்று கதறியிருக்கிருள். பெற்ற தந்தையின் பெருமித நிலைகளையும் உற்ற சிறுமையின் ஊனங்களையும் உள்ளியுளைந்து துள்ளித்துடித்திருக்கிருள். மானப் பதைப்புகள் மன வேதனைகளாய் நீண்டன.

மட்டு உண்டார் மனிதர்த் தின்ற வஞ்சர்.

அரக்கருடைய பழி உணவையும் இழி நிலைகளையும் அழி செயல்களையும் இவ்வாறு குறித்திருக்கிருள். மட்டு = கள். கள்ளைக் குடித்து மாமிசங்களைத் தின்று கொடிய தீமைகளைச் செய்யும் நெடிய பாவிகள் என்று அம்மரபினரைக் கடிது இகழ்ந்துள்ளாள்.

சாதாரணமாய்ப் புலால் உண்போர் ஆடு கோழி மாடுகளை அடித்துத் தின்பர்; இவர் மனிதரையே கொன்று தின்னும் கொடிய நீசர் என்பாள் மனிதர்த் தின்ற வஞ்சர் என்ருள். மதுபானமும், மாமிச உணவும் ஈன உணவுகள்; அவற்றை உண்போர் அறிவு கேடராய்ப் பழி தொழில்களை அஞ்சாது செய்து நெடிய தீமைகளிலேயே யாண்டும் கொடுமையாய் நிமிர்ந்து நிற்பர் என்பதை ஈண்டு நினைவுறுத்தி நீர்மைகளை விளக்கினுள்.

கதையின் நிகழ்ச்சியிலேயே கவியின் இருதயத்தையும்

புத்தி போதனைகளையும் உய்த்துணர்ந்து கொள்கிறோம். மட்டு உண்ணாதீர்கள்; மாமிசம் தின்னாதீர்கள்; இட்டு உண்ணுங்கள்; எவ்வழியும் அறம் செய்யுங்கள் என்னும் உறுதி நலன்கள் கருதி யுணர வந்தன. தருமகுண சீலன் ஆதலால் சனகனது அருமை பெருமைகளை நினைந்து புகழ்ந்து இதுபொழுது நேர்ந்துள்ள சிறுமைகளை எண்ணி நொந்து கண்ணீர் சொரிந்து கதறிக் கூறினாள்.

இறை ஊர் என்றும் வந்து இறுக்க லாதீர்!

சனகனுடைய வாழ்க்கை முறைகளின் மருமங்கள் பல சானகியின் புலம்பல்களில் தெளிவாய் வெளிவந்துள்ளன. தன்னை இராமனுக்கு மணம் முடித்துக் கொடுத்த பின்னர் அந்த அருமை மருமகனுடைய வீட்டுக்கு ஒரு நாளாவது தன் தந்தை வந்தது இல்லையே என்று இக்குலமகள் இங்கே தவித்திருக்கிறாள். பெற்றமகளுக்குச்செய்யும்சீர்வரிசைகளைக்கொடுக்கும்பொருட்டுப் பெரிய சம்பந்தியான அரிய சக்கரவர்த்தியின் அரண்மனைக்கும் வராமல் மறுமை நோக்கோடு மருவியிருந்த ஞானசீலன் எனத் தன்தாதையைச் சீதை குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்கவுரியது. சனகன் சிறந்த தத்துவஞானி; எப்பொழுதும் ஆன்ம சிந்தனையில் தோய்ந்திருப்பவன்; உலகவழக்கங்களை ஒரு பொருளாக மதியாமல் உண்மை நோக்கிலேயே நிலையாய் நிலைத்து வந்துள்ளான். தந்தையின் அந்த நிலையைத் தலைமகள் வாய்மொழி வெளிப்படுத்தியது. நிலைமை நீர்மைகள் நெஞ்சை உருக்கின.

உரிமையோடு வர வேண்டிய திருவயோத்திக்கும் வராமல் மானமும் ஞானமும் மருவிப் பெருமையாய் இருந்து வந்த நீ இவ்வாறு சிறுமையாய்ச் சிறைப்பட்டு இந்த இலங்காபுரிக்கு வர நேர்ந்தாயே! அந்தோ! என்று வயிறெரிந்து அழுதிருக்கிறாள்.

என் பிராணநாயகனோடு கூடிச் சிறந்த அரண்மனையில் உயர்ந்தபோகங்களை நுகர்ந்து நான் இன்பமாய் வாழ்ந்து வருதலைக் கண்டு மகிழாமல் இந்தத் துன்பச் சிறையில் என்னைக் காணத் துயரச்சிறையில் அகப்பட்டு வந்துள்ளாயே! தந்தையே! என்று சிந்தை நொந்து தேம்பி அழுதுள்ளாள்.

பெண் பெற்றாய் அதனால் பழியும் பெற்றாய்!

பாவி ஆகிய என்னைப் பெற்றபாவத்தால் புகழும் புண்ணிய

மும் உடைய நீ பழியும் துன்பமும் அடைய நேர்ந்தாய் என்று இவ்வாறு பரிதபித்து மறுகி உருகி அவலமாய் அலமரலடைந்தாள்.

பற்றுண்ட நாளே மாளாப் பாவியேன்.

என்றது பஞ்சவடியில் வந்து இராவணன் வஞ்சமாய்த் தன்னை வவ்வியபோதே இறந்து போயிருக்க வேண்டும்; அவ்வாறு அங்கே சாகாமல் இருந்ததனாலே தான் இவ்வாறு எல்லார்க்கும் பிழையான துயரங்கள் வந்தன என்று உள்ளம் நொந்து உயிர் பதைக்க நேர்ந்தாள்.] பல நிலைகளையும் நினைந்து இக் குல மகள் பரிதபித்துக்குலை துடித்துள்ளது உரைகளில் தெரியநின்றது.

சிறந்த புகழோடு வாழ்ந்து வந்த உயர்ந்த அரச குடும்பம் தன்னால் இழிந்த பழிகளை அடைந்ததே! என்று வருந்தி நைந்தாள்; பிறந்தகுடியும் புகுந்தஇடமும் பெருமகிமைகளை யுடையன. அவை இரண்டையும் நான் ஒருத்தி பிறந்து சிறுமைப் படுத்திச் சீரழித்து விட்டேனே! என்று சிந்தை துடித்திருக்கிறாள்.

அருந்தினேன் அயோத்தி வந்த அரசர்தம் புகழை அம்மா!

என்று வருந்தி நொந்திருத்தலால் அந்த நெஞ்சப் பதைப்புகளின் நிலைகளை உணர்ந்து கொள்கிறோம். விரத வேடம் பூண்டு அண்ணனையே கருதி மறுகி உருகியுள்ள பரதனையும் இந்தக் கொடிய பாதகன் ஏதேனும் செய்து விடுவானோ! என்று நெஞ்சம் பதைத்து நெடிய துயரங்களை அடைந்து கொடிய பரிதாபமாய்ச் சீதை பதறிக் கதறியிருக்கிறாள். இந்தப் பதிவிரதையின் உள்ளத் துடிப்புகள் சொல்ல முடியாத சோகங்களாய் எல்லைமீறி எழுந்துள்ளன. இவளது அல்லல் நிலைகளைக் கண்டு இராவணன் உள்ளம் உவந்தான். உறுதி சூழ்ந்து உரையாட நேர்ந்தான்.

தூர்த்தன் துணிந்து வார்த்தையாடினன்.

தான்செய்த மாயச்சூழ்ச்சியால் காரியம் சித்தியாய் விடும் என்று இராவணன் பெரிதும் கருதிப் பேராசை மீதூர்ந்து மகிழ்ந்தான். [தந்தை பிடிபட்டு வந்துள்ளான் என்று சிந்தை துடித்துச் செயலிழந்து பதைக்கின்றாள் ஆதலால் இவளை இப்பொழுதே வசப்படுத்திக் கொள்ளவேண்டும் என்று அவ்வஞ்சகன் நெஞ்சம் துணிந்தான். துயரத்தீயில் வீழ்ந்து உயிர்கருகிப் பரிதாப நிலையில் மறுகித்துடிக்கின்ற இப்பத்தினி அருகே வந்து

அக்காமப்பித்தன் சேமமான உரைகளை உய்த்துணர உரைத்தான். அவனுடைய வாய்மொழிகள் மாயசாலங்களாய் மருவி எழுந்தன. விரகதாபத்தால் அறிவு நிலை குலைந்து அவல நிலையிலுள்ளமையால் மான வீரங்கள் குன்றி ஊன வுரைகள் கூறினான்.

காரிகை நின்னை எய்தும் காதலால் கருத லாகாப்
பேரிடர் இயற்றல் உற்றேன்; பிழையிது பொறுத்தி இன்னும்
வேரற மிதிலை யோரை விளிகிலேன்; விளிந்த போதும்
ஆருயிர் இவனை உண்ணேன்; அஞ்சலை அன்னம் அன்னாய்! (1)

இமையவர் உலகமேதான் இவ்வுலகு ஏழுமேதான்
அமைவரும் புவனம் மூன்றில் என்னுடை ஆட்சியேதான்
சமைவுறத் தருவன் மற்றித் தாரணி மன்னற்கு இன்னற்
சுமையுடைக் காம வெந்நோய் துடைத்தியேல் தொழுது வாழ்
வேன். (2)

இலங்கையூர் இவனுக்கு ஈந்து வேறிடத்து இருந்து வாழ்வேன்
நலங்கிளர் நிதியம் மூன்றும் நல்குவன் நாமத் தெய்வப்
பொலங்கிளர் மானம் தானே பொதுவறக் கொடுப்பன் புத்தேள்
வலங்கிளர் வாளும் வேண்டின் வழங்குவன் யாதும் மாற்றேன்.

இந்திரன் கவித்த மௌலி இமையவர் இறைஞ்சி ஏத்த
மந்திர மரபிற் சூட்டி வானவர் மகளிர் யாரும்
பந்தரின் உரிமை செய்ய யானிவன் பணியில் நிற்பேன்
சுந்தரப் பவள வாய்ஓர் அருள்மொழி சிறிது சொல்லின். (4)

எந்தைதன் தந்தை தாதை இவ்வுலகு ஈன்றான் என்முன்
வந்தவன் தானே விட்ட வரமெலாம் வழங்கி மற்றை
அந்தமில் அடியார் செய்கை ஆற்றுவேன் அமிழ்தின் வந்த
செந்திரு நீரல்லீரேல் அவளும் வந்து ஏவல் செய்யும். (5)

தேவரே முதலா மற்றைத் திண்டிறல் நாகர் மண்ணோர்
யாவரும் வந்து நுந்தை அடிதொழுது ஏவல் செய்வர்
பாவைநீ இவனின் வந்த பயன் பழுதாவ தன்றால்
மூவுலகு ஆளும் செல்வம் கொடுத்தது முடிந்தி என்றான் (6)

இலங்கை வேந்தன் இழிந்து நின்று சீதை எதிரே இவ்வாறு பேசியிருக்கிறான். கொடிய துயரத்தை விளைத்து உயிரைத் துடிக்கச் செய்து முடிவில் காரியசாதனை கருதி அக்குலமகளிடம் தலைவணங்கி நின்று உரையாடியது இவனுடைய விரகையும் விரகதாபத்தையும் வெளிப்படுத்தியுள்ளது. எப்படியாவது வஞ்

சித்து நெஞ்சைத் திருத்தி வஞ்சியை வசம் செய்து கொள்ள வேண்டும் என்று கெஞ்சிக் கூத்தாடுகின்றான்: "சீதா! உன்மேல் வைத்த ஆசையால் நான் இந்தப் பிழையான காரியத்தைத் துணிந்து செய்ய நேர்ந்தேன்; உன் தந்தை வந்து நேரில் உனக்குப் புத்திசொன்னால் உனது சிந்தை திருந்திச் சேமமாய் நீ வாழ்வாய் என்றே நான் நேமமாய் இதனை விரைந்து புரிந்தேன்; உன்னுடைய நன்மையைக் கருதிச் செய்த இதில் புன்மையான பிழையிருந்தால் அதனைப் பொறுத்தருளுக; இனிமேல் வேறு தவறு யாதும் செய்யேன்; மிதிலைவாசிகளை எவரும் நலியாதபடி பார்த்துக் கொள்வேன்; உன்தந்தை சனகன் எவ்வழியும் மன மகிழ்ச்சியோடு சுகமாயிருக்கும் வழிகளை நயமாக நான் சூழ்ந்து செய்துள்ளேன்; என் ஆட்சியின் கீழுள்ள இந்திரபதவியோடு ஈரேழுபதினாலு உலகங்களையும் அவனுக்கே சொந்தமாகத்தந்து முடிசூட்டிவைத்துத் தேவர் யாவரும் அவனைத் தொழுது வணங்கி ஏவல் செய்து வரும்படி ஆவலுடன் அமைத்திருக்கிறேன்; எனது காமதாபத்தை நீ நீக்கியருள வேண்டும். அந்த அருளை என்பால் நீ விரைந்து செய்தால் உன்பாலும் உன் குலத்தின்பாலும் பொருளும் புகழும் பொங்கி வரும்; உலகமெல்லாம் உவந்து போற்றும் பெருமைகள் பலவும் உளவாம். தேவதேவரும் உன் தந்தையை வியந்து புகழ்வர்; சங்கநிதி பதுமநிதி முதலிய தெய்வத் திரவியங்களை யெல்லாம் சேரப் பெற்று வானமும் வையமும் வாழ்த்திவர விமானம் ஊர்ந்து அவன் மேலான இன்பநலங்களை மேவி விளங்குவான்; உன்பவளவாய் திறந்து ஒரு உரிமையான இனிய சொல்லை எனக்கு இதமாக நீ சிறிது சொன்னால் உன் தந்தையை இந்திரனும் அடிவணங்க அந்தமில்லாதமேன்மைகளை அவன் அடைந்து மகிழ்வான்; சிருட்டிகருத்தாவாகிய பிரமனும் மதித்துப் புகழ்வான்; திருமாலும் பெருமகிமை செய்வான்; இலங்கைவேந்தனுடைய சம்பந்தி என்று தெரிந்தால் இலட்சுமியும் கலங்கி வந்து ஏவல் செய்வாள்; மிதிலை மன்னன் என்று அவன் இருந்தபோது அடைந்த மதிப்பையும் இராவணனுக்குப் பெண் கொடுத்த மாமன் என்றபின் அடைகின்ற மகிமைகளையும் அளந்து நோக்கின் அப்பொழுது அவனுடைய உள்ளத்தில் தோன்றும் அதிசயங்களை யார் அளவிட வல்லார்? உன்னை மகளாகப் பெற்றமையால் அமரர்களும் அதிசயிக்கும்

படியான அரிய நிலைகளை அவன் உரிமையாகப் பெற்றான்; பெண்ணைப் பெற்றவர்களுள் சனகனைப் போல் இவ்வளவு பேறுகளை யாவர் பெற்றார்? என்று தேவரும் மூவரும் ஆவலோடு புகழ்ந்து போற்ற நீ என் ஆவலை ஆற்றியருள வேண்டும்! சானகி! உன் நன்மைக்காகவே நான் இவ்வளவு தூரம் விரித்துப் பேசினேன்; இனி மேலும் பேசுவது வீண்; எனது ஆசை நோயை அகற்றியருள்; உனது குடியும் குலமும் உலகம் புகழ ஒளி செய்து விளங்கும்: உள்ளம் தெளிந்து ஒல்லையில் இரங்கி உன் செல்லவாய் திறந்து ஒருசொல்லைச் சொல்லியருளுக; என் ஆருயிர் அமுதே!" என்று இவ்வாறு பேராசையோடு அவன் பேசி நின்றான்.

அவனுடைய உள்ளத்தில் உறைந்துள்ள நசைகள் உரைகளில் விரைந்து வெளிவந்துள்ளன. காம இச்சைகள் கடுவேகமாய்க் கதித்துள்ளமையால் சீதை முன்பு இகழ்ந்து வைத இழிமொழிகளையெல்லாம் மறந்து விட்டு அவன் இங்கே இன்னவாறு பன்னிப் பன்னிப் பலவும் பேசிப் பரிந்து வேண்டினான்.

காரிகை! என்று சீதையை இங்ஙனம் முதலில் கூறி விளித்துள்ளான். காரிகை என்னும் சொல் பேரழகு என்னும் பொருளையுடையது. கண்டவருடைய கண்ணையும் கருத்தையும் கவர்ந்து தம் காரியங்களில் செல்லவிடாதபடி கைவசப்படுத்தி வீரியம் புரிந்து நிற்கும் மேலான சீரிய அழகு காரிகை என வந்தது.

"காரிகை உண்டஎன் பேரிசை ஆண்மை
செறுநர் முன்னர்ச் சிறுமை யின்றிப்
பெறுவேன் கொல்?" (உதயணன்)

வாசவதத்தை என்னும் பேரழகியைக் கண்டு உள்ளம் உருகி உதயணமன்னன் இவ்வாறு மறுகி உரையாடியிருக்கிறான். தனது அரிய பெரிய ஆண்மையை அந்தப் பெண்மையின் பேரழகு உண்டு கொண்டதே என்று மன்னன் உருகியுள்ளமையால் காரிகையின் நீர்மையை இங்குநன்கு உணர்ந்து கொள்ளுகிறோம்.

"காரிகை ஆகத்தன் கண்ணி திருத்தினள்." [பரிபாடல்,12]

"கண்ணணங் குறூஉம் காரிகை நீர்மைப்
பத்திரை மேனகை திலோத்தமை" [பெருங்கதை,5,3]

"காரிகை நல்லாள் காயசண்டிகை." [மணிமேகலை]

இவற்றுள் காரிகை குறித்து நிற்கும் பொருளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுக. உரிய இடத்தில் அரிய பேரைக் கூறினன்.

அதிசயமான சீதையின் கட்டழகால் மதியழிந்து இராவணன் மருண்டு பேசுகின்றான் ஆதலால் காரிகை! என்று தன் காரியம் தெரிய உரைத்தான். அந்தப் பேரழகில் தன் உள்ளம் பறிபோய்ப் பேரும் சீரும் இழந்து பேதையாய் நின்று பிதற்றுகின்றான்; ஆகவே காரிகைஎன்னும் பேரால் நேரே அழைத்தான். உருவ அழகிலேயே உயிர் உருகி நிற்றலால் சானகி, சீதை என்னும் பேர்களை மறந்து தன்னை மயக்கியுள்ளதையே மறுகி மொழிந்தான். மையலில் தோய்ந்து மயங்கி உயங்கியுள்ள நிலைமையை வாய்மொழி இங்கே பைய வெளிப்படுத்தியது.

பிழை இது பொறுத்தி என்றது தான் செய்த குற்றத்தை மன்னித்துத் தன்னை ஆதரித்து அருளவேண்டும் என அபயம் புகுந்தபடியாம். உபாயம் சூழ்ந்து உரையாடி வருகிறான்.

சனகனைக் கட்டிப்பிடித்து அங்கே கொண்டு வந்தது பெரிய தப்பிதமே என்பான் கருதலாகாப் பேரிடர் என்றான். இவ்வாறு நான் வேதனை செய்ய நேர்ந்ததற்குக் காரணம் எவ்வாற்றானும் நீ எனக்கு இசையாமல் சாதனை செய்து இருந்ததனாலேயாம்; ஆகவே ஏதமான சோகம் நேர்ந்தது எனச் சீதையிடம் போதனை செய்து மேலே உறவுரிமைகளோடு விரித்துப் பேசினான்.

காதல் மீதூர்ந்து காமதாபத்தால் நோதலைச் செய்து விட்டேன்; அதனை மறந்துவிடு; சிறந்த செல்வங்களை அடைந்து உன் தந்தை உயர்ந்த பதவியில் ஒளி செய்திருத்தலை விழிகளிப்ப நீ காணப் போகிறாய்! என்று அக்காட்சிகளையெல்லாம் மாட்சிமையோடு வரைந்து காட்டித் தன் ஆசையை நீட்டினான்.

இமையவர் உலகமேதான் இவ்வுலகு ஏழுமே தருவன்.

சனகனுக்கு இராவணன் தருகிற பதவி நிலைகளை இவ்வாறு விதவிதமா விரித்து இதமாக் கூறினன். தேவர் முதல் யாவரும் தனது ஏவலைச் செய்து வாழ்தலால் இமையவர் உலகம் முதலாக யாவும் தருவதாகத் தனது பெருமித நிலைமையைத் தெளிவுறச் செய்தான். மணப் பரிசுகளாக பகிமைகளை விளக்கினன்.

தந்தைமீது பேரன்புடையளாய்ச் சீதை தவித்துத் துடித்தாள் ஆதலால் இந்தவாறு அவளுடைய சிந்தை பகிழ விந்தையோடு விரித்துச் சொன்னான். தனது ஆசை நிறைவேறும் என்று கருதி வாசகங்களை வாரி வீசி யுள்ளான். எல்லா மேன்மைகளையும் சனகனுக்கு ஒல்லையில் செய்து விடுவதாக உறுதி மொழி கூறினான். தன்னுடைய துயரத்தைத் தீர்த்தால் அவளைப் பெற்ற தந்தை தேவர்களுக்கு அரசனாய் அமர்ந்து எல்லாவுலகங்களையும் ஆளும்படி செய்வேன் என ஆசை மூளும்படி இராவணன் நீளமாய்ப் பேசி வந்தது நிலைகளைத் துலக்கியுள்ளது. தனது அதிகார ஆற்றல்கள் அளவிட லரியன என்பதை விதி முறையே விளக்கி வந்து தன் வெந்துயரையும் துலக்கி நின்றான்.

காம வெந்நோய் துடைத்தியேல் தொழுது வாழ்வேன்.

தனது நோய் நிலையையும் வாழ்வையும் இராவணன் இங்ஙனம் தெளிவா வெளியிட்டிருக்கிறான். தன் இச்சைக்கு இணங்கியருளினால் சீதையை உச்சநிலையில் ஒளிபெற வைத்து எவ்வழியும் ஏவலைச் செய்து அடிதொழுது வாழுவேன் எனத் தனது ஆவலை இவ்வாறு அவன் நேரே விளக்கி யிருக்கிறான்.

[சானகி மட்டும் தனக்கு உரிமையாய் அமையின் இலங்காராச்சியம் முதல் எல்லா உரிமைகளையும் இழந்து அவளுக்கு வேண்டிய ஊழியங்களைப் புரிந்து அடியவனாய் வாழ்வேன் என்று இராவணன் முடிவு செய்திருத்தலால் அவனுடைய மையல் மயக்கங்களின் நிலைகளையும் நிறைகளையும் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம். காமதாபம் எவனையும் இழிநிலையில் தள்ளி அழிவுகளைச் செய்யும் என்பதை இலங்கை வேந்தனுடைய மொழிகளும் செயல்களும் இங்கே விழிதெரியச் செய்துள்ளன.

மூவுலகு ஆளும் செல்வம் கொடுத்து அது முடித்தி.

முடிவில் முடித்துள்ள முடிவு இது.

அது என்னும் சுட்டு அதிவிநயமாய் வந்தது. தனது காம இச்சையை வெளிப்படச் சொல்லக் கூசிக் குறிப்பால் குறித்தான். குறிப்பு மொழி கூடமாய்க் கூடி வர நேர்ந்தது.]

உன்னை ஒரு புத்திரியாகப் பெற்ற இந்தப் பிதாவைத்திரிலோகாதிபதியாக்கி, இடையே உற்ற என்னை உனக்கு உடைய

வனைகச் செய்து உன் கடமையை நீ செய்தருள வேண்டும் என்று மடமை மீதூர்ந்து வேண்டினுன். அவனுடைய மையல் வெறி வெய்யநிலையில் விரிந்து நின்றது ஆதலால் இவ்வாறு பலவும் துணிந்து பேசினுன். அவ்வுரைகளுக்கு நேரே பதில்கள் வந்தன.

## எதிர் மொழி எழுந்தது.

கபடநாடகமாய் மகோதரன் பிடித்துக் கொண்டு வந்துள்ள மாய அரக்கனைத் தன்தாதையாகிய சனகனே என்று நம்பி உள்ளம் துடித்து உயிர்பதைத்துக் கதறிப்பதறிய சீதை இராவணன் கூறிய வார்த்தைகளைக் கேட்டதும் சீறி இகழ்ந்து வீருேடு மாறி மொழிந்தாள். பதிவிரதையின் வாய்மொழிகள் அதிசய ஆற்றல்களோடு கொதிப்பேறி மதிநலம் தோய்ந்து வந்தன. உரைகள் யாவும் உய்த்துணர்ந்து ஓர்ந்து சிந்திக்க வுரியன.

இத்திருப் பெறுகிற்பானும் இந்திரன்; இலங்கை நுங்கள்
பொய்த்திருப் பெறுகிற் பானும் வீடணன்; புலவர் கோமான்
கைத்திருச் சரங்கள் உன்றன் மார்பிடைக் கலக்கற் பால;
மைத்திரு நிறத்தான் தாள்என் தலைமிசை வைக்கற் பால. (1)

நகுவன நின்னேடு ஐய நாயகன் நாம வாளி
புகுவன போழ்ந்துன் மார்பில் திறந்தன புண்கள் எல்லாம்
தகுவன இனிய சொல்லத் தக்கன சாப நாணின்
உகுவன மலைகள் எஞ்சப் பிறப்பன ஒலிகள் அம்மா! (2)

சொல்லுவ மதுர மாற்றம் துண்டத்தால் உண்டுன் கண்ணைக்
கல்லுவ காகம் வந்து கலப்பன கமலக் கண்ணன்
வில்லுமிழ் பகழி பின்னர் விலங்கெழில் அலங்கல் மார்பம்
புல்லுவ களிப்புக் கூர்ந்து புலவுநாறு அலகை எல்லாம். (3)

விரும்பிநான் கேட்ப துண்டால் நின்னுழை வார்த்தை வீரன்
இரும்பியல் வயிர வாளி இடறிட எயிற்றுப் பேழ்வாய்ப்
பெரும்பியல் தலைகள் சிந்திப் பிழைப்பிலை முடிந்தாய் என்ன
அரும்பியல் துளவப் பைந்தார் அனுமன்வந் தளித்த அந்நாள்.

புன்மகன் கேட்டி கேட்டற்கு உரியது புகுந்த போரில்
உன்மகன் உயிரை எம்மோய்ச் சுமித்திரை உய்ய ஈன்ற
நன்மகன் வாளி நக்க நாய்அவன் உடலை நக்க
என்மகன் இறந்தான் என்ன நீளடுத்து அரற்றல் என்றுன். (5)

சீதையின் வாயிலிருந்து வந்துள்ள இந்த வார்த்தைகளில் சினமும் சீற்றமும் வெறுப்பும் துடிப்பும் விரவி நிற்றலை வியந்து

காண்கின்றோம். நெஞ்சம் கலங்கி நெடிதுபுலம்பி மறுகிஅயர்ந்தவள் அவ்வஞ்சன் கூறிய வீணமொழிகளைக் கேட்டதும் மானத் துடிப்போடு வீரம் மீதூர்ந்து அஞ்சாமல் நேரே பதில் உரைத்திருக்கிறாள். உரைகளில் உணர்வுறுதிகள் ஒளி செய்துள்ளன.]

[காமதாபனாய்க் கடைப்பட்டு நின்று யாவும் தருவதாக ஆரவாரமாய்க் கூறிய அவனுடைய பேருரைகளுக்கெல்லாம் சரியான பதிலை நேரே வரையறைசெய்து கூறியிருத்தலால் இப்பதிவிரதையினுடைய மதிமாண்பும் வாக்கு வன்மையும் வாதமுறைமையும் அதிசய நிலைகளில் யாவரும் துதி செய்ய நின்றன.]

"இமையவர் உலகமோடு யாவும் உன் தந்தைக்கு நான் தந்தருளுவேன்; என் சிந்தை நோயைத் தீர்த்தருள்!" என்று அத் தூர்த்தன் வார்த்தை ஆடினன் ஆதலால் அதற்குத் தக்கவாறு மாறு கூற நேர்ந்தவள்] இத்திருப் பெறுகிற்பானும் இந்திரன் என்று முந்துற உரைத்தாள். பெற உரியவன் நேரே அறிய வந்தான்.

தேவராசனான இந்திரன் தனது பெருமித நிலையை இழந்து இலங்கை ஆட்சியின் கீழ் இழிந்து இராவணனுக்கு அடங்கியிருக்கின்றான்; இந்திர பதவியும் தனக்குச் சொந்தம் என்று இலங்கை வேந்தன் சிந்தைகளித்து வருகிறான். அந்த இருப்பும் களிப்பும் விரைவில் நீங்கி விடும் என்பது இங்கே வெளிப்படையாய் விளங்கி நின்றது.] அரக்கர் குலத்தை அடியோடு அழித்து அமரர்குலத்தைக் காக்கவே கோதண்டத்தை ஏந்தி இராமன் ஈண்டு வந்திருக்கிறான்; அந்த வீர வள்ளல் கருதி வந்தபடி விரைந்து முடித்தருளுவான் என்று இந்த வீரபத்தினி தெளிந்துள்ளமையால் இவ்வாறு இராவணன் எதிரே துணிந்து கூறினாள்.

[இலங்கை பெறுகிற்பானும் வீடணன்.

பின்னே உரிமையாய் நிகழவுரிய நிலைமைகளை முன்னதாக இன்னவாறு உன்னி உணர வுரைத்தாள். அவன் சொன்ன சொல்லுகளுக்கு நேரே சுடும்படியான பதில்கள் துடித்து வந்துள்ளன. உரைத் துடிப்புகள் இடித்து அறிவுறுத்தின.

"இலங்கையூர் இவனுக்கு ஈந்து வேறிடத்து இருந்து வாழ்வேன்" என்று இராவணன் முன்பு கூறியதற்குத் தக்கபதிலாகப் பின்பு இப்பெண்ணரசி பேசியிருப்பது எண்ணி யுணர்வுரியது.]

தனக்குப் பெண்ணைக் கொடுத்த யாமனுக்கு விண்ணையும் மண்ணையும் வேறுள உலகங்களையும் தருவேன் என்பது போல் உரிமைகாட்டி அவன் உரைகளை நீட்டினன்; அதற்குப் பெருமாட்டி உண்மைகளை எடுத்துக்காட்டி உறுதி நிலைகளை வலியுறுத்தினாள். எள்ளல் இகழ்ச்சிகள் எதிரே துள்ளி எழுந்துள்ளன.

“ஒன்றுமில்லாத வறியவெங்கனை நீ எல்லாம் கொடுப்பதாக வீணே பிதற்றுவது வியப்பையும் நகைப்பையும் விளைக்கின்றது: எல்லாம் உடையவன் என் நாயகனான இராமனே; அந்தப் புண்ணிய மூர்த்தியே இமையவர் உலகத்தை இந்திரனுக்குத் தந்து, இலங்காபுரியை விபீடணனுக்கு உதவி, உனக்கு நரகத்தைக் கொடுத்து, உன் குலத்தை அழித்து ஒழித்துத் தருமத்தைப் பேணி எல்லா உயிர்களுக்கும் இனிய நலங்களை அருள வந்துள்ளான்; அந்த உண்மைகளை ஒரு சிறுதும் உணராமல் புன்மையாய் உளறுகின்றாயே!” என அவனுக்கு இக்குலமகள் உணர்வுபோதித்திருப்பது ஈண்டு உய்த்துணர வந்தது. புத்தி போதனைகளைப் பல வகைகளிலும் வித்தகவினோதமா வெளிப்படுத்தி விளக்கி வருவது விநயசம்பத்தாய் விளங்கி வியப்பை விளைத்து வருகிறது.

“ஏ பேயா! நீ வாய்க்கு வந்தபடி பேசுகிறாய்! அறிவு நலம் உனக்கு ஒரு சிறிதும் இல்லை என்று தெரிகிறது; நேமநியமங்கள் யாதுமின்றிக் காமவெறியனாய்க் களித்துப் புலம்புகின்றாய்; புலையான அந்தப் புலப்பங்களை ஒழித்து விடு; அரச செல்வங்கள் யாவும் இழந்து நீ அழிந்து படநேர்ந்துள்ளாய்! விண்ணுலகத்தை இந்திரன் பெறப்போகிறான்; இலங்கை அரசை விபீடணன் அடைந்து கொண்டான்; இராமபாணங்கள் உன் மார்பைக் குடைந்து ஊடுருவிப்போக உருத்து ஊக்கிக் கொதித்து நிற்கின்றன; காகக் கூட்டங்கள் உன் கண்களைக் கொத்திப்பிடுங்கி எத்திசைகளிலும் எறிய நாட்டமாய் உலாவுகின்றன; உன் உடலைத் தின்று களிக்கும்படி நரிகளும் நாய்களும் பேய்களும் வாய்களைத் திறந்து கொண்டு யாண்டும் ஆவலோடு திரிகின்றன; உனது மகனான இந்திரசித்தின் உயிரை எனது அருமைக் கொழுந்தன் இலக்குவனுடைய பாணங்கள் பருகி வர அதி வேகத்தோடு ஆர்த்து நிற்கின்றன; அவனுடைய உடலை நாய்கள் நக்க நச்சியுள்ளன; ஐயோ! என் மகன் செத்தானே! என்று உன் வாய்

கள் அழுதுபுலம்பப் பேய்கள் சூழ்ந்து கேட்கும் காலம் நேர்ந்துள்ளது; இப்படிக் கொடிய நீச நிலைகள் நெடிது நீண்டு எங்கும் கடுமையாய் மூண்டு நிற்றலை ஒரு சிறிதும் உணர்ந்து சிந்தியாமல் ஈனத்தனமாய் இறுமாந்து வார்த்தைகள் ஆடுகின்றாயே! அழிகேடுகளுக்கே வழி செய்து முழுமூடமாய் நீ உளறி உழல்வது கொடிய அருவருப்பாயுள்ளது; எனது உத்தம நாயகன் எதிரே சித்திரவதையாய்ச் சாக நேர்ந்துள்ள நீ அந்தச் சுத்த வீரனுடைய பத்தினி எதிரே வந்து பாழ் வாய்திறந்து பழிமொழிகளைப் பேசிப் பாவங்களை விளைத்துக் கொள்ளுகின்றாயே! இந்த நீசவிளைவு உனது குடியையும் குலத்தையும் அடியோடு அழித்து உன்னைக் கொடிய நரகத்தில் ஆழ்த்திவிடுமே! அழிகேடுகளை உணர்ந்து உன் பழிவாயை மூடி விரைந்து வெளியே போய் விடு!" என்று இவ்வாறு மானக் கொதிப்போடு மதி நலங்களை வெளிப்படுத்தி சானகி வீராவேசமாய்ப் பேசி நின்றாள்.

என் காமநோய்க்கு மருந்தாக உன் செல்லவாய் திறந்து ஒன்று சொல்லியருள் என்று பல்லிளித்துக் கேட்ட இராவணனுக்குச் சீதையிடமிருந்து இப்படிப் பதில் மொழிகள் வந்துள்ளன. ஆசைமயக்கால் அவலமாய்ப் பேசினன் ஆதலால் நேரே அவன் நெடிய அவமானங்களை அடைய நேர்ந்தான்.

நகுவன நின்னோடு நாயகன் வாளி.

என்னோடு முகம் மலர்ந்து உவகையாய்ச் சிறிது பேசமாட்டாயா? என்று இலங்கை வேந்தன் கேட்ட கேள்விக்கு அயோத்தி அரசி இவ்வாறு வகையாய்ப் பதில் சொல்லியருளினாள்.

இராமபாணம் உன்னோடு சிரித்து விளையாடும்; அதனோடு நீ களித்து மகிழலாம் என இராவணனை நோக்கிச் சீதை உரைத்திருக்கும் இதில் எவ்வளவு எள்ளல் இழிவுகள் துள்ளியுள்ளன! என்பதை உள்ளி நின்று ஊன்றி உணர்ந்து கொள்ள வேண்டும்.

யூகமான விவேகமொழிகளுள் வீரவேகங்கள் வீறுகொண்டு நிற்கின்றன. எல்லை மீறிய வெறுப்பினும் சொல்லை அளந்து பேசி வருவது அந்த உள்ளத்தின் உறுதி நிலையையும் உணர்வு நலனையும் உணர்த்தி உண்மை நிலையை வெளிப்படுத்தியுள்ளது.

எண்மையும் தண்மையும் இரக்கமும் உடையளாயினும் அத்தூர்த்தனுடைய புலைப்புன்மையை நோக்கி வன்மையான வார்த்தைகளை வாய்கூசாமல் நேரே வழங்க நேர்ந்தாள்.

காகம் வந்து மதுரமாற்றம் சொல்லுவ;
துண்டத்தால் உன் கண்ணைக் கல்லுவ.

உனது அழகிய வாயிலிருந்து அதி மதுரமான மொழிகளைக் கேட்க ஆவல் கொண்டுள்ளேன் என்று அப்பேயன் பிதற்றினன் ஆதலால் அதற்கு இத்தூயவள் இவ்வாறு எதிர் உரைத்தாள்.

ஏதேனும் ஓர் இனிய சொல்லைச் சொல்லுக என்று என்னிடம் வந்து பல்லைக் காட்டுகின்றாயே மடையா! உன்னிடம் வந்து உவந்து கூடி நேரே சொல்ல உரிய ஓர் இனம் தனியே உள்ளது; அதன்பெயர் காகம் என இங்ஙனம் காட்டியருளினள்.

இராமபாணத்தால் அடிபட்டு இராவணன் போர்க்களத்தில் வீழ்ந்து கிடப்பான்; காக்கைகள் வந்து கா கூ என்று கத்தி அவனுடைய கண்களை மூக்கால் கொத்திப் பிடுங்கித் தின்னும் என்னும் அவலக்காட்சியை இங்கே கண்டு கவல்கின்றோம். துண்டம் = மூக்கு. ஆசை நோக்கின் அழிவு நோக்க வந்தது.

என்னை இச்சித்துப் பார்த்த கண்களைக் காக்கைகள் கொத்திப்பிடுங்கும் என்று இப்பத்தினி உள்ளம் நொந்து உருத்துச் சாபமிட்டபடியாய் இவ்வாசகம் ஈண்டு உருவாகி வந்துள்ளது.

கமலக் கண்ணான் வில் உமிழ் பகழி கலப்பன.

தன்னோடு கலந்து மகிழ வேண்டும் என அலந்து புலம்பிய அவனுக்குக் கலக்க உரியன இவை என்று இலக்கோடு எடுத்துக் கூறினள். கூறிய உரைகள் கூரிய வசைகளாய்ப் பாய்ந்தன.

செந்தாமரைக் கண்ணன் என இராமனை இங்கே குறித்தது அந்தக் கண்ணழகன் கண்டு களிக்க வுரிய பெண்ணரசியை மண்ணாய் மடிய நேர்ந்துள்ள அரக்கன் எண்ணியுழல்வது ஈன மயல் என்பது தெரிய வந்தது. கமலம் = தாமரை. நீரில் மலர்வது எனக் குறியாய் அமைந்தது. நீர்மை தோய்ந்து சீர்மை வாய்ந்துள்ள அந்தக் கமலக் கண்களையே சீதையின் உள்ளக் கமலம் கருதியுள்ளமையை இவ் வுரையால் உணர்ந்து கொள்ளுகிறோம்.

அயலான் மயலோடு தன்னை விழைந்தான் ஆதலால் அந்தத் தீய நெஞ்சைத் தூயவன்பகழி பாய நூறி அழித்து ஒழிக்கும்

என்பதை இங்கே தெளித்துக் காட்டினாள். அலகை புல்லுவ என்றது பேய்களே இராவணனைத் தழுவ வுரியனவாய்க் குழுமி நிற்கின்றன என அவனது இழவு நிலைமைகளை விழி தெரிய விளக்கினாள். அழிவும் இழிவும் அவலமும் அறிய வந்தன.

சொல்லுவன காகங்கள், புல்லுவன பேய்கள், கலப்பன பகழிகள் எனக் குறிப்போடு உரைத்தது கூர்ந்து சிந்திக்கவுரியது. நசையால் இழிந்து காமதாபத்தோடு அவன் பேசிய கொச்சை மொழிகளுக்கு இசைய எதிர் பேசினாள். மால் கொண்டு மையல் மண்டி வெய்ய வார்த்தைகளை வீணே பேசுகின்றானே! என்று தையல் உள்ளம் தவித்துநொந்துள்ளமையால் அவனுடைய அழிவுகளைக் குறித்துக் கொதித்துக் கூறினாள்.

உன்மகன் உயிரை நன்மகன் வாளி நக்க;
நாய் அவன் உடலை நக்க.

என்றது கொடிய கொதிப்போடு வந்துள்ளது. இராவணன் மேல் மண்டியுள்ள சீற்றம் அவன் குடிமீதும், குலத்தின்மீதும் தாவிச் சபித்து வருகிறது. இராமபத்தினியான தன்னை இச்சித்த பாவத்தால் புத்திரனை இழந்து இராவணன் பதைத்துத் துடிப்பான் என்று கடுத்து வைத்திருக்கிறாள். என் நாயகன் பாணங்களால் நீ செத்து அழிவாய்; இளைய பெருமாள் அம்புகளால் உன் மூத்தமகன் இந்திரசித்து மாண்டுபடுவான் என்று நீண்ட கோபக் கொதிப்பால் உருத்து மூண்டு நேரே கூறியிருக்கிறாள்.

சுமித்திரை உய்ய ஈன்ற நன்மகன் என்றதனால் இலட்சுமணன் மீது சீதை கொண்டுள்ள அன்பும் மதிப்பும் அறியலாகும். உலகம் உய்ய வந்துள்ள குலமகன் என்று இளையவனை எண்ணி மகிழ்ந்துள்ளாள். தனது சிறிய மாமியை அருமைத் தாயாகவே கருதி மரியாதை செலுத்தி வருகிறாள் என்பது எம்மோய் என்றதனால் தெரிய வந்தது. தன் கணவனுக்கு உயிர்த்துணையாய்ப் பிள்ளையை உதவியுள்ளவள் ஆதலால் அந்தப் பெரியவள் பால் பேரன்பு மண்டிப் பெரு நன்றியோடு இப்பதிவிரதை உருகி வருகிறாள். உதவியும் உரிமையும் உள்ளத்தை உருக்கியுள்ளன.

அருமைத்தம்பி உரிமையோடு துணையாயிருத்தலால் கொடியபகைவனை அடியோடு வென்று தனது நாயகன் தன்னைச்

சிறை மீட்டி அருளுவான் என்று இத்தூயவள் உறுதியாய்த் துணிந்திருத்தலை உரைகள் தோறும் உணர்ந்து வருகின்றோம்.

### பின்பு நிகழ்ந்தது.

புனிதமான மனவுறுதியால் அந்தக் கொடியவனுக்குத் தகுந்தவகையில் பதில் உரைத்தாள். இந்தக் குலமகளுடைய உரைகளைக் கேட்டதும் அவன் நிலைகுலைந்து சீறி நெடிது கொதித்தான்: கடிது கொன்று விடுவதாகக் கடுத்துத் துடித்தான். இடையே புகுந்து மகோதரன் தடுத்தான். "அரசர்பெரும! பொறுத்தருளுங்கள்; தேவரீருடைய மகிமைமாண்புகள் நன்கு தெரியாமையால் இம்மானுடமடந்தை உரிமையோடு உவந்து இணங்காமல் பிழையாய்ப் பிணங்கி யிருக்கிறாள். பெற்ற தந்தை சொன்னால் பேதை உள்ளம் திருந்தி பெருமாண்பு பெறுவாள். பற்றி வந்துள்ள சனகனையே உய்த்து உய்திகாணலாம்" என்று அத் தீயவன் மாய வஞ்சனையாய்க் கொண்டு வந்துள்ளவனை நேயமாக நேரே விடுத்தான்.

இலங்கை வேந்தன் உருக்துச் சினந்ததும், மந்திரி வந்து தந்திரம் குறித்ததும், பிடியுண்டு வந்த வஞ்சன் பிராட்டியிடம் பேச நேர்ந்ததும், அதிசயமான ஓர் விநோத நாடகமாய் விளங்கி நின்றது. தன் இச்சைக்கு இசையாமையோடு தன்னை மிகவும் இழித்துப் பழித்தது அவனுக்குக் கொடிய இலட்சையாயது; ஆகவே அவன் வேகமாக் கொதித்து வெகுண்டு சீறினன்.

வெய்யவன் அனைய கேளா வெயிலுக விழித்து வீரக்
கைபல பிசைந்து பேழ்வாய் எயிறதுக்கி அழுந்தக்கவ்வித்
தையல்மேல் ஓடலோடும் மகோதரன் தடுத்தான் சென்ற
மொய்கழல் தாதை வேண்ட இசையும் நீ முனியல் என்றான். (1)

என்றவன் விலக்க மீண்டான் ஆசனத் திருக்க ஆவி
பொன்றினன் ஆதும் என்னாத் தரையிடைக் கிடந்த பொய்யோன்
இன்றிது நோயை எண்ணின் என்னைஎன் குலத்தி னோடும்
கொன்றனை யாதி என்றே இனையன கூறல் உற்றான். [2]

பிராட்டி இகழ்ந்து கூறிய உரைகளைக் கேட்டு இராவணன் பெருஞ்சினம் கொண்டதும், அவனை ஆற்றியிருத்தி மகோதரன் மாயாசனகனைத் தூண்டியதும், சாக நேர்ந்தவன் போல் தரையில் பாசாங்கு செய்து கிடந்த அவன் சீதையை நோக்கிப் பேச

நேர்ந்துள்ளதும் நாடகக்காட்சிகளாய் ஈண்டு நிகழ்ந்துள்ளன. நிகழ்ச்சிகளை ஊன்றி நோக்குபவர் அப்பொழுது அங்கே நடந்துள்ள செயல் நிலைகளை இங்கே நன்கு கூர்ந்து ஓர்ந்துகொள்வார்.

மருத்தன் என்னும் அரக்கன் வஞ்சனையாய்ச் சனகனைப் போல் மாயவடிவம் தாங்கி வந்திருக்கிறான் ஆதலால் பொய்யன் என அவனது மெய்தெரிய மேதகவாய் வுரைத்தார்.

அல்லல் அவமானங்களால் நொந்து நாணத்தால் நைந்து செத்தவனைப் போல் தரையில் செயலிழந்து கிடந்திருக்கிறான் என்று தெரிகின்றது. அவ்வாறு வஞ்சமாய்க் கிடந்தவன் நெஞ்சம் துணிந்து சீதையை நோக்கி நேரே பேச நேர்ந்தான்.

இன்று இது நேராய் என்னின் என்னை
என் குலத்தினோடும் கொன்றனை ஆதி!

சனகி எதிரே மாயாசனகன் முன்னதாக இன்னவாறு இன்னலோடு கூறியிருக்கிறான். இது என்றது இராவணனுடைய வேண்டுகோளை அதிவிநயமாய்ச் சுட்டியபடியாம். அவனுடைய காமதாபத்தைத் தணித்துச் சேமம் செய்தருள் என்பதைக் குறிப்பாகக் குறித்தான். மருமமொழி கருமமாய் வந்தது.

"தேவர்களையும் அடக்கி மூவுலகங்களையும் ஆளுகின்றவன்; அரிய பெரிய சக்கரவர்த்தி; அதிசயவீரன்; பிரமாவின் மரபில் வந்தவன்; குலத்தாலும் நலத்தாலும் பலத்தாலும் பணத்தாலும் குணத்தாலும் சிறந்தவன்; அந்த மன்னர் பெருமான் உன்மேல் ஆசை கொண்டான்: இது நம்முன்னோர் செய்த தவமே; அம் மன்னனுடைய இச்சைக்கு நீ உடனே இணங்கியருள்வது நல்லது; இல்லையானல் எல்லை யில்லாத அல்லல்கள் நமக்கு விளைந்து விடும்; நம் குலத்துக்கும் நாசமாம்; இதனை யோசனை செய்து உள்ளம் இசைந்து கொள்; இசையாவிடின் வசையோடு நானும் என் குடும்பமும் குலமும் மிதிலை ஆட்சியும் அழிந்து போகவே நேரும்; அந் நாசங்களுக்கெல்லாம் நீயே காரணமாவாய்! நிலைமைகளை யெல்லாம் கருதியுணர்ந்து என்னை என் குலத்தோடு காத்தருள்" என்று அவன் வார்த்தைகளாடியுள்ளான்; அவ்வுண்மைகளை இது வார்த்தைக் காட்டியுள்ளது. அபாய நிலைமைகளை உபாயமாக எடுத்து விளக்கி மேலும்

தொகுத்துப் பேசினன். அவனுடைய வாய்மொழிகள் மாய விரகுகளை மருவி வாத முறைகளைத் துருவி மருமமாய் வந்தன.

பூவின்மேல் இருந்த தெய்வத் தையலும் பொதுமை யுற்ருள்;
பாவியான் பயந்த நங்கை நின்பொருட் டாகப் பட்டேன்
ஆவிபோய் அழிதல் நன்ரே அமரர்க்கும் அரசன் ஆவான்
தேவியாய் இருத்தல் தீதோ சிறையிடைத் தேம்பு கின்ருய். (க)

என்னைஎன் குலத்தி னேடும் இன்னுயிர் தாங்கி ஈண்டு
நன்னெடும் செல்வம் துய்ப்பேன் ஆக்கினை நல்கி நாளும்
உன்னைவெஞ் சிறையின் நீக்கி இன்பத்துள் உய்ப்பாய் என்னைப்
பொன்னடி மருங்கு வீழ்ந்தான் உயிருகப் பொருமு கின்ருன்.

மாயா சனகனுடைய மாய வேலைகளை இங்கே காண்கின்ருேம். பெற்ற தந்தை என்று தன்னைச் சீதை உறுதியாக நம்பி உள்ளம் துடித்து உயிர் பதைத்து அழுதாள் ஆதலால் அந்தக் கெழுதகைமையை முழுதும் பற்றுக் கோடாகப் பற்றிக் கொண்டு காரிய சாதனையில் வெற்றி காண விழைந்து விரகு சூழ்ந்து பேச நேர்ந்தான். வஞ்சகச் சூதன் நெஞ்சம் துணிந்து வஞ்சியை வஞ்சிக்க விஞ்சிய விநயமாய் வீண வாதங்களை விளம்பினன். "அம்மா! சானகீ! உன் தந்தைக்கு நேர்ந்துள்ள துன்பங்களை நீ கூர்ந்து சிந்தனை செய்து பார்! கொடிய அபாயங்கள் நம் குலத்தைச் சூழ்ந்து கொதித்து நிற்கின்றன; அந்த நாசத்திலிருந்து விலக்கி நீ தான் எங்களைக் காத்தருள வேண்டும். மணம் புரிந்த கணவனை விட்டு அயலானைச் சேர்வதுதவறு என்று நீ தவருகக் கருதலாம்; அழகிய மங்கை ஒருத்தி ஒருவனுக்கே உரியவளாய் இருக்க வேண்டும் என்பது பெரிய பிழையாம். பெண்களுக்குத் தனி உரிமையான சுதந்திரம் வேண்டும்; ஓர் ஆடவன் ஏவிய படியே அடங்கி ஒழுகுவது தலைமையான குலமகளுக்கு இழுக்காம்; பேரழகுடைய தேவ மங்கையர் யாவரும் எவரை எச் சமையம் விரும்பினர்களோ அவரையே அவ்வமையங்கள் தோறும் அமைதியாய் மருவி மகிழ்ந்து வருகின்றனர்; ஒரே இந்திராணியே வருகின்ற இந்திரர்களுக்கெல்லாம் மனைவியாயிருந்து மகிழ்ச்சியை யூட்டி வருகின்ருள். செல்வங்களுக்கெல்லாம் அதி தேவதையாய் அழகுக்குத் தனிமுதல் தலைவியாய் நிலவியுள்ள இலட்சுமியின் நிலைமையைக் கலையறிவு

டைய நீ சிறிது கருதிப்பார். திருமாலை அவள் உரிமையாக மணந்து கொண்டாலும் செல்வர்கள் பலரிடமும் மனம் இசைந்து இணங்கியிருக்கிறாள். செல்வி என்று அவளுக்கு ஒரு பெயர் அமைந்துள்ளது. அதற்குக் காரணம் என்ன தெரியுமா? உலகிலுள்ள செல்வர்கள் எல்லாருக்கும் உரியவளாய் இணங்கியிருத்தலால் செல்வி என்னும் அந்நாமம் காரணக்குறியாய் வந்தது. திருவன், திருவாளர், செல்வர், ஸ்ரீமான் எனப் பொருளுடையவர் பெயர் பெற்றிருப்பது எதனால்? திருவைத் தமக்கு உரியவளாக இனிது மருவியிருப்பதனாலேயே செல்வர் அவ்வாறு செல்லப்பேர்கள் பெற்றுள்ளனர். சாதாரணமான செல்வர்களிடமே இலட்சுமி அவ்வாறு உள்ளம் இசைந்து உவந்துள்ளாள்; அகில உலகங்களையும் தனி உரிமையாக் கொண்டு தேவர்களையெல்லாம் அடக்கி ஆளுகின்ற அதிசயமான பேரரசனுக்கு நீ மனைவியாய் இசைந்திருப்பது எவ்வளவு பெருமை! அந்த இலக்குமியும் உன் வாழ்வைக் கண்டு பொறாமைப் படநேர்வாள்; அவளும் வந்து உனக்கு ஊழியம் செய்யும்படி இந்த இலங்கை வேந்தன் செய்தருளுவான்; எவ்வளவு பெரிய மகிமையான பாக்கியங்கள் உன்னை நோக்கி வந்து காத்து நிற்கின்றன; அத்தகைய அரிய இன்பபோகங்களையெல்லாம் இழந்து விட்டுக் கொடிய துன்பச்சிறையில் பிடிவாதமாய்க் கிடந்து உழலுகின்றாயே! இது பெரிய மதிகேடு அல்லவா? தேவர்களுக்கும் தேவனாயுள்ளவனுடைய தேவியாயிருந்து மூவுலகங்களும் புகழ அதிசய இன்பநலங்களை மேவி மகிழாமல் பேதைமையாயிழிந்திருப்பது பிழைபாடான நெடிய ஏதமேயாம். மடமையான உனது பிடிவாதத்தால் எனது குடியும் குலமும் அரசும் அடியோடு அழிந்து போக நேர்ந்துள்ளன; நானும் அவமானமாய் இழிந்து சாகநேர்ந்தே இப்படி ஈனமாய்ப் பிடிபட்டு அடிபட்டு நைந்து மானமிழந்து வந்துள்ளேன்; நிலைமைகளையெல்லாம் நேரே ஓர்ந்து உணர்ந்து உய்தி புரிந்தருள்! என்னை என் குலத்தோடு வாழ்வித்து, உன்னையும் சிறைத் துன்பத்தை நீக்கி நிலைத்த இன்பத்துள் ஆழ்த்திக் கொள்; துன்பத்தொடர்புகள் எல்லாம் இன்றோடு ஒழியட்டும் சீதா! உன்னை அருமையாகப் பெற்ற உரிமையால் உறுதி சூழ்ந்து சொல்லியுள்ளேன்; ஒல்லையில் இசைந்து எல்லையில்லாத இன்பங்களை இசைத்தருள்'' என்று இவ்வாறு

சொல்லிக் கொண்டே சானகியின் காலில் விழுந்து தொழுது அழுது மறுகி இழுதையாய் அவன் அயர்ந்து கிடந்தான்.

அந்த மாய அரக்கனுடைய மாயச் சூழ்ச்சிகளும் வாய் மொழிகளும் தீய சூதுகளாய்த் திரண்டெழுந்தன. இவ்வளவு வார்த்தைகளும் அந்த மிதிலை மன்னனை சனகனுடைய ஒலிக ளாகவே யிருந்தன. போலி வேடம் புனைந்து வந்துள்ள மாயச் சனகன் உண்மைச் சனகன் போலவே உருவிலும் செயலிலும் உரையிலும் ஒலியிலும் குறிப்பிலும் சிறப்பிலும் நிறை ஒத்திருந் தது நெடிய அதிசயமாய் நின்றது. மாய விஞ்சைகளில் நெடிது பழகினவன் ஆதலால் அத்தீயவனுடைய கரவான செயல் இயல்களை யாதும் தெரிந்து கொள்ள முடியவில்லை.

சீதையின் உறுதியான மனநிலையைக் குலைத்து வினைமுடிவு காண விநயமாக முதலில் ஓர் விசித்திர வாதத்தை விரித்துப் போதித்தான். அவனது போதனை புலைபடிந்து வந்தது.

பூவின்மேல் இருந்த தெய்வத்தையலும் பொதுமை யுற்றுள்.

அதிசாதுரியமாக இதைக் கூறியிருக்கிறுன். தாமரை மலர் மேல் வசிப்பவள் ஆதலால் இலட்சுமியை இங்ஙனம் குறித்தான். தெய்வத்தையல் என்றது அவளது திவ்விய நிலைமை தெரிய வந்தது. திருமாலும் பெருமால் கொள்ளும்படி அதிசய சவுந்தர வதியாய் அமைந்துள்ளமையைத் தையல் என்னும் சொல் விளக்கி நின்றது. உரிய பெயர் அரிய நிலையை உணர்த்தியது.

திருமாலின் அருமை மனைவியாய் அமைந்துள்ள அந்தத் தெய்வ சுந்தரியும் செல்வர் பலரிடமும் போய்த்தங்கி அவர்களு க்கு உவகையூட்டி இன்பம் புரிந்து வருகின்றுள் என்பான் பூ வின் தையலும் பொதுமை யுற்றுள் என்றுன். கல்விக்குச் சரசு வதி அதிதேவதையாயிருத்தல் போல் செல்வத்துக்கு இலட்சுமி அதிதேவதையா யிருக்கிறுள். செல்வத்தை இலட்சுமி என்று உபசாரமாய்ச் சொல்வது யாண்டும் வழக்கமா யுள்ளது.

"முயற்சி திருவினை ஆக்கும்." (குறள்,616)

செல்வத்தைத் திரு என்று தேவர் இதில் குறித்திருக்கிறுர். திருமகள் அருளால் வருவது ஆதலால் செல்வம் திருவெனவந்தது.

"திருமுயங்கல் இல்லை எனின் இல்லை பொருள் ஈட்டம்."
(சீவகசிந்தாமணி,2556)

இதில் திரு உணர்த்தி நிற்றலை ஊன்றி உணர்க.

(செல்வம் ஒரு நிலையில் நில்லாமல் யாரிடமும் பரவிப் பூரியாரிடமும் போய்ச் சேர்ந்திருத்தலால் அதன் தெய்வமான செல்வியைத் தனக்கு ஒல்லும் வகையில் அந்த மாயவல்லவன் வளைந்து சொல்லினன். பொதுமை யுற்றாள் என்றது பொதுமகள் என்னும் தொனியில் வந்தது. தனது தேகபோகத்தை ஏகபோகமாய் ஒருவனுக்கு மாத்திரம் நல்காமல் பலர்க்கும் பொதுவாய் இசைந்து கொடுப்பவள் பொது மகள், வரைவில்மகள், என நின்றாள். அந்த வேசித்தனத்தை இங்கே கூசாமல் அவன் துணிந்து பேசியது தனது காரியசாதனையைக் கருதி என்க.)

"திருவுடை மன்னரைக் காணின்
திருமாலைக் கண்டேனே என்னும்" (திருவாய்மொழி)

என்றபடி அரசர்கள் திருமாலின் அமிசமாய் மருவியுள்ளனர். அவர்களிடமெல்லாம் செல்வத்திரு பரவியுளது. ஆகவே பூமகள் பொதுமகள் என்னும்படி மன்னியுள்ளாள் என அவன் நன்னயமாய் நவிற்றியுள்ளான். பெற்றமகளிடம் உற்றதந்தை உரிமையோடு பேசுவது போல் உரையாடி வருபவன் திருமகள் நிலைமையை மருமமாக் காட்டிக் கருமம் காண முயன்றான்.

திருமகள் நிலைமையும் செல்வர் கேட்டிரேல்
மருவிய மனிதரை இகந்து மற்றவள்
பொருவறு புகழினர்ப் புதிது காமுறும்
ஒருவர்கண் உறவிலள் உணர்ந்து கொண்மினே. (1)

புண்ணியம் உலர்ந்தபின் பொருள் இலார்களைக்
கண்ணிலர் துறந்திடும் கணிகை மார்கள் போல்
எண்ணிலள் இகந்திடும் யாவர் தம்மையும்
நண்ணிய நண்பிலள் நங்கை வண்ணமே. (2)

(சூளாமணி,முத்திச்சருக்கம்,14,15)

கணிகைமார் போல் திருமகள் பலரையும் மருவி ஒருவரிடமும் உறவிலளாய் ஒருவி நீங்குவள் என ஓர் அரசன் இங்ஙனம் உரைத்திருக்கிறான். செல்வத்தின் நிலைமையைத் திருமகள் மேல்

எற்றி இவ்வாறு சொல்லி வருவது உள்ளி யுணர வுரியது.

தையலும் என்றதில் உம்மை அவளுடைய அதிசய மகிமை களை எல்லாம் கருதியுணர வந்தது. அத்தகைய தெய்வத்தையலே தாராள மனதோடு எல்லாருக்கும் பொதுவாய் இசைந்திருக்கும் போது மானிடமடந்தையாகிய நீ இசையாமல் இருப்பது கட மையை உணராத மடமையேயாம் என்று திடமாயுரைத்தான்.

திருமாலின் மனைவியான இலட்சுமி பலர்க்கும் பொதுமை யுற்றிருக்கிருள்; இராமன் மனைவியான நீ அவ்வாறு இசையாது போயினும் இராவணன் ஒருவனுக்கேனும் உரிமையாய் இசைந் திருக்கலாம்; அதனுல் உனக்குப் பெருமையேயாம்; அருமை யை அறிந்து ஆதரவு செய்தருள் எனப் பிதற்றி நின்ருன்.

**அமரர்க்கும் அரசன் ஆவான் தேவியாய் இருத்தல் தீதோ?**

இராவணனுடைய பெருமகிமையை இவ்வாறு எடுத்துக் காட்டி அவனுச்கு உரிமையா யிணங்கி இருக்கும்படி இப்படி வணங்கி வேண்டியிருக்கிருன். தேவர் யாவர்க்கும் அரசனுயு ள்ள அவனுக்கு நீ தேவியானுல் அளவிடலரிய மகிமைகளும் நன்மைகளும் உளவாம் என ஊதியங்களை விளக்கி உரைத்தான். தீதோ? என்றது யாதொரு தீதும் ஆகாது; எவ்வகையிலும் நன் மையே ஆம் என்று புன்மையோடு புகன்ருன்.

உரிய கணவனை ஒருவி அயலானை மனதால் விழைவதே கொடிய தீமை; நெடிய பாவம்; எனச் சீதை முடிவு செய்துள் ளாள் என்று தெரிந்து கொண்டான் ஆதலால் அந்த உறுதி நிலையைக் குலைக்க அவன் இவ்வாறு உரைக்கலாஞன்.

**என்னை என் குலத்திஞேடும் தாங்கி.**

என்றது தனக்கு நேர்ந்துள்ள அபாயத்தை நேரே கூறிய வாறும். விதேகதேசம் முழுவதும் பாழாய் விடும் என்று அவன் யாழ்வாய் திறந்துள்ளான். “உன்னை அருமையாகப் பெற்ற உரிமைத் தந்தை நான். எனக்கு நேர்ந்துள்ள அவமானத்தையும் அழிவையும் நீயே நேரே பார்த்துக் கொண்டாய்; உன் உள்ளம் இரங்கி உடனே அருளவேண்டும்; இல்லையானுல் நான் நாசமா வதோடு என்குலமும் அடியோடு அழிந்து போம்; சீதையைப் பெற்ற தாதையும் அவன்குலமும் அப்பேதையால் நாசமாயின

என்னும் நீசப்பழி நின்னைச் சேரலாகாது; அவ்வாறு சேராமல் இருத்தற்கு வழி இந்த மன்னர்பிரானை நீ சேர்ந்து கொள்வதே யாம்'' என இன்னவாறு அவன் பேசி வணங்கவே சீதை உள்ளம் துடித்துத் தனது செவிகள் இரண்டையும் சேரப் பொத்திக் கொண்டு ஆ! என்று அலறி அலமரலாயினள்.

சீதை சினந்து கூறியது.

உருவம் செயல்களை நோக்கித் தன் தந்தைதான் என்று முழுதும் நம்பி உலையிலிட்ட மெழுகுபோல உருகிப் பரிதபித்துத் துடித்துப் பதைத்துப் பதறிக் கதறி அழுதவள் இப்பொழுது அவனுடைய வார்த்தைகளைக் கேட்டதும் ஐயமடைந்து விரைந்து வெய்ய நிலையில் வெகுண்டு வீறோடு சீறினள்.

அவ்வுரை கேட்ட நங்கை செவிகளை அமையப் பொத்தி
வெவ்வுயிர்த்து ஆவி தள்ளி வீங்கினள் வெகுளி பொங்கி
இவ்வுரை எந்தை கூறான் இன்னுயிர் வாழ்க்கை பேணிச்
செவ்வுரை அன்றி தென்னச் சீறினள் உளையச் செப்பும்:

அந்தத் தீய வஞ்சகன் கூறிய வார்த்தைகளைக் கேட்ட பொழுது தூய நெஞ்சுடைய சீதை துடித்துப் பதைத்திருக்கும் நிலைகளை இக் கவிப்படம் நன்கு எடுத்துக் காட்டியுள்ளது. உணர்ச்சிவேகங்கள் மானசக் காட்சிகளில் நேரே ஒளி புரிந்து தெளிவாய் விளங்கிச் சீர்மை நீர்மைகளைத் துலக்கி நிற்கின்றன.

காதுகளைக் கைகளால் இறுக்கி மூடியது அந்நீச வார்த்தைகளைக் கேட்கச் சகிக்காமல் நெஞ்சம் துடித்து வெறுத்துள்ளமையை விளக்கி நின்றது. உயிர்த்து ஆவி தள்ளி என்றதனால் பெருமூச்சு எறிந்து மறுமூச்சுஊர்ந்து உயிர் பதைத்துப் பரிதாபமாய் மறுகி அலமந்துள்ளாள் என்று தெரிய வந்தது. தீய சொற்கள் கொடிய தீப் பொறிகளாய் நெடிய நோயை விளைத்திருக்கின்றன. உள்ளத் துடிப்புகளை உடலின் பதைப்புகள் உணர்த்தியுள்ளன. தந்தை என்றே நம்பி இது வரையும் மறுகி வந்தவள் இந்த இழிமொழிகளைக் கேட்டபின்பு கொஞ்சம் தெளிவடைந்து நெஞ்சம் துணிந்து நினைவுற நேர்ந்தாள்.

இவ்வுரை எந்தை கூறான்.

சீதை இவ்வாறு சிந்தை தெளிந்துள்ளாள். ஞானசீலங்கள்

தோய்ந்த என் பிதா இந்த ஈனவார்த்தைகளை மறந்தும் பேசார்; உயிர் போக நேர்ந்தாலும் மானம் அழிய நேரார்; இவன் யாரோ ஒரு மாய வஞ்சகனான ஈனன் என்று தெரிகின்றது; யாராயிருந்தாலும்என்ன? இப்படிநீசவார்த்தைகளை நெஞ்சம்துணிந்து பேசினவனுக்கு நேரே பதில் சொல்ல வேண்டும் என்று வீராவேசத்தோடு சானகி பேச நேர்ந்தாள். வீரபத்தினி பேசியிருக்கும் தீரவசனங்கள் அரிய அறிவு நலங்கள் தோய்ந்து பெரிய நெறிமுறைகள் வாய்ந்து மானவீரங்கள் மருவி ஞானதீரங்கள் பெருகி அதிசய வேகமாய் ஆர்த்து விதி வழிகளோடு மதி தெளிய வந்தன. அயலே வருவன காண்க.

அறம்கெட வழக்கு நீங்க அரசர்தம் மரபுக்கு ஆன்ற
மறம்கெட மெய்ம்மைதேய வசையுற மறைகள் ஓதும்
திறம்கெட ஒழுக்கம் குன்றத் தேவரும் பேணத் தக்க
நிறம்கெட இனைய சொன்னாய் சனகன்கொல் நினையின்ஐயா!

வழிகெட வரினும் தத்தம் வாழ்க்கைதேய்ந்து இறினும் மார்பம்
கிழிபட அயில்வேல் வந்து கிழிப்பினும் சான்றோர் கூறும்
மொழிகொடு வாழ்வது அல்லால்முறைகெடப்புறம்நின்றார்க்கும்
பழிபட வாழ்கிற் பாரும் பார்த்திபர் உளரோ? பாவம்!

நீயும்நின் கிளையும் மற்றிந் நெடுநில வரைப்பும் நேரே
மாயினும் முறைமை குன்ற வாழ்வனோ? வயிரத்திண்டோள்
அயிர நாமத் தாழி அரியினுக்கு அடிமை செய்வேன்
நாயினை நோக்கு வேனோ நாண்துறந்து ஆவி நச்சி.

வரிசிலை ஒருவன் அல்லால் மைந்தர்என் மருங்கு வந்தால்
எரியிடை வீழ்ந்த விட்டில் அல்லரோ? அரசுக்கு ஏற்ற
அரியொடும் வாழ்ந்த பேடை அங்கணத்து அழுக்குத்தின்னும்
நரியொடும் வாழ்வ துண்டோ? நாயினும் கடைப் பட்டோனே!

அல்லையேல் எந்தை ஆனாய் ஆகத்தான் அலங்கல் வீரன்
வில்லையே வாழ்த்தி மீட்கின் மீளுதும்; மீட்சி என்பது
இல்லையேல் இறந்து தீர்தும்; இதுவலால் இயம்பலாகாச்
சொல்லையே உரைத்தாய் என்னும் பழிகொண்டாய் என்னச்
சொன்னாள்.

மாயாசனகனாய் வந்துள்ள அத்தீயவனை நோக்கித் தூயவள் இவ்வாறு பேசியிருக்கிறாள். மானக் கொதிப்புகள் நெருப்

புப் பொறிகளைக் கக்கி யிருக்கின்றன. உரை ஒலிகள் உள்ளத்தின் உறுதி நிலைகளை உணர்த்தியுள்ளன; யாவும் நுணுகிஉணரவுரியன.

"ஐயோ! நீ சனகனா? தருமம் அழிந்து தொலைய, தகைமை கழிந்து மறைய, சத்திரிய வீரம் இழிந்து ஒழிய, உத்தம நீர்மை ஒதுங்கி அழிய, சத்தியம் கெட, மானம் நாசம் அடைய, வேத நெறி எதமுற, நீதிமுறை பாழாக, புகழ் பொன்றி மாள, பழி பாவமான இழிமொழிகளை நெஞ்சம் துணிந்து நீசமாய் நேரே பேசினையே! உத்தம குலவீரனான மிதிலை வேந்தனா இப்படிப் பேசுவான்? சந்ததிகள் முழுதும் அழியும்படி நேர்ந்தாலும், கூரிய வேலாயுதம் நெஞ்சில் பாய்ந்து நேரே கிழித்தாலும், துயரங்கள் பல தொடர்ந்து நீண்டாலும், உயிர் துடித்து இறந்து பட மூண்டாலும், அரசர் மரபில் பிறந்த நல்ல குலமக்கள் வரிசை குலைந்து நில்லார்: மானத்தைக் காத்து உயிரை விடுவரே அன்றி ஈனமாக இழிந்து வாழ எவ்வழியும் யாதும் இசையார்; உருவிலும் உரையிலும் சனகன் போலவே நீ தோன்றுகின்றாய்! கொடியவனான இந்த இலங்கை வேந்தனுக்கு அஞ்சி நெஞ்சம் கலங்கி ஒருவேளை நீ நிலைகுலைந்து பேசினாலும் எனது நிலைமையை நீ தலைமையாக உணர்ந்து கொள்ள வேண்டும்; நீயும் உன் கிளையும் உனது நாடும் இந்த உலகம் முழுவதும் அடியோடு ஒருங்கே நாசம் அடைந்துபோனாலும் நான் நெறியிழந்து நில்லேன்; ஒழுக்கமும் கற்பும் என் உள்ளமும் உயிருமாய் உறைந்துள்ளன; அந்த உண்மையை ஒரு சிறிதும் உணராமல் புலையான புன்மைகளைப் பேசினையே! அசகாய சூரனாய், அதிசய வீரனாய், அரிய தருமமூர்த்தியாய்ச், சக்கரவர்த்திருமகனாய் நிலவியுள்ள எம்பெருமானுக்கு ஆவலாய் எவ்வழியும் ஏவல் செய்யும் அடிமை நான்; அந்தச் சிங்க ஏற்றுக்குத் தனி உரிமையான நான் இந்த நீசநாயைக் கண் திறந்துபார்ப்பேனா? நாணத்தை இழந்து உயிர்வாழுகின்ற ஈன நிலைமையை யான் யாதும் அறியேன்; மானம் இழந்து மதிகெட்டு மடத்தனமாய் என்னிடம் நீ துணிந்து பேசியதை எண்ணி எண்ணி என் உள்ளம் கொதிக்கின்றது; புண்ணிய மூர்த்தியான அந்தக் கோதண்டவீரன் ஒருவனைத்தவிர வேறு ஆடவன் எவனாயினும் என் அருகே அணுகினால் தீயில் வீழ்ந்த விட்டில் போல் மாய்ந்து மடிந்து ஒழிந்து போவான்; இராச சிங்கத்தோடு கூடிக்குலாவி உல்லாசமாய் வாழ்ந்து வந்த

ஒரு சிங்கப்பேடு எங்கேயாவது ஈன நரியோடு வாழ நேருமா? மானம் மரியாதை யாதுமில்லாமல் ஈனமான வார்த்தைகளை இழிந்து கூறினையே! ஞானதீரனான சனகனா நீ? மானவீரமுடைய மரபில் பிறந்த மன்னர்பிரானுக்கு இன்னுயிர்த் துணைவி என்பதையும் மறந்து ஈனப் பழிமொழிகளை எதிரே விளம்பினையே! விதேக நாட்டில் பிறந்த எந்தத் தாழ்ந்த சாதியும் இழிந்த காரியங்களை யாதும் செய்யாது; யாண்டும் நெறிமுறைகளைப் பேணியே மரியாதைகளோடு வாழ்ந்து வரும்; அத்தகைய உத்தம தேசத்தின் அதிபதியா இப்படி மதிகேடனாய் மானபழிந்து ஈன நிலையில் இழிய நேர்ந்தான்? உண்மையில் நீ என் தந்தையாகவே இருந்தாலும் சரியே; இராமபிரானுக்கு என்னைத் தனி உரிமையாக நீ தத்தம் செய்து கொடுத்து விட்டாய்! அதன் பின்பு என்பால் நீ உறவு பாராட்டுவது அறிவீனமேயாம்; கொடிய அரக்கர் கையில் பிடிபட்டவுடனே நீ செத்திருக்க வேண்டும்; அவ்வாறு அங்கே சாகாமல் இவ்வாறு இங்கே வந்து நீ பேசியது நீசமான பழியே; எனது பிராணநாயகன் வந்து என்னை மீட்டியருளினால் நான் மீண்டுபோய் அயோத்தியில் இருந்து வாழுவேன்; மீட்டவில்லையானால் இங்கேயே விரைந்து மாண்டுபோவேன்; என் வீரவள்ளல் கையில் உள்ள அந்த வீரகோதண்டத்தையே கண்ணும் கருத்தும் கருதி உருகி வருகின்றன; பெண்ணுலகத்துக்கெல்லாம் பெரும் பிழையாய் நான் மறுகியிருக்கின்றேன்; இந்த மறுக்கத்தில் நீ குறுக்கே வந்து இழிமொழிகளைப் பேசி என்றும் அழியாத பழிகளை உனக்கு நீ விளைத்துக் கொண்டாய்; விளிந்து போ! அல்லது விலகிப் போய்விடு!'' என்று இக்குல மகள் இவ்வாறு தலைமையான வீறோடு கூறி முடித்தாள்.

இந்தப் பேச்சுகள் அரிய பல காட்சிகளைக் காட்டியிருக்கின்றன; அபாய நிலையில் அயர்ந்து மயங்கினவள் அடுத்து அவனுடைய வாய்மொழிகளைக் கேட்டதும் உள்ளம் கடுத்து உக்கிர வீரமாய் உருத்துப் பேசியிருக்கிறாள். எந்தையே! எந்தையே! என்பொருட்டு உனக்கும் இக்கோள்வந்ததே! என்று சிந்தை துடித்துப் பதைத்தவள் பின்பு இந்தவாறு பேசியது அந்த உள்ளத்தின் பரிசுத்த நிலைகளையும் உணர்ச்சி வேகங்களையும் விளக்கி நிற்கிறது. தரும நீதிகள் உரைகளில் ஒளி வீசுகின்றன.

அறம்கெட, வழக்கு நீங்க என்றது அவன் கூறிய வார்த்தைகள் பாவப் பழிகளாய்ப் பணைத்துள்ளமையை உணர்த்தி நின்றது. தன்னுடைய தந்தை என்று முழுதும் நம்பி அழுது தவித்தாள்; மொழிகளைக் கேட்டதும் யாரோ ஒரு வெய்யவன் மாயமாய் வந்துள்ளான் என்று ஐயம் அடைந்தாள் ஆதலால் சனகன்கோல்? என அதிசய ஆவலோடு வினவலானாள்.

இனைய சொன்னாய்! என்றது இப்படி ஈனமான இழி மொழிகளை ஞானசனகன் பேசுவானா? ஏதோ இதில் மோசம் உள்ளது! என்று மோதியபடியாம். ஒருவனுடைய வாயிலிருந்து வெளியே வருகிற வார்த்தை அவனது நிலைமையைத் தெளிவாக அறிந்து கொள்ளச் செய்யும் ஆதலால் மறைந்து வந்துள்ளவன் இழிந்த தீயவன் என உணர நேர்ந்தது. உரையே உரைகல் என்றபடி அவனை நிறைதூக்கி நோக்க வாய்மொழி வாய்ப்பாய் வந்தது. தெய்வத் தையலான இலட்சுமிகூட எல்லாருக்கும் பொது வாயிசைந்திருக்கிறாளே! என்று அவன் சாதுரியசாகசமாய்க் கூறிய புலைமொழி இக்குலமகள் உள்ளத்தில் கொடிய கோபக் கொதிப்பை மூட்டி விட்டது; மூட்டவே தந்தை என்று கருதி நொந்த சிந்தை முழுதும் மாறிச் சீறிச்சினந்து நேரே பேசநேர்ந் தாள். பெண்ணரசி சீற்றம் எண்ணரிய வேகமாய் எழுந்தது.

"பிடிபட்டு அடிபட்டு அயர்ந்து வந்திருக்கிறேன்; என் உயிர் போய்விடும்; நீ விரைந்து இலங்கை வேந்தனுக்கு இசைந்த ருள்" என்று பசைந்து பணிந்து அவன் வேண்டினான் ஆதலால் அதற்கு இசைந்தபடி இக் குலமகள் எதிர் மொழிந்தாள்.

நீயும் நின் கிளையும் இவ்வுலகும் நேரே மாயினும் நான்முறை மை குன்றி வாழ்வனோ? என்னும் இந்த வார்த்தை எவ்வளவு வேகமாய்வீறிட்டு வெளிவந்துளது! தனது உள்ளத்திண்மையை யும் உறுதி ஒழுக்கத்தையும் இப்பெண்ணரசி பேருலகம் காண ஈண்டு உணர்த்தியிருக்கிறாள். சனகமன்னன் என வேடம் தரித்த வனுக்கு ஞானசீலங்களும் மானவீரங்களும் நாடகமுறையிலா வது உளவாம்; இந்த ஈனனிடம் அந்த மேன்மையான நீர்மை கள் யாதும் காணவில்லையே! என்று கருதி உளைந்துள்ளாள்.

வழி கெடவரினும், மார்பம் கிழிபட அயில்வேல் வந்து கிழிப் பினும் அரசர் பழிபட வாழார் என்றது சுத்தவீரமுடைய சத்திரிய

குலத்தின் உத்தம நீர்மையை உய்த்துணர வந்தது. நல்ல குல மன்னனுடைய மரபில் பிறந்தவள்; கொற்றக் குரிசிலின் மனைவி ஆதலால் மன்னரது மாட்சியை இன்னவாறு எடுத்துக்கூறினள்.

உயர்ந்த அரசர்குடியில் பிறந்தவனாயிருந்தால் இழிந்த இந்த வார்த்தைகளை வாயால் பேசி யிருக்கமாட்டான் என்று முடிவு செய்திருக்கிருள். பேசிய வாசகங்கள் அவன் ஓர் பிழைபாடான நீசனே என்பதை நேரே விளக்கி யிருக்கின்றன. மாறுபாடான நிலைகளை அறியவே வீராவேசமாய் வெறுத்துப் பேசினள்.

நாயினை நோக்குவேனோ நாண்துறந்து ஆவி நச்சி.

தூயவள் வாயிலிருந்து இந்த வார்த்தை துணிந்து வந்துள்ளது. தன்னை நோக்கிப் பேசினவனையும் நச்சி உழல்பவனையும் இங்ஙனம் தாக்கிப் பேசியிருக்கிருள். "தேவர்முதல் யாவர்க்கும் இராவணன் அரசன்; அவனுக்கு நீ தேவியாய் இசையின், அது உனக்குப் பெரியபாக்கியமேயாம்" என மாயாசனகன் முன்னம் சொன்னன் ஆதலால் அதற்கு இன்னவாறு பதில் தந்தாள். நாய் என்று இராவணனை இப்படிச் சுட்டிச் சொல்லியது இகழ்ச்சிக் குறிப்பால் நேர்ந்தது. சினமும் சீற்றமும் வெறுப்பும் வேகமும் இக்குறிப்புரையில் விரவி நிற்கின்றன. சீ என்றால் நாயைவெறுத்து ஓட்டும் குறிப்புச் சொல். சீ,சீ என்று பல முறையும் இகழ்ந்து விரட்டினலும் நசையால் இழிந்து ஓயாமல் வந்து வாயாடி நச்சி வசையாய் உழல்கின்றான் ஆதலால் இலங்கை வேந்தன் இங்கே நாய் என நேர்ந்தான்.

நெறிகேடான ஆசை நெஞ்சில் ஏறிய பொழுது அவன் எவ்வளவு பெரிய மனிதனாயினும் இழிந்து இகழப்படுகின்றான்.

"தினைத்துணையும் தேராமல் பிறனில் விழைவராயின் அவர்
எனைத்துணையராயினும் ஈனமாயிழிந்தே போவர்"

எனத் தேவர் கூறியதும் இங்கே கூர்ந்து சிந்திக்கத்தக்கது.

"ஈசன்வாழ் கயிலையை எடுத்த வேந்தனும்
நீசமாய்ச் சீதையை நினைந்த தீமையால்
நாசமா யழிந்தனன்; நஞ்சையுண்டல் போல்
ஆசையாய் அயல்மனை அவாவின அல்லலே."

என்றபடி எல்லையில்லாத துன்பங்களுக்கும் இழிவுகளுக்கும் அழிவுகளுக்கும் ஒழியாத சான்ருய் இராவணன் உலகமறிய நின்ருன். நெறிகேடு அவனது குடிகேடாய் மூண்டது.

சீதையின் கற்புத்தீயினுலேயே இலங்கை வேந்தன் அரக்கர்குலத்தோடு அழிந்து ஒழிந்தான் என வானமும் வையமும் வைது இன்றும் வசையா மொழிந்து வருகின்றன.

"சானகி கற்புத் தனைச் சுட்டுத்தன்
அசோக வனத்தில் சிறைப்படுத்திய
தானை அரக்கன் குலத்தர் அத்தனை வரும் மாளச்
சாலமரத்துப் புறத்தொளித்தடல்
வாலி யுரத்தில் சரத்தை விட்டு ஒரு
தாரைதனைச் சுக்ரிவற்கு அளித்தவன் மருகோனே."

(திருப்புகழ், 1152)

சானகியை அசோகவனத்தில் இராவணன் சிறை வைத்திருந்ததும், அப்பதிவிரதையின் கற்பு நிலையும், அதனுல் அவன் அடியோடு அழிந்து தொலைந்ததும் இதில் விளங்கியுள்ளன. அருணகிரிநாதர் திருப்புகழில் இராமசரிதத்தைப் பல இடங்களிலும் அதிக உரிமையோடு பெரிதும் பாராட்டியிருக்கிருர்.

சானகி கற்புச் சுட என்றது அப்பத்தினியின் அற்புதமகிமையை உய்த்துணர வந்தது. அயலான் மயலாய் விழைந்து நெருங்கின் எரியிடை வீழ்ந்த விட்டில் போல் அழிந்து போவன் என முன்னம் தன் வாயாலேயே சீதை சொன்னது ஈண்டு இணைத்து எண்ணவுரியது. கற்புத் தீ நிலை கருதியுணர வந்தது.

நாணும் உயிரும்

உயிரை இழந்தாலும் நாணை இழந்து நில்லேன் எனத் தனது உள்ளத் துணிவை அவன் உணர வுரைத்தாள். பெண்மைக்கு நாண் பெரு நீர்மையாய் நன்மை புரிந்து வருவது ஆதலால் அது இந்தப் பெண்ணரசிபால் நண்ணியுள்ள நிலைமை இங்கே நன்கு தெரிய வந்தது

"உயிரினும் சிறந்தன்று நாணே; நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று." (தொல்காப்பியம்)

கற்பும் நாணும் உயிரும் இதில் காட்சிக்கு வந்துள்ளன.

எல்லாவற்றினும் சிறந்தது உயிரே எனினும் அது நாணும் கற்பும் பூணாகப் பூண்டிருக்கும் அளவே பெருமை யுற்றுளது; அந்தப் பூணை இழந்தால் அது பொலிவிழந்து புலையுறுகின்றது.

கற்பு ஆகிய அரும்பெறல் மணியை எவ்வழியும் செவ்வையாகக் காத்து நிற்பது நாணேயாம்; ஆகவே அது கற்பின்காப்பு, நிறைக்கதவு எனச் சிறப்புப் பேர் பெற்றுள்ளது. கண்ணுக்கு இமைபோல் கற்புக்கு அற்புதத் துணையாய் நாண் அமைந்திருக்கிறது. அந்த அரிய துணையை உரிமையாகப் பேணிச் சானகி உறுதியோடு ஒழுகி வரும் உண்மை ஈண்டு உணரவந்தது.

என் உயிர்போக நேர்ந்தாலும் நாணைப்பேணியே நிற்பேன் என்பாள் ஆவியை நச்சி நாண் துறவேன் என்றாள்.

"நாணால் உயிரைத் துறப்பர்; உயிர்ப்பொருட்டால்
நாண்துறவார் நாண்ஆள் பவர்." (குறள்,1017)

இந்த அருமைத் திருக்குறள் ஈண்டு உரிமையா உணர வுரியது.

உயிரினும் நாணத்தை உரிமையாகப் பேணி வருவது உயர்ந்தோர் நீர்மையாய்த் தோய்ந்து வருகிறது.

நாணம் என்றால் என்ன? எள்ளல் இழிவுகளில் உள்ளம் கூசி ஒடுங்குதல் நாணம் என வந்தது. இந்த இயல்பு இருபாலையும் மகிமைப் படுத்தி வருகிறது. தீய வழிகளை நாணி ஒதுங்கும் அளவு தூய மேன்மைகளை அடைந்து கொள்ளுகின்றனர். உயர்ந்த மேன்மக்களிடம் சிறந்த நாணம் இயல்பாகவே அமைந்திருத்தலால் அவர் எவ்வழியும் வழுவாமல் யாண்டும் விழுமிய நிலையில் விளங்கி நிற்கின்றார்.

அரியோடும் வாழ்ந்த பேடை நரியொடும் வாழ்வது உண்டோ?

இராவணனோடு கூடி வாழலாம் என்று மாயாசனகன் கூறியதற்குச் சீதையிடமிருந்து இவ்வாறு பதில் வந்துள்ளது. அரி=சிங்கம். தனது நாயகனையும் தன்னையும் சீதை என்னவாறு எண்ணியிருக்கிறாள் என்பதை இது நன்னயமாக விளக்கியுள்ளது. வாய்வார்த்தை வாய்மையைவார்த்துக் காட்டியிருக்கிறது.

மிருகங்களுள் சிங்கம் உயர்ந்தது; யாண்டும் அஞ்சாதது; அருந்திறலுறலுடையது; பெருந்தன்மையும்கம்பீரமும்வாய்ந்தது.

மக்களுள் இராமன் உயர்ந்தவன்; அரியபல குணநலங்கள் வாய்ந்தவன்; தீரதைரியமும் இராசகம்பீரமும் தோய்ந்தவன்; ஆகவே சிங்கஏறு என அவனை இங்ஙனம் உவமை வாசகத்தால் குறித்தாள். அந்த அரசசிங்கத்துக்கு உரிமையாய் அமைந்த அரிய பெண்சிங்கம் எனத் தன்னையும் உருவகித்து உவந்து கொண்டாள். “யாண்டும் தலைமையாய் நிலவியுள்ள ஓர் அரியேறோடு தோய்ந்திருந்த உயர்ந்த சிங்கப் பேடை இழிந்த நரியோடு கூடி வாழுமா? நாயே!” என்று அம் மாய அரக்கன் நாணிச் சாகும்படி சானகி ஆணித்தரமா இப்படிப் பேசியிருக்கிறாள்.

நரி என்றது இங்கே இராவணனைச் சுட்டி நின்றது. கபட நாடகங்களைச் செய்து கள்ளத்தனமாய்த் தன்னை வஞ்சித்துக் கவர்ந்து வந்துள்ளான் ஆதலால் அந்த எள்ளல் இளிவுகள் தெரியக் குள்ளநரி என்று நேரே இகழ்ந்து குறித்தாள்.

ஈன இச்சையால் இழிந்து உழலுதலால் நாய் என்று முன்னம் குறித்தாள்; நேர்மை யாதுமின்றிக் கரவு சூதுகளோடு கபடம் புரிகின்றான் ஆதலால் நரி என இங்கே உரைத்தாள்.

முதல்நாள் நடந்தபோரில் தோல்வியடைந்து வந்த இராவணன் மாலியவானிடம் அமரில் நேர்ந்ததை மறுகி மொழிந்தான்: “பாட்டா! இராமனுடைய வீரச் செயல்கள் அதிசய நிலையின; இன்று போரில் அவன் புரிந்த வீரதீரங்களைச் சீதை நேரே கண்டிருந்தால், என்னை ஒரு ஈன நாய் என்றே எண்ணி இகழ்ந்திருப்பாள்” என்று உண்மையை உள்ளம் திறந்து * முன்னம் அவன் உரைத்துள்ளதை ஈண்டு இணைத்து எண்ண வேண்டும்.

இராமன் உருவ அழகுக்கு எதிரே காமனும், அவனது வீரத்திற்கு எதிரே நாமும் நாய்கள் எனப் படுவோம் என இலங்கை வேந்தன் அங்கே சொன்னபடியே சீதை இங்கே பேசியிருக்கிறாள். மானச மருமங்கள் ஊன்றி உணர வுரியன.

நாயினும் கடைப் பட்டோனே! என முடிவில் மாயாசனகனை இவ்வாறு கடிந்து கூறி இகழ்ந்து முடித்தாள். நாய்க்கு உதவியாக வந்து வாய்க்கு வந்தபடியெல்லாம் பேசினன் ஆகலால் நாயினும் கடையனாய் அவன் இழிக்கப் பட்டான். தாயி

* இந் நூல் பக்கம் 3966, வரி 34 பார்க்க.

னும் இனிய தந்தை என முன்னம் எண்ண நேர்ந்தவன் நாயி னும் கடையனாய் நண்ணி நவை படிந்து நின்றான்.

சீதையின் வாயிலிருந்து இப்படிக் கடுமையான சொற்கள் இதற்குமுன் வந்ததில்லை. சொல்லாத சொற்களைச் சொல்லி உள்ளத்தைக் கொதிக்கச் செய்தமையால் இப்பதிவிரதை மனம் கொதித்து அதிவேகமாய் இவ்வாறு இகழ்ந்து பேச நேர்ந்தாள்.

பிடிபட்டு வந்துள்ளவன் தனது தந்தையே என்று தவித்துத் துடித்தவள் வாய்மொழிகளைக் கேட்டபின் மனம்மாறுபட்டாள். உயிர் அழிய நேர்ந்தாலும் சனகன் இவ்வாறு இழிமொழிகள் கூறான்; ஏதோ ஓர் மாயச் சூது என்று உள்ளம் துணிந்தே உருத்துப் பேசினாள். உரைகள் உறுதிநிலைகளை உணர்த்தி நின்றன.

சீதையின் திவ்விய நிலை.

தந்தை தாய் முதலிய எவரையும் உரிமையாக நினைக்கவில்லை; இராமன் ஒருவனையே கருதி உருகி மறுகி யிருக்கிறாள். அவ்வீர னது உருவத்தையே இரவும் பகலும் எண்ணி ஏங்கியுள்ளமை உரைகள் தோறும் ஓங்கி உணர வருகிறது.

அலங்கல் வீரன் வில்லையே வாழ்த்தி.

என்றதனால் இக்குலமகள் உள்ள நிலையை உணர்ந்து கொள்ளலாம். கோதண்டவீரன் வந்து மீட்டவில்லையானால் விரைந்து இறந்து போய்விடலாம் என்றே துணிந்திருக்கிறாள். சாவைக்குறித்து யாதும் அஞ்சவில்லை; நாயகனைக் காணவேண் டும் என்றே வேணவாவோடு தவம் கிடந்து தவித்து வருகிறாள்.

தனது கற்பை அற்புத நிலையில் காத்து வருவது அதிசய வியப்பாயுள்ளது. கடல் கடந்த இலங்கையில் யாதொரு நாதியும் இல்லாமல் தனியே சிறையில் மறுகி யிருக்கிறாள். இலங்கை வேந்தன் ஆசையால் அலமந்து பலவகை உபாயங்களைச் செய்து வசப்படுத்த முயன்று படாதபாடுகள் பட்டு வந்தவன் முடிவில் கொடிய மாயவஞ்சம் புரிந்தான். அந்த மாயச்சதியிலும் மயங் காமல் நெஞ்சம் துணிந்து நேரே கடுத்து இகழ்ந்து இருவரையும் எள்ளிப் பழித்துத் தனது உள்ள உறுதியை உலகறிய உணர்த்தி யருளினாள். தன்னம் தனியளாயிருந்து இன்னல் பலவும் கடந்து

தன் நிறையைக் காத்து இப்பெண்ணரசி நிலைத்து நிற்பதை நோக்கி மண்ணும் விண்ணும் வியந்து வருகின்றன.

இந்தப் பதிவிரதை ஒருத்தியால் பெண்மை உலகம் முழுவதும் பெருமகிமை அடைந்துள்ளது. உண்மையான கற்பு நிலைக்கு உலகம் அறிந்த சான்றாய் இக்குலமகள் ஒளி செய்துள்ளாள். அரிய புனிதவதி பெரிய மகிமைகளைப் பெற்றாள்.

"She is the very type of the true Indian woman, for all the Indian ideals of a perfected woman have grown out of that one life of Sita." (Vivekananda)

"இந்தியாவின் உண்மையான பெண்மைக்குச் சீதையே தலைமையான நிலைமையில் நிலவியுள்ளாள். பரிபூரணமான பதிவிரதைகளுடைய நீர்மைகள் யாவும் இக்கற்பரசியின் சீர்மையான வாழ்விலிருந்தே வளர்ந்திருக்கின்றன." என்று விவேகானந்தர் இவ்வாறு வியந்து கூறியிருக்கிறார்.

புனிதமான பெண்மை நிலைக்கு உலகில் ஓர் முன் மாதிரி எனச் சீதை எண்ணப் பட்டுள்ளமையால் இப்புண்ணியவதியின் கண்ணியமும் மகிமை மாண்புகளும் நுணுகி யுணர வந்தன.

நிலைகுலையும் படியான கொடிய பல சூதுகளை இலங்கை வேந்தன் இடைவிடாமல் இழைத்து வந்துள்ளான்; இவ்வளவு கடுஞ்சோதனைகள் எந்த மங்கைக்கும் ஏற்படவில்லை; கடுமையான அவ்வளவு அபாயங்களையும் எளிதே தகர்த்தெறிந்து தன் கற்பைக் காத்து இந்தப் புனிதவதி அற்புத நிலையில் அமர்ந்திருக்கிறாள். பெண்மையின் உண்மை நீர்மைகள் ஒளி புரிந்துள்ளன.

"நாற்குணமும் நாற்படையா ஐம்புலனும் நல்லமைச்சா
ஆர்க்கும் சிலம்பே அணிமுரசா---வேற்படையும்
வாளுமே கண்ணா வதன மதிக்குடைக்கீழ்
ஆளுமே பெண்மை அரசு."

என்றபடி உண்மையான பெண்கள் நாயகமாய் ஒளி செய்திருத்தலால் உலகமங்கையர் எவரும் தங்கள் திலகம் என்று உரிமையுடன் இக்குலமகளை உளம் உவந்துதொழுது வருகின்றனர்.

சானகி, சீதை, மைதிலி என இப்பெண்ணரசியின் நாமங்களைப் பெண்மை உலகம் இன்றும் பேராவலோடு பேணி வருகின்றது. உரியதுணை யாதும் இல்லாமல் கொடிய சிறையில் இருந்து

தனியே புனிதமாய் நிறை காத்து வந்தது உலக உள்ளங்களை உருகச் செய்து உயர்ந்த மாட்சிகளை விளைத்துள்ளது.

"நிறை காக்கும் காப்பே தலை" என்ற பொய்யாமொழிக்கு மெய்யான சான்ருய் வையம் முழுவதும் அறிய இப் பதிவிரதை தனி அமைந்திருப்பது நுணுகி யுணரவுரியது.

"சீதை வனம்புகுந்தும் சீருற்ருள்; ஏனளகன்
கோதை குலைந்தாள் குமரேசா!---மாதர்
சிறைகாக்கும் காப்பெவன் செய்யும் மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை."

(திருக்குறட்குமரேசவெண்பா,57)

சீதை நிறைகாத்து நின்றநிலையை நெஞ்சம் தெளிய இது உணர்த்தியுளது. இதன் விரிவுரைகளையும், கதைவிளக்கங்களையும் ஈண்டு உரிமையோடு ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

அரியபல தருமநீர்மைகள் இப்பதிவிரதையிடம் மருவிமிளிர் கின்றன. ஆண்மை உலகிற்கு இராமன் மேன்மை ஒளியாய் மேவி நிற்றல் போல், பெண்மை உலகிற்குச் சீதை பெருஞ் சோதியாய்ப் பெருமகிமை செய்துள்ளாள். அவ்வுண்மையை மேலோர் யாவரும் வியந்து புகழ்ந்து விழைந்து மகிழ்ந்து வருகின்றனர்.

"இரு திறத்தார்க்கும் செய்த வரம்பு இவர் இருவர்"

என உருவ அழகை நோக்கி இராவணன் தங்கையே இவ் வாறு வியந்து புகழ்ந்திருக்கிருள். புறத்தே பொலிந்து விளங்கிய எழில் அளவில் விழியூன்றி அவள் அங்கே வியந்து நின்ருள்; உள்ளத்தின் நீர்மைகளை உணர்ந்து கொள்ளும் திறம் அவளிடம் இல்லாமல் போயது. அகமும் புறமும் அதிசய நிலையின.

மகோதரன் தூண்டுதலால் மாயாசனகனுய் வந்த மருத்தன் என்னும் அரக்கன் இத் தூயவளுடைய உள்ளத் துணிவையும் உறுதி நிலையையும் உணர்வு நலனையும் உரைகளின் திறத்தையும் நேரே உணர்ந்து வியந்து உள்ளம் திகைத்தான்.

நாயினும் கடைப்பட்டோனே! என்று தன்னை எள்ளி இகழ்ந்து வைதாலும் இக் குலமகளுடைய உள்ளத் தூய்மையை அக் கள்ளத் தீயவன் தெரிந்து தன்னுள்ளேயே பரிந்து நாணி

ஞன். தனது வஞ்சச் சூழ்ச்சி பலியாமல் போயதே என்று வருந்தினும் இவளது நெஞ்சத் திண்மையும் நிலைமையும் தலைமையும் அவனுக்கு அதிசயமான வியப்புகளை விளைத்தன.

இராவணன் கோல்ல மூண்டது.

வந்துள்ளவன் தந்தை அல்லன் என்று சீதை சிந்தை துணிந்து நிந்தை மொழிகளை நெடிது கூறவே இராவணன் சீறி எழுந்தான். "ஏ பேதையே! இவன் சனகனே; உன் தந்தை அல்லன் என்று எண்ணுகிருய்! இதோ உன் கண் எதிரே இவனைக் கொன்று வீழ்த்துகிறேன் பார்!" என்று தனது கூரிய உடைவாளை உருவிக் கடிது ஓங்கினன். மாயாசனகனைக் கொல்லுவதாக அவன் ஒல்லையில் விரைந்த போது சீதை சொல்லிய மொழிகள் உள்ளி யுணரவுரியன.

என்னையும்கொல்லாய்! இன்னே இவனையும்கொல்லாய்! இன்னும்
உன்னையும்கொல்லாய்! மற்றிவ் வுலகையும் கொல்லாய்!யானே
இன்னுயிர் நீங்கி என்றும் கெடாப்புகழ் எய்து கின்றேன்;
பின்னையும் எங்கோன் அம்பின் கிளையொடும் பிழையாய்என்ருள்.

இந்த வாசகங்கள் அதிசய நிலையில் வந்துள்ளன.

தனது தந்தை என்றே நம்பும்படி தான் வஞ்சித்துக் கொண்டு வந்த மாயச்சூதில் சீதை மயங்கவில்லை என்று தெரிந்ததும் இலங்கை வேந்தன் கடுங்கோபம் கொண்டான். இவன் உன் தகப்பன் இல்லை என்று கருதுகிருய்! அப்படியானல் கொன்று தொலைக்கின்றேன் என்று அவன் வாளை உருவி மூண்டான்; மூளவே இக்குலமகள் ஆளை அளந்து பேசினள்: "இவனைக்கொன்று விடுவேன் என்று ஏன் வீணே பிதற்றுகின்ருய்! நீ இவனையும் கொல்லமாட்டாய்; என்னையும் கொல்லமாட்டாய்; உன்னையும் கொல்லமாட்டாய்; உன்னல் யாதுமே செய்யமுடியாது; உன்னை உன்குலத்தோடு கொன்று தொலைக்க வென்றி வீரன் ஒருவன் வில்லோடு விரைந்து வருவான்; எல்லாம் நீ இழந்து படுவாய்! சிறையிலிருந்து மீளாமல் நான் இறந்து போனலும் என்றும் அழியாத புகழை நான் அடைந்து கொள்வேன்; என் பிராண நாயகனுடைய பாணங்களால் நீ அடியோடு அழிந்து தொலைவாய்; குடியும் குலமும் அழிந்து பழியும் துன்பமும்

உழந்து பாழாய்ப் போக நேர்ந்துள்ள நீ பாழ்வாய் திறந்து வீணே பிதற்றி வெறி கொண்டு நில்லாதே; வெளியே போய்த் தொலை'' என்று இங்ஙனம் வெகுண்டு கூறினாள்.

மகோதரன் உரைத்தது.

இப்பத்தினியின் மன வுறுதியைக் கண்டு மகோதரனும் மனம் கலங்கி மதிகுலைந்தான்; செய்த மாயச்சதியால் யாதும் பயன் இல்லையே! என்று பரிந்து நின்றவன் சாதுரியசாகசமாய் இராவணனைத் தேற்றினான். மாயா சனகனைக் கொல்ல மூண்டவன் போல் அவன் கொதித்து எழுந்ததும், இப் பொல்லாதவன் நல்லது சொல்லித் தடுத்து நிறுத்தியதும் பாசாங்கு படிந்த பகடிக் கூத்துகளாய் விளங்கி நின்றன.

இரத்தனன்வேண்டிற்று அல்லால்இவன்பிழை இழைத்ததுஉண்டோ?
புரந்தரன் செல்வத்தையா! கொல்கைஓர் பொருளிற்றோ தான்
பரந்தவெம் பகையை வென்றால் நின்வழிப் படரும் நங்கை
அரந்தையள் ஆகும் அன்றே தந்தையை நினைவ தானல்.

கொண்டு வந்துள்ள மாயாசனகனைக் கொன்று விடுவதாக மூண்டு பாய்ந்த இராவணனை இடைமறித்து மகோதரன் இவ்வாறு கூறியிருக்கிறான். "அரசர் பெரும! இந்த மிதிலை மன்னவன் என்ன செய்வான்? கெஞ்சி இரங்கி அழுது தொழுது மகளை வேண்டினான்; மதிகெட்ட அவள் யாதும் இசையாமல் பிடிவாத மாய்ப்பித்துப் பிடித்து நிற்கின்றாள்; மெத்தப் படித்தவள் போல் மேட்டிமை கொண்டுபிறந்த இடத்திற்கும் புகுந்த இடத்திற்கும் பெருங்கேட்டை விளைத்துப் பேதைமைமீதூர்ந்து நீதி நெறி தெரியாமல் நிமிர்ந்திருக்கிறாள்; அவள் செய்துள்ள கொடுமைக்கு இவனைக் கொல்வது பாவம்; இவனிடம் யாதொரு பிழையும் இல்லை; கோபத்தால் இப்பொழுது இவனைக் கொன்று விடின் பின்பு வருந்த நேரும்; படைகளோடு வந்துள்ள பகைவனை அடியோடு வென்று ஒழித்து விடலாம்; அப்படியானல் சிறை எடுத்து வந்து சிறைப்படுத்தியிருக்கும் இந்தச் சீதை உங்களுக்குத் தனி உரிமையான சொந்தமேயாம்; அவ்வாறு உரிய தேவி ஆகும்போது தனது பிரியமான தந்தை இறந்து போனதை நினைந்தால் பெரிதும் வருந்துவாள்; அந்த வருத்தம் நேராதபடி கருத்தோடு இப்பொழுது பொறுத்தருளுங்கள்;

னுவனை மீண்டும் மிதிலாபுரிக்கு அனுப்பவேண்டாம்; நம்இலங்கா புரியில் ஈண்டே ஓரிடத்தில் சிறைவைத்திருக்கலாம்; வருங்கால நிலையை எதிர் அறிந்து அதிமதியூகமாய்க் காரியம் புரிவதே சீரிய மேன்மையாம்'' என இன்னவாறு மந்திரி சொல்லவே இலங்கை வேந்தன் இசைந்து மிதிலை வேந்தன் என்று கொண்டு வந்தவனை அயலே கொண்டு போய்ச் சிறைப்படுத்தி வைக்கும் படி ஆரவாரத்தோடு உத்தர விட்டான். மாயச்சனகனைய் வந்த வனைத் தீய அரக்கர் சிலர் பற்றிக் கொண்டு போயினர். போகும் போதே "ஆ! சீதா! என்னைச் சாகும்படி செய்தாயே!'' என்று அவன் அலறிக் கொண்டு அவலநிலையில் ஆயாசமாய்ப் போனான்.

## இழவு கேட்டது.

தீயவர் இருவரும் சேர்ந்து இவ்வாறு மாய வேலைகளைச் செய்தும் யாதும் பயனில்லையே! என்று மறுகி வருந்தி அசோக வனத்தை விட்டுப் போக நேர்ந்தார். அப்பொழுது ஏகமான பேரொலிகள் போர்க்களத்திலிருந்து கேட்டன. கும்பகருணன் இறந்து பட்டான் என்ற வெற்றிக்களிப்பினால் வானர சேனை கள் செய்த பெருமுழக்கங்கள் வானம் அதிர முழங்கின. மாறுபாடான அந்த வீர ஒலிகளைக் கேட்டதும் இராவணன் உள்ளம் திகைத்துப் பொருகளம் உள்ள திசையை ஒருமுகமாய் நோக்கினான். தூதுவர் சிலர் அதிவேகமாய் ஓடிவந்தனர்; அரு கே வந்து வணங்கி வெளியே தெரியாமல் காதின் மருங்கு வாய்புதைத்துக் கும்பகருணன் இறந்து பட்டதை உளைந்து மொழிந்தார்.

> புறந்தரு சேனைமுந்நீர் அருஞ்சிறை போக்கிப் போதப்
> பறந்தனர் அனைய தூதர் செவிமருங்கு எய்திப் பையத்
> திறந்திற மாக நின்ற கவிப் பெருங் கடலைச் சிந்தி
> இறந்தனன் உம்பி அம்பிற் கொன்றனன் இராமன் என்றார்.

கும்பகருணன் செத்த செய்தியைத் தூதுவர் ஓடிவந்து இராவணனிடம் கூறியிருக்கும் காட்சியை இது காட்டியுள்ளது. பாட்டைக் கண் ஊன்றிப் பார்த்தால் அங்கே நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளை யெல்லாம் இங்கே நேரே தெளிவாகக் கண்டு கொள்ளலாம், காலதேசங்களைக் கடந்தும் காண நேர்கின்றோம்.

செவி மருங்கு எய்திப் பையச் சொன்னார் என்றதனால் ஓடி வந்த தூதுவர் இழவு நிலையை இலங்கை வேந்தனிடம் ஓதியிருக்கும் சாதுரியத்தை உணர்ந்து கொள்ளுகிறோம். என்றும் வென்றி வீரனாய் விளங்கியிருந்தவன் ஆதலால் தம்பி போரில் இறந்ததை வெளிப்படையாச் சொல்லக் கூசி மெல்லக் காதில் உரைக்க நேர்ந்தார். உரை சுருக்கமாய் வந்தது.

இறந்தனன் உம்பி; கொன்றனன் இராமன்.

கும்பகருணன் செத்து ஒழிந்த வகையை இப்படி உய்த்துணர வுரைத்தார். தேவர் முதல் யாவரையும் வென்று வந்த மகா சூரன் மனிதனுடைய கையால் இன்று மாண்டு பட்டான் என அவர் மறுகி மொழிந்தார். மறுக்கம் பெருக்கமாய் நின்றது.

அழுது புலம்பியது.

தம்பி இறந்தான் என்று தூதுவர் வந்து ஓதியதைக் கேட்டவுடனே இராவணன் உள்ளம் துடித்து உயிர் பதைத்துத் துயரம் தாங்க மாட்டாமல் அறிவழிந்து அவசமாய்க் கீழே வீழ்ந்தான். விழுந்தவன் மூர்ச்சை தெளிந்து எழுந்தான். இளையவனை நினைந்து அளவிடலரிய துயரால் உருகி அழுதான். யாண்டும் அஞ்சாத வீரன் நெஞ்சம் உடைந்து நிலை குலைந்து பலபல கூறிப் பரிந்து புலம்பியது மிகுந்த பரிதாபமாயிருந்தது.

*தம்பியோ! வானவராம் தாமரையின் காடுழக்கும்*
*தும்பியோ நான்முகத்தோன் சேய்மதலை தோன்றலோ*
*நம்பியோ இந்திரனை நாமப் பொறிதுடைத்த*
*எம்பியோ யான்உன்னை இவ்வுரையும் கேட்டேனே.* (1)

*மின்னிலைய வேலோனே! யானுன் விழி காணேன்*
*நின்னில்லை யாதென்னேன் உயிர்பேணி நிற்கின்றேன்*
*உன்னில்லைமை ஈதாயின் ஓடைக் களிறுந்திப்*
*பொன்னுலகம் மீளப் புகாரோ புரந்தரனார்.* (2)

*வன்னெஞ்சின் என்னைநீ நீத்துப்போய் வானடைந்தால்*
*இன்னம் சிலரோடு ஒருவயிற்றின் யார் பிறப்பார்?*
*மின்னஞ்சு வேலோய் விழியஞ்சி வாழ்கின்றார்*
*தந்நெஞ்சம் தாமே தடவாரோ தானவர்கள்.* (3)

*கல்அஞ்சுறு நீராடும் காலத்துன் கால்தேய்க்கும்*
*மல்ஒன்று தோளாய்! வடமேரு மானுடவன்*

வில்ஒன்று நின்னை விளிவித் துளதென்னும்
சொல்அன்றோ என்னைச் சுடுகின்றது தோன்றுல்! (4)

நோக்கறவும் எம்பியர்கள் மாளவும்இந் நொய்திலங்கை
போக்கறவும் மாதுலனுர் பொன்றவும்என் பின்பிறந்தாள்
மூக்கறவும் வாழ்ந்தேன் ஒருத்தி முலைக்கிடந்த
ஏக்கறவால் இன்னம் இரேனோ உனை இழந்தும். (5)

தன்னைத்தான் தம்பியைத்தான் தானைத் தலைவனைத்தான்
மன்னைத்தான் மைந்தனைத்தான் மாருதத்தின் காதலைத்தான்
பின்னைக் கரடிக்கு இறையைத்தான் பேர்மாய்த்தாய்
என்னத்தான் கேட்டிலேன் என்னுன வாறிதுவே. (6)

செந்தேன் பருகித் திசைதிசையும் நீவாழ
உய்ந்தேன் இனியின்று நானும்உனக் காவி
தந்தேன் பிரியேன் தனிபோகத் தாழ்க்கிலேன்
வந்தேன் தொடர மதக்களிறே வந்தேனுல். (7)

தன் தம்பி இறந்தான் என்பதை அறிந்ததும் இலங்காதிபதி இப்படிக் கலங்கி அழுதிருக்கிறுன். சோகம் நிறைந்த இந்தப் புலம்பல்களில் கும்பகருணனுடைய வீரப் பிரதாபங்களும் வாழ்க்கைக் குறிப்புகளும் நன்கு வெளிப் பட்டுள்ளன.

தம்பியோ! என்று அன்பு மீதூர்ந்து அவலத்துயரில்ஆற்றுமையோடு கூவியிருப்பது கூர்ந்து நோக்கத்தக்கது. கலங்காத கண்டன் பெருங்கலக்கமாய்க் கலங்கி அழுது நெஞ்சம் குலைந்து நெடிது தவித்திருக்கிறுன். அதிசயவீரனுன அருமைத் துணைவனை இழந்து விட்டோமே! என்று ஏங்கிப் பதைத்திருத்தலால் அவனுடைய பாங்குகளும் பாடுகளும் ஈங்கு எதிரே தெரிய வந்தன.

ஒரு தாமரைத் தடாகத்தில் மதயானை புகுந்தால் அவை எப்படிச் சிதைந்து படுமோ அப்படித் தேவருலகத்தில்கும்பகருணன் முன்பு புகுந்த பொழுது அமரர்கள் அலமந்து அழிந்து போயினர் ஆதலால் வானவர் ஆம் காடு உழக்கும் தும்பியோ!என்றுன். தும்பி = யானை. “அந்தோ! தம்பியே! உன்னை இழந்து தவிக்க நேர்ந்ததே! அமரர் அசுரர் எவரையும் அடங்க வென்ற உனது அதிசய ஆற்றலை இனி எங்கே காண்பேன்? உனது ஆற்றலைக் கண்டு அஞ்சி அடங்கி நின்ற இந்திரன் இனிமேல் தேவர்களோடு பொன் உலகம் புகுந்து தலைமையான நிலையில் அரசு

புரிய நேர்வனே; அரிய உறுதித் துணையை இழந்தான் என்று என்னை எவரும் எளிதே எள்ளி இகழ்ந்து பேசத் தனியே தள்ளி விட்டு நீ மறைந்து போயிருப்பதை நினைந்து நினைந்து என் நெஞ்சம் தவிக்கின்றது. உன்னுடைய அருந்திறலாண்மையும் பெருந்தகைமையும் அற்புதவீரமும் அற்பனுன என்ஞல் அநியாயமாய் அழிந்து போயினவே; மேரு மலையே கால் கழுவும் கல்லாய் உனக்கு மேவியிருந்ததே! அத்தகைய நீ ஒரு மனிதன் வில்லால் இறந்தாயே! அந்தச் சொல்லைக் "கேட்டு நானும் உயிர் சுமந்து நிற்கின்றேனே! மூண்ட துயரங்கள் என் உள்ளத்தைச் சுட்டு எரிக்கின்றனவே! உடனே மாண்டு படாமல் நான் நீண்டு நிற்பது நெடும்பழி; ஆ! எனக்கு நேர்ந்துள்ள இழிவுகள் எவ்வளவு! இராமனையும் இலக்குவனையும் கொன்று தொலைத்துச் சேனைக் கடலைக் கலக்கி வானரங்களை அடியோடு ஒழித்து வெற்றி வீருேடு நீ மீண்டு வருவாய்! என்றே நீண்ட ஆவலோடு நான் நேர் நோக்கி நின்றேன். மாருன வேறு அவச்சொல்லைக் கேட்டேன்; எல்லா இழவுகளுக்கும் நானே மூல காரணம்; ஐயோ! இனி நான் உயிர் வாழ்ந்திருக்கலாமா? தம்பி கும்பகருணு! பிறந்த பிறப்பின் பயனை இழந்து நிற்கின்றேன்; விரைந்து இறந்து உன்னை வந்து அடைந்து கொள்வேன்'' என இன்னவாறு இன்னல் மீதூர்ந்து பன்னிப் புலம்பிப் பதைத்துத் துடித்த இலங்கை வேந்தன் முடிவில் கடுத்துக் கொதித்தான்.

சோகத்தில் ஆழ்ந்து புலம்பிய அவன் அதிவேகமாய் மாறிச் சீறி வீரவாதம் கூறியது அதிசய ஆற்றலை விளக்கி நின்றது. மானக் கொதிப்பும் வீரத் துடிப்பும் மானச வேகமும் யாவரும் வியந்து நோக்கத் தேவரும் அஞ்சி அலமர மிஞ்சி எழுந்தன.

தாவரிய பேருலகத்து எம்பி சவத்தோடும்
யாவரையும் கொன்றடுக்கி என்றும் இறவாத
மூவரையும் மேலைநாள் மூவா மருந்துண்ட
தேவரையும் வைப்பேன் சிறைஎன்னச் சீறிஞன். (1)

அக்கணத்து மந்திரியர் ஆற்றச் சிறிது ஆறி
இக்கணத்து மானுடவர் ஈரக் குருதியால்
முக்கைப் புனலுகுப்பேன் எம்பிக்கு எனமுனியாத்
திக்கனைத்தும் போர்கடந்தான் போயினன் தீவிழியான். (2

தம்பி இறந்து பட்டான் என்பதைக் கேட்டு உள்ளம் துடித்து உயிர் பதைத்து அழுத இராவணன் இறுதியில் உறுதி கூறி உருத்துப் போயுள்ள நிலைகளை இவை குறித்துக் காட்டி நிற்கின்றன. கோபக் கொதிப்பு கொடிய சாபமாய் நீண்டது.

"என் தம்பி சவத்தோடு தேவர் யாவரையும் கொன்று அடுக்கிஒருங்கே புதைப்பேன்; இராமலட்சுமணர்களை வதைத்து அவர்தம் உடல்களிலிருந்து இரத்தத்தை வாரி இறைத்து என் தம்பிக்கு நீர்க்கடன் கழிப்பேன்" என்று உக்கிர வேகமாய் உறுதி கூறிவிட்டுச் சோகத் துயரோடு அசோக வனத்தைநீங்கி அடல் ஓங்கி அவன் அரண்மனையை நோக்கிப் போனான்.

சானகி நிலை.

உள்ளம் கலங்கி உணர்வழிந்து உயிர் பதைத்து அழும்படி சீதை எதிரே வந்து கள்ளம் புரிந்து நின்ற இராவணன் தம்பி இறந்தான் என்று அறிந்ததும் தம்பிபோல் துடித்துத் துயரு ழந்து அழுதான். மாய வஞ்சமாய்த் தனக்குக் கொடிய துன் பங்களை விளைத்த அவன் உடனே நெஞ்சம் கலங்கி நெடிய சோகமாய் அழுததும், அந்த அவல அழுகையைக் கண்டு சீதை உள்ளம் களித்து உவகை கொண்டதும் விசித்திரக் காட்சிகளாய் விளங்கி நின்றன.

அண்டத் தளவும் இனைய பகர்ந்தழைத்துப்
பண்டைத்தன் நாமத்தின் காரணத்தைப் பாரித்தான்;
தொண்டைக் கனிவாய் துடிப்ப மயிர்பொடிப்பக்
கெண்டைத் தடங்கண்ணாள் உள்ளே கிளுகிளுத்தாள். [1]

வீங்கினாள் கொங்கை; மெலிந்த மெலிவகல
ஓங்கினாள்; உள்ளம் உவந்தாள்; உயிர்புகுந்தாள்;
தீங்கிலாக் கற்பின் திருமடந்தை சேடியாம்
பாங்கினாள் உற்றதனை யாரே பகர்கிற்பார்? [2]

கண்டாள் கருணைத்தன் கண்கடந்த தோளாளைக்
கொண்டாள் ஒருதுணுக்கம் அன்னவனைக் கொற்றவனார்
தண்டாத வாளி தடிந்த தனிவார்த்தை
உண்டாள் உடல்தடித்தாள் வேறுருத்தி ஒக்கின்றாள் [3]
[மாயாசனகப் படலம் 87--89]

இலங்கை வேந்தனது அழுகையையும், மிதிலைச் செல்வியின் உவகையையும் இவை சுவையாக உணர்த்தியுள்ளன. முன்பு தன்னை அழ வைத்தவன் பின்பு தானே அழ நேர்ந்தான்; அந்த அழுகை இந்தக் குலமகளுக்கு விழுமிய உவகையை விளைத்தது.

அழுகையும் சிரிப்பும்.

பிறர் துயருறுவதைக் கண்டால் உள்ளம் இரங்கி அனுதாபங் கொள்வது பெரியோர் இயல்பு; அதற்கு மாறாகச் சீதை இங்கே உவந்தாள் என்றது சிறுமை அன்றோ? எனின், ஆகாது; கொடிய பகைமை மூண்டு நெடிய தீமைகளைச் செய்து வருகின்றான் ஆதலால் அத் தீயவன் துயரில் இத் தூயவள் உவகையுற நேர்ந்தாள். மூண்டு எதிர்ந்த பகைவன் அழிந்துபடின் நீண்டு வென்ற வீரன் நெஞ்சம் களித்தல் போல் ஈண்டு வைதேகி உள்ளம் உவகை கூர்ந்துள்ளது.

தம்பி இறந்த துக்கத்தால் இராவணன் புலம்பி அழுதான்; அந்த அவல அழுகையை வெளிப்படையாகச் சொல்லாமல் அதிசய விநயமாய்க் கவி இங்கே கூறியிருப்பது கூர்ந்து சிந்திக்க வுரியது. கூரிய குறிப்பு சீரிய நிலையில் சிறந்து வந்துளது.

பண்டைத் தன் நாமத்தின் காரணத்தைப் பாரித்தான்.

முன்பு நேர்ந்த தனது பெயரின் காரணத்தை உலகம் அறியச் செய்தான் என இது உணர்த்தியது. கைலாசமலையை இலங்கை வேந்தன் எடுத்த பொழுது சிவபெருமான் காலால் மிதிபட்டுக் கீழே அழுந்தினன்; அதனால் அலறி அழுதான்; பின்பு பெருமான் அருள்புரிய வரபலங்களோடு வெளியே வந்தான். அன்று அழுதமையால் இராவணன் என்று பெயர் எழுந்தது. ரோதனம் = அழுதல். அதனையுடையவன் இராவணன் என வந்தான். பிறரை அழச் செய்யும் பெற்றியும் தெரிந்தது.

பிறந்த பொழுது பெற்றோர் இவனுக்கு இட்ட பெயர் தசமுகன் என்பதே. பின்பு ஈசன் கைலையை எடுத்த போது இராவணன் என நேர்ந்தான். புலம்பி அழுதமையால் எழுந்த அந்தப் பெயரின் மூலப் பொருளை ஞாலம் அறிய விளக்கினன் என்பார் தன் நாமத்தின் காரணத்தைப் பாரித்தான் என்றார். பாரித்தல் = பலரும் அறிய விரித்து விளக்கிச் சொல்லுதல்.

இலங்கை வேந்தன் அழுதான் என்பதை இவ்வளவு அழகாகக் கவி சுவையுடன் சொல்லியுள்ளார். அதிசய பராக்கிரமங்களையுடைய ஒரு பெரிய வீரனை அழுதான் என்று சொல்வது இழிவாம் என்று கருதி இவ்வாறு மரியாதை மொழியில் உண்மை தெரிய வுரைத்தார். உரையில் உணர்வு சுரந்துள்ளது.

அவன் அவ்வாறு அண்டம் கலங்க அழுது நின்றபொழுது சீதை உள்ளே உவகை மீக்கொண்டாள். தன்னைத் துன்புறுத்தி அழச் செய்த இராவணன் அழுதான் என்றதை எண்ணிச் சீதை சிரிக்கவில்லை; அந்தச் சிரிப்பு தனது சிந்தைத் துயரம் தீர்ந்தமையால் எழுந்தது. அசோகவனத்தின் அயலே கும்பகருணன் ஒருநாள் உலாவச் சென்றான்; அவனைச் சீதை கண்டாள்; அவனுடைய உருவ நிலையும் அடலாண்மையும் உக்கிர வீரத்திறனும் இப்பதிவிரதைக்குத் திகிலை விளைத்தன; இத்தகைய நெடிய வடிவுடைய பெரிய போர் வீரனோடு நம் நாயகன் போராட நேருமே; யாதாய் முடியுமோ? என்று ஐயமடைந்து அகம் கலங்கினாள். அக் கலக்கம் இலக்கமாய் நேர்ந்தது.

கண்டாள் கருணனைக்
கோண்டாள் ஒருதுணுக்கம்.

அவனைக் கண்டதும், இவள் கலங்கியுள்ளதும் இதனால் நாம் கண்டு கொள்ளுகிறோம். துணுக்கம் = அச்சம், நடுக்கம்.

எதிரியிடம் அமைந்துள்ள பெரிய பலத்தைக் கண்டு இவ்வாறு நெஞ்சம் அஞ்சி நடுங்கியிருந்தாள் ஆதலால் அந்த அதிசய உருவன் கோதண்டவீரனால் அழிந்து தொலைந்தான் என்று அறியவே இக்குலமகள் உள்ளத்தில் பெரிய ஆனந்தம் உண்டாயது. அந்த ஆனந்த பரவசத்தால் உள்ளம் பூரித்து உயிர் தழைத்து உடல் செழித்தது; செழிக்கவே மெலிந்து வாடியிருந்த சீதையின் உருவம் மிகுந்த தேசோடு விளங்கி நின்றது.

கொற்றவனார் வாளி அவனைத் தடிந்த தனிவார்த்தை
உண்டாள்; உடல் தடித்தாள்; வேறு ஒருத்தி ஒக்கின்றாள்.

இந்தக் காட்சியைக் கண் ஊன்றி நோக்கி நிகழ்ச்சிகளை நேரே கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம். அடையாளமே தெரியாமல் உருவமாறினாள் என்பார் வேறு ஒருத்தி ஒக்கின்றாள் என்றார்.

அசகாயசூரனாய் அதிசய நிலையில் அடல் மீறியுள்ள கும்பகரு ணனைக் கண்டு இவனை வெல்ல முடியுமா? என்று கலங்கியிருந்த அந்தக் கலக்கம் நீங்கவே இந்தக் குலமகள் உள்ளத்தில் உவகை பொங்கி ஓங்கி எழுந்தது; அகத்தில் பெருகிய அம்பகிழ்ச்சிப் பெருக்கு புறத்தில் பொலிந்து விளங்கியது. அதிசயமான அவ் விளக்கத்தைக் கவி சுவையாக விளக்கி யருளினார்.

மூண்ட மாயம் முடிந்து போயது.

காமநசையால் இன்பக்கனவு கண்டு வந்த இராவணன் துன்பத்தில் ஆழ்ந்து துடித்துப் புலம்பிச் சோகமாய்ப் போயி னான்; தந்தை என்று நோக்கித் தவித்துப் பதைத்த சீதை உடனே மாறி உள்ளம் உவந்து இன்பவெள்ளத்தில் இருந்தாள். சுகதுக் கங்களின் சுழல்கள் அதிசய நிலையில் தோன்றி விதிவிளைவுகளை விளக்கி வித்தகவிநோதங்களாய் இங்கே விளங்கி நிற்கின்றன.

அசோகவனத்தைப் பிரிந்து அதிசோகமாய் இராவணன் அரண்மனையை நோக்கிப் போனான்; சனகனைப் போல் மாய வஞ்சமாகக் கொண்டு வந்திருந்த அந்தக் கள்ள வேடனை வேறு ஓர் இடத்தில் தனியே சிறை வைக்கும்படி சீதை கேட்குமாறு விரகோடு கூறி விட்டு மகோதரன் அயலே அகன்று போனான். தீயசூழ்ச்சியோடு செய்த மாயத்தீமைகள் தீர்ந்து போகவே இராமனை நினைந்து மகிழ்ந்து சீதை தனியே அமர்ந்திருந்தாள். வெற்றி வீரன் போர்க்களம் புகுந்து பகைவர் இனத்தை அழித்துக் கொற்றம் புரிந்து வருகிறான் என்பதை முற்றும் தெரிந்து அதனையே எண்ணி எண்ணி இன்பம் மீதூர்ந்தாள்.

கெண்டைத் தடங்கண்ணாள் உள்ளே கிளுகிளுத்தாள்.

என்றது சீதையின் உவகை நிலையை உள்ளம் ஊன்றி உணர்ந்து கொள்ள வந்தது. கிளுகிளுத்தல் என்பது மகிழ்ச் சியை உணர்ச்சியோடு குறிக்கும் ஓர் ஒலிக்குறிப்பு. எதிர்பா ராத ஆனந்தத்தால் உள்ளம் துள்ளிக் குதூகலித்துள்ளதை இந்த ஒலிக் குறிப்பால் கவி உணர்த்தி யருளினார். உரிய இடங்களில் அரிய பிரயோகங்கள் பிரியமாய் மருவி இனிதே வருகின்றன.

திரிசடை தேற்றியது.

பெரிய தந்தை மாயவஞ்சனைகளோடு அநியாயமாய் வந்து

அல்லல் புரிந்த போது அயல் ஒதுங்கி நின்ற திரிசடை பின்பு மெல்ல நெருங்கிச் சீதை அருகே அமர்ந்து ஆதரவு கூறினள். அன்பு நலங்கனிந்த அவளுடைய வாய்மொழிகள் இக்குலமகளுக்குப் பெரிய ஆறுதலாய்ப் பேரின்பம் விளைத்தது. நேர்ந்த வஞ்ச நிலைகள் எல்லாம் நெஞ்சம் தெளியவே உற்றிருந்த கவலைகள் யாவும் ஒருங்கே நீங்கி உள்ளத்தில் உவகை மீதூர்ந்திருந்தாள்.

வரிசடை நறுமலர் வண்டு பாடிலாத்
துரிசடை புரிகுழல் சும்மை சுற்றிய
ஒருசடை யுடையவட்கு உடைய அன்பினள்
திரிசடை தெருட்டுவாள் இனைய செப்புவாள்: (1)

உந்தைஎன்று உனக்கெதிர் உருவம் மாற்றியே
வந்தவன் மருத்தன் என்று உளனோர் மாயையான்
அந்தமில் கொடுந்தொழில் அரக்கன் ஆமெனச்
சிந்தையில் உணர்த்தினள் அமுதின் செய்கையாள். [2]

நங்கையும் அவளுரை நாளும் தேறுவாள்
சங்கையும் இன்னலும் துயரும் தள்ளினள்;
இங்குநின்று ஏகிய இலங்கை காவலன்
அங்குநின்று இயற்றியது அறைகுவாமரோ. [3]

திரிசடை தேற்றியுள்ளவகையையும், சீதை தேறி உவந்திருக்கும் நிலையையும் இவை தெளிவாக உணர்த்தியுள்ளன. பரிதாபமாய் மறுகி யிருந்தவளுக்கு உரிமையோடு உண்மையை உரைத்து அருகே அமர்ந்து ஆதரவாய் உவகை யூட்டியுள்ளாள்.

"அம்மா சீதா! நீ யாதும் கவலாதே; உனக்கு ஒரு தீதும் வராது; இப்பொழுது இங்கே உன் தந்தையைப் போல் வந்தவன் மருத்தன் என்னும் ஓர் அரக்கன்; மாயைகள் பலவும் வல்லவன்; அவனை வஞ்சச் சூழ்ச்சியுடன் கொண்டு வந்து உன் நெஞ்சைப் பேதிக்க மன்னவன் நெடிது முயன்றான்; முடிவு வேறாயது; உன்னைத் துன்புறுத்தினவன் துயருழந்து போனான்; உன் நாயகன் படைகளோடு வந்து இலங்கையை முற்றுகை செய்து வட திசைவாயிலில் போர் புரிந்து நிற்கின்றான்; ஒல்லையில் நீ நல்லது காண்பாய்; உள்ளம் வருந்தாமல் இரு அம்மா;" என்று அன்பு நலம் கனிய அறிவோடு திரிசடை ஆதரவு கூறியருளினாள்.

அமுதின் செய்கையாள் எனக் கவி இங்கே அவளை அழகாகக் குறித்துள்ளார். துயரங்களை நீக்கி உறுதி நலங்களை உதவிச் சீதைக்கு உவகை புரிந்து வருபவள் ஆதலால் அமுதம் என நேர்ந்தாள். குணம் செயல்களில் இனியவள்; தந்தையாகிய விபீடணனைப் போலவே தரும நீதிகளையுடையவள்; இராமனுக்கு அவன் அங்கே உழுவலன்போடு உடனிருந்து உறுதி புரிந்து வருதல் போல் சானகிக்கு இவள் இங்கே எவ்வழியும் இனியளாய் அருகு அமர்ந்து ஆதரவு செய்து வருகிறாள்.

ஒரு சடை உடையவள்.

சீதையை ஈண்டு இவ்வாறு காட்டியிருக்கிறார்.

நாயகனைப் பிரிந்து பரிதாப நிலையில் மறுகியுள்ளாள்; நீராடலின்றித் தைலம் முதலியன இழந்து புழுதிபடிந்து அந்த நெடிய கூந்தல் ஒரே சடையாய்த் திரண்டு இருத்தலால் அந்நிலை தெரிய வுரைத்தார். உரிய கணவனுடைய பிரிவின் துயரம் உயிரை வாட்டியுள்ளது; அவ்வுண்மையை மயிர் காட்டி நின்றது.

நீண்டு செறிந்து நெரிந்து பரந்து விரிந்திருந்த கரிய பெரிய கூந்தல் அழுக்குப் படிந்து நெடிய சடையாய் மடிந்து கிடந்தது ஆதலால் துரிசு அடைபுரிகுழற்சும்மை என அதன் நிலைமை தலைமைகளைப் புலமை நலம் பொலிய நேரே தெரிய வுரைத்தார்.

"குமையுறத்திரண்டு ஒருசடை ஆகிய குழலாள்."

என முன்னம்* குறித்திருப்பதும் ஈண்டு இணைத்து எண்ணத்தக்கது. அரிய விரத ஒழுக்கங்களுடைய பெரிய தவசிபோல் இப்பதிவிரதை மருவியிருத்தலைச் சடைமுடி ஓர்ந்து கொள்ளச் செய்தது. நிலைமையும் நீர்மையும் நெஞ்சை யுருக்கியுள்ளன.

ஒரு சடை யுடையவளுக்குத் திரிசடை ஆதரவு கூறியது உரிமை தோய்ந்து வந்தது. பல முறையும் அவளுடைய வாய்மொழிகள் உண்மையை உணர்த்தி உறுதி புரிந்து வந்துள்ளமையால் இதனைப் பெரிதும் நம்பிப் பெருமகிழ்ச்சி யடைந்தாள்.

சங்கையும் இன்னலும் துயரும் தள்ளினாள்.

வந்தவன் தன் தந்தை தானோ? என்று சிந்தையில் கொண்ட சந்தேகமும், திகிலும், கலக்கமும் அடியோடு நீங்கிச் சீதை அமைதியுற்றிருந்தமையை இதனால் அறிந்து கொள்ளுகிறோம்.

* இந் நூல் பக்கம் 2949, வரி 16 பார்க்க.

தள்ளினுள் என்றது உள்ளி உணரவுரியது. நெடிய கொடிய பாரங்களாய் நெஞ்சில் ஏறிய துயரச்சுமைகள் ஒளியைக் கண்ட இருள் போல் திரிசடையின் மொழியைக் கேட்டு ஒழிந்து போயின: போகவே இன்பங்கள் ஏகமாய்ப் பொங்கி எழுந்தன.

சென்றவன் செய்தது.

அசோகவனத்திலிருந்து சோகமாய்ச் சென்ற இராவணன் அரண்மனையுள் புகுந்தான். சிறிது போது மவுனமாயிருந்தான். மானமும் வீரமும் உள்ளே மறுகிப் போராடின. விரைவில் எழுந்து இராச சபையை அடைந்தான். அரியணையில் அமர்ந்தான். மந்திரச் சுற்றங்களும் சேனாதிபதிகளும் சேர்ந்து நின்றனர். வேந்தன் அவரை வெகுண்டு நோக்கி வீரம் கூறினான்.

விரைந்து பேசியது.

"படைத்தலைவர்கள் என அரிய பட்டங்களைத் தாங்கிப் பெரிய போர் வீரர்களாய்ப் பெருகியிருந்த நீங்கள் சிலகாலமாக மானமின்றி வீணே விரிந்து நிற்கின்றீர். எனது அருமைத் தம்பி அமரில் செத்து ஒழியவும் நீவிர் ஒத்துழையாமல் ஊனமாய் மாறியுள்ளது நன்மேயாம். ஆண்மையும் வீரமும் உங்களிடம் மேன்மையாய் இல்லையானல் நீங்கள் யாவரும் அயலே ஒதுங்கிப் போய் விடுங்கள்: உங்களை நம்பி நான் இந்த உலகத்தை ஆளவில்லை. சிறந்த செல்வங்களை அடைந்து உயர்ந்த இன்பங்களை நீங்கள் அனுபவித்து வருவது யாரால்? இதனை உணர்ந்து சிந்தனை செய்யுங்கள். நன்றி குன்றி இராசத் துரோகமாய் வீணே இங்கே நின்றிருப்பதை விட வேறே எங்கேனும் ஓடிப் போய் விடுவது நல்லது. அல்லது உரிமையோடு உதவி புரிவதாயின் போருக்கு இப்பொழுதே போக வேண்டும். பகைவரை வென்று மீள வல்லரேல் விரைந்து செல்லுங்கள்; பொன்றி மடிந்து அங்கே சாகவே செல்கிறோம் என்றால் நீவிர் போகவே வேண்டாம். வெல்லலாம் என உள்ளம் துணிவுள்ளவரே செல்லலாம். அல்லாதவர் அயலே அகன்று விடலாம்.

அல்லதும் உண்டு உமக்கு உரைப்பது ஆரமர்
வெல்லுதும் என்றிரேல் மேல்செல்வீர்! இனி
வல்லது மடிதலே என்னின் மாறுதிர்
சொல்லும்நும் கருத்து என முனிந்து சொல்லினான்.

இராவணனுடைய உள்ளம் இப்பொழுது உள்ள நிலையை இதனால் உணர்ந்து கொள்கிறோம். இராமனது அதிசய ஆற்றல் இலங்கை வேந்தனுக்குப் பெருந்திகிலையும் பெரிய அல்லலையும் விளைத்துள்ளது; அவ்வுண்மையை இங்கே அவன் பேசியுள்ள வாசகங்கள் வெளிப்படுத்தியுள்ளன. போர் என்று போனால் எவரையும் கொன்று வென்று வருவதே அவனுடைய சேனைகளின் இயல்பாய் இருந்து வந்தது. அந்த நிலைமாறி அச்சமும் அவலமும் இப்பொழுது எவரிடமும் பெருகி நிற்கின்றன. அமரிடை ஏறத் தமரிடையேயும் தளர்வு தோன்றி யிருத்தலால் அத் தளர்ச்சி நீங்கிக் கிளர்ச்சி ஓங்க வளர்ச்சியோடுபேசினான்.

## அதிகாயன் எழுந்தது.

இவன் இராவணனுடைய புதல்வன். தானியமாலை வயிற்றில் பிறந்தவன். இந்திரசித்துக்கு இளையவன். அருந்திறலாண்மையும் பெரும் போர் வீரமும் ஒருங்கே வாய்ந்தவன். யாண்டும் எதற்கும் அஞ்சாத நெஞ்சினன். அதிசய பராக்கிரமங்களை யுடைய இவன் தந்தை கூறிய வார்த்தைகளைக்கேட்டதும் சிந்தை நொந்து சினந்து எழுந்தான். மானவீரங்களோடு மனம் துணிந்து தாதையை நோக்கி நேரே பேசினான். இவனுடைய வாய்மொழிகள் அதிசய கம்பீரங்களாய் ஆரவாரங்களோடு வெளி வந்துள்ளன. அயலே வருவன காண்க.

நதிகாய்நெடு மானமும் நாணும்உரு
மதிகாய் குடை மன்னனை வைதுரையா
விதிகாயினும் வீரம் வெலற்கு அறியான்
அதிகாயன் எனும்பெயரான் அறைவான். [1]

வான் அஞ்சுக வையகம் அஞ்சுகமா
லான் அஞ்சு முகத்தவன் அஞ்சுக மேல்
நான் அஞ்சினன் என்றுனை நாணுக போர்
யான் அஞ்சினன் என்றும் இயம்புவதோ! (2)

தந்தையை நோக்கி மைந்தன் பேசியுள்ள இவ்வுரைகளில் இவனுடைய மானக் கொதிப்பும் வீரத்துடிப்பும் சேரத்துடித்து நிற்கின்றன.“போருக்கு அஞ்சுகின்றவர் ஈண்டு ஒதுங்கி நிற்க; அஞ்சாதவர் மூண்டு நேரே செல்க!”என்று இராவணன் உரை

த்தது இக்குமரனுக்குக் கொடிய கொதிப்பை மூட்டியது: ஆகவே நேரே இவ்வாறு கடுத்துப் பேச நேர்ந்தான்.

"அப்பா! வானகம் அஞ்சட்டும், வையகம் அஞ்சட்டும், திருமால் அஞ்சட்டும், சிவன் அஞ்சட்டும், நீ அஞ்சிநில், நான் அஞ்சினேன் என்று இந்த இராச சபையில் நேரே சொன்னது என் நெஞ்சை வருத்துகின்றது. ஒரு சுத்தவீரனுடைய உள்ளம் கொதிக்கும்படி மானக்கேடா இப்படிப் பேசக்கூடாது; அச்சம் என்பதே இன்னது என்று அறியாத உச்ச வீரனை என்னைக் கொச்சையாகக் குறித்துச் சொன்னது கொடிய நிந்தையாம்; தந்தை ஆதலால் பொறுத்தேன்; இந்த வார்த்தையை வேறு யாரேனும் கூறியிருந்தால் அவர் உடல் கூறுபட்டிருக்கும்" என்று சீறி நின்றான். வீரனுடைய உரைகள் வீறுமண்டி வந்துள்ளன.

வானவர் அஞ்சலாம், மண்ணவர் அஞ்சலாம், திருமால் அஞ்சலாம், பிரமதேவன் அஞ்சலாம், சிவபெருமான் அஞ்சலாம், இலங்கேசனை நீயும் அஞ்சலாம்; போருக்கு நான் அஞ்சேன் என்று நேருக்கு நேரா வீறோடு பேசியிருத்தலால் அதிகாயனது வீரத்திறல் வியந்து காண வந்தது. வீரத்தை ஆர்வத்தோடு இவன் போற்றிவரும் நீர்மை கூர்மையாக உய்த்துணர வுரியது. தனது அரிய உரிமை சிறுமையுறவே சீற்றம் ஏறியது.

சுத்தவீரர் எதையும் பொறுத்துக் கொள்ளுவர்; தம் வீரத்தைப் பழித்துக் கூறின் அவர் எவராயினும் அவரை வெறுத்து வெகுண்டு விடுவர். வீரப்பான்மை வியத்தகு மேன்மையது.

மானக் கொதிப்பினால் நேர்ந்த அதிகாயனுடைய கோபாக்கினி ஆற்று நீரையும் வற்றச் செய்யும்படி ஏற்ற முற்று எழுந்தது என்பார், நதிகாய் நெடுமானம் என்றார். பெரிய வெள்ளப் பெருக்கையும் காய்ந்து தீய்ந்து போகச் செய்யும் உள்ளக் கொதிப்பு உருத்து மூண்டது என்றதினால் இவனது ஆண்மையும் வீரமும், அடலாற்றலும் ஆய்ந்து கொள்ள வந்தன.

விதிகாயினும் வீரம் வெலற்கு அரியான்.

படைத்த பிரமன் கடுத்துக் காய்ந்தாலும் இவனது வீரத்தை விலக்கவுமுடியாது; வெல்லவுமுடியாது என்பதை இது விள

க்கியுள்ளது. அதிசயமான போர்வீரன் என இவ்வாறு துதி செய்து துலக்கினர். துலக்கம் பதிநலம் மருவியுள்ளது.

அதிகாயன் என்னும் பேருக்கு இயைய எதுகைகள் அமைந்து இவனது சீர்மைகளையும் சிறப்புகளையும் வெளிப்படுத்தியுள்ள இக்கவியின் சுவையைக் கூர்மையோடு உணர்ந்து கொள்ள வேண்டும். உணர உணர உவகைகள் பெருகி வரும்.

வீரப்பிரதாபம்.

போருக்கு அஞ்சினவர் ஊரில் நில்லுங்கள்; அஞ்சாதவர் நேரே போர்மேல் செல்லுங்கள்! என்று பொதுவாகச் சேனைபதிகளை நோக்கியே இராவணன் ஆங்காரமாய்க் கூறினன். அங்கே நின்ற அதிகாயனுக்கு அந்த வார்த்தை அதிக கோபத்தை மூட்டியது. சிறந்த சுத்தவீரன் ஆதலால் அஞ்சுதல் என்ற சொல் நெஞ்சைக் கொதிக்கச் செய்யவே தந்தையை நோக்கி நேரே பேச நேர்ந்தான். சீதையைக் கவர்ந்து வந்து வீண் பகைமையை விளைத்துக் குடிக்கும் குலத்திற்கும் கேடுகள் பல செய்து வருகிருன் எனத் தாதையின் மீது கோபமும் வெறுப்பும் உள்ளத்தில் கூடியிருந்தன ஆதலால் வெளியே வார்த்தைகள் துடுக்காய் வந்தன. போரில் மூண்டு புகுவதும், மீண்டு அஞ்சி வருவதும் அங்கே சமுகத்துக்குத் தான் தனி உரிமையாயுண்டு என்பான் நான் அஞ்சினேன் என்று உனை நாணுக என்று அஞ்சாது கூறினன். மேலே தனது அருந்திறலாண்மைகளையும் அதிசய வெற்றிகளையும் தந்தை தெரிந்து தெளிய இம் மைந்தன் விளக்கிக் காட்டினன்.

வெம்மைப்பொரு தானவர் மேல் வலியோர்
தம்மைத்தளை யிற்கொடு தந்திலனே?
உம்மைக்குலை யப்பொரும் உம்பரையும்
கொம்மைக்குய வட்டணை கொண்டிலனே? (1)

காய்ப்புண்ட நெடும்படை கையுளதாத்
தேய்ப்புண்ட வனும்சில சில்கணையால்
ஆய்ப்புண்டவனும் அவர் சொல்வலதால்
ஏய்ப்புண்டவனும் என எண்ணினையோ? (2)

உம்பிக்குயிர் ஈறுசெய்தான் ஒருவன்
தம்பிக்குயிர் ஈறு சமைத்தவனைக்

கம்பிப்பதோர் வன்துயர் கண்டிலனேல்
நம்பிக்கொரு நன்மகனே இனிநான். (3)

கிட்டிப் பொருதக் கிளர்சேனையெலாம்
மட்டித்துயர் வானரர் வன்தலையை
வெட்டித்தரை இட்டிரு வில்லினரைக்
கட்டித் தருவென் இதுகாணுதியால். (4)

அதிசய கம்பீரமாய் அதிகாயன் இவ்வாறு பேசியிருக்கிறான்.

( வானவர் தானவர் மானவர் யாவரையும் வென்று தன் தந்தைக்கு வெற்றி விளைத்திருப்பதை மூந்துற இம்மைந்தன் விளக்கிப் பின்பு தனது பெருமித நிலைகளையெல்லாம் விரித்துரைத்தான். கும்பகருணன், அட்சகுமாரன், விபீடணனைப் போலத் தன்னை இலேசாக எண்ணலாகாது என்று எடுத்து மொழிந்தான்.

தேய்ப்புண்டவன் என்றது அட்சனை.

ஆய்ப்புண்டவன் என்றது கும்பகருணனை.

ஏய்ப்புண்டவன் என்றது விபீடணனை.

இராமனுடைய புகழைக் கேட்டு அவனுடைய உருவ அழகிலும் சொல் வன்மையிலும் மயங்கி விபீடணன் அவனிடம் ஏமாந்துபோயிருக்கிறான் என்று அதிகாயன் எண்ணியிருக்கிறான். அவ்வுண்மை இங்கே உரையால் வெளிவர நேர்ந்தது. "எதிரிகளிடம் இறந்தும் ஏமாந்தும்போயுள்ள உமது தம்பியரைப் போலவும், இளைய மகனைப்போலவும் என்னை எளிதாக எண்ணுதே ஐயா!" என்று தனது ஆண்மை நிலையைத் தந்தை நன்கு உணர்ந்துகொள்ளும்படி பொங்கிய வீறோடு புகன்று நின்றான்.

"உன் தம்பியைக் கொன்று உன்னை அழச்செய்தான் இராமன். நான் அவனுடைய தம்பியைக் கொன்று அவனை அழச் செய்வேன். இதைச் செய்யேனேல் நான் உனக்குப் பிறந்தவன் அல்லன்" என இன்னவாறு இவன் பேசியிருப்பது இவனுடைய உள்ளத் துணிவையும் குலமானத்தையும் உணர்த்தியுள்ளது.

வானர சேனைகளை அடியோடு நாசம் செய்து ஒழித்து இரண்டு வில்லாளிகளையும் வெட்டி வீழ்த்தியோ, அல்லது கட்டிக்கொண்டோ ஒல்லையில் ஈண்டு வருவேன்; செல்லவிடைதா!

என்று சொல்லி அதிகாயன் வேண்டவே இராவணன் பெரு மகிழ்ச்சி அடைந்தான். உரிமையோடு மகனை உவந்து தழுவினன். பகைவரை வென்று வருவான் என்ற நசையும் உவகையும் அவனிடம் விசையாய்ப் பெருகி நின்றன. அரிய வலிய படைகளோடு செல்லும்படி பிரிய மகனுக்கு விடைகொடுத்தான். உரிய ஆசிகளோடு உவகையுரைகளாடினன்.

போவாய் இதுபோது பொலங்கழலோய்!
மூவாயிர கோடிய ரோடு முரட்
காவார் கரிதேர்பரி காவலின் என்று
ஏவாதன யாவையும் ஏவினனால்.

நால்வகைச் சேனைகளையும் இவ்வாறு உதவித் தெவ்வரை அழித்து வரும்படி தனது மகனை இலங்கை வேந்தன் கலங்காமல் அனுப்பினன். அவன் அதிசய கம்பீரமாய் வணங்கி வந்தான்.

## போருக்கு எழுந்தது.

தந்தையிடம் விடைபெற்றுத் தன் அரண்மனைக்கு வந்த அதிகாயன் அதிவிரைவில் போருக்கு ஆயத்தமாயினன். யானைகள் தேர்கள் குதிரைகள் காலாள் ஆகிய படைகள் திரண்டன. வீரப் போர்க்கோலங் கொண்டு வில் எடுத்து இவன் தேர்மேல் ஏறினன். அக் காட்சி ஆரவாரமாய் மாட்சி மிகுந்து நின்றது.

அந்த ஏற்றத்தைக் கண்டு தேவர் யாவரும் அஞ்சி நெஞ்சம் கலங்கினர். இவனது கொடிய வீரத்திறலை முன்னமே அறிந்தவர் ஆதலால் முடிவு என்னகுமோ? என்று எல்லாரும் நெடிது ஏங்கி நெட்டுயிர்த்து நின்றனர். சேனைகள் வெள்ளம் போல் ஆரவாரித்து வீறுகொண்டு போருக்கு மூண்டு எழுந்தன.

## இடையே கண்டது.

கும்பன் நிகும்பன் முதலிய துணைவர்கள் பலர் அயலே வாகனங்களில் தொடர்ந்துவரப் படைகள் முன்னும் பின்னும் அடர்ந்து செல்லத் தேர் விரைந்து சென்றது. பொருகளம் புகுந்தது. தேர் சென்ற வழியில் கும்பகருணன் உடல் பெரிய கருமலைபோல் தலையின்றி முண்டமாய்க் கிடந்தது. அதனை அதிகாயன் கண்டான்; தேரை நிறுத்தினன்; அதிலிருந்தபடியே அவ்வுடலை ஊன்றி நோக்கினன்; தனது சிறிய தந்தையின் அரிய

திருமேனி கைகளும் கால்களும் இழந்து தலையும் ஒழிந்து அடையாளம் தெரியாதபடி தரையில் வறிதே வரைபோல் சிதைந்து கிடக்கும் நிலையை நினைந்து நெஞ்சம் துடித்தான்; கண்கள் நீரைச் சொரிந்தன. தன் குடிக்கு நேர்ந்துள்ள பழிகளையும் அழிவுகளையும் எண்ணி எண்ணி நொந்தான். விண்ணோர் எவரையும் வென்று வெற்றி வீறோடு வாழும் வீரமரபு இவ்வாறு இற்று ஒழிய உற்றதே! என்று உள்ளம் கடுத்து உருத்துச் சினந்தான்.

கண்டான் அவ் இராமன் எனும்களிமா
உண்டாடிய வெங்களன் ஊடுருவப்
புண்டானுறு நெஞ்சு புழுக்கமுறத்
திண்டாடினன் வந்த சினத்திறலோன். (1)

மலைகண்டன போல்வருதோளொடு தாள்
கலைகண்ட கருங்கடல் கண்டுழல்வான்
நிலைகண்டன கண்டொரு தாதைநெடும்
தலைகண்டிலன் என்று சலித்தனனால். (2)

மிடல்ஒன்று சரத்தொடு மீதுயர்வான்
திடலன்று; திசைக்களிறன்று; ஒருதிண்
கடலன்று; இதுஎன்எந்தை கடக்கரியான்
உடல்என்று உயிரோடும் உருத்தனனால். (3)

எல்லே இவைகாணிய எய்தினனோ?
வல்லே யுளராயின மானிடரைக்
கொல்லேன் ஒருநான் உயிர்கோள்நெறியிற்
செல்லேன் எனினிவ் இடர்தீர்குவனோ? (4)

இராமபாணங்களால் அடிபட்டுப் போர்க்களத்தில் மாண்டுகிடந்த கும்பகருணனுடைய உடலைக் கண்டு அதிகாயன் உள்ளம் கொதித்து உருத்து உரையாடியிருக்கும் நிலைகளை இவை உணர்த்தியுள்ளன. துயரக் காட்சி உயிரை உருக்கியுளது.

கடல்போல் வந்த படைகள் பல மடிந்து உடல்கள் சிதைந்து அயலெங்கணும் பிணக்காடுகளாய் மேடுகள் மண்டி உதிரங்கள் ஓடி உறைந்து கிடந்த அந்தச் சமர பூமியிடையே இலங்கை வீரன் இரதத்தை நிறுத்தி எதிரே நேர்ந்த முண்டத்தை நோக்கி முதிர்கோபம் மூண்டு அதிராது அயர்ந்து நின்றான்.

இராமன் எனும் களிமா உண்டாடிய வெங்களன்.

அந்தப் போர்க்கள நிலையை இங்ஙனம் கவி காட்டியிருக்கிருர். அரிய பெரிய ஒரு மதயானை வெறிகொண்டு வீறிட்டு உழக்கி யழித்த புன்புலம்போல் அவ்வன்புலம் நிலைகுலைந்து கொலை விளைந்து இருந்தது ஆதலால் களிமா ஆடிய களன் என்றார்.

அந்த இரணகளத்தில் தலை இழந்து கிடந்த உடலின் இடலைக்கண்டு உள்ளம் உருகி மறுகிய அதிகாயன் பல பல நினைந்து பரிந்து நொந்தான். அசுரர் குலமும் அமரர் குலமும் அடங்க வென்ற அதிசய வீரன் ஒரு மனிதனுடைய பாணத்தால் இப்படி மாண்டு மடிந்து முடிந்தானே! என்று மீண்டும் மீண்டும் நோக்கி நீண்ட துயரோடுநெஞ்சம் கனன்ருன். தலையைக் காணுதது அவன்குலையைத் துடிக்கச் செய்துகொடுந்துயர் மூட்டியது.

தாதை நெடும் தலை கண்டிலன்.

என்றதனுல் உடலின் முண்டத்தை மாத்திரம் கண்டு துடித்த அவனது நிலையை நாம் கண்டுகொள்கிருேம். தலை எங்கேபோயது? என்று பலவாறு அவன் யோசித்திருக்கிருன்.

"மூக்கும் செவியும் இழந்து போனேன்; வெளியே கிடந்தால் இந்த முகத்தை நோக்கித் தேவர் சிரிப்பர்; அவ்வாறு இகழ்ச்சி நேராதவாறு என்தலையை துணித்துக் கடலில்போக்கி விடுக" என்று கும்பகருணன் வேண்டியபடியே இராமன்செய்தான் ஆதலால் அவ்வுடல் தலையின்றிக் கிடந்தது. அந்தத் தலையைக் காணுமையால் அதிகாயன் தவித்து உளைந்தான்.

தனது சிறிய தந்தையை இவ்வாறு கொடுமையாய்க் கொன்று தொலைத்த அந்த மனிதர் இருவரையும் கொன்று படைகளையும் அழித்துப் பழிக்குப் பழி வாங்கி வென்றி வீருேடு மீள வேண்டும் என்று வெகுண்டு மூண்டான். அந்த இடத்திலேயே தேரை நிறுத்திக்கொண்டான்; சேனைகள் யாவும் அணிவகுத்து நின்றன. மானக்கொதிப்பால் மறுகி நின்ற அவன் தனது வீரத் திறல் தெரியத் தீரத்தோடு விரைந்து ஒன்று செய்தான்.

தூதனை விடுத்தது.

"நான் போருக்கு வந்திருக்கிறேன்; நேருக்கு நேராய் நீவிர் யாவரும் ஒருங்கே போராட வரலாம்" என்று வீரவாதம் கூறி இராமனிடம் ஒரு தூதனை அனுப்ப அதிகாயன் துணிந்தான்.

மயிடன் என்னும் வீரனை அழைத்தான். சிறந்த பேச்சாளி ஆன அவனைத் தூதுபோய் வரும்படி சில உறுதி மொழிகளைக் கூறினன். உரைகள் அவன் உள்ள நிலையை உணர்த்தின.

அந்தார் இளவற்கு அயர்வெய்தி அழூம்
தந்தாதை மனத்திடர் தள்ளிடுவான்
உந்தார் துயரோடும் உருத்தெரிவான்
வந்தான்என முன்சொல் வழங்குதியால். [1]

செருவாசையினர் புகழ்தேடுறுவார்
இருவோரையும் நீவலை யுற்றெதிரே
பொருவோர் நமனர் பதிபுக் குறைவோர்
வருவோரைஎலாம் வருகென்னுதியால். [2]

தனது தூதுவனிடம் அதிகாயன் இன்னவாறு சொல்லியிருக்கிறான். "உடன் பிறந்த தம்பியை இழந்து தவித்து அழுகின்ற தந்தையின் மனத்துயரை நீக்கும் பொருட்டு இலங்கைவேந்தன் மைந்தன் போருக்கு வந்திருக்கிறான்; எமலோகத்துக்குக் குடிபோக நேர்ந்துள்ள எதிரிகளாகிய நீங்கள் எல்லாரும் ஒருங்கே அமருக்கு வரலாம் என்று இராமலட்சுமணர்களிடம் போய்ச் சொல்லிவா!" என்று தூதன்பால் ஓதியுள்ளான். இராமன் தம்பியாகிய இலக்குவனையே இலக்காக வீரவாதம் கூறி விரைந்து அழைத்து வா! என்று தனியே உரைத்து விடுத்தான். அவ் வீரனுடைய உரைகளைக் கேட்டுத் தூதன் நேரே துணிந்து சென்றான்.

சென்றவன் நின்றது.

வானர சேனைகளின் முன் அணியில் நின்ற காவலர் அவனைத் தடுத்து நிறுத்தினர். "அதிகாயன் ஏவிய தூதன் யான்; உங்கள் அதிபதியிடம் ஒன்று சொல்ல வந்துள்ளேன்; இடையே தடைசெய்யாதீர்!" என்று அவன் தகவோடு உரைத்தான். உரைத்தும் உள்ளே விடாமல் வெளியே அகற்றினர். அந்த நிலையை அறிந்த இராமன் "வந்த தூதனை யாதும் தடை செய்யாதீர்! நேரே வரவிடுக" என்று கூறவேஅங்கதன் அழைத்துச்சென்றான். இராமனை அணுகினன்; யாது காரியம்? எனத் தூதனை நோக்கி இவ்வீரமூர்த்தி வினவினன்; வினவவே, அவன் உங்கள் தம்பியிடம் நேரே சொல்லவுரியது; அவர் எங்கே? என்றான். அவ்வுரையைக் கேட்டதும் அயலே நின்ற இலக்குவன் அவன்

எதிரே வந்து "என்ன அது? விரைந்து சொல்!" என்றான். வந்த தூதுவன் இந்த வீரனிடம் நேரே தொடர்ந்து சொன்னான்.

### தூதன் சொல்லியது.

சொல்லாயது சொல்லிடு சொல்லிடு என
வில்லாளன் இளங்கிளையோன் வினவப்
பல்லாயிர கோடி படைக் கடல்முன்
நில்லாய்என நின்று நிகழ்த்தினனால். [1]

உன்மேல்அதி காயன் உருத்துளனாய்
நன்மேருவில் நின்றனன் நாடியவன்
தன்மேல்எதி ரும்வலி தக்குளையேல்
பொன்மேனிய! என்னொடு போதுதியால். [2]

சையப்படி வந்தொரு தந்தையைமுன்
மெய்யெப்படி செய்தனன் நும்முன்விரைந்து
ஐயப்படல் அப்படி இப்படியில்
செய்யப்படு கிற்றி தெரித்தனனால். [3]

கொன்றான் ஒழியக் கொலைகோள்அறியா
நின்றானொடு நின்றதென் நேடிஎனின்
தன்தாதை படுந்துயர் தந்தையைமுன்
வென்றானை இயற்றுறும் வேட்கையினால். (4)

அதிகாயனிடமிருந்து வந்த தூதுவன் இலக்குவனிடம் இவ்வாறு கூறியிருக்கிறான். "எங்களுடைய சக்கரவர்த்தி மகன் உன்னோடு உக்கிர வீரமாய்ப் போராட மூண்டு வந்துள்ளார். அவரோடு எதிர்த்துப் போர் புரியத் தக்க வல்லமை உனக்கு இருக்குமானால் இப்பொழுதே புறப்பட்டு என்னோடு வா! அவருடைய சிறிய தந்தையை உன் அண்ணன் எப்படிக் கொன்று தொலைத்தானோ அப்படியே உன்னை அவர் கொன்று தொலைக்க விரும்பி வெற்றி வீறோடு தேர்மேல் ஏறி ஈண்டு வந்திருக்கிறார். இங்கே நின்று வீணே நேரத்தைக்கடத்தாமல் அங்கே விரைந்து வரச்சொன்னார். கும்பகருணனைக் கொன்றவன் இராமனே; அவனைப் போருக்கு அழையாமல் என்னை ஏன் அறை கூவி அழைக்கின்றாய்? என்று நீ கேட்கலாம்; அதற்குத் தக்க காரணம் உள்ளது. தன் தம்பியை இழந்து இலங்கைவேந்தன் தவித்து அழுததுபோல் உன்னை இழந்து இராமன் துடித்து அழ

வேண்டும்; அதனைச் செய்துமுடிப்பதே தமது கடமையாய்க் கருதி வந்திருக்கிறார்; ஆதலால் உன்னை நேரே போருக்கு அழைக்க நேர்ந்தார். நிலைமையை உணர்ந்து விரைந்து வருவது நல்லது; உனக்குத்துணையாகப் படைகளையும் சேர்த்துக்கொண்டு வரலாம்'' என இவ்வாறு அவன் செவ்வையாச்சொல்லி நின்றான்.

அவனுடைய வார்த்தைகளில் தருக்கும் துணிவும் துடுக்கும் நிறைந்திருக்கின்றன. தான் ஒரு தூதனாய் வந்திருத்தலால் நீதிமானான இராமன் எதிரே தனக்கு யாதொரு தீதும் நேராது என்று உறுதியாகக் கருதியிருத்தலால் உரைகளைத் திடமாய் நின்று கூறினான். தங்கள் அரசனுடைய அருமைத் தம்பியை அழித்திருத்தலால் பழிக்குப்பழி வாங்கப்படும் என்று கொழித்துக் கூறினான். கூறிய முறை வீறோடு விரவி நின்றது.

சையப்படிவம் என்றது மலைபோன்ற பெரிய வடிவினன் எனக் கும்பகருணனுடைய உடல் நிலைமையும் அடலாண்மையும் தெரிய வந்தது. சையம் = மலை. சேய்மையில் நின்று பார்த்தாலும் தெரிவது என்னும் ஏதுவால் மலைக்குச் சையம் என்று ஒருபெயர் நேர்ந்தது. அந்தச்சிறப்புப்பெயர் குறிப்போடுவந்தது.

அந்த அதிசய வீரனைக் கொன்று தங்கள் குலத்துக்கு நெடிய பழியை விளைத்துள்ளமையால் அதனைத் துடைத்து ஒழிக்கவே இந்தக் குலக்குமரன் கொதித்து வந்திருக்கிறான்என அதிகாயனுடைய வரவு நிலையை மதிதெளிய நேரே வுரைத்தான்.

கும்பகருணனைக் கொன்று தொலைத்தவன் இராமன்; அந்த வென்றி வீரனை விலக்கி ஒதுக்கிவிட்டு இலக்குவனைப் போருக்கு நேரே அழைத்ததற்குக் காரணத்தைக் குறித்துக் காட்டினான்.

கோலைகோள் அறியா நின்றான் என்றது இலக்குவனை. கொன்றவனைப் போருக்கு அழையாமல் கொலைபுரியாது நின்றவனை அழைத்தது என்ன? எனின், மரண வேதனையினும் கொடிய துயரத்தை இராமனுக்குக் கொடுக்கவேயாம் என்றான். நேடுதல் = தேடுதல். கொலை அறியாதவனைக் கொல்ல நாடியே அவ்வல்லவன் மூண்டு வந்துள்ளான் என வடித்து உரைத்தான்.

தன்தாதை படுந்துயர் தந்தையைமுன்
வென்றானை இயற்றுறும் வேட்கையினால்.

போருக்கு வந்துள்ள அதிகாயனுடைய உள்ளக்கருத்தை இது உணர்த்தியுள்ளது. தம்பியை இழந்து தன் தந்தை அழுது புலம்பும்படி இராமன் செய்திருக்கிறான் ஆதலால் அவனும் அவ்வாறே தம்பியை இழந்து அழும்படி செய்யவே தான் வந்திருப்பதாக அவன் வரைந்து குறித்து விடுத்திருக்கிறான்.

## இலக்குவன் உவந்தது.

தூதுவன் வந்து கூறிய அவ்வுரைகளைக் கேட்டதும் இராமன் உள்ளம் துணிந்து இலக்குவனை உவந்து நோக்கினான். அவ் வீரத்தம்பி தனியுரிமையாக நேரே தனக்குப் போர் கிடைத்ததே! என்ற பேருவகையினால் அண்ணனை ஆவலோடு தொழுது தனது வில்லை எடுத்துத் தன்னம் தனியே செல்லத் துணிந்தான். விரைந்து செல்லுக என்று இராமனும் இசைந்து விடை கொடுத்தான்.

## வீடணன் தடுத்தது.

அடலாண்மையோடு இளையவன் அமர்மேல் மூண்டு எழுந்தபொழுது அருகே நின்ற விபீடணன் இராமனை உழுவலன்போடு தொழுது "ஆண்டவா! இளவல் தனியே செல்லலாகாது" என்று சொல்லி நிறுத்தினான்; வந்துள்ளவனது வீரப்பிரதாபங்களையெல்லாம் வகையே விரித்து உரைத்தான். அவ்வுரைகள் யாவும் அவனுடைய சீவிய சரிதங்களாய் மேவிவந்தன.

## அதிகாயன் நிலை.

போர்மேல் மூண்டு இதுபொழுது ஈண்டுவந்துள்ளவன் அதிசய வலியினன். அரிய பல வர பலங்களையுடையவன். பெரிய போர்வீரன். தேவர் அசுரர் யாவரும் அஞ்ச அரிய போராடல்கள் புரிந்து யாண்டும் வென்று நீண்ட புகழ்பெற்றவன். அவனது நிலைமையும் தலைமையும் நெடிது சிந்திக்கத்தக்கன. எளிதாக எண்ணலாகாது என உணர்த்தி மேலும் தெளிவாக அவனுடைய அதிசய மேன்மைகளை யெல்லாம் விளக்கி உரைத்தான்.

ஓவாநெடு மாதவம் ஒன்றுடையான்
தேவாசுரர் ஆதியர் செய்செருவில்
சாவான் இறையும் சலியா வலியான்
மூவாமுதல் நான்முகனார் மொழியால் (1)

பகைஆடிய வானவர் பல்வகையூர்
புகைஆடிய நாள்புனை வாகையினன்
மிகையாருயிர் உண்ணென வீசியவெம்
தகைஆழி தகைந்த தனுத்தொழிலான். (2)

உயிரொப்புறு பல்படை உள்ளவெலாம்
செயிரொப்புறும் இந்திரர் சிந்தியநாள்
அயிர்ஒப்பன நுண்துகள் செய்தவர்தம்
வயிரப்படை தள்ளிய வாளியினன். (3)

கற்றான்மறை நூலொடு கண்ணுதல்பால்
முற்றாதன தேவர் முரட்படைதாம்
மற்றாரும் வழங்க வலாரிலவும்
பெற்றானெடி தாண்மை பிறந்துடையான். (4)

அறனல்லது நல்லது மாறறியான்
மறனல்லது பல்பணி மற்றணியான்
திறனல்லதோர் ஆருயிரும் சிதையான்
உறனல்லது பேரிசை என்றுணர்வான் (5)

காயத்துயி ரேவிடு காலையினும்
மாயத்தவர் கூடி மலைந்திடினும்
தேயத்தவர் செய்குதல் செய்திடினும்
மாயத்தொழில் செய்ய மதித்திலனால். (6)

அதிகாயனைக் குறித்து வீடணன் உரைத்துள்ள இதில் அவனுடைய அரிய பெரிய மகிமைகள் தெரியவந்துள்ளன. தேவர்களை வென்றவன்; இந்திரனுடைய வச்சிராயுதத்தை அலட்சியமாக் கவர்ந்து அவனை அலக்கணுறுத்தி வந்தவன். பல போர்களிலும் சிறந்து திசைகள் எங்கணும் இசைகள் ஓங்கச் செய்தவன். உக்கிர வீரமான உருத்திர மூர்த்தியை உபாசித்து அத்திர வித்தைகள் யாவும் கற்று அப்பெருமானுடைய திருவருளைப் பெற்றுள்ளவன். வீரமே தனக்குப் பேரணியாகவுடையவன். எளியவரை யாதும் நலியாதவன்; சிறந்த வீரத்திறலால் விளைந்துவரும் உயர்ந்த கீர்த்தியையே நயந்துள்ளவன். நெறியும் நேர்மையும் உடையவன். வஞ்சனை சூதுகளை எவ்வழியும் யாதும் யாரிடமும் செய்யாதவன்.

காயத்து உயிரேவிடு காலையினும்

மாயத்தொழில் செய்ய மதித்திலன்.

இதனால் அவனது நெஞ்சத் தூய்மையின் நிலை தெரியவந்தது. போரில் வீரவாதம் கூறி நேரே போராடுவனே அன்றி மாறாய் மறைந்து வஞ்சச் சூதுகள் யாதும் செய்யாதவன் என்றதனால் அவனுடைய உயர்ந்த அருந்திறலாண்மையும் சிறந்த பெருந்தன்மையும் தீர தைரியங்களும் விளங்கி நின்றன.

இன்னவாறு பலவகை நிலைகளையும் கூறிவந்த வீடணன் பின்னும் சில உண்மைகளை விளக்கினான். அவனுடைய பூர்வீக நிலையை ஒரு யோகியின்மூலம் தான் அறிந்துள்ளதை இங்கே அறிய உரைத்தான். பிறப்பின் பெருமைகள்சிறப்பூர்ந்து வந்தன.

## மது கைடவர்.

மது, கைடவன் என்னும் இருவர் அசுரவீரர். ஒருவயிற்றில் பிறந்தவர். அசகாய சூரர். அமரர் முதல் யாவரையும் வென்று அடக்கி அதிசய வீரராய் நிலவி நின்றார். எவ்வுலகங்களினும் யாரும் தமக்கு நிகரிலர் என வெவ்வலியில் வீறுகொண்டு விளங்கிநின்ற இவர் ஒருநாள் திருமாலைக் கண்டார். பொருமாலோடு மூண்டுவந்த இவரைக் கண்டதும் அப்பெருமாள் போராட மூண்டார். கொடிய போர் நேர்ந்தது. நெடியகாலம் ஆகியும் வெற்றி தோல்வி காணாமல் நாணி நின்றார். முடிவில் மாயவன் செய்த மாயத்தால் அந்த இருவரும் இறந்துபட்டார். சக்கரதரனோடு உக்கிரவீரமாய்ப் போராடி இறந்த அந்த இருவரும் முந்தை விதிமுறையால் இந்த இலங்கையில் வந்து அரசர்குலத்தில் பிறந்தார். முன்னவன் இலங்கைவேந்தனுக்குத் தம்பியாய்க் கும்பகருணன் எனத் தோன்றினான். பின்னவன் அம்மன்னவன் மகனாய் அதிகாயன் என்னும் பேரோடு எழுந்து வளர்ந்து, சீரும் சிறப்பும் எய்தி வந்தான். அவனே இன்று போருக்கு ண்டு நேரே மூண்டு வந்திருக்கிறான்.

விதியால்இவ் யுகந்தனின் மெய்வலியான்
மதுவானவன் எம்முன் மடிந்தனனால்;
கதிர்தான்நிகர் கைடவன் இக்கதிர்வேல்
அதிகாயன் இதாக அறைந்தனனால்.

முன்னம் வந்து மாண்ட கும்பகருணனுக்கும்; இப்பொ

மூதுமாளவந்துள்ள அதிகாயனுக்கும் உள்ள உறவுரிமையும்; பூர்வ நிலைமையும் இதனால் உணரவந்தன. பழம் பிறப்பின் தொடர்போடு சிறந்த வீரத்திறல்கள் நிறைந்துள்ளமையால் இந்த இருவருடைய அதிசய ஆற்றல்கள் துதிசெய்ய நேர்ந்தன. இக்கதிர்வேல் அதிகாயன் கைடவன், என்றது பெரிய ஒரு அசுர வீரனுடைய அவதாரம் என அவனது அரிய மேன்மை தெரிய நின்றது. தானவர் தலைவனாயிருந்தவன் வானவர் அஞ்ச வந்தான்.

அதிகாயனுடைய பிறப்பு இருப்பு குணம் செயல் வரபலம் உடல்வலி அடலாண்மை அரிய வீரத்திறல் முதலிய நிலைமைகளை யெல்லாம் நேரே எடுத்துச்சொல்லி இத்தகைய வெற்றிப்பிரதாப னோடு இளையபெருமாளைத் தனியே போராட விடலாகாது என்று வீடணன் பரிவுகூர்ந்து உணர்த்தினான். அவ்வுரைகளைக் கேட்டதும் இராமன் குறுமுறுவல்கொண்டு அவனை உரிமையோடுநோக்கினான். புன்னகையும் நோக்கும் பொருள் பொதிந்து நின்றன.

## தம்பி நிலையை நம்பி குறித்தது.

தேர் ஏறிப் பெரிய படைகளோடு போருக்கு வந்துள்ள அதிகாயன் அதிசய ஆற்றலுடையவன்; அளவிடலரிய நிலையினன் என வீடணன் விளக்கிச் சொல்லவே இலக்குவனுடைய உக்கிர வீரநிலைகளை அண்ணல் உரிமையோடு உரைக்க நேர்ந்தான். அவ்வுரைகள் வீரகம்பீரங்கள் தோய்ந்து மேலான நீர்மைகள் வாய்ந்து வியத்தகு நிலைகளில் வெளி வந்துள்ளன. அயலே வருவன எண்ணி அறியவுரியன.

எண்ணாயிர கோடி இராவணரும்
விண்ணாடரும் வேறுலகத்து எவரும்
நண்ணாஒரு மூவரும் நண்ணிடினும்
கண்ணால் இவன் வில்தொழில் காணுதியால் (1)

வான்என்பது என்? வையகம் என்பதென்? மால்
தான்என்பதென்? வேறு தனிச்சிலையோர்
யான்என்பதென்? ஈசன்என்? வானவர்தம்
கோன்என்பதென்? எம்பி கொதித்திடுமேல். (2)

தெய்வப்படையும் சினமும் திறனும்
மையற்றொழி மாதவம் மற்றுமெலாம்

அந்தப் போர்க்கள நிலையை இங்ஙனம் கவி காட்டியிருக்கிறார். அரிய பெரிய ஒரு மதயானை வெறிகொண்டு விரட்டு உழக்கி யழித்த புன்புலம்போல் அவ்வன் புலம் நிலைகுலைந்து கோலை விளைந்து இருந்தது ஆதலால் களிமா ஆடிய களன் என்றார்.

அந்த இரணகளத்தில் தலை இழந்து கிடந்த உடலின் இடலைக்கண்டு உள்ளம் உருகி மறுகிய அதிகாயன் பல பல நினைந்து பரிந்து நொந்தான். அசுரர் குலமும் அமரர் குலமும் அடங்க வென்ற அதிசய வீரன் ஒரு மனிதனுடைய பாணத்தால் இப்படி மாண்டு மடிந்து முடிந்தானே! என்று மீண்டும் மீண்டும் நோக்கி நீண்ட துயரோடு நெஞ்சம் கனன்றான். தலையைக் காணாதது அவன் குலையைத் துடிக்கச் செய்து கொடுந்துயர் மூட்டியது.

தாதை நெடும் தலை கண்டிலன்.

என்றதனால் உடலின் முண்டத்தை மாத்திரம் கண்டு துடித்த அவனது நிலையை நாம் கண்டுகொள்கிறோம். தலை எங்கே போயது? என்று பலவாறு அவன் யோசித்திருக்கிறான்.

"மூக்கும் செவியும் இழந்து போனேன்; வெளியே கிடந்தால் இந்த முகத்தை நோக்கித் தேவர் சிரிப்பர்; அவ்வாறு இகழ்ச்சி நேராதவாறு என் தலையை துணித்துக் கடலில்போக்கி விடுக" என்று கும்பகருணன் வேண்டியபடியே இராமன் செய்தான் ஆதலால் அவ்வுடல் தலையின்றிக் கிடந்தது. அந்தத் தலையைக் காணாமையால் அதிகாயன் தவித்து உளைந்தான்.

தனது சிறிய தந்தையை இவ்வாறு கொடுமையாய்க் கொன்று தொலைத்த அந்த மனிதர் இருவரையும் கொன்று படைகளையும் அழித்துப் பழிக்குப் பழி வாங்கி வென்றி வீறோடு மீள வேண்டும் என்று வெகுண்டு மூண்டான். அந்த இடத்திலேயே தேரை நிறுத்திக்கொண்டான்; சேனைகள் யாவும் அணிவகுத்து நின்றன. மானக்கொதிப்பால் மறுகி நின்ற அவன் தனது வீரத் திறல் தெரியத் தீரத்தோடு விரைந்து ஒன்று செய்தான்.

தூதனை விடுத்தது.

"நான் போருக்கு வந்திருக்கிறேன்; நேருக்கு நேராய் நீவிர் யாவரும் ஒருங்கே போராட வரலாம்" என்று வீரவாதம் கூறி இராமனிடம் ஒரு தூதனை அனுப்ப அதிகாயன் துணிந்தான்.

மயிடன் என்னும் வீரனை அழைத்தான். சிறந்த பேச்சாளி ஆன அவனைத் தூதுபோய் வரும்படி சில உறுதி மொழிகளைக் கூறினான். உரைகள் அவன் உள்ள நிலையை உணர்த்தின.

அந்தார் இளவற்கு அயர்வெய்தி அழும்
தந்தாதை மனத்திடர் தள்ளிடுவான்
உந்தார் துயரோடும் உருத்தெரிவான்
வந்தான்என முன்சொல் வழங்குதியால். [1]

செருவாசையினுர் புகழ்தேடுறுவார்
இருவோரையும் நீவலை யுற்றெதிரே
பொருவோர் நமனுர் பதிபுக் குறைவோர்
வருவோரைஎலாம் வருகென்னுதியால். [2]

தனது தூதுவனிடம் அதிகாயன் இன்னவாறு சொல்லியிருக்கிறுன். "உடன் பிறந்த தம்பியை இழந்து தவித்து அழுகின்ற தந்தையின் மனத்துயரை நீக்கும் பொருட்டு இலங்கைவேந்தன் மைந்தன் போருக்கு வந்திருக்கிறுன்; எமலோகத்துக்குக் குடிபோக நேர்ந்துள்ள எதிரிகளாகிய நீங்கள் எல்லாரும் ஒருங்கே அமருக்கு வரலாம் என்று இராமலட்சுமணர்களிடம் போய்ச் சொல்லிவா!" என்று தூதன்பால் ஓதியுள்ளான். இராமன் தம்பியாகிய இலக்குவனையே இலக்காக வீரவாதம் கூறி விரைந்து அழைத்து வா! என்று தனியே உரைத்து விடுத்தான். அவ் வீரனுடைய உரைகளைக் கேட்டுத் தூதன் நேரே துணிந்து சென்றுன்.

சென்றவன் நின்றது.

வானர சேனைகளின் முன் அணியில் நின்ற காவலர் அவனைத் தடுத்து நிறுத்தினர். "அதிகாயன் ஏவிய தூதன் யான்; உங்கள் அதிபதியிடம் ஒன்று சொல்ல வந்துள்ளேன்; இடையே தடைசெய்யாதீர்!" என்று அவன் தகவோடு உரைத்தான். உரைத்தும் உள்ளே விடாமல் வெளியே அகற்றினர். அந்த நிலையை அறிந்த இராமன் "வந்த தூதனை யாதும் தடை செய்யாதீர்! நேரே வரவிடுக" என்று கூறவேஅங்கதன் அழைத்துச்சென்றுன். இராமனை அணுகினுன்; யாது காரியம்? எனத் தூதனை நோக்கி இவ்வீரமூர்த்தி வினவினுன்; வினவவே, அவன் உங்கள் தம்பியிடம் நேரே சொல்லவுரியது; அவர் எங்கே? என்றுன். அவ்வுரையைக் கேட்டதும் அயலே நின்ற இலக்குவன் அவன்

எதிரே வந்து "என்ன அது? விரைந்து சொல்!" என்றான். வந்த தூதுவன் இந்த வீரனிடம் நேரே தொடர்ந்து சொன்னான்.

தூதன் சொல்லியது.

சொல்லாயது சொல்லிடு சொல்லிடு எனா
வில்லாளன் இளங்கிளையோன் வினவப்
பல்லாயிர கோடி படைக் கடல்முன்
நில்லாய்என நின்று நிகழ்த்தினனால். [1]

உன்மேல் அதி காயன் உருத்துளனாய்
நன்மேருவில் நின்றனன் நாடியவன்
தன்மேல்எதி ரும்வலி தக்குளையேல்
பொன்மேனிய! என்னொடு போதுதியால். [2]

சையப்படி வத்தொரு தந்தையைமுன்
மெய்யெப்படி செய்தனன் நும்முன்விரைந்து
ஐயப்படல் அப்படி இப்படியில்
செய்யப்படு கிற்றி தெரித்தனனால். [3]

கொன்றான் ஒழியக் கொலைகோள் அறியா
நின்றானொடு நின்றதென் நேடிஎனின்
தன்தாதை படுந்துயர் தந்தையைமுன்
வென்றானை இயற்றுறும் வேட்கையினால். (4)

அதிகாயனிடமிருந்து வந்த தூதுவன் இலக்குவனிடம் இவ்வாறு கூறியிருக்கிறான். "எங்களுடைய சக்கரவர்த்தி மகன் உன்னோடு உக்கிர வீரமாய்ப் போராட மூண்டு வந்துள்ளார். அவரோடு எதிர்த்துப் போர் புரியத் தக்க வல்லமை உனக்கு இருக்குமானால் இப்பொழுதே புறப்பட்டு என்னோடு வா! அவருடைய சிறிய தந்தையை உன் அண்ணன் எப்படிக் கொன்று தொலைத்தானோ அப்படியே உன்னை அவர் கொன்று தொலைக்க விரும்பி வென்றி வீறோடு தேர்மேல் ஏறி ஈண்டு வந்திருக்கிறார். இங்கே நின்று வீணே நேரத்தைக்கடத்தாமல் அங்கே விரைந்து வரச்சொன்னார். கும்பகருணனைக் கொன்றவன் இராமனே; அவனைப் போருக்கு அழையாமல் என்னை ஏன் அறைகூவி அழைக்கின்றாய்? என்று நீ கேட்கலாம்; அதற்குத் தக்க காரணம் உள்ளது. தன் தம்பியை இழந்து இலங்கைவேந்தன் தவித்து அழுததுபோல் உன்னை இழந்து இராமன் துடித்து அழ

வேண்டும்; அதனைச் செய்துமுடிப்பதே தமது கடமையாய்க் கருதி வந்திருக்கிறார்; ஆதலால் உன்னை நேரே போருக்கு அழைக்க நேர்ந்தார். நிலைமையை உணர்ந்து விரைந்து வருவது நல்லது; உனக்குத்துணையாகப் படைகளையும் சேர்த்துக்கொண்டு வரலாம்'' என இவ்வாறு அவன் செவ்வையாச்சொல்லி நின்றான்.

அவனுடைய வார்த்தைகளில் தருக்கும் துணிவும் துடுக்கும் நிறைந்திருக்கின்றன. தான் ஒரு தூதனாய் வந்திருத்தலால் நீதிமானான இராமன் எதிரே தனக்கு யாதொரு தீதும் நேராது என்று உறுதியாகக் கருதியிருத்தலால் உரைகளைத் திடமாய் நின்று கூறினான். தங்கள் அரசனுடைய அருமைத் தம்பியை அழித்திருத்தலால் பழிக்குப்பழி வாங்கப்படும் என்று கொழித்துக் குறித்தான். கூறிய முறை வீறோடு விரவி நின்றது.

சையப்படிவம் என்றது மலைபோன்ற பெரிய வடிவினன் எனக் கும்பகருணனுடைய உடல் நிலைமையும் அடலாண்மையும் தெரிய வந்தது. சையம் = மலை. சேய்மையில் நின்று பார்த்தாலும் தெரிவது என்னும் ஏதுவான் மலைக்குச் சையம் என்று ஒருபெயர் நேர்ந்தது. அந்தச்சிறப்புப்பெயர் குறிப்போடுவந்தது.

அந்த அதிசய வீரனைக் கொன்று தங்கள் குலத்துக்கு நெடிய பழியை விளைத்துள்ளமையால் அதனைத் துடைத்து ஒழிக்கவே இந்தக் குலக்குமரன் கொதித்து வந்திருக்கிறான் என அதிகாயனுடைய வரவு நிலையை மதிதெளிய நேரே வுரைத்தான்.

கும்பகருணனைக் கொன்று தொலைத்தவன் இராமன்; அந்த வென்றி வீரனை விலக்கி ஒதுக்கிவிட்டு இலக்குவனைப் போருக்கு நேரே அழைத்ததற்குக் காரணத்தைக் குறித்துக் காட்டினான்.

கொலைகோள் அறியா நின்றான் என்றது இலக்குவனை. கொன்றவனைப் போருக்கு அழையாமல் கொலைபுரியாது நின்றவனை அழைத்தது என்ன? எனின், மரண வேதனையினும் கொடிய துயரத்தை இராமனுக்குக் கொடுக்கவேயாம் என்றான். நேடுதல் = தேடுதல். கொலை அறியாதவனைக் கொல்ல நாடியே அவ்வல்லவன் மூண்டு வந்துள்ளான் என வடித்து உரைத்தான்.

தன்தாதை படுந்துயர் தந்தையைமுன்
வென்றானை இயற்றுறும் வேட்கையினால்.

போருக்கு வந்துள்ள அதிகாயனுடைய உள்ளக்கருத்தை இது உணர்த்தியுள்ளது. தம்பியை இழந்து தன் தந்தை அழுது புலம்பும்படி இராமன் செய்திருக்கிறான் ஆதலால் அவனும் அவ்வாறே தம்பியை இழந்து அழும்படி செய்யவே தான் வந்திருப்பதாக அவன் வரைந்து குறித்து விடுத்திருக்கிறான்.

## இலக்குவன் உவந்தது.

தூதுவன் வந்து கூறிய அவ்வுரைகளைக் கேட்டதும் இராமன் உள்ளம் துணிந்து இலக்குவனை உவந்து நோக்கினான். அவ் வீரத்தம்பி தனியுரிமையாக நேரே தனக்குப் போர் கிடைத்ததே! என்ற பேருவகையினால் அண்ணனை ஆவலோடு தொழுது தனது வில்லை எடுத்துத் தன்னம் தனியே செல்லத் துணிந்தான். விரைந்து செல்லுக என்று இராமனும் இசைந்து விடை கொடுத்தான்.

## வீடணன் தடுத்தது.

அடலாண்மையோடு இளையவன் அமர்மேல் மூண்டு எழுந்தபொழுது அருகே நின்ற வீடணன் இராமனை உழுவலன்போடு தொழுது "ஆண்டவா! இளவல் தனியே செல்லலாகாது" என்று சொல்லி நிறுத்தினான்; வந்துள்ளவனது வீரப்பிரதாபங்களையெல்லாம் வகையே விரித்து உரைத்தான். அவ்வுரைகள் யாவும் அவனுடைய சீவிய சரிதங்களாய் மேவிவந்தன.

## அதிகாயன் நிலை.

போர்மேல் மூண்டு இதுபொழுது ஈண்டுவந்துள்ளவன் அதிசய வலியினன். அரிய பல வர பலங்களையுடையவன். பெரிய போர்வீரன். தேவர் அசுரர் யாவரும் அஞ்ச அரிய போராடல்கள் புரிந்து யாண்டும் வென்று நீண்ட புகழ்பெற்றவன். அவனது நிலைமையும் தலைமையும் நெடிது சிந்திக்கத்தக்கன. எளிதாக எண்ணலாகாது என உணர்த்தி மேலும் தெளிவாக அவனுடைய அதிசய மேன்மைகளையெல்லாம் விளக்கி உரைத்தான்.

ஓவாநெடு மாதவம் ஒன்றுடையான்
தேவாசுரர் ஆதியர் செய்செருவில்
சாவான் இறையும் சலியா வலியான்
மூவா முதல் நான்முகனார் மொழியால் (1)

பகைஆடிய வானவர் பல்வகையூர்
புகைஆடிய நாள்புனை வாகையினன்
மிகையாருயிர் உண்ணென வீசியவெம்
தகைஆழி தகைந்த தனுத்தொழிலான். (2)

உயிரொப்புறு பல்படை உள்ளவெலாம்
செயிரொப்புறும் இந்திரர் சிந்தியநாள்
அயிர்ஒப்பன நுண்துகள் செய்தவர்தம்
வயிரப்படை தள்ளிய வாளியினன். (3)

கற்றான்மறை நூலொடு கண்ணுதல்பால்
முற்றாதன தேவர் முரட்படைதாம்
மற்றாரும் வழங்க வலாரிலவும்
பெற்றானெடி தாண்மை பிறந்துடையான். (4)

அறனல்லது நல்லது மாறறியான்
மறனல்லது பல்பணி மற்றணியான்
திறனல்லதோர் ஆருயிரும் சிதையான்
உறனல்லது பேரிசை என்றுணர்வான் (5)

காயத்துயி ரேவிடு காலையினும்
மாயத்தவர் கூடி மலைந்திடினும்
தேயத்தவர் செய்குதல் செய்திடினும்
மாயத்தொழில் செய்ய மதித்திலனால். (6)

அதிகாயனைக் குறித்து வீடணன் உரைத்துள்ள இதில் அவனுடைய அரிய பெரிய மகிமைகள் தெரியவந்துள்ளன. தேவர்களை வென்றவன்; இந்திரனுடைய வச்சிராயுதத்தை அலட்சியமாக் கவர்ந்து அவனை அலக்கணுறுத்தி வந்தவன். பல போர்களிலும் சிறந்து திசைகள் எங்கணும் இசைகள் ஓங்கச் செய்தவன். உக்கிர வீரமான உருத்திர மூர்த்தியை உபாசித்து அத்திர வித்தைகள் யாவும் கற்று அப்பெருமானுடைய திருவருளைப் பெற்றுள்ளவன். வீரமே தனக்குப் பேரணியாகவுடையவன். எளியவரை யாதும் நலியாதவன்; சிறந்த வீரத்திறலால் விளைந்துவரும் உயர்ந்த கீர்த்தியையே நயந்துள்ளவன். நெறியும் நேர்மையும் உடையவன். வஞ்சனை சூதுகளை எவ்வழியும் யாதும் யாரிடமும் செய்யாதவன்.

காயத்து உயிரேவிடு காலையினும்

மாயத்தொழில் செய்ய மதித்திலன்.

இதனால் அவனது நெஞ்சத் தூய்மையின் நிலை தெரியவந்தது. போரில் வீரவாதம் கூறி நேரே போராடுவனே அன்றி மாறாய் மறைந்து வஞ்சச் சூதுகள் யாதும் செய்யாதவன் என்றதனால் அவனுடைய உயர்ந்த அருந்திறலாண்மையும் சிறந்த பெருந்தன்மையும் தீர தைரியங்களும் விளங்கி நின்றன.

இன்னவாறு பலவகை நிலைகளையும் கூறிவந்த வீடணன் பின்னும் சில உண்மைகளை விளக்கினான். அவனுடைய பூர்வீக நிலையை ஒரு யோகியின்மூலம் தான் அறிந்துள்ளதை இங்கே அறிய உரைத்தான். பிறப்பின் பெருமைகள்சிறப்பூர்ந்து வந்தன.

மது கைடவர்.

மது, கைடவன் என்னும் இருவர் அசுரவீரர். ஒருவயிற்றில் பிறந்தவர். அசகாய சூரர். அமரர் முதல் யாவரையும் வென்று அடக்கி அதிசய வீரராய் நிலவி நின்றார். எவ்வுலகங்களினும் யாரும் தமக்கு நிகரிலர் என வெவ்வலியில் வீறுகொண்டு விளங்கிநின்ற இவர் ஒருநாள் திருமாலைக் கண்டார். பொருமாலோடு மூண்டுவந்த இவரைக் கண்டதும் அப்பெருமாள் போராட மூண்டார். கொடிய போர் நேர்ந்தது. நெடியகாலம் ஆகியும் வெற்றி தோல்வி காணாமல் நாணி நின்றார். முடிவில் மாயவன் செய்த மாயத்தால் அந்த இருவரும் இறந்துபட்டார். சக்கரதரனோடு உக்கிரவீரமாய்ப் போராடி இறந்த அந்த இருவரும் முந்தை விதிமுறையால் இந்த இலங்கையில் வந்து அரசர்குலத்தில் பிறந்தார். முன்னவன் இலங்கைவேந்தனுக்குத் தம்பியாய்க் கும்பகருணன் எனத் தோன்றினான். பின்னவன் அம்மன்னவன் மகனாய் அதிகாயன் என்னும் பேரோடு எழுந்து வளர்ந்து, சீரும் சிறப்பும் எய்தி வந்தான். அவனே இன்று போருக்கு மூண்டு நேரே மூண்டு வந்திருக்கிறான்.

விதியால்இவ் யுகந்தனின் மெய்வலியான்
மதுவானவன் எம்முன் மடிந்தனனால்;
கதிர்தாண்நிகர் கைடவன் இக்கதிர்வேல்
அதிகாயன் இதாக அறைந்தனனால்.

முன்னம் வந்து மாண்ட கும்பகருணனுக்கும்; இப்பொ

மூது மாளவந்துள்ள அதிகாயனுக்கும் உள்ள உறவுரிமையும்; பூர்வ நிலைமையும் இதனால் உணரவந்தன. பழம் பிறப்பின் தொடர்போடு சிறந்த வீரத்திறல்கள் நிறைந்துள்ளமையால் இந்த இருவருடைய அதிசய ஆற்றல்கள் துதிசெய்ய நேர்ந்தன. இக்கதிர்வேல் அதிகாயன் கைடவன், என்றது பெரிய ஒரு அசுர வீரனுடைய அவதாரம் என அவனது அரிய மேன்மை தெரிய நின்றது. தானவர் தலைவனாயிருந்தவன் வானவர் அஞ்ச வந்தான்.

அதிகாயனுடைய பிறப்பு இருப்பு குணம் செயல் வரபலம் உடல்வலி அடலாண்மை அரிய வீரத்திறல் முதலிய நிலைமைகளை யெல்லாம் நேரே எடுத்துச்சொல்லி இத்தகைய வெற்றிப்பிரதாபனோடு இளையபெருமாளைத் தனியே போராட விடலாகாது என்று வீடணன் பரிவுகூர்ந்து உணர்த்தினான். அவ்வுரைகளைக் கேட்டதும் இராமன் குறுமுறுவல்கொண்டு அவனை உரிமையோடுநோக்கினான். புன்னகையும் நோக்கும் பொருள் பொதிந்து நின்றன.

தம்பி நிலையை நம்பி குறித்தது.

தேர் ஏறிப் பெரிய படைகளோடு போருக்கு வந்துள்ள அதிகாயன் அதிசய ஆற்றலுடையவன்; அளவிடலரிய நிலையினன் என வீடணன் விளக்கிச் சொல்லவே இலக்குவனுடைய உக்கிர வீரநிலைகளை அண்ணல் உரிமையோடு உரைக்க நேர்ந்தான். அவ்வுரைகள் வீரகம்பீரங்கள் தோய்ந்து மேலான நீர்மைகள் வாய்ந்து வியத்தகு நிலைகளில் வெளி வந்துள்ளன. அயலே வருவன எண்ணி அறியவுரியன.

எண்ணாயிர கோடி இராவணரும்
விண்ணாடரும் வேறுலகத்து எவரும்
நண்ணாஒரு மூவரும் நண்ணிடினும்
கண்ணால் இவன் வில்தொழில் காணுதியால் (1)

வான்என்பது என்? வையகம் என்பதென்? மால்
தான்என்பதென்? வேறு தனிச்சிலையோர்
யான்என்பதென்? ஈசன்என்? வானவர்தம்
கோன்என்பதென்? எம்பி கொதித்திடுமேல். (2)

தெய்வப்படையும் சினமும் திறனும்
மையற்றொழி மாதவம் மற்றுமெலாம்

எய்தற்குளவோ இவன் இச்சிலையில்
கைவைப்பளவே இறல் காணுதியால். (3)

என்தேவியை வஞ்சனை செய்தெழுவான்
அன்றே முடிவான் இவன் அன்னவள்சொல்
குன்றேன்என ஏகிய கொள்கையினல்
நின்ருன் உளனுகி நெடுந்தகையாய்! (4)

ஏகாயுடன் நீயும் எதிர்ந்துள்ளும்
மாகாய நெடுந்தலை வாளியொடும்
ஆகாயம் அளந்து விழுந்ததனைக்
காகாதிய நுங்குதல் காணுதியால்! (5)

நீரைக்கொடு நீயெதிர் நிற்கினுமே
தீரக் கொடியாரொடு தேவர்பொரும்
போரைக்கொடு வந்து புகுந்ததுநாம்
ஆரைக்கொடு வந்தது அயர்ந்தனையோ? (6)

சிவன் அல்லன்எனின் திருவின்பெருமான்
அவன் அல்லன்எனின் புவிதந்தருளும்
தவன் அல்லன்எனின் தனியேவலியோன்
இவன் அல்லன்எனின் பிறர்யாருளரே? [7]

ஒன்ருயிரம் வெள்ளம் ஒருங்குளவாம்
வன்தானையர் வந்து வளைந்தவெலாம்
கொன்ருன்இவன் அல்லது கொண்டுடனே
நின்ருர் பிறருண்மை நினைந்தனையோ? (8)

கொல்வானும் இவன் கொடியோனைஎலாம்
வெல்வானும் இவன் அடல்விண்டுவென
ஒல்வானும் இவன் உடனேஒருநீ
செல்வாய்! எனஏவுதல் செய்தனனல். (9)

(அதிகாயன் வதைப்படலம் 78–86)

இந்தப் பாசுரங்களை ஊன்றி நோக்க வேண்டும். மானச மருமங்களும் மானவீரங்களும் உலகம் அறிய இங்கே ஒளி பெற்று வந்துள்ளன. அதிகாயன் அதிசய ஆற்றல் உடையவன் என்று வீடணன் விரித்துக் கூறவே இராமன் உள்ளத்தில் வீரியமான ஓர் வேகம் தோன்றியது. தனது அருமைத் தம்பியின்

அருந்திறலாண்மையை அவன் நன்கு தெரிந்து கொள்ளும்படி இப் பெருந்தகை இங்கே விரைந்து பேச நேர்ந்தான்.

வீரம் சுரந்த ஆர்வமொழிகள்.

"வீடணா! போருக்கு வந்துள்ளவனுடைய வீரப்பிரதாபங்களை நீ பாரித்து உரைத்தாய்; என் தம்பியின் உக்கிரவீர நிலைகளை நீ உணர்ந்து கொள்ளவேண்டும். ஏதோ எனக்கு ஊழியம் செய்துகொண்டு பணிவாய் அடங்கி நிற்கிருன்; அந்த அடக்கம் ஊழிக்கடலின் ஒடுக்கம்போல்வதாம்; எந்த நீர்க்கடலும் இந்தப் போர்க்கடலுக்கு இணையாகாது; இவனது அற்புத ஆற்றல்கள் அதிசய நிலையின; எண்ணி அறிய அரியன; எண்ணுயிர கோடி இராவணர்கள் விண்ணுடர்களோடு திரண்டு வந்தாலும் இவன் எதிரே மண்ணுய் மடிந்து விழுவர். தேவதேவரான மூவரும் விலக நேர்வர். இவன் சீறிச் சினந்தால் வானும் வையமும் நீருய்விடும்; திருமால் பிரமன் முதலிய எவரும் எதிர்நிற்க இயலா; மகா வில்வீரர்கள் எவராயினும் அவரும் இவன்முன் அவமானமே அடைவர்: உவமானமே இல்லாத பெரிய போர் வீரன் என்று என்னை நீ பெருமையாய்க் கருதியிருக்கிருய்; நானும் இவன்முன் நிற்கமுடியாதே! மரியாதைக்கு ஒதுங்கி என்பால் அன்பாய்ப் பணிந்திருக்கிருன்; உள்ளம் கொதித்து இவன் உருத்து எழுந்தால் என்கதி என்னுும்? அரிய தவங்களைச் செய்து தேவர்களிடமிருந்து பெரிய போர்க்கருவிகளைப் பெற்றிருக்கிருன் என எதிரியினுடைய படைக்கல வலிகளை நீ வியந்து புகழ்ந்தாய்; அவ்வளவு தெய்வீக ஆயுதங்களும் இவன் வில்லில் கைவைக்கும் அளவே வலியோடிருக்கும்; சிலை எடுத்தால் அவை யாவும் தலையெடுத்துநில்லா; ஒருங்கே ஒழிந்தேபோம். இலங்கை வேந்தன் வஞ்ச வேடம்பூண்டு எனது மனைவியை வஞ்சிக்கச் சென்ற அன்றே இவனுல் அங்கேயே அழிந்துபோயிருப்பான்; அப்பேதை பேச்சை கேட்டு வெளியே இவன் விலகிப்போனமையால் அவன் களவாய்க் கவர்ந்துபோனுன். அளவிடலரிய துயரங்கள் உளவாயின; இராவணன் இன்று இலங்கையில் உயிர் வாழ்வது இலக்குவன் அன்று பஞ்சவடியில் அந்தப் பன்னசாலை அருகே நில்லாமையினுலேயாம். இதனை நீ நெஞ்சில் நன்கு நினைந்துகொள்க. மனைவியைப் பறிகொடுத்த நான் மனம்

மறுகிப்போகாமல் இவ்வளவு மனவுறுதியோடு தெவ்வரை வெல்லத் திசைநோக்கி வந்தது யாருடைய உதவியினால் என்று உனக்குத் தெரியுமா? இந்த வீர இளவலின் பேராதரவினாலேயே நான் ஒரு பெரிய தீரனாய் இலங்கையை நோக்கிக் கலங்காமல் வந்திருக்கிறேன். சிவன் திருமால் பிரமன் என்னும் அந்தப் பெரிய மூவரோடு ஒருவனா வைத்து எண்ணத்தக்கவன் இங்கே ஓர் சிறுவனாய் இலக்குவன் என்னும் பேரோடுநிற்கிறான். இவனது நிலைமையை உணர்ந்தவர் தலைமையைத் தெளிந்துகொள்வர். பெரிய படைக்கடலோடு போருக்கு மூண்டுவந்துள்ள அதிகாயனை இவன் விரைந்து வென்று வெற்றித் திருவோடு வருவன்; நீயும் கூடப்போய் நேரே கண்டு மீளுக'' என்று விபீடணனை நோக்கி இராமன் இவ்வாறு வெற்றிவீறோடு கூறியிருக்கிறான்.

இவ்வீரமூர்த்தி இங்கே பேசியிருக்கும் பேச்சுகள் எவ்வளவு ஆச்சரியங்களை விளைத்திருக்கின்றன! இவ்வாறு இலக்குவனைக் குறித்து யாண்டும் புகழ்ந்து பேசியதில்லை. எதிரி அடலாண்மை மிக்கவன்; நெடிய போர்வீரன்; அவனோடு போராட இலக்குவனைத் தனிமையாக அனுப்பலாகாது என்று வீடணன் சொன்னமையால் தன்னுடைய தம்பியின் அதிசய வீர நிலைகளை நினைந்து இப்படி ஆவேசமாய் விரித்துக் கூறினான்.

இராமன் ஒரு இராவணனைத்தான் வெல்லமுடியும்; இராமன் தம்பி ஆன இலக்குவன் எண்ணாயிரகோடி இராவணரை விண்ணுடரோடு சேர்த்து வென்று தொலைப்பான் என்றது கண்ணேடிக் காணும்படி எண்ணரிய அதிசயமாய் ஈண்டு விளங்கியுள்ளது. பரவசநிலையில் தன் தம்பியை இங்கப்பி வீணே புகழ்ந்து சொல்லியுள்ளான் என வெளியே தோன்றும்படி உரைகள் ஒளியோடு ஒலித்துவந்திருப்பினும் உண்மையையே குறிப்பாக உணர்த்தியிருக்கிறான். இலக்குவன் ஆதிசேடன் அமிசம்; அவன் தாங்கிவருவதால் உலகம் ஓங்கி நிற்கிறது; தள்ளிவிட நேர்ந்தால் எல்லாம் தவிடுபொடியாய் அழிந்து ஒழிந்துபோம் என்னும் உண்மை ஈண்டு நுண்மையாய் உணரவந்தது. தன்னை எதிர்நிறுத்திப் பின்னவன் பெருமையை விளக்கினான்.

யான் என்பது என்? எம்பி கொதித்திடுமேல்.

தன் தம்பியின்பால் இந்நம்பி கொண்டுள்ள மதிப்பும் மாண்பும் வியப்புகளை விளைத்து நிற்கின்றன. இலக்குவன் சீறி எழுந்தால் யானும் எதிர் நிற்க இயலாதே! என இராமன் கூறியிருக்கும் இது கூர்ந்து சிந்திக்கவுரியது. அதிசய நிலையில் துதிசெய்தது வீடணன் மதிதெளிந்து மதிப்புற வேண்டியே.

போருக்கு வந்திருக்கும் வீரனை அதிக ஏற்றமா அவன் எண்ணியிருக்கிறான்; அவனோடு நேரே போராட நேர்ந்துள்ளவனது அற்புத ஆற்றல்களை ஓர்ந்துணர்ந்து விபீடணன் உள்ளம் துணிந்து உறுதிகொள்ளும்படி உரைகள் பெருகி வந்திருக்கின்றன. உள்ள உணர்ச்சிகள் துள்ளி வெளி வந்துள்ளன.

இளையவனது ஆதரவும் பாதுகாப்பும் மூத்தவனுக்குப் பெருமகிழ்ச்சிகளை விளைத்திருத்தலால் வார்த்தைகள் நெடிய புகழ்ச்சிகளோடு பொங்கி வந்தன. சென்றுபோன வினை விளைவுகள் எல்லாம் வென்றி வீரனுடைய நினைவுக்கு வந்திருக்கின்றன.

என்தேவியை வஞ்சனைசெய்து எழுவான்
அன்றேமுடிவான்; உளன்ஆகி நின்றான்.

இராவணன் செத்து ஒழியாமல் இத்துணைநாளும் உயிரோடு வாழ்ந்திருப்பதற்குக் காரணத்தை இது காட்டியுள்ளது.

அன்றே என்றது, சந்நியாசிபோல் வஞ்ச வேடம் பூண்டு பஞ்சவடியில் சீதையை வஞ்சிக்கப்போன அந்த நாளை. அன்று அங்கே பாதுகாவலாய் நின்ற இலட்சுமணன் அண்ணி பேச்சைக்கேட்டு அயலே அகன்று போனமையினாலேதான் இலங்கைவேந்தன் எளிதே புகுந்து அப்பெண்ணரசியை எடுக்க நேர்ந்தான். அன்று என் தம்பி அங்கு நின்றிருந்தால் இராவணனைத் தலையைத் துணித்துத் தரையில் உருட்டியிருப்பான்; அந்நிலை தவறிப்போனமையால் அக்கொலைபாதகன் புலையாடல்களைச் செய்ய நேர்ந்தான் என்று இராமன் உள்ளம் கவன்று உரையாடியிருக்கிறான். காப்பின் பிழையைக் கருதி மறுகியுள்ளான்.

இலக்குவனுடைய இலக்குக்குத் தப்பியதனாலேயே இலங்கைவேந்தன் இன்று இருக்கலானான் என்பான் அன்றே முடிவான் நின்றான் என்றான். அவனது முடிவும் நிலையும் நெடிது

உணரவந்தன. காவலாய் நின்ற இளைய வீரனுக்கு அஞ்சியே இராவணன் கள்ளம்புரிந்து வஞ்சிக்க நேர்ந்தான்.

"சிலைஎடுத்து இளையவன் நிற்கச் சேர்ந்திலை!
தலைஎடுத்து இன்னமும் மகளின்தாழ்தியோ?"

இலங்கைச் சிறையில் தன்னை நச்சிவணங்கிய இராவணனை நோக்கிச் சீதை இப்படி எள்ளி இகழ்ந்து சொல்லியிருக்கிருள். "இளையவன் இல்லாதபோது கள்வாய்வந்து கடுங்கேடுபுரிந்தாய்! அப்பிள்ளை இருக்கும்பொழுது நீ வந்திருந்தால் உன் உடலில் உயிர் இருக்குமா? மடையா! இதனை உணர்ந்துபார்!" என அன்று அப்பதிவிரதை பரிந்து கூறியிருப்பது இங்கே அறிந்துகொள்ள வுரியது. காவல் புரிந்ததும் பிரிந்ததும் கருதியுணர வந்தன.

சிலை எடுத்து என்றதனல் இளையபெருமாள் அங்கே வில் ஏந்தி நின்ற வீர நிலைமையையும் வெற்றித்திறலையும் உய்த்துணர்ந்து கொள்ளலாம். அண்ணனும் அண்ணியும் இவ்வீரத் தம்பியை எண்ணி மதித்திருக்கும் கண்ணியமும் ஆர்வமும் கண் எதிரே காணவந்துள்ளன. பாசவுரிமைகள் வாசகங்கள்தோறும் வாசம் புரிந்து வருவதை ஆசையோடு நோக்கி யாவரும் ஆனந்தம் அடைந்து அன்பு நலங்கள் சுரந்து பண்பு மிகுந்து வருகின்றனர்.

தனக்கு அவமானத்தை விளைத்தகொடியவன் நெடிய வலியினன்; தேவர்களையும் அடக்கியாள்பவன்; யாவரும் அஞ்சும்படியான அடலாண்மைகள் நிறைந்தவன்; கடலினும் பெரிய படைகளையுடையவன்; அவனேடு போராட நான் நேரே துணிந்து வந்திருப்பது எனது தணைவனுடைய துணிவினலேயாம் என இக்குலமகன் தெளிவாக விளக்கியிருக்கிருன்.

போரைக் கொடுவந்து புகுந்தது நாம்
ஆரைக் கொடு வந்தது?

தன் தம்பியின் துணை ஒன்றை நம்பியே தான் இலங்கைமேல் படை எடுத்து வந்திருப்பதாக இந்நம்பி இங்ஙனம் உரைத்திருக்கிருன். இளையவனுடைய அதிசய ஆற்றல்களை இவ்வாறு பல வகையிலும் விளக்கி எதிரியோடு போருக்கு நேரே அனுப்ப நேர்ந்தான். வீரத்திறல்கள் மூண்டு வீறுகொண்டு நின்றன.

## வீரகம்பீரம்.

அதிகாயனைக் குறித்து வீடணன் வியந்து மொழிந்த நிலைகளையெல்லாம் ஒரு சிறிதும் மதியாமல் தம்பியை அவன்மேல் தனியே போருக்கு அனுப்ப இசைந்தது இந்நம்பியின் வீரகம்பீரங்களை விளக்கி நிற்கிறது. சேனைத்திரள்களோடு எதிரியை எளிதே சிதைத்து அழித்து வருவான் என்னும் உறுதி பெரிதும் உடையனாய் இளையவனைக் கருதி நோக்கினான். அவன் உவந்து அண்ணனை வலம் வந்து வணங்கி எழுந்து வில்லோடு விரைந்து சென்றான். விபீடணன் உடன் தொடர்ந்து போனான். வானர சேனைகளை ஏவிக்கொண்டு அனுமான் சுக்கிரீவன் முதலிய யாவரும் பின்னே அடர்ந்து சென்றனர். ஒரு துணையும் வேண்டாம் என்று வில்லே துணையாக இலக்குவன் தனியே சென்றதும், அந்த வீர இளவலைத் தொடர்ந்து யாவரும் ஆவலோடு அடர்ந்துபோனதும் அரிய ஒரு ஆர்வக் காட்சியாய் நிலவி நின்றது.

### இலக்குவன் சென்ற நிலை.

அக்காலை இலக்குவன் ஆரியனை
முக்காலும் வலங்கொடு மூதுணர்வின்
மிக்கான்மதி வீடணன் மெய்தொடரப்
புக்கான் அவன்வந்து புகுந்தகளம். (1)

சேனைக்கடல் சென்றது தென்கடல்மேல்
ஏனைக்கடல் வந்தது எழுந்ததெனா
ஆனைக்கடல் தேர்பரி ஆள்மிடையும்
தானைக்கட லோடு தலைப்படலும். (2)

சேனைத் திரள்களுடன் வந்திருக்கும் அதிகாயனோடு போர் புரிய மூண்டு இலக்குவன் முன்னே சென்றுள்ள காட்சியையும் அவனைத் தொடர்ந்து படைகள் போயுள்ள மாட்சிகளையும் இவை காட்டியுள்ளன. அருந்திறலாண்மைகள் திருந்திய பண்புகளோடு சிறந்து நிறைந்த நீர்மைகள் சுரந்து மிளிர்கின்றன.

ஒரு சிறிதும் கவலாமல் தனது அருமைத் தம்பியைக் கொடிய போர்முனைக்கு அனுப்பிவிட்டு இராமன் தனியே இருந்தான். அக்கோமகனுடைய மனநிலையும் மதியூகமும் வீரகம்பீரமும் அதிசய வியப்புகளாய் விளங்கித் துதிகொண்டு நின்றன.

## சேனைகள் எதிர்ந்தன.

போர்மேல் போன வானரப் படைகள் பொருகளம் புகுந்தன; புகவே அரக்கர் சேனைகள் ஆர்த்து எழுந்தன. வடகடல் பொங்கித் தென்கடலைச் சென்று மோதியதுபோல் கவியின் தானை கலக்கவே கடும்போர் மூண்டது. இருதிறப் படைகளும் அடுதிறல்களோடுபோராடின; இடங்கள்தோறும்படுகொலைகள் பெருகின. வேல் வாள் சூலம் முதலிய கொடிய ஆயுதங்களால் வானரங்களை அரக்கர் கொன்று குவித்தனர். நால்வகைச் சேனைகள் மீதும் வானரங்கள் பாய்ந்து கனன்று நாசங்கள் செய்தன.

## இலக்குவன் விரைந்தது.

தன்னை அறைகூவி அழைத்த அதிகாயனைக் காணவிரைந்து சேனைத்திரளுள் புகுந்த இலக்குவன் எதிர்ந்தவர் எவரையும் கொன்று குவித்து வென்றி வீறுேடு வில்லாடல் புரிந்தான். பாணங்கள் பாய்ந்த இடங்கள் எல்லாம் உயிர் இனங்கள் மாய்ந்தன. உடல்கள் உருண்டன; உதிரங்கள்ஓடின. தலைகளும் முண்டங்களும் மலைகள் என மருவின. யாண்டும் அஞ்சாமல் எங்கும் போராடி நீண்ட வீறுேடு நிலவி வாழ்ந்துவந்த அரக்க வீரர்கள் யாவரும் யாதொரு செயலும் ஆற்றுமல் ஆண்டு மாண்டுமடிந்தனர். பகழிகள் வருகிற வகைகளை அறியாமலே படுசாவுகள் மேவின. இளையவன் ஏவிய ஒரு பாணத்தால் ஒரு குடும்பக் கூட்டம் முழுவதும் ஒருங்கே அழிந்து மருங்கே விழுந்தது. அந்த அழிவு நிலை அதிசய வியப்பாயிருந்தது.

தாதையைத் தம்முனைத் தம்பியைத் தனிக்
காதலைப் பெயரனை மருகனைக் களத்து
ஊதையின் ஒருகணை உருவ மாண்டனர்
சீதைஎன்று ஒருகொடும் கூற்றம் தேடினர்.

போர்க்களத்தில் அன்று அரக்கர் அழிந்துபட்ட நிலையைக் குறித்துக் கவி இங்ஙனம் சுவையாகக் காட்டியிருக்கிறர். பாட்டன், பேரன், தந்தை, மைந்தன், அண்ணன், தம்பி, மருகன், மைத்துனன் முதலிய உறவினர் அனைவரும் ஒரு சரத்தால் இறந்திருப்பது வியப்பாயுள்ளது. அரக்கர் குடியில் உள்ளவர் எல்லாரும் போர்வீரர் என்பதும் அவ்வளவுபேரும் அரசுக்கு உரிமையாகப் போர்புரிய வந்துள்ளார் என்பதும் ஈண்டு உய்த்துணரவந்தன.

எங்கும் வல்லமையோடு வெற்றிபெற்று வந்தவர் ஈண்டு வலியிழந்து முற்றும் அழிந்துபோயுள்ளனர். அந்த அழிவுக்குக் காரணம் அம்மரபுக்கு நேர்ந்துள்ள கொடிய பாவமேயாம்.

சீதை, மகாபதிவிரதை; அந்த உத்தம பத்தினியின் உள்ளம் கொதிக்கும்படி இராவணன் செய்திருக்கிறான்; ஆகவே அந்தப் பாவத்தால் அவன் குலம் முழுவதும் எளிதே நாசம் அடைய நேர்ந்துள்ளது. தீவினை விளைவால் சாவுகள் விளைந்தன.

"For the wages of sin is death; but the gift of God is eternal life" (Bible)

"பாவத்தின் கூலி மரணம்; தெய்வத்தின் கொடை நித்திய சீவனுயுள்ளது" என்னும் இது இங்கே உய்த்துணர வுரியது.

இராவணன் நெறிகேடனாய்ப் பாவகாரியங்களைச் செய்துள்ளமையால் அவன் குலத்தோடு அழிய நேர்ந்தான். சீதை ஆகிய எமன் உள்ளே புகுந்திருத்தலால் வெளியே நின்று ஒரு வில்லின் துணையால் இலக்குவன் எளிதே கொல்ல நேர்ந்தான்.

சீதை என்று ஒரு கொடும் கூற்றம் தேடினார்.

ஆற்றல் மிகுந்த அரக்கர் அவமே செத்து வீழ்தற்குரிய காரணத்தை இது உய்த்துணரச் செய்தது. கூற்றமும் குறுக அஞ்சிய அரக்கர் குலத்தை அடியோடு அழிக்கின்றாள் ஆதலால் சீதை கொடும் கூற்றம் என இங்கே கூற நின்றாள்.

தமக்கு நாசத்தைத் தாமே தேடிக்கொண்டார் என அரக்கரது நீசத்தை இங்கே நினைவுறுத்தி யருளினார். தீவினையாளர் எவ்வளவு தேக பலங்களை எய்தியிருந்தாலும் அவை யாவும் பாழாய் அவர் அழிந்து போவார் என்பது தெளிந்துகொள்ள வந்தது. நல்லவர் வெல்கின்றார்; அல்லவர் அழிகின்றார்.

போரில் விழுகிற கொலைகளிலும்கூடத் தலைமையான தரும நீதிகளையும் உறுதியுண்மைகளையும் நமது கவிஞர்பிரான் உணர்த்திவருவது உவகை சுரந்து வருகிறது. பத்தினிகளுக்கு இடர் செய்யலாகாது; செய்தால் அவன் குலம் நாசமாம்; இவ் வுண்மையை உலகம் நேரே காண இலங்கை வேந்தனைச் சான்று காட்டி இவ்வாசகம் இங்கு நன்கு தெளிவுறுத்தி யுள்ளது.

எவ்வளவு வலிகளையுடையராயினும் பாவ காரியங்களைச் செய்ய நேர்ந்தால் அவர் யாவரும் அவலமாய் அழிந்தேபோவர் என்பதை அன்று அமரில் அழிந்து மடிந்த அரக்கர் திரள்களால் தெளிந்து கொள்ள வந்தது. அவலமும் அழிவும் கவலைகளாயின.

## தாருகன் நேர்ந்தது.

எதிரிகளுடைய உயிர்களைச் சூரையாடி இலக்குவன் போராடி வருங்கால் தாருகன் என்னும் வீரன் தனது தேரைக் கடாவிவந்து எதிரே புகுந்து தாக்கினான். அவன் சிறந்த சேனைத் தலைவன். பல போர்முனைகளிலும் வெற்றிபெற்று வந்தவன். ஈண்டு மூண்டு இளையவனை எதிர்த்துச் சுடுகணைகள் பல வீசி அடுதொழில்கள் ஆற்றினான். அவனுடைய அடலாண்மைகளை விரைந்து நீக்கித் தலைக்கு இலக்குவைத்து இலக்குவன் ஒரு கணை தொடுத்தான். அடுத்த கணத்தில் அவன் தலை துணிபட்டு ஆகாயத்தை நோக்கி ஓடியது. தேரிலிருந்து உடல் கீழே வீழ்ந்தது. போரில் மூண்ட தாருகன் அதிவிரைவில் முண்டமாய் மாண்டு விழுந்ததைக்கண்டு யாவரும் திகைத்தார். சேனைத்திரள்கள் செயிர்த்து வளைந்து இடங்கள்தோறும்செருச்செய்ய நேர்ந்தன.

## காலன்முதலோர் காலமானது.

காலன், குலிசன், காலசங்கன், மாலி, மருத்தன் என்னும் இந்த ஐந்துபேர்களும் ஐம்பதினாயிரம் போர்வீரர்களுக்குத் தலைவர். வில் வேல் முதலிய பலவகைப் படைக்கலன்களிலும் கை தேர்ந்தவர். அதிகாயனிடம் அதிக அபிமானமுடையவர். முதிர் கோபத்தால் மூண்டுவந்து சேனைகளோடு நான்குபுறங்களிலும் வளைந்து நின்றுகொண்டு அதிவேகமாய் ஆர்த்துப்பொருதார். பொருத அந்த நிருதர்களுடைய நிலைகளையெல்லாம் நன்கு தெரிந்துகொண்ட இலக்குவன் பகழிகளை நான்கு திசைகளிலும் கடுத்துத் தொடுத்துப் படைகளைத்தொலைத்துத் தலைவர்களுடைய தலைகளை அடுத்தடுத்து அதிவிரைவில் தரையில் உருட்டினான்.

காலனும் குலிசனும் காலசங்கனும்
மாலியும் மருத்தனும் மருவும்ஐவரும்
சூலமும் கணிச்சியும் கடிதுசுற்றினர்
பாலமும் பாசமும் அயிலும் பற்றினர். [1]

அன்னவர் எய்தன எறிந்த ஆயிரம்
துன்னரும் படைக்கலம் துணித்துத் தூவின
நன்னெடுந் தலைகளைத் துணித்து நால்வகைப்
பன்னெடுந் தானையைப் பாற நூறினான். [2]

மானத்தோடு மூண்டு வந்து முனைந்து பொருத காலன் முதலான தானைத்தலைவர் ஐவரும் சேனைகளோடு மாண்டு மடிந்திருக்கும் நிலைகளை ஈண்டு விழைந்து நோக்கி வியந்து நிற்கின்றோம்.

## யானைப்படை.

போராட நேர்ந்த வீரர்கள் யாவரும் பொன்றி வீழவே யானைச் சேனைகள் வந்து வளைந்தன. புகுந்த வேழங்கள் மிகுந்த போர்ப் பழக்கங்கள் வாய்ந்தன. மதவெறிகள் கொண்டன. இரும்பாலான உலக்கைகளைப் பெரும்பாலும் கைகளிலுடையன. ஆயிரம் ஆயிரமான தொகுதிகள் அமைந்தன. அவை யாவும் வளைந்தன; வளையவே இலக்குவன் வில்லும் இலக்கோடு வளைந்தது. யாண்டும் அம்புகள் ஊழித்தீயின் கொடிகள்போல் உருத்துப் பாய்ந்தன. மலைகள் என நிலைகள் நிமிர்ந்துவந்த யானைகளுடைய தலைகளையும் கால்களையும் துதிக்கைகளையும் உடல்களையும் துணித்து வீழ்த்திக் குடல்களையும் வாரிக்கொண்டு வான வீதிகளில் வாளிகள் வால் வெள்ளிகள்போல் உலாவி நிலாவின. அடலாண்மைகளோடு மூண்டுவந்து ஆர்த்து வளைந்து போர்த் திறம் காட்டிய யானைச் சேனைகளை இம் மான வீரன் கொன்று வீழ்த்தியது அதிசய வென்றியாய்த் துதிசெய்ய நின்றது.

ஓராயிரம் அயில்வெங்கணை ஒருகால்விடு தொடையில்
காராயிரம் விடுதாரையின் நிமிர்கின்றன கதுவுற்று
ஈராயிரம் மதமால்கரி விழுகின்றன இனிமேல்
ஆராய்வதென் அவன்வில்தொழில் அமரேசரும் அறியார்.
(அதிகாயன் வதை, 146)

## யானைச்சேனைகள் அழிந்த நிலை.

இலக்குவனுடைய பாணப் பிரயோகங்களால் யானைப்படைகள் இறந்துபட்டுள்ள அழிவு நிலைகளை விழிதெரிய இது உணர்த்தியுள்ளது. அவனது வில்லாடல் அடலாண்மைகளோடு அதிசய நிலைகளை விளைத்து வந்தமையால் அமரர்களும் துதித்து நின்றனர். வந்து வளைந்த யானைத்திரள்களையெல்லாம் கொன்று குவித்து

வென்றிவீரோடு விளங்கி நின்றான். அந்நிலையில் மீண்டும் யானைப் படைகள் இலங்கையிலிருந்து அடல்கொண்டு மண்டிக் கடல் போல் மூண்டுவந்து இலக்குவனைச் சூழ்ந்து கொலைக்குறிப் போடு யாண்டும் கொதித்துப் போராடின. ஆடவே இவ்வீர னது வில்லாடல் எல்லைகடந்து எழுந்தது. யாரும் சொல்லாட முடியாதபடி யாண்டும் யானைகள் மாண்டு மடிந்தன.

ஒருகோடிய மதமால்கரி யுளவந்தன உடன்முன்
பொருகோடியில் உயிர்உக்கன ஒழியப் பொழிமதயாறு
அருகோடுவ வரவுந்தினர் அசனிப்படி கணைகால்
இருகோடுடை மழைவெஞ்சிலை இளவாளரி எதிரே. [1]

உலகத்துள மலைஎத்தனை அவையத்தனை உடனே
கொலநிற்பன பொருகிற்பன புடைசுற்றின குழுவாய்
அலகற்றன சினமுற்றிய அனல்ஒப்பன அவையும்
தலையற்றன கரமற்றன தனிவில்தொழில் அதனால். [2]

மீண்டும் மூண்டுவந்த யானைச்சேனைகள் நாசமாய் மாண்டு மடிந்துள்ள நிலைகளை இவை நன்கு காட்டியுள்ளன. அரக்க வீரர்கள் ஆரவாரமாய் ஆர்த்துச் செலுத்திவந்த மதகரிகள் யாவும் பிணமலைகளாய்ப் போர்க்களத்தில் இடங்கள்தோறும் குவிந்து தோன்றின. இளையபெருமானுடைய வில்லின் வேலையைநோக்கி நிருதர்கள் எல்லாரும் உள்ளம் கலங்கி உளைந்து உயிர்மயங்கி நின்றனர். பொருகின்ற சிலையும், அதிலிருந்து பெருகி வருகின்ற பகழிகளும் யாண்டும் அதிசய நிலைகளாய் நீண்டு தோன்றின.

இருகோடுடை மழைவெஞ்சிலை இளவாளரி என இலக்கு வனைக் கவி இங்கே விளக்கியிருக்கும் வித்தகம் வியந்து நோக் கத்தக்கது. கார்மேகம் மழையைப் பொழிவதுபோல் இவனது கார்முகம் அங்கு அம்புகளை யாண்டும் பொழிந்துள்ள நிலைகளைத் தெளிந்துகொள்ளும்பொருட்டு மழைவெஞ்சிலை என்றார். எண் ணில் அடங்காதபடி விண்ணும் மண்ணும் வியந்து நோக்கவந்த யானைத்திரள்களை இந்த இளஞ்சிங்க ஏறு அழித்து ஒழித்தது என்பார் இளவாளரி என்றார். இடம் செயல்களுக்கு ஏற்றவாறு பேர்சூட்டிப் போர்வீரனைப் போற்றி வருவது புதிய ஒளியை ஊட்டி வருகிறது. வீரத்திறல்கள் விசித்திர வியப்புகளை விளைத்து வருகின்றன. ஒரு வில்லால் பல்லாயிரம் மதகரிகள் பாழாயின.

கடல்போல் கொந்தளித்து வந்த அடல் யானைகளை இவன் அழித்துவருங்கால் இடையே அனுமானும் புகுந்து கடுத்து ஒழித்தான். யானைக்குழாங்கள் அழிந்து படுவதைக்கண்டதும் அரக்கர்குழாங்கள் நெஞ்சங்கள் கலங்கி அஞ்சி அலமந்தன.

## தேவாந்தகன் நேர்ந்தது.

சேனைத்திரள்கள் திகைத்து உடைவதை நோக்கித் தேவாந்தகன் ஆவா! என்று ஆரவாரஞ்செய்து அடலாண்மை காட்டித் தனது தேரைக் கடாவி அனுமானது நேரே வந்து கொடிய பாணங்களை ஏவிக் கொதித்துப் போராடினன். அவன் வேகமாய் எய்த அம்புகள் பல அனுமானுடைய உடலில் பாய்ந்து ஊடுருவிப்போயின. போகவே அதிவேகமாய் நேரே தேர்மேல் பாய்ந்து அவனுடைய கையில் பிடித்திருந்த வில்லைப் பறித்து ஒல்லையில் ஒடித்து எறிந்து தன் எல்லையில் வந்து நின்று பல்லைத் திறந்து சிரித்தான். உல்லாச விநோதமா இவன் செய்த அடலாண்மையையும் பரிகாசத்தையும் நோக்கி விரைந்து கொதித்து வீராவேசமாய் ஒரு தண்டாயுதத்தை எடுத்து அவன் கடுத்து எறிந்தான். எறிந்த அதனை இவன் நேரே விரைந்து தாவிப் பிடித்து ஒடித்து வீசி அடுத்து மூண்டு ஓங்கி அடித்தான். அந்த அடி இடிபோல் கதுப்பில்விழவே அவன் புரண்டு கீழேவிழுந்து மடிந்தான். தேவர்கள் பலரை வதைத்து அதனால் தேவாந்தகன் எனச் சிறப்புப் பேர் பெற்றிருந்த அவனை அனுமான் சிதைத்து ஒழித்ததைக் கண்டதும் அமரர் யாவரும் அதிசயமுடையராய் இவனைத் துதிசெய்து புகழ்ந்து மகிழ்ந்தனர். தனக்கு ஒரு வகையில் தம்பி முறையாய் வாய்ந்திருந்த அந்த வீரன் மாண்டதை அறிந்ததும் அதிகாயன் உள்ளம் கொதித்து அதிவேகமாய்த் தேரைச் செலுத்திவந்து அனுமானை வளைத்து ஆரவாரத்தோடு போராட நேர்ந்தான். வீர வெறிகள் வீறுகொண்டு நின்றன.

## அதிகாயனும் அனுமானும்.

சிறந்த போர்வீரனை அதிகாயன் மூண்டுவரவே முன்னம் உடைந்து உள்ளம் தளர்ந்து நின்ற அரக்கர் சேனைகள் விரைந்து வெள்ளம் எனத் திரண்டு யாண்டும் நீண்டு சூழ்ந்தன. புதிய ஊக்கத்தோடு எதிரிகள் எவ்வழியும் வெவ்வலியாளராய் வெகுண்டு சூழவே அனுமான் அதிசய நிலையில் ஒரு தண்டை

ஏந்தி அடல்கொண்டு நின்றான். தனி ஆண்மையோடு தரையில் நிற்கின்ற அஞ்சனைச் சிங்கத்தை அதிகாயன் நோக்கி நெஞ்சம் திகைத்து நேரே பேச நேர்ந்தான். அவன் பேசிய வார்த்தைகள் பழிக்குப்பழி வஞ்சம் தீர்க்கும் வகையில் வாய்த்துடுக்காய் வளர்ந்து மனத் திமிரோடு மூண்டு வந்தன.

அதிகாயன் பேசியது.

தேய்த்தாய்ஒரு தனிஎம்பியைத் தலத்தோடு ஒருதிறத்தால்
போய்த்தாவினை நெடுமாகடல் பிழைத்தாய் கடல்புகுந்தாய்!
வாய்த்தானையும் மடித்தாய் அதுகண்டேன் எதிர்வந்தேன்
ஆய்த்தாயது முடிவின்றுனக்கு அணித்தாகவந்து அடுத்தாய்!

இன்றல்லது நெடுநாள்உனை ஒருநாளினும் எதிரேன்
ஒன்றல்லது செய்தாய்எமை இளையோனையும் உனையும்
வென்றல்லது மீளாதஎன் மிடல்வெங்கணை மழையால்
கொன்றல்லது செல்லேன்இது கொள்என்றனன் கொடியோன்.

அனுமானை நோக்கி அதிகாயன் வீரவாதமாய்ப்பேசியுள்ள உரைகளை இங்கே உள்ளச்செவியால் நாம் ஓர்ந்துகொள்கிறோம். செற்றமும் சினமும் அவனுடைய உள்ளத்தில் ஊன்றி நிற்றலை இவ்வுரைகள் வெளிப்படுத்தியுள்ளன. முன்னம் அசோகவனத்தே மூண்ட போரில் இலங்கைமன்னன் மகனை அக்கனை அனுமான் அழித்து ஒழித்தான் ஆதலால் அந்த அழிவு நிலையைக் குறித்துக்காட்டினான். அன்று என்னுடைய தம்பியைக்கொன்ற உன்னை இன்று நான் இங்கே கொன்று தொலைப்பேன் என்று வென்றி வீறோடு கூறினான். எம்பியைத் தலத்தோடு தேய்த்தாய்! என்றது அனுமான் அவனை மாய்த்திருக்கும் நிலையை மனம் கொதித்து உரைத்தான். தன் குடிக்குப் பழி விளைத்துக் குலசத்துருவாய் வந்துள்ளவரைக் கொலைபுரிந்து ஒழிப்பேன் என்று தனது நிலைதெரிய நெடுஞ்செருக்கோடு அவன் நேரேகுறித்தான்.

இளையோனையும் உனையும் கொன்று அல்லது செல்லேன்.

அதிகாயனுடைய குறிக்கோளை இவ்வுரை குறித்துக் காட்டியுள்ளது. இலக்குவன் மீது இலக்காய் வந்திருத்தலால் அவனை முதலில் குறித்தான். இன்னவாறு வீரத்திறலை அவன் விரித்துக் கூறவே அனுமான் சிறிது சிரித்தான். போர்க்களத்தில் தேரோடு வந்து போராட நேர்ந்தவன் வேறே மாறுபாடாய் உரையாடி

நிற்பது வீண்காலம் கடத்திய படியாம். "அதிகாயா! காணுத இடத்தில் அன்று உன் தம்பியைக் கொன்றுவிட்டதாக் குறித்து உரைத்தாய்; இன்று உன் கண் எதிரேயும் எனது வென்றி நிலையை விளக்கிக் காட்டுகிறேன்; அதோ உன் அயலே உனக்குத் துணையாக நிற்கிற திரிசிரசு என்னும் அத்தம்பியை என்ேைடு கொஞ்சம் போராட விட்டுப்பார்!" என்று அனுமான் வீரவாதம் கூறவே அவன் விரைந்து வெகுண்டு தேரைக்கடாவி நேரே மூண்டான். நீண்ட வில்லிலிருந்து நெடிய பாணங்களைப் பொழிந்தான். வீசிய அம்புகளையெல்லாம் வேறுபட விலக்கி நேரே தேர்மேல் பாய்ந்து அவனது வில்லை ஒல்லையில் பறித்து இடது கையில் வைத்துக்கொண்டு வலது கையால் ஓங்கி முகத்தில் அடித்தான். அதன்பின் வாரி எடுத்துத் தரையில் மடுத்துத் தேய்த்தான்; உடல் சிதைந்து தசையும் குருதியுமாயின; ஆகவே உதிரந் தோய்ந்த கைகளோடு அதிவேகமாய் அனுமான் மேலே தாவி அயலே போயினன். வெற்றிக் களிப்போடு அவன் துள்ளிச்செல்லவே அதிகாயன் வெட்கி மறுகி வியந்து நின்றான்.

இமையிடை யாகச்சென்றான் இகல்அதி காயன் நின்றான்
அமைவதுஒன்று ஆற்றல்தேற்றான் அருவியோடு அழல்கால்கண்ணன்
உமையொரு பாகனேயும் இவன்முனிந்து உருத்தபோது
கமையிலன் ஆற்றல்என்னைக் கதந்தொடும் குலைக்கும் கையான்.

திரிசிரசனைக் கொன்று தொலைத்து வென்றிவீரேடு விரைந்துசென்ற அனுமானை வியந்து அதிகாயன் இவ்வாறு புகழ்ந்திருக்கிறான். உருத்திரமூர்த்தியும் இவனது உக்கிர வீரத்திறலை உவந்துகொள்ளும் என உண்மையாகவே அவன் உணர்ந்து வியந்திருத்தலால் அவனது நேர்மையும் வீரப்பான்மையும் இங்கே விளங்கிநின்றன. சுத்தவீரர் எத்தகைய நிலைகளிலும் உள்ளம் ஒத்து உண்மைகண்டு உறுதி கொண்டுள்ளனர்.

மாருதியின் வீரப்பாட்டை இன்னவாறு மதித்து நின்றவன் பின்னர்த் தேரை விரைந்துசெலுத்தி இலக்குவன்மீது இலக்கோடு வந்தான். போர்மேல் மூண்டு அவ்வீரன் வரவே அங்கதன் இளையவனை அணுகி உழுவலன்போடு உறுதிமொழிகள் கூறினன். அவனுடைய உரைகள் பரிவு தோய்ந்து வந்தன.

## அங்கதன் அமைந்தது.

"அண்ணலே! எதிரி தேர்மேல் நீண்டு போர்மேல் மூண்டு வந்துள்ளான்; தாங்கள் தரையில் நின்று பொருதல் ஒரு குறையாய்த்தோன்றும்; அவ்வாறு தோன்றவிடலாகாது; அடியேனுடைய தோள்மீது ஏறியருளுங்கள்" என்று இன்னவாறு அங்கதன் வந்து பரிந்துவேண்டவே இலக்குவன் அவன் தோள்மீது தாவி அமர்ந்தான்; அமரரும் வியந்து புகழும்படி அமர்முகம் எங்கணும் சாரி திரிந்தான்; அங்கதனது அன்புரிமையையும், அருந்திற லாண்மையையும், அதிசய நிலையையும் வியந்து இளையவன் யாண்டும் அம்புகளை ஏவி மூண்டு பொருதான்.

ஆயிரம் புரவிபூண்ட அதிர்குரல் அசனித் திண்தேர்
போயின திசைகள்எங்கும் கறங்குஎனச் சாரிபோமால்;
மீயெழின் உயரும்;தாழின் தாழும்:விண் செல்லின்செல்லும்;
தீயெழ உவரி நீரைக் கலக்கினன் சிறுவன்அம்மா! (1)

அத்தொழில் நோக்கிஆங்கு வானரத் தலைவர்ஆர்த்தார்;
இத்தொழில் கலுழற்குஎயும் அரிதென இமையோர்எல்லாம்
கைத்தலம் குலைத்தார்ஆகக் களிற்றினும் புரவிமேலும்
தைத்தன இளைய வீரன் சரம்எனும் தாரை மாரி. (2)

இளையபெருமாளைத் தன் தோள்மேல் ஏந்திக்கொண்டு அங்கதன் சாரி திரிந்ததும், அவ்வீரன் சரமாரி பொழிந்ததும், அதனால் நால்வகைச் சேனைகளும் நிலைகுலைந்து தலை சிதைந்துள்ளதும், இங்கே தெரியவந்துள்ளன. இவ்வாறு போராடி வருவதை நோக்கிப் பெருஞ்சினங்கொண்டு நேரே தேரைக்கடாவி அதிகாயன் இலக்குவன் எதிரே இலக்கோடு மூண்டு வந்து வில்லை வளைத்து வெல்லும் திறலில் வீறுகொண்டு எதிர்த்து நின்றான்.

## அதிகாயனும் இலக்குவனும்.

அவனது நிலையை நோக்கி இலக்குவன் சிலையை நாண் ஒலி செய்து அதி விநயமாகப் பேசினான். "அதிகாயா! என்னோடு போர்புரியவே அதிசய ஆடம்பரங்களோடு படைகள் புடைசூழத் தேர் ஏறி வீரவாதம் கூறி இங்கே விரைந்து வந்தாய்! அவ்வாறு வந்தவன் உடனே என்னோடு மூண்டு போராடாமல் இந்நேரம் வரையும் ஏன் அயலே ஒதுங்கி நின்றாய்? இந்தச்சிறிய தாமதத்தால் உன் சேனைகள் பல சின்னபின்னங்களாய் இறந்

படலாயின; இவ்வளவு இழவுகளையும் நேரே கண்டுகொண்டாய்! முழுதும் அடியோடு மாண்டுமடிந்தபின் என்னோடு நீ அமர்செய்யலாம் என்று கருதி இருக்கின்றாயா? அவ்வாறு ஆயின் இன்னும் கொஞ்சம் பொறுத்திரு; யாவும் அழிந்தபின் நீயும் நானும் வில்லாடிப் பார்ப்போம்; பெரிய சேனைபதியாயுள்ளவர் இறுதியில் இறுவதையே உறுதியாகக் கருதியிருப்பர்; போர்முறையில் கைதேர்ந்த நீ அப்படி ஒரு முடிவான முறையைக் கடைப்பிடித்திருந்தாயேல் நானும் அதற்கு இசைந்து கொள்ளுகிறேன்; உன் கருத்து என்ன? விரைந்து சொல்!" என்று இன்னவாறு இலக்குவன் கேட்கவே அவன் வியந்து புன்னகை புரிந்தான்; பின்பு தன் எண்ணத்தை வெளிப்படுத்தினான். "இலக்குவா! சின்ன மனிதனை உன்னோடு பொருவது இன்னல் இளிவு என்று கருதியே மறுகி நின்றேன்; தேவர் யாவரும் அஞ்சி அடங்க அதிசயவெற்றிகளை விளைத்துவந்துள்ள நான் இன்று உன்னோடு பொரநேர்ந்தது புதியஒரு வசைஎன்றே எண்ணுகின்றேன். ஆயினும் இன்று தேவதேவர்கள் வந்து ஆவலோடு காத்துநின்றாலும் உன்னை நான் கொன்றுதொலைத்து வென்றி வீறோடு இலங்கை மீளுவேன்" என்று வீரகம்பீரமாய்ப் பேசினான். அவனுடைய பேச்சு பெருமிதம் பெருகி வந்தது.

அதிகாயன் உரைத்தது.

உமையனே காக்க மற்றங்கு உமைஒரு கூறன்காக்க
இமையவர் எல்லாம் காக்க உலகம் ஓரேழும் காக்க
சமையும்உன் வாழ்க்கை இன்றோடுஎன்றுதன் சங்கம்ஊதி
அமையுருக் கொண்டகூற்றை நாண்எறிந்து உருமின்
ஆர்த்தான்.

இன்னவாறு ஆரவாரமாய் அவன் கூறியபோது அதற்கு இலக்குவன் அமைதியாய்ப் பதிலுரைத்தது அயலே வருகிறது.

அன்னது கேட்ட மைந்தன் அரும்பிய முறுவல் தோன்ற
சொன்னவர் வாரார்யானே தோற்கினும் தோற்கத்தக்கேன்
என்னைநீ பொருது வெல்லின் அவரையும் வென்றிஎன்னா
மின்னினும் மிளிர்வது ஆங்கோர் வெஞ்சரம் கோத்துவிட்டான்.

அதிகாயன் வீரவாதமாய் விளம்பியபோது அதற்கு மாறாக இவ்வீரமகன் கூறியிருக்கும் தீரமொழிகளை இங்கே தெளிந்து

கொள்ளுகிறோம். போர்முகத்தில் வீரர்கள் நேர்முகமாய்ப்பேசுவது அவர் தட நெஞ்சத் திறல்களோடு விசித்திரவுணர்ச்சிகளையும் விளைத்து நிற்கின்றன. உமையன் என்றது உன் தமையன் ஆன இராமன் என்றவாறு. “சிறந்த வில்லாளி எனச் செருக்கி நிற்கும் உன் அண்ணன் முதலாகத் தேவர் யாவரும் கைலைவாசனை ஈசனுமே சேர்ந்து காத்தாலும் உன்னை நாசம் செய்துவிடுவேன்; இனிமேல் நீ பிழைக்கமாட்டாய்; இன்றோடு உன் வாழ் நாள் முடிந்தது” என்று இப்படி அவன் அடலாண்மையோடு கூறியதைக் கேட்டவன் யாதொரு கோபமும் கொள்ளாமல் நகை முகத்தனாய் நின்றது இவனது உக்கிரவீர நிலையையும்உறுதி ஊக்கத்தையும் அதிசய கம்பீரத்தையும் நன்கு விளக்கியுள்ளது.

அரும்பிய முறுவல் என்றது அப்பொழுது இலக்குவனது முகத்தில் மலர்ந்த மலர்ச்சியைத் துலக்கி நின்றது. தன்னோடு பொருது மாண்டுபடவந்தவன் வீணே நீண்டு இப்படிப் பேசுகின்றானே! என்று இவ்வீரமகன் இகழ்ச்சிக் குறிப்போடு எண்ணியிருப்பது புன்சிரிப்பால் தெரிய வந்தது. இங்ஙனம் சொல்லாடியவர் உடனே வில்லாடலில் மூண்டு வெகுண்டு பொருதார். யாண்டும் பாணங்கள் நீண்டு பாய்ந்தன. மூன்று நாழிகை நேரம் யாதும் ஓயாமல் அம்புகள் தொடுத்துப் போராடியும் வெற்றி தோல்விகள் யாரிடமும் தெரியவில்லை. இலக்குவன் கடுத்து விடுத்த பகழிகளையெல்லாம் தடுத்துச் சிதைத்து அடுத்து மூண்ட வானரப் படைகளையும் பாழாக்கி அதிகாயன் அதிசய ஆவேசமாய் அமராடினான். அவனுடைய கரவேக சரவேகங்களைக் கண்டு வானவரும் மருண்டு மறுகி நின்றனர்.

வானெலாம் பகழி வானின் வரம்பெலாம் பகழிமண்ணும்
தானெலாம் பகழி குன்றின் தலையெலாம் பகழிசார்ந்தோர்
ஊனெலாம் பகழி ஏன்றார் உயிரெலாம் பகழி வேலை
மீனெலாம் பகழியாக வித்தினன் வெகுளிமிக்கோன், (1)

மறைந்தன திசைகள்எல்லாம் வானவர் மனமேபோலக்
குறைந்தன சுடரின்மும்மைக் கொழுங்கதிர் குவிந்துஒன்றொன்றை
அறைந்தன பகழி வையம் அதிர்ந்தது விண்ணும்அஃதே
நிறைந்தன பொறியின்குப்பை நிமிர்ந்தது நெருப்பின்கற்றை. (2)

முற்றியது இன்றேஅன்றோ வானர முழுங்கு தானை
மற்றிவன் தன்னை வெல்ல வல்லனோ வள்ளல்தம்பி

கற்றது காலனேடோ கொலையிவன் ஒருவன் கற்ற
விற்றெழில் என்னே என்னுத் தேவரும் வெருவலுற்ருர். (3)

அங்கதன் நெற்றிமேலும் தோளினும் ஆகத் துள்ளும்
புங்கமே தோன்ருவண்ணம் பொருசரம் பலவும்போக்கி
வெங்கணை இரண்டும்ஒன்றும் வீரன்மேல் ஏவி மேகச்
சங்கமும் ஊதி விண்ணேர் தலைபொதிர் எறியஆர்த்தான். (4)

அதிகாயன் உக்கிரவீரமாய்ப் போராடியிருக்கும் நிலைகளை இவை உணர்த்தியுள்ளன. ஆகாயம் முதலான எல்லா இடங்களிலும் பாணங்கள் பாய்ந்து பரவியிருத்தலால் வில்வித்தையில் அவனது வித்தகத்திறலைக் கண்டு வியந்துகொள்ளுகிரேம். வானவர் தானவர் யாவரையும் எளிதே வென்று வெற்றிக்களிப்பில் இறுமாந்து வாழ்ந்துவந்தவன் ஆதலால் இன்று ஒரு மனித இளைஞனேடு நெடுநேரம் கடுமையாக மறுகிப் போராட நேர்ந்ததே! என்று மானம்மீதூர்ந்து உள்ளம் கொதித்து உருத்துப்போராடியிருக்கிருன். சுத்த வீரம் நிறைந்த தனது கைத்திறங்களைக் கடுத்துக் காட்டி அடுத்தடுத்துப் பகழிகளை மடுத்துத் தொடுத்திருத்தலால் யாண்டும் பாணங்களாய் நீண்டு பறந்து நெடிது உலாவின. எல்லையில்லாதபடி அவனுடைய வில்லிலிருந்து அம்புகள் எழுந்து எங்கும் பாய்ந்து வானரப் படைகளை மாய்த்து வருதலை நோக்கி தேவர் யாவரும் நெஞ்சம் கலங்கி நெடிது திகைத்தார். முடிவு யாதாமோ? என்று மறுகி உளைந்தார்.

வள்ளல் தம்பி வெல்ல வல்லனே?

என்று உள்ளம் பரிந்து தேவர் தியங்கி மயங்கி உயங்கியிருத்தலால் அதிகாயனது போரில் ஆகாயவாசிகள் அன்று திகிலடைந்து நின்ற நிலை தெரிய வந்தது. அவனுடைய அடுந்திறலாண்மைகளும் பாணப்பிரயோகங்களும் வீரத் திறல்களும் யாவருக்கும் அச்சங்களை விளைத்திருக்கின்றன.

இவன் கொலை கற்றது காலனேடோ? என்று சாலவும் அஞ்சியிருத்தலால் அன்று அதிகாயன் அங்கே கொன்று குவித்துள்ள கொலை நிலைகளை இங்கே கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிரேம். கொடிய மனக்கொதிப்போடு கடுமையாக வேலை செய்திருக்கிருன். வானர வீரர்கள் பலர் மாண்டு மடிந்திருக்கின்றனர். அங்கதனுடைய உடலில் அடலோடு பாய்ந்து பாணங்கள் பல

ஊடுருவிப்போயுள்ளன. தன் மேனியிலிருந்து உதிரங்கள் ஒழுகி ஓடியும் அவ்வீரன் கதிவேகங்கள் குறையால் யாண்டும் அதி வேகமாய் மூண்டு பாய்ந்து நீண்டு உலாவி நேரே சாரி திரிந்து போராடல் புரிய ஆதாரம் ஆற்றியுள்ளான். தன் தோளி லமர்ந்து மீளிமையோடு வில்லாடல் புரியும் வீரன்மீதும் இரண்டு பகழிகள் விரைந்து பாய்ந்துபோயின. போகவே வேகம் வீறிட்டு எழுந்தது. அங்கதன் உடம்பிலிருந்து இரத்தங்கள் பீறிட்டு ஓடு வதைக் கண்டதும் இலக்குவன் உள்ளம் துடித்தது. உக்கிரவீர மாய் உருத்துப் பகழிகளைக் கடுத்துத் தொடுத்தான்; அதிகாயன் ஏறியிருந்த தேர் உடைந்தது; குதிரைகள் மாண்டு விழுந்தன; சாரதியின் தலை தரையில் உருண்டது. வேறு ஒரு தேரில் அவன் விரைந்து ஏறினன். ஏறி நின்று வில்லை எடுக்குமுன் அத்தேரும் சிலையும் சேர அழிந்தன. மாறி மாறிப் பல தேர்களில் ஏறினன்; அவை யாவும் உடைந்து நாசமாயின. வாகனங்கள் எல்லாம் நாசமாகவே அவன் உள்ளம் கொதித்து வரபலத்தால் பெற்றி ருந்த அரிய அம்புகளைக் குறி செய்து தொடுத்தான். அவற்றைத் தடுத்து நீக்கி அம்புகளை அவன்மீது இவ்வீரன் கடுத்துப் பொழிந்தான். அவனுடைய உடல் முழுதும் பாய்ந்து பாணங் கள் ஊடுருவிப் போயின. பரிதாப நிலைகள் பெருகி நின்றன.

தன்னைத் தாங்கிநின்ற அங்கதன் உடலில் உதிரம் ஒழுகு வதைக் கண்டதும் வெங்கதம் மூண்டு இவ்வீரன் வீறோடு எய் ததில் தேர்கள் யாவும் இழந்து உடல் எங்கும் குருதி பொங்கி வழிய அவன் நிலைகுலைந்து நின்றான். மேனி சல்லடைக் கண்க ளாகப் பாணங்கள் ஊடுருவி ஓடியும் உள்ளம் தளராமல் உறுதி யோடு அவ்வீரன் அம்புகளைப் பொழிந்துகொண்டேயிருந்தான்.

வாலிசேய் மேனிமேலும் மழைபொரு குருதி வாரி
காலுயர் வரையிற்செங்கேழ் அருவிபோல் ஒழுகக்கண்டான்;
கோலொரு பத்துநூற்றால் குதிரையின் தலைகள்கொய்து
மேலவன் சிரத்தைச் சிந்தி வில்லையும் துணித்தான்வீரன். (1)

மாற்றொரு தடந்தேர் ஏறி மாறொரு சிலையும் வாங்கி
ஏற்றவல் அரக்கன்தன்மேல் எரிமுதல் கடவுள்என்பான்
ஆற்றல்சால் படையைவிட்டான் ஆரியன்; அரக்கன் அம்மா!
வேற்றுள தாங்கவென்று வெய்யவன் படையைவிட்டான். (2)

பொருபடை இரண்டும் தம்மில் பொருதன பொருதலோடும்

எரிகணை உருமின் வெய்ய இலக்குவன் துரந்த மார்பை
உருவின உலப்பிலாத உளைகிலன் ஆற்றல் ஐயான்
சொரிகணை மழையின் மும்மை சொரிந்தனன் தெழிக்கும் சொல்லான். (3)

பின்னின்றார் முன்னின்றாரைக் காணலாம் பெற்றித் தாக
மின்னின்ற வயிர வாளி திறந்தன மேனி முற்றும்
அந்நின்ற நிலையின் ஆற்றல் குறைந்திலன் ஆவி நீங்கான்
பொன்னின்ற வடிம்பின் வாளி மழைஎனப் பொழியும் வில்லான்.

அதிகாயன் அடைந்துள்ள அபாய நிலையை இங்கே காண்கிறோம். ஏறிய தேர்கள் யாவும் நீறாயொழிந்தன; எடுத்த வில்லுகள் எல்லாம் ஒல்லையில் துணிபட்டன; இறுதியில் ஓர் வில்லை அரிதின் வாங்கிக் காலமாரிபோல் பாணங்களைக் கடுத்துப் பொழிந்தான். அஞ்சாத தீரனான அங்கதனும் அயரும்படி அம்புகள் துயர்செய்து போயின. இலக்குவன் மீதும் பாணங்கள் மீறி ஏறின; ஏறவே இவ்வீரமகன் வெகுண்டு அக்கினியாத்திரத்தை எடுத்துத் தொடுத்தான். அவனும் மந்திர முறையோடு அந்த அம்பை விரைந்து விடுத்தான். தெய்வீகமான அந்தப் பகழிகள் இரண்டும் ஒன்றை ஒன்று உருத்துக் கவ்வி மேலே வீறோடு போராடின. அந்த அதிசயக் காட்சியை நோக்கி அமரரும் வியந்து திகைத்தனர். இளவலும் கனன்று அளவிடலரியபடி அம்புகளை ஏவினான். ஏவிய பகழிகள் யாவும் எதிரியை ஊடுருவிச் சென்றன. அவனுடைய உடல் முழுவதும் துளைகளாயின. அவ்வாறு ஆயினும் அவன் யாதும் தளராமல் அடலாண்மையோடு அடர்ந்து நின்று அடுசமராடினான்.

பின்னின்றார் முன்னின்றாரைக் காணலாம் பெற்றித்தாக
வயிரவாளி மேனி முற்றும் திறந்தன.

அதிகாயன் மேனியில் இளையவன் ஏவிய வாளிகள் பாய்ந்து போயுள்ள நிலைகளை இது உணர்த்தியுள்ளது. பின்னால் நின்றவர் முன்னே நின்றுள்ளவரைக் காணலாம்படி உடல் பொள்ளலாய் நின்றது என்றதனால் பகழிகளை ஏற்று நின்ற அவ்வீரனது அதிசய ஆற்றல்களை அறிந்து வியந்து கொள்ளுகிறோம். உடலில் தோன்றிய துளைகளின் வழியே உதிரங்கள் ஓடிக்கொண்டிருக்கின்றன. அவ்வாறு குருதிகள் ஓடினும் உள்ளம் ஒரு சிறிதும் சலியாமல் வில்லில் பூட்டிய அம்புகளைக் குறியின் எல்லை தவறாமல்

தொடுத்துக்கொண்டே அடுத்து அடுத்து நெருங்கிக் கடுத்து மூண்டுபொருதான். அவனுடையவீரத்திறல்வியப்பைவிளைத்தது.

ஆற்றல் குறைந்திலன்; ஆவி நீங்கான்.

அதிகாயன் அவல நிலைகளை அடைந்தும் கவலையாதும் இன்றிக் கடும்போர் புரிந்து நிற்றலை இது காட்டியுள்ளது. ஆவி நீங்கான் என்றது உயிர்போகும் நிலைமை நேர்ந்தும் உள்ளத்தின் வேகம் குன்றாமல் வில்லைப்பிடித்து வேலைசெய்து நிற்கும் வித்தகத்திறலை விளக்கி நின்றது. அவனது அதிசய ஆற்றலைக்கண்டு இலக்குவனும் திகைத்தான். தெய்வப் பகழிகள் ஊடுருவி ஓடியும் அவன் உயிர் நீடி நிற்றல் இவ்வீரனுக்குப் பெரிய வியப்பாயது. ஏதோ அரிய ஓர் தெய்வீக நிலை என்று ஆராய நேர்ந்தான்.

இறந்துபட்டது.

"விட்ட பகழிகள் விரைந்து மேனியில் பாய்ந்து போகின்றன; அவன் வீறுகொண்டே நிற்கின்றான்; என்னே! இது?" என இளையவன் உன்னி உளைந்தான். அதுபொழுது வாயுபகவான் நேரே தோன்றினான்: "போராடுகின்ற இவன் வேறே எந்த ஆயுதங்களாலும் இறந்துபடான்; பிரமாஸ்திரம் ஒன்றே இவனைக் கொன்று தொலைக்கவல்லது" என ஒன்ற உரைத்து மறைந்தான். மறையவே அவ்வுரையை ஓர்ந்து பிரமனை நினைந்து மந்திர முறையோடு அந்தத் தெய்வப் பகழியைத் தொடுத்தான். அது விரைந்து பாய்ந்து அதிகாயன் தலையைத் துணித்துக் கொண்டு, ஆகாய வீதியில் வேகமாய்ப் போயது. போகவே அமரர் யாவரும் அதிசய ஆவலோடு ஏகமாய் மகிழ்ந்தனர்.

கோல்முகந்து அள்ளிஅள்ளிக் கொடுஞ்சிலை நாணில்கோத்துக்
கால்முகம் குழைய வாங்கிச் சொரிகின்ற காளை வீரன்
பால்முகம் தோன்றநின்று காற்றினுக்கு அரசன்பண்டை
நான்முகன் படையால்அன்றிச் சாகிலன் நம்ப! என்றான். (1)

நன்றென உவந்து வீரன் நான்முகன் படையை வாங்கி
மின்தனி திரண்டதுஎன்னச் சரத்தொடும் கூட்டி விட்டான்
குன்றினும் உயர்ந்ததோளான் தலையினைக் கொண்டுஅவ்வாளி
சென்றது விசும்பி னூடு தேவரும் தெரியக் கண்டார். (2)

பூமழை பொழிந்து வானோர் போயதுஎம் பொருமல்என்றார்;
தாமரைத் தலறி எங்கும் இரிந்தனர் அரக்கர் தள்ளித்
தீமையும் களிப்பும்நீங்கித் திகைத்தனர் குரங்குச் சேனை
கோமகன் தோளில்நின்றும் குதித்தனன் கொற்ற வில்லான். (3)

வெந்திறற் சித்திகண்ட வீடணன் வியந்த நெஞ்சன்
அந்தரச் சித்தர் ஆர்க்கும் அமலையும் கேட்டான் ஐயன்
மந்திர சித்தியன்ன சிலைத்தொழில் வலியீ தாயின்
இந்திர சித்தினர்க்கும் இறுதியே இயைவது என்றான். (4)

(அதிகாயன் வதைப்படலம், 205-208)

போரில் மூண்டு அடலாண்மையோடு நெடிது போராடிய அதிகாயன் முடிவில் கொலையுண்டு மாண்டு விழுந்திருக்கும் நிலையை இவை காட்டியுள்ளன. யாதொரு மாயச்சூதும் கருதாமல் நேர்மையோடே நேர் நின்று பொருது முடிந்திருக்கும் அவனது முடிவு பெருந்தன்மையோடு தொடர்ந்திருக்கிறது. அவனை வேறு யாதொரு வகையிலும் வெல்லமுடியாது என்று முடிவாகத் தெரிந்தபின்னரே இறுதியில் மந்திர முறையோடு பிரமாத்திரத்தை இலக்குவன் இலக்காய் விடுக்க நேர்ந்தான். அது அதிவேகமாய் அவன் தலையைக் கொய்துகொண்டு மேலே போகவே அவனது ஆகம் நிலைகுலைந்து கீழே வீழ்ந்தது. எதிரி மாய்ந்துபடவே அங்கதன் தோளிலிருந்து சிங்க ஏறுபோல் இலக்குவன் கீழே குதித்து நின்றுள்ளான்; அந்த நிலை அதிசயமான வீரகம்பீரத்தை விளக்கி வெற்றியைத் துலக்கி நின்றது.

மந்திர சித்தி அன்ன சிலைத்தொழில்.

அதிகாயனைக் கொன்று தொலைத்து வென்றி வீரனோடு இலக்குவன் நின்றபோது விபீடணன் இப்படிப் புகழ்ந்து மகிழ்ந்துள்ளான். தேவர் எவரும் செய்யமுடியாததை இளையவன் எளிதில் செய்து முடித்தான் ஆதலால் அந்த அதிசய வெற்றியை மந்திரசித்தி என்று அவன் உள்ளம் உவந்து வியந்து பாராட்டினன். மூண்டுள்ள போராட்டங்களின் முடிவுகளையெல்லாம் கடிதின் முடிவுசெய்து நெடிது துணிந்து நெஞ்சம் வியந்தான்.

இந்திரசித்தினர்க்கும் இறுதியே.

மகாவீரனாய் இலங்கையில் வீறுகொண்டுள்ள இந்திரசித்தைக் குறித்து வீடணன் இங்கே இப்படிக் கருதியிருக்கிறான்.

அதிகாயனை அழித்து ஒழித்த இலக்குவன் இந்திரசித்தையும் தப்பாமல் அழித்துவிடுவான் எனத் தெளிவாக எண்ணி உள்ளம் களித்திருக்கிறான். தான் அபயமாய்ப் புகல் புகுந்த

இடம் சிறந்த வெற்றிகளை அடைந்து உயர்ந்து விளங்கும் என உறுதிசெய்யவே உவகை பெரிதும் பொங்கி நின்றது. பிறந்த இனம் தீமையுடையது என்று விரைந்து விலகிவந்தவன் ஆதலால் நல்ல இனத்தின் வெற்றியில் உள்ளம் களிக்க நேர்ந்தது. அதிகாயன் இங்கு அழிந்துபட்டது இனி இந்திரசித்து அழிவதை விழிதெரிய விளக்கிநின்றது என முழக்கி நின்றான்.

நராந்தகன் மூண்டது.

அதிகாயன் மாண்டு விழவே அரக்கர் சேனைகள் அவலமாய்க் கலக்கம் அடைந்தன. அதுபொழுது நராந்தகன் என்னும் வீரன் தேரை விரைந்து கடாவிப் போர்மேல் மூண்டு புகுந்தான். அதிகாயனுக்கு இவன் தம்பி முறையினன். இராவணனுடைய மனைவியர் பலருள் ஒருத்தியான காமதிலகை என்னும் வயிற்றில் பிறந்தவன். மனித இனத்துக்குக் கொடிய சத்துருவாய் யாண்டும் நெடிய துயரங்களை விளைத்து வந்தவன் ஆதலால் நராந்தகன் என விளங்கி நின்றான். தன் அண்ணன் அழிந்துபட்டதை அறிந்ததும் ஆங்காரத்தோடு கனன்று வந்தான். அங்கதன் இடையே பாய்ந்து அவனோடு எதிர்த்தான். இருவருக்கும் போர் மூண்டது. நெடும்போது நேரவில்லை. தன்மேல் எய்த பகழிகளையெல்லாம் விரைந்து விலக்கித் தேர்மேல் பாய்ந்து வில்லைப்பறித்து வீசி எறிந்து பல்லுடையக் குத்தினான். அவன் உடைவாளை உருவினான்; அதனை இடதுகையால் தட்டி ஒழித்து ஒட்டி மல்லாடி உருத்து அடித்தான்; அவன் உயிர்போய் உருண்டு விழுந்தான். அங்கதனது அடலாண்மையை வியந்து யாவரும் துதிசெய்து புகழ்ந்தார். தேவரும் அவனை ஆவலோடு நோக்கி நின்றனர்.

போர்மத்தன் புகுந்தது.

நராந்தகன் மடிந்து விழவே போர்மத்தன் என்னும் சேனைத் தலைவன் தனது யானையைக் கடாவி அடலாண்மையோடு ஆர்த்துவந்தான். படைகள் புடைசூழக் கடல்போல ஆரவாரம்செய்து ஆங்காரத்தோடு புகுந்த அவனை நீலன் நேரேபோய் எதிர்த்தான். களிப்பு மிகுந்த மதுவைக் குடித்துக் கனல்போல் மண்டி அவன் களித்துத் தெளித்து வருங்கால் வானர சேனைகள் மறுகி மயங்கி உறுகி குலைந்து பெரிதும் கலைந்து உலைந்து நின்றன.

கூர்மத்தின் வெரிநின்வைத்து வானவர் அமுதம் கொண்ட
நீர்மத்தின் நிமிர்ந்த தோளான் நிறைமத்த மதுவைத் தேக்கி
ஊர்மத்தம் உண்டாலன்ன மயக்கத்தான் உருமுத் தின்பான்
போர்மத்தன் என்பான் வந்தான் புகர்மத்தப் பூட்கை மேலான். (1)

காற்று அன்றேல் கடுமைஎன்னும்? கடலன்றேல் முழக்கம்என்னும்?
கூற்றன்றேல் கொலைமற்று என்னும்? உருமன்றேல் கொடுமை என்னும்?
சீற்றம்தா னன்றேல் சீற்றம் வேறென்று தெரிப்பது எங்கே?
மாற்றன்றேல் மலைமற்று என்னே? மத்தன்தன் மத்தயானை. (2)

காலிடைப் பட்டும் மானக் கையிடைப் பட்டும் கால
வாலிடைப் பட்டும் வெய்ய மருப்பிடைப் பட்டும் மாண்டு
நாலிடைப் பட்ட சேனை நாயகன் தம்பி எய்த
கோலிடைப் பட்ட எல்லாம் பட்டன குரங்குச் சேனை. (3)

தனது மதயானையை வெகுண்டு செலுத்திப் போர்மத்தன் போர்க்களம் புகுந்தபோது நேர்ந்த அழிவு நிலைகளை இவை உணர்த்தியுள்ளன. கடுந்திறலோடு மூண்டு முனைந்து அடுந்திறல் ஆற்றியுள்ளான். யாண்டும் போர் வெறியனாய் நீண்டுவந்தவன் என்பதை அவன் பேர் ஈண்டு விளக்கிநின்றது. நீர்மத்தின் நிமிர்ந்த தோளான் என்றது மந்தர மலைபோல் திரண்டு உருண்டு அவனுடைய தோள்கள் முரண்கொண்டிருந்த நிலை விழி தெரிய வந்தது. உள்ளம் கனன்று அவன் உருத்து மூண்டு கடுத்து வதைக்கவே வானரங்கள் யாண்டும் துடித்து மடிந்தன.

### நீலன் எதிர்ந்தது

கடலைக் கலக்கியதுபோல் பொருகளத்தைப் போர்மத்தன் கலக்கி வருங்கால் நீலன் விரைந்து பாய்ந்து நேரே எதிர்ந்தான். தன் கையில்கொண்டிருந்த தண்டாயுதத்தால் அரக்கர் திரள்களை அடித்து மடித்தான். காலன்போல் கடுங்கொலை புரிந்து வந்த அத்தண்டைக் கோல் ஒன்று ஏவி அவன் துணித்து வீழ்த்தினான். தண்டு ஒடிந்து விழவே தரையில் நின்ற நீலன்மேல் தான் ஊர்ந்துவந்த மதயானையை ஏவி அதமானான் என்று அவன் ஆர்த்து மூண்டான். கரியமலைபோல் கடுத்துவந்த கரி தனது நெடிய கையை நீட்டி நீலனை வாரிக்கொண்டது. கொள்ளவே மேலே விரைந்து துள்ளிக் கொம்புகளோடு தலையைக் கீழே தள்ளி அயலே நீலன் லகுபாய்ந்து நின்றான். அந்த அதிசய

நிலையைக் கண்டதும் அரக்கர்கள் பயந்து நடுங்கினர்; அமரர் கள் வியந்து புகழ்ந்தனர். வெறிகொண்ட மதகரியை இவன் கொன்று வீழ்த்தியது வித்தக வென்றியாய் விளங்கி நின்றது.

ஒடுங்கினன் உரமும் ஆற்றல் ஊற்றமும் உயிரும் என்னக்
கொடும்படை வயிரக் கோட்டால் குத்துவான் குறிக்குங்காலை
நெடுங்கையும் தலையும் பிய்யா நொய்தினி னிமிர்ந்துபோனான்
நடுங்கினர் அரக்கர்; விண்ணோர் நன்றுநன்று என்ன நக்கார்.

கொடிய யானையின் கையில் அகப்பட்ட நீலன் அதன் தலையை நேரே பிய்த்துக்கொண்டு மேலே தாவிப் போயிருக்கும் நிலையை இக்கவி இங்கே நன்கு காட்டியுள்ளது. யானை செத்து வீழவே போர்மத்தன் ஆங்காரத்தோடு அம்புகளை ஏவி அடுந் தொழில் புரிந்தான். கடும்போர் புரிகின்ற அவன்மேல் இவன் விரைந்து பாய்ந்து சிலையைப் பிடுங்கி எறிந்து தலையில் குத்தித் தரையில் வீழ்த்தினன். மத்தன் மாண்டான். அவன் செத்ததை அறிந்ததும் சேனைகள் உடைந்து தியங்கி அயர்ந்தன.

## வயமத்தன் வந்தது

உடன்வந்த துணைவன் உயிர் அழிந்ததைக் கண்டதும் வயமத்தன் உருத்துவந்தான். இவன் பல போர்முனைகளில் சென்று வென்று வந்தவன். தன் பெயர் நிலைக்கு ஏற்பச் சயநிலையிலேயே தருக்கி நின்றவன் ஆதலால் தனது தேரைக் கடாவி விரைந்து செருமுகம் புகுந்து போராட நேர்ந்தான். இடபன் என்னும் வானர வீரன் அடலோடு வந்து ஆர்த்து எதிர்த்தான். இவனை நோக்கி அவன் இகழ்ந்து பேசினன். அவனுடைய செருக்கும் திறலும் சீற்றமும் மாற்றமும் ஏற்றமுற்று நின்றன.

உன்மத்தன் வயிர மார்பின் உரும்ஒத்த கரம்சென் றுற்ற
வன்மத்தைக் கண்டு மாண்ட மதமத்த மலையைப் பார்த்தும்
சன்மத்தின் தன்மையானும் தருமத்தைத் தள்ளி வாழ்ந்த
கன்மத்தின் கடைக்கூட் டானும் வயமத்தன் கடிதின்வந்தான். (1)

பொய்யினும் பெரிய மெய்யான்; பொருப்பினைப் பழித்த தோளான்;
வெய்யன்என் றுரைக்கச் சாலத் திண்ணியான்; வில்லின் செல்வன்;
பெய்கழல் அரக்கன் சேனை ஆர்த்தெழப் பிறங்கு பல்பேய்
ஐயிரு நூறு பூண்ட ஆழியந் தேரின் மேலான். (2)

ஆர்க்கின்றான் உலகை எல்லாம் அதிர்க்கின்றான் உருமும் அஞ்சப்
பார்க்கின்றான் பொன்றினரைப் பழிக்கின்றான் பகழி மாரி

தூர்க்கின்றான் குரங்குச்சேனை துரக்கின்றான் துணிவை நோக்கி
எற்கின்றார் இல்லை என்று இடபன் வந்து அவனோடு ஏற்றான். (3)

சென்றவன் தன்னைநோக்கிச் சிரித்துநீ சிறியை உன்னை
வென்றவம் உம்மையெல்லாம் விளிப்பனோ? விரிஞ்சன்தானே
என்றவன் எதிர்ந்த போதும் இராவணன் மகனை இன்று
கொன்றவன் தன்னைக் கொன்றே குரங்கின்மேல் கொதிப்பன் என்
றான். (4)

வாய்கொண்டு சொற்றற்கு ஏற்ற வலிகொண்டு பலியுண் வாழ்க்கைப்
பேய்கொண்டு வெல்லவந்த பித்தனே! மிடுக்கைப் பேணி
நோய்கொண்டு மருந்துசெய்யா ஒருவநின் நோன்மையெல்லாம்
ஓய்கின்றாய் காண்டி என்று உரைத்தனன் இடபன் ஒல்கான். (5)

போர்மேல் மூண்டுவந்த அரக்க வீரனுடைய நிலைமைகளை யும் உரையாடியிருக்கும் தலைமைகளையும் இவை உணர்த்தியுள் ளன. உருவத் தோற்றமும் செயல் இயல்களும் அயலறிய ஈண்டு வெளிப்பட்டிருக்கின்றன. தருமம் இன்னது என்று தெரியாதவன்; யாண்டும் பாபகாரியங்களையே மூண்டு செய்து வந்தவன். கொடுமையும் தீமையும் வன்மையும் புன்மையும் குடி கொண்ட நெஞ்சினன். கொடிய மாயப் போர்கள் புரிந்து தேவர்களை நடுங்கச் செய்த தீவினையாளன். நெடிய திறலுடைய அத்தகைய கொடியவனை இடபன் கடிதின் எதிர்ந்து போராட நேர்ந்தான். அவனை இகழ்ந்து சிரித்தான்: "ஏ சிறிய குரங்கே! பெரிய போர் வீரனுன என்னோடு நீயா போராட வந்தாய்! சாகத் துணிந்து என் எதிரே நீ வேகமாய் வந்துள்ளாய்! புல்லி யனான உன்னைக் கொல்லுவதும் வெல்லுவதும் வீண் பழியாய் விரிந்து நிற்கும்; பிரமதேவனையும் வெல்லவல்ல நான் அற்பக் குரங்கோடு அமராட நேர்வது அவமேயாம்; எங்கள் சக்கர வர்த்தி மகனைக் கொன்ற அந்த மனிதச் சிறுவனை முதலில் கொன்று தொலைத்து அதன்பின்னர்க் குரங்குகளையெல்லாம் அடியோடு அழித்து எனது வீரப்பிரதாபத்தை உலகம் அறிய விளக்கி வெற்றிமாலை சூடி இலங்கைக்குச் செல்லுவேன்" என இன்னவாறு ஆரவாரமாய் அவன் பேசினான்; அவ்வுரைகளைக் கேட்டு இடபன் சிரித்தான். "வாய்க்கு வந்தபடி துடுக்குத்தன மாய்ப் பேசுகின்றாயே மடையா! பேசாமல் சண்டை செய்து உன் மண்டையைக் கீழேபோட்டுப் போகாமல் பித்தனைப்போல் பிதற்றி நிற்கின்றாயே பேதையே! விரைந்து போர்செய்து என்

எதிரே இறந்துபடு; நேரத்தை வீணே கடத்தி நில்லாதே!'' என்று இடபன் இவ்வாறு சொல்லாடவே- அவன் ஒல்லையில் உருத்து வில்லாட நேர்ந்தான். பாணங்களைக் கடுத்துத் தொடுத்தான். ஏவிய பகழிகளையெல்லாம் விலக்கி ஒழித்து நேரேபாய்ந்து அவனுடைய தேரை வாரி இடபன் வீசி எறிந்தான். வானர வீரன் செய்ததை நோக்கி வானவரும் வியந்தனர். தேரோடு போய்க் கடலில் வீழ்ந்தவன் விரைந்து எழுந்து மீண்டும் வந்து மூண்டு போராடினன். இவன் அடுத்து நின்று அடலாண்மை புரிந்தான். புரியவே குரங்கு என்று முன்னம் எளிதாக இகழ்ந்து பேசின அவன் பின்பு இவனுடைய அடுந்திறல்களை அறிந்து நெடுந்திகில் அடைந்தான். கடும்போர் புரிந்து வந்த இவன் ஒல்லையில் விரைந்து பற்றிப் பல்லுடையக் குத்தி மல்லாடி வீழ்த்தினன். அவன் மாண்டு மடிந்து மண்மேல் விழுந்தான்.

அல்லினைத் தழுவிநின்ற பகல்என அரக்கன் தன்னைக்
கல்லினும் வலிய தோளான் கட்டியிட் டிறுக்குங்காலைப்
பல்லிடைப் பிலவா யூடும் பசும்பெருங் குருதி பாய
வில்லுடை மேகம்என்ன விழுந்தனன் உயிர்விண்செல்ல.

மல்லாடல் புரிந்து வயமத்தனை இடபன் கொன்று வீழ்த்தியிருப்பதை இது நன்கு காட்டியுள்ளது. வாய்வழி இரத்தம்பாய நிலைகுலைந்து அவன் மடிந்து வீழ்ந்திருத்தலால் இடபனுடைய உடல் வலியும் அடல் நிலையும் உணரவந்தன. சென்ற போர்களிலெல்லாம் வெறிகொண்டு பொருது யாண்டும் வென்று வந்தவன் ஈண்டு மாண்டு மடிந்திருப்பது யாவருக்கும் பெரிய வியப்பாயிருந்தது. அரக்கருக்கு அழிவுகாலம் எனத் தெளியநேர்ந்தது.

## கும்பன் கொதித்தது

சிறந்த சேனைத் தலைவனை வயமத்தன் அழிந்து படவே கும்பன் என்னும் வீரன் கொதித்து வந்து கொடுஞ்சமர் புரிந்தான். அரிய திறலுடைய அவன் நெடிய படைகளோடுபுகுந்து கொடிய போர்புரிந்து குரங்குப் படைகளைக் கொன்று வருவதைக் கண்டதும் சுக்கிரீவன் வென்றி வீரோடு விரைந்து எதிர்ந்தான். வெம்போர் மூண்டது. இருவரும் வீரோடு நேர்ந்தனர்.

குரங்கினுக்கு அரசும் வென்றிக் கும்பனும் குறித்தவெம்போர்
அரங்கினுக்கு அழகு செய்ய ஆயிரம் சாரி போந்தார்

மரங்கொடும் தண்டுகொண்டும் மலையென மலையாநின்றார்
சிரங்களும் கரமும்எல்லாம் சூலைந்தனர் கண்ட தேவர்.

சுக்கிரீவனும் கும்பனும் புரிந்த போர்நிலையை இதில்கண்டு நிற்கிறோம். தண்டங்கள் கொண்டு ஒருவரை ஒருவர் தாக்கி இருவரும் சாரி திரிந்து வீறோடு போராடியிருப்பது வியத்தகு காட்சியாய் விளங்கி நின்றது. அந்தப் போர்க்களத்தில் இந்த வீரர் இருவரும் மாறி மாறிச் சாரி திரிந்து போர்புரிந்தது ஓர் அதிசய ஆடலாய் நிலவி யாவரும் துதிசெய்து போற்றத் துலங்கி விளங்கியது ஆதலால் "அரங்கினுக்கு அழகு செய்ய ஆயிரம் சாரி போந்தார்" என்றார். அரங்கு=போர்க்களம். "தெருச் சண்டை கண்ணுக்குக் குளுமை" என்பது பழமொழி. போரின் காட்சி யாவருக்கும் பெரு வியப்பாய் ஆவலை விளைத்து வருதலால் எல்லாரும் அதனை உவந்து கண்டு வியந்து வருகின்றார். நீண்டநேரம் இருவரும் நெடிது போராடினர். முடிவில் கும்பனைச் சுக்கிரீவன் கொன்று முடித்தான். எங்கும் வென்றியுடையனாய் வாழ்ந்து வந்தவன் அன்று அங்கே அவலமாய்ப் பொன்றி முடிந்தான்.

நிகும்பன் நேர்ந்தது.

கும்பன் மடிந்துபடவே அவனுடைய தம்பி ஆகிய நிகும்பன் நெடிது சினந்து கடிது புகுந்து கடும்போர் புரிந்தான். இந்த வீரர் இருவரும் கும்பகருணனுடைய குமாரர் ஆதலால் அமரரும் இவரது அமராடலை நோக்கி ஆவல் மண்டி நின்றார். அதிகாயனோடு வந்த சேனைத்தலைவருள் இந்த இருவரும் பெரு மதிப்புடையவர். அரச குடும்பத்தில் பிறந்த குமாரர்கள் பலர் அன்று அமராடலில் மூண்டுவந்து மாண்டுபோயினர். முடிவில் கும்பன் சுக்கிரீவனால் மடிந்தான். இறுதியில் வந்த நிகும்பனை அங்கதன் எதிர்ந்து அடுசமர்புரிந்தான். சிறிது நேரம் போராடியபின் கொடிய சூலம் ஒன்றைக் கடிதின் எடுத்து அங்கதன் மேல் கொதித்து வீசினான். அந்தச் சூலாயுதம் வரபலத்தால் வந்தது. எவரையும் வெல்லவல்லது. அதிசய ஆற்றலுடைய அதனை விதிமுறைப்படி பூசித்து வீசவே அது வீறோடு விரைந்துவந்தது. இதனால் அங்கதன் அழிந்து படுவான் என்று அமரரும் நடுங்கி நின்றனர். அந்நிலையில் அநுமான் இடையே பாய்ந்து அந்தச் சூலத்தைப் பிடித்து ஒடித்து எறிந்து அதனை ஏவியவனையும் ஆவி

போக்கி அயலே தாவினன். இந்த அதிசய வெற்றியாளனது அற்புத வேலையை நோக்கி யாவரும் துதிசெய்து வியந்து நின்றார்.

### முடிவடைந்தது.

சேனைகள் யாவும் அழிந்து போயின; சேனைத்தலைவர்கள் எல்லாரும் இறந்து பட்டனர். அந்தப் போர்க்களம் எங்கணும் பிணமலைகள் குவிந்து கிடந்தன. கடல்போல் நிறைந்த படைகளோடு வந்த அதிகாயன் பொன்றி விழுந்ததும், தானைகள் யாவும் அழிந்து பட்டதும், அவலத் துயரங்களாய்ப் பெருகி நின்றன. போர் நிலைகளைச் சோதனை செய்து சாதனையோடு நோக்கி நின்ற தூதுவர்கள் உள்ளம் கலங்கி இலங்கையை நோக்கி ஓடினர். அரண்மனையுள் புகுந்தனர். இராவணனுடைய அடியில்விழுந்து பணிந்து எழுந்துஅழுத கண்ணராய்த்தொழுது நின்றனர். அவரது துயரக் குறிப்பு உயிரை மறுகச் செய்தது.

### இராவணன் மறுகியது.

தூதுவர் ஓடிவந்து துக்கக் குறிப்போடு ஒக்க நிற்றலை நோக்கியதும் இராவணன் உள்ளம் மறுகி உருகி உளைந்தான்; உற்ற இழவுகளை ஒற்றர் வாய்மொழியால் கேட்டு உயிர்துடித்துத் துயருழந்தான். வந்தவர்மூலம் நிலைமையைத்தெரிந்து சிந்தை மயங்கித் தெருமரலடைந்தது கொடிய பருவரலாய் நின்றது.

நோக்கிய இலங்கைவேந்தன் உற்றது நுவல்மின் என்றான்
போக்கிய சேனை தம்மில் புகுந்துள இறையும் போதா
ஆக்கிய போரின் ஐய! அதிகாயன் முதல்வர் ஆய
கோக்குலக் குமரர் எல்லாம் கொடுத்தனர் ஆவிஎன்றான். (1)

ஏங்கிய விம்மல்மானம் இரங்கிய இரக்கம் வீரம்
ஓங்கிய வெகுளிதுன்பம் என்றிவை ஒன்றிற்குஒன்று
தாங்கிய தரங்கமாகக் கரையினைத் தள்ளித் தள்ளி
வாங்கிய கடல்போல் நின்றான் அருவிநீர் வழங்குகண்ணான். (2)

திசையினை நோக்கும்;நின்ற தேவரை நோக்கும்;வந்த
வசையினை நோக்கும்;கொற்ற வாளினை நோக்கும்; பற்றிப்
பிசையுறும் கையை: மீசை சுறுக்கொள உயிர்க்கும்; பேதை
நசையிடைக் கண்டான்என்ன நகும்; அழும்; முனியும்; நாணும்.

மண்ணினை எடுக்கஎண்ணும் வானினை இடிக்க எண்ணும்
எண்ணிய உயிர்கள்எல்லாம் ஒருகணத்து எற்ற எண்ணும்

பெண்எனும் பெயரவெல்லாம் பிளப்பன்என்று எண்ணும்எண்ணிப்
புண்ணிடை எரிபுக் கென்ன மானத்தால் புழுங்கி நையும். (4)
(அதிகாயன் வதைப்படலம்)

அதிகாயன் இறந்துபட்டான் என்பதைக் கேட்டதும் இராவணன் துயரத்தால் துடித்து உயிர் பதைத்திருக்கும் நிலைகளை இவை உணர்த்தியுள்ளன: புத்திர சோகம் அவனைச் சித்திரவதை செய்திருக்கிறது. துக்கமும் வெட்கமும் மானமும் வெகுளியும் அவன்உள்ளத்தில் அலைகளைப்போல் அடர்ந்துதொடர்ந்து படர்ந்து நிமிர்ந்திருக்கின்றன. பேய்கொண்டவனைப்போல் வெறிமண்டி விழித்து நோய் கொண்டு திகைத்திருக்கிறான்.

திசையினை நோக்கும்; நின்ற தேவரை நோக்கும்: என்றது தனக்கு நேர்ந்த வசையினை நினைந்து மறுகி நொந்த பரிதாப நிலையை வெளிப்படுத்தி நின்றது. தேவர்கள் பகை வகையினர் ஆதலால் அவர் இகழ்ந்து சிரிப்பரே என்று உள்ளம் நாணி உளைந்து வருந்தியுள்ளான். சோகம் எல்லைமீறி எழுந்தாலும் சிறந்த போர்வீரன் ஆதலால் தனது சீரிய கூரிய வாளை வீரிய வீறுேடு வெகுண்டுநோக்கினான். இந்த வெற்றிவாள் தன்கையில் இருந்தும் தோல்வியும் பழியும் தொடர்ந்து வர நேர்ந்தனவே! என்றுஅவன் துடித்துழந்துள்ளான். வாளை வெறுத்து நோக்கிய நோக்கம் அந்த ஆளைக் குறித்து நோக்கச் செய்தது.

மீசை சுறுக்கொள உயிர்க்கும்.

என்றதனால் சோகத்தீயில் அவன் உள்ளமும் உயிரும் வெந்துள்ள வேகநிலையை உய்த்துணர்ந்து கொள்ளலாம். மூச்சுக்காற்று கொடிய வெப்பமாய் வெளிவந்துள்ளது. மீசையும் கருகும்படி மூக்கிலிருந்து உயிர்ப்பு நீண்டு வந்திருத்தலால் உள்ளே துயரத்தீ மூண்டு வெந்திருக்கும் நிலை தெரியவந்தது. ஒரு நிலையில் நில்லாமல் பலவகையிலும் செயலிழந்து துயர் அடைந்து பதைத்து நொந்தான். உயிரின் துடிப்புகள் உடலில் தோன்றின.

நகும்; அழும்; முனியும்; நாணும்.

புத்திர சோகத்தால் இராவணன் பட்டிருக்கும் பதைப்புகளைக் கவி இங்ஙனம் சுருக்கமாச் சுட்டியிருக்கிறார். இந்த வித்தக விளக்கம் நன்கு உய்த்துணரத்தக்கது. அமரரையும் அடக்கி ஆளும் அதிசய அதிபதிக்கு இரண்டு மனிதராலும் சில குரங்கு

களாலும் இப்படி ஒரு கொடிய பழி அடைய நேர்ந்ததே! என்று பரிதாபம் மீதூர்ந்து பரிகாசமாய்ச் சிரித்திருக்கிறான். அந்தச் சிரிப்பு நகும் என்ற குறிப்பால் உணரவந்தது. அவல நகை கவலைதோய்ந்து கடுத்துவந்துள்ளது. அழுது பழகாதவன் இங்கே அழுதிருக்கிறான். அழுகை பரிதாப நிலையில் பெருகி வந்துள்ளது.

அருவிநீர் வழங்கு கண்ணான்.

இராவணனுடைய கண்களிலிருந்து பெருகி ஒழுகியிருக்கும் துயரக் கண்ணீரை இது விளக்கியுள்ளது. இன்பக் களிப்பில் என்றும் இறுமாந்து வாழ்ந்து வந்தவன் இப்பொழுது சிலகாலமாகத் துன்பத் துடிப்பில் அடிக்கடி தோய்ந்து வருகிறான். சீதையை அழச்செய்த பாதகம் அவனை அழச்செய்து வருகிறது. அவ்வுண்மையை உணர்ந்து திருந்தாமல் ஊழ்வயத்தனாய் உழந்து உழலுகின்றான். நல்ல தீரன் ஆதலால் அல்லல் அடைந்து அலமந்தாலும் ஆங்காரம் நீங்காமல் ஓங்கியே நிற்கிறான். நேர்ந்த இழவை எண்ணி எண்ணி நெஞ்சம் புண்ணாய் நெடிது நொந்து மானத்தால் புழுங்கி மறுகி அலமரும் பொழுது அந்தப்புரத்திலிருந்து அழுகை ஒலி எழுந்தது. அரக்கர் குழாங்கள் அலமந்து நொந்தனர். அவலத் துயரங்கள் யாண்டும் விரிந்தன.

தானியமாலை தவித்தது.

அதிகாயன் இறந்தசெய்தியை அறிந்ததும் அவனைப்பெற்ற தாயான தானியமாலை பெருந்துயருழந்து பதைத்தாள். உயிர் துடித்து மார்பில் அடித்துக்கொண்டு தலைவிரிகோலமாய் நாயகனிடம் வந்தாள். அரண்மனையுள் இருந்த யாவரும் துயரத்தால் துழங்கி அயர்ந்து செயலிழந்து நிற்ப மன்னன் தேவி மறுகி உருகிப் பருவரலோடு வந்தது கொடிய பரிதாபமாயிருந்தது.

ஒருவரும் உரையார் வாயின் உயிர்த்திலர் உள்ளம் ஓய்வார்
வெருவரும் தகையராகி விம்மினர் இருந்த வேலைத்
தருவனம் அனைய தோளான் தன்எதிர் தானிமாலை
இரியலிட்டு அலறி ஓயாப் பூசலிட்டு ஏங்கி வந்தாள். (1)

மலைக்குவட்டு இடிவீழ்ந்து என்ன வளைகளோடு ஆரம் ஏங்க
முலைக்குவட்டு எற்றும் கையாள் முழைதிறந் தன்ன வாயாள்
தலைக்குவட்டு அணைந்த செக்கர் சரிந்தன குழல்கள் தத்தி
உலைக்குவட்டு உருகு செம்பொத்து உதிரநீர்வழங்கும்கண்ணாள்.

வீழ்ந்தனள் அரக்கன் தாள்மேல் மென்மைத்தோள் நிலத்தைமேவிப்
போழ்ந்தனள்பெரும்பாம்புஎன்னப்புரண்டனள்பொருமிப்பொங்கிச்
சூழ்ந்தனை கொடியாய்! என்னைத் துடித்து அருந்துயர வெள்ளத்து
ஆழ்ந்தனள் புலம்பல் உற்ருள் அழக்கண்டும் அறிந்திலாதாள். (3)

புலம்பிய நிலை.

மாட்டாயோ இக்காலம் வல்லோர் வலிதீர்க்க
மீட்டாயோ வீரம் மெலிந்தாயோ தோளாற்றல்
கேட்டாய் உணர்ந்திலையோ என்உரையும் கேளாயோ
காட்டாயோ என்னுடைய கண்மணியைக் காட்டாயோ? (4)

இந்திரற்கும் தோலாத நன்மகனை ஈன்ருள்என்று
அந்தரத்து வாழ்வாரும் ஏத்தும் அளியத்தேன்
மந்தரத்தோள் என்மகனை மாட்டா மனிதன்தன்
உந்து சிலைப்பகழிக்கு உண்ணக் கோடுத்தேனே. (5)

அக்கன் உலந்தான் அதிகாயன் தான்அழிந்தான்
மிக்கதிறத் துள்ளார்கள் எல்லாரும் வீடினர்
மக்களினில் நின்றுள்ளான் மண்டோ தரிமகனே
திக்கு விசயம் இனி ஒருகால் செய்வாயோ? (6)

ஏதையா சிந்தித் திருக்கின்ருய்? எண்ணிறந்த
கோதையார் வேல்அரக்கர் பட்டாரைக் கூவாயோ?
பேதையாய்க் காமம் பிடித்தாய் பிழைப்பாயோ?
சீதையால் இன்னும் வருவ சிலவேயோ? (7)

உம்பி உணர்வுடையான் சொன்ன உரைகேளாய்!
நம்பி குலக்கிழவன் கூறும் நலம்ஓராய்!
கும்ப கருணனையும் கொல்வித்து என்கோமகனை
அம்புக்கு இரையாக்கி ஆண்டாய் அரசுஐயா! (8)

(அதிகாயன் வதை 266. 273)

தன்மகனை இழந்த துக்கத்தால் தானியமாலை துடித்துப் புலம்பியிருக்கும் நிலைகளை இவை வடித்துக் காட்டியுள்ளன. தனது கணவன் அடியில் விழுந்து அவள் கதறி அழுதுள்ளது கடுந்துயரமாய்ப் பெருகியுளது; "ஐயோ! அரசே! என் அருமை மகன் எங்கே? இனி எந்தப் பிறப்பில் அந்த அதிசய சுந்தரனைக் காண்பேன்? விண்ணையும் மண்ணையும் வென்று வெற்றி வீருேடு வாழ்ந்து வந்த என் கொற்றக் குரிசிலை இழந்துவிட்டேனே! இனி நான் உயிர் வைத்திருக்கலாமா? அண்ணலே! என் கண்

மணியை எனக்குக் காட்ட மாட்டாயா? இந்திரனையும் வெல்ல வல்ல நல்ல சுந்தரனைப் பெற்றுள்ள பெரும் பாக்கியவதி என்று அந்தரத்து அமரரும் புகழ்ந்து போற்ற மகிழ்ந்து வந்த என் வாயில் இன்று நீ மண்ணைப் போட்டுவிட்டாயே! கெட்ட வழியில் தலையிட்டமையால் குடியும் குலமும் அடியோடு அழிய நேர்ந்தனவே. குடித்தலைவனை பாட்டன் சொல்லையும் தட்டினாய்; அருமைத் தம்பியின் அறிவுரைகளையும் அவமதித்தாய்; கும்பகருணனை அவமே கொன்று தொலைத்தாய்! அக்கன் அழிந்தான்; அதிகாயன் ஒழிந்தான்; மக்களில் இனி மீதமாயிருப்பவன் இந்திரசித்து ஒருவனே; அவன் கதியும் என்னுமோ? அந்தோ! மடமையாய்க் கொடியகாமத்தில் நீ மூழ்கினமையால் உன் குலம் அழிய நேர்ந்ததே; அழிவுநிலையை விழிதிறந்து பார்க்கவில்லையே! அமரரும் அடிமையாய் ஏவல் செய்ய வாழ்ந்த குடி அவலமாய் இழிந்து அழிகின்றதே! உத்தம பத்தினியான சீதை மேல் ஆசை மூண்டபோதே குலத்துக்கு நாசம் நீண்டதே! அந்தோ! இனி என்ன கேடுகள் எல்லாம் நேருமோ?'' என்று இன்னவாறு பலவும் பன்னி அத்தலைவி புலம்பியிருப்பது பரிதாபமாய் நின்றது. உள்ளத் துயரங்கள் உயிரை வாட்டியுள்ளன.

துன்பம் என்பதே இன்னது என்று யாதும் அறியாதவள்; என்றும் இன்ப போகங்களிலேயே களித்து வாழ்ந்துவந்தவள்; தன் மகன் இறந்துபட்டான் என்று கேட்டதும் உள்ளம் துடித்து உயிர் பதைத்து இப்படி அழுது புலம்பலானாள்.

அழகண்டும் அறிந்திலாதாள்.

எனத் தானியமாலையைக் கவி இவ்வாறு வரைந்து காட்டியிருக்கிறார். வறுமை பிணி மூப்பு மரணம் முதலிய துயரங்களால் நொந்து அழுதவரை இதுவரை யாதும் பாராதவள்; துன்பத் தொடர்பு சிறிதும் தெரியாமல் இன்பக் களிப்பிலேயே இறுமாந்து வாழ்ந்துவந்தவள் என்பதை இங்கே அந்த அரசியை நாம் அறிந்துகொள்ளுகிறோம். பிறர் அழுததையும் அறியாமல் முழுதும் சுகபோகங்களிலேயே மூழ்கியிருந்தவள் இன்று நேர்ந்த துக்கத்தால் புதுமையாய் அழத் தெரிந்துகொண்டாள். தனது மகனை இழந்த கொடிய சோகம் தன் உயிரை வதைத்தமையால் தன்னுடைய கணவனை இன்னல்மீதூர்ந்து கடுத்து

வைதாள். அவன் கொண்டுள்ள தீமையான காம ஆசையால் தன் குலத்துக்கு கொடிய நாசம் வந்துள்ளது என்று குலை துடித்திருக்கிருள். அந்த உள்ளத்துடிப்புகள் உரைகளில் வெளிப் பட்டுள்ளன. நீதிமுறையை இடித்து நேரே உணர்த்தினுள்.

பேதையாய்க் காமம் பிடித்தாய்! என்றது அவனது ஈன இச்சையை இகழ்ந்து கூறியபடியாம். மேதையாய்க் காமம் துய்க்கலாம்; அவ்வாறு இனிது நுகராமல் மடமையாய் இழிந்து மறுகி உழலுகின்ருன் என்னும் நிலைமை இங்கே தெரிய வந்தது.

தானியமாலை முதலாக அழகிய மனைவியர் எவ்வளவோ பேர்கள் உழுவலன்போடு தழுவ விழைந்து விழுமிய நிலையில் எதிர்பார்த்திருக்கின்ருர்; அவ்வாறிருந்தும் அந்த உரிமையாளர் எல்லாரையும் இகழ்ந்துவிட்டு வீணே சீதையை விழைந்துபோய்க் காலடியில் வீழ்ந்து மால்கொண்டு மறுகி இலங்கைவேந்தன் இழிந்து உழலுவது கொடிய மடமையாம் என அவள் குறித்து இகழ்ந்துள்ளது கூர்ந்து நோக்கி ஓர்ந்து சிந்திக்கவுரியது.

பிழைப்பாயோ? என்றது பிழைக்கமாட்டாய்; அழிந்தே ஒழிவாய் என்பது தெளிந்துகொள்ள வந்தது. காமவெறியால் நேமநெறியிழந்து நிலைகுலைந்துள்ளான் என்று நெடுநாளா நெஞ் சம் கனன்றிருந்தாள் ஆதலால் அந்த வஞ்சம் தீர இன்று வைய நேர்ந்தாள். புத்திரனை இழந்த துக்கத்தால் உள்ளங் கொதித்து உயிர் பதைத்து வந்தவள் இப்படித் துயரத் துடிப்போடு கணவ னைக் கடுத்துப் பேசினுள். மனக்கடுப்பு உரையில்வெளிப்பட்டது.

சீதையால் இன்னும் வருவ சிலவேயோ?

நேர்ந்துள்ள இழவுகளுக்கெல்லாம் மூலகாரணத்தை ஓர்ந் துணர இங்ஙனம் உருத்துரைத்தாள். கேடுகளும் துயரங்களும் கிளர்ந்துவந்து பலவகைகளிலும் படுநாசங்களை விளைத்து நிற்கின் றன; அந்நிலைகளை ஒரு சிறிதும் உணராமல் புலைநிலையில் இழிந் திருப்பது கொடிய மடமையாம் எனக் கடுமையாக் கனன் றிருக்கிருள். நிலைமைகளை நன்கு தெரிந்தவள் நொந்து பேசினுள்.

"பொன்னுலக வாசிகளும் புகழ்ந்து போற்ற அதிசய நிலையில் ஒளி மிகுந்துள்ள இலங்காபுரி தீயால் வெந்து நோயுழந்தது; குரங்கு வைத்த தீ இலங்கை சுட்டது என்னும் நீண்ட கொடும்

பழி எங்கும் நெடிது ஓங்கி நின்றது. தம்பி மாண்டான்; பிள்ளைகள் செத்தனர்; குடும்பம் நிலைகுலைந்தது; குலமும் அழிந்து படுகின்றது; இப்படிக் கொடிய நாசங்கள் மூண்டு தொடர்ந்து அடர்ந்து படர்ந்து வந்தும் சீதைமீது கொண்ட ஆசையைவிட்டு ஒழிக்கவில்லையே! கெட்டகாலத்தின் கெடுகுறிகள் படுசாவுகளாய்ப் பாய்ந்து வருகின்றனவே! அளவிடலறிய அழிவுகள் மேலும் எதிர்நோக்கி நிற்கின்றனவே!'' என்று நெஞ்சம் கலங்கி நெடிது புலம்பி நின்றாள். தன் நாயகன் கொண்டுள்ள காமத் தீமையே தனது மகனைக் கொன்று தொலைத்தது என்று உள்ளம் கொதித்துப் புலம்பிய தானியமாலையை மேனகையும் உருப்பசியும் அணைத்துத் தேற்றி அந்தப்புரத்திற்கு அழைத்துப்போயினர்.

அதிகாயன் இறந்த துயரம் அரக்கர் குலம் முழுவதையும் அவலப்படுத்தி நின்றது. இலங்கைமா நகரம் எங்கணும் துக்கக் குறிகள் தொடர்ந்து படர்ந்தன. தன்னுடைய சொந்த அருமைப் பிள்ளையை இழந்தது போலவே ஆணும் பெண்ணும் அவலமாய்க் கவலையடைந்து நொந்தனர். மானத் துயரங்கள் மறுகி நீண்டன.

தான நகரத்து அரக்கர் தலைமயங்கிப்
போன மகவுடையார் போலப் புலம்பினார்;
ஏனை மகளிர் நிலைஎன்னாம்? போயிரங்கி
வான மகளிரும்தம் வாய்திறந்து மாழ்கினார். (1)

தாரகலத்து அண்ணல் தனிக்கோயில் தாசரதி
பேர வுலகுற்றது உற்றதால் பேரிலங்கை
ஊரகலம் எல்லாம் அரந்தை உவாவுற்ற
ஆர்கலியே ஒத்தது அழுத குரலோசை. (2)

அதிகாயனைக் குறித்து நகரமாந்தர் எவ்வளவு மதிப்பாக எண்ணி வந்துள்ளார் என்பதை இதனால் உணர்ந்துகொள்ளுகிறோம். சிறந்த சுத்த வீரத்தோடு உத்தம குணங்கள் பல அவனிடம் அமைந்திருந்தன ஆதலால் யாவரும் அவனை மிகவும் பிரியமாகப் பேணி மதித்துப் பெரிய மரியாதைகள் செய்துவந்தனர். தேவமாதரும் வாய்திறந்து அழுதனர் என்றது அவனது மேன்மையை மிக விளக்கி நின்றது. பகையினத்தாரும் உருகி அழும்படி உயர்குண நீர்மைகள் அவன்பால் பெருகியிருந்துள்ளன.

அவன் இறந்துபட்ட அன்று இலங்கைஎங்கும் அவலமான அழுகை ஒலிகளே பரவி நின்றன. இராமன் வனம்போன அன்று அயோத்தி எப்படித் துயரமாய்த் துடித்திருந்ததோ அப்படியே அதிகாயன் மாண்ட அன்று இலங்காபுரியும் கவலையாய்க் கலங்கிக் கடுந்துயருழந்து கொடும் பரிதாபமா யிருந்தது.

தாசரதி பேர உலகு உற்றது பேர் இலங்கை உற்றது.

அன்று அந்த இராசதானி அடைந்திருந்த துயர நிலையை உய்த்துணர்ந்துகொள்ளும்படி இந்த உவமை வாசகம் ஈண்டு உரிமையாய் வந்துள்ளது. தசரதனுடைய அருமைத் திருமகனோடு இராவணன் மகனை ஈண்டு இவ்வாறு ஒப்பவைத்தது அன்று தேசம் அடைந்த துக்கநிலை தெரிய. ஆவும் அழுத, அதன் கன்று அழுத, அன்று அலர்ந்த பூவும் அழுத எனத் தாசரதியைப் பிரிந்தபோது கோசலா தேசம் அழுத நிலையை இலங்கைத் தேசமும் அதிகாயனை இழந்தமையால் எய்தி நொந்தது. அந்த அவலத் துயரங்களின் அளவைக் கவி இந்தவாறு அளந்து காட்டினர். அளவுகோலில் உள்ள உளவுகள் ஓர்ந்து உணர வுரியன.

பகையினத்தின்பாலும் பரிவு கூர்ந்து தகுதியோடு ஓர்ந்து உண்மையை உரைத்து வருவது நம் கவிஞர் பிரானுடைய உயர் பெருந்தகைமையை உணர்த்தியுளது. அதிகாயனுடைய அதிசய நிலையை இடங்கள்தோறும் கவி சுவையாக விளக்கியிருக்கிறார். இவனையும் ஒரு இந்திரசித்து என்றே சொல்லவேண்டும். ஆனல் பிரம சிருட்டியில் ஒரே இந்திரன்தான் இருக்கிறான்; வேறு ஒரு இந்திரன் இல்லாமையினல் அந்தப்பேர் இவனுக்கு அமையாது போயது. இருந்தால் சின்னஇந்திரசித்துஎன்று பேர்வந்திருக்கும்.

"பின்ஓர் இந்திரன் இலாமையால் பேர் அதிகாயன்"

இவன் பேர்பெற்று இருக்கும் மேன்மையை இங்ஙனம் சீர்மையோடு குறித்திருக்கிறார். இந்தக் குறிப்பு கூர்மையோடு கூர்ந்து சிந்தித்து ஓர்ந்து உணரவுரியது. அமரர் எவரையும் வெல்லவல்ல வீரனய் வீறுகொண்டு நின்றவன் இளையபெருமாளோடு மாறுடி மாண்டான். அவனை வென்று தொலைத்தது அதிசய வெற்றியாய் விளங்கி நின்றது. அந்நிலையை இங்ஙனம்துலக்கினர்.

## பின்பு நிகழ்ந்தது.

சிறந்த சுத்த வீரனை இழந்தமையால் இலங்கைவாசிகள் யாவரும் கலங்கி நின்றனர். இன்னது செய்வது என்று தெரியாமல் மன்னனும் மறுகி யிருந்தான். இந்த அவலச் செய்தியை அறிந்து இந்திரசித்து சிந்தை துடித்தான். தந்தையிடம் வந்தான்; மரியாதையோடு வணங்கி நிகழ்ந்ததையெல்லாம் வினவி நேரே தெரிந்தான். தம்பி இறந்தான் என்ற அச்சொல்லைக்கேட்டதும் உள்ளம் பதைத்து உருத்துக் கொதித்தான். பல்லைக்கடித்து இதழை அதுக்கி விண்ணை நோக்கி வீறுமண்டி அவன் வெய்துயிர்த்து நொந்தது அல்லல் அவலங்களின் எல்லைகளை அளந்துகாட்டி நின்றது. அவனுடைய உள்ளத்துடிப்புகள் சொல்ல அரியன.

### அல்லல் உழந்தது.

சொல்லாத முன்னம் சுடரைச் சுடர்தூண்டு கண்ணன்
பல்லால் அதரத்லை அதுக்கி விண்மீது பார்த்தான்
எல்லாரும் இறந்தனரோ என ஏங்கி நைந்தான்
வில்லாளரை எண்ணின் விரற்குமுன் நிற்கும் வீரன். (1)

### கொன்றதுயார்? என்றது.

ஆர்கொன்றவர் என்றலும் பேரதி காயன் என்னும்
பேர்கொன்றவன் வென்றி இலக்குவன்; பின்பு நின்றார்
ஊர்கொன்றவனல் பிறரால் என உற்ற எல்லாம்
தார்கொன்றையினன் கிரிசாய்த்தவன் தானுரைத்தரன்.

### நீயே கொன்றாய் என்றது.

கொன்றார் அவரோ? கொலை சூழ்கென நீ கொடுத்தாய்!
வன்தானையர் மானிடர் வன்மை அறிந்தும் மன்ன!
என்றானும் எனைச்செல ஏவலை இற்றதென்ன
நின்றான் நெடிதுன்னி முனிந்து நெருப்புயிர்ப்பான். (3)

அக்கப் பெயரோனை நிலத்தொடு அரைத்துளானை
விக்கற்பொரு தூதுவன் என்று விளம்பி விட்டாய்!
புக்கத் தலைப்பெய்தல் நினைந்திலை புந்தி இல்லாய்!
மக்கள் துணை அற்றனை இற்றதுன் வாழ்க்கை மன்னே. (4)

(நாகபாசப் படலம் 5-8)

இராவணனுடைய முன்னிலையில் வந்துநின்று தம்பி இறந்துபட்டதை அறிந்து தவித்து இந்திரசித்து நொந்து கூறியிருக்கும் நிலைகளை இவை உணர்த்தியுள்ளன. இந்தக் கொலைகளும் புலைகளும் தன் தந்தையாலேயே நேர்ந்துள்ளன என்று சிந்தை துடித்துச் சீறி அவன் உரையாடியிருக்கிறான். உயர்ந்த மான வீரன் ஆதலால் தன் குடிக்கு மூண்டுள்ள ஈன இழிவுகளை எண்ணி நொந்து தந்தை என்றும் பாராமல் தாக்கிப் பேச நேர்ந்தான். "அதிகாயனைக் கொன்றது இலக்குவன் அன்று; நீயே கொன்று தொலைத்தாய்!" என்று நிட்டூரமாய்த் திட்டியிருக்கிறான். பழியான இச்சையில் இழிந்து பகையை வளரவிட்டுக் குடிக்கும் குலத்துக்கும் கொடிய இழவுகளையும் நெடிய பழிகளையும் விளைத்து முடிவு சூழ்ந்துள்ளாய்! என்று கடுமையாக இகழ்ந்து பேசியிருத்தலால் அவனுடைய உள்ளக் கொதிப்புகளையும் உறுதி மானங்களையும் உணர்ந்து கொள்ளுகிறோம். "இலங்கையுள் தூது புகுந்த குரங்கை மீளவிடாமல் மாள வதைத்து, எதிரிகளை ஏறிவராதபடி சீறி அழித்து, வீறோடு மூண்டு வேலை செய்யாமல் வீணே சோம்பியிருந்து அருமை மக்களை இழந்து சிறுமையாய் அழுது வருந்துவது கொடிய மடமையாம்" என்று கடிது கடிந்து நெடிது மொழிந்தான்.

எல்லாரும் இறந்தனரோ? என்று ஏங்கியிருப்பது அவனுடைய உள்ளப் பதைப்பை உணர்த்தியுள்ளது. வீரக்குடியில் கோரக் கொலைகள் புகுந்தனவே என்று கொதித்திருக்கிறான். உயர்ந்த உக்கிரவீரன் உள்ளம் கனன்று உளைந்து உரையாடியுள்ளது அவனுடைய உணர்ச்சி நிலைகளை உலகம் அறிய விளக்கி நிற்கிறது. சிறந்த தீரன் சினந்து மறுகியுள்ளான்.

**வில்லாளரை எண்ணின் விரற்குமுன் நிற்கும் வீரன்.**

இந்திரசித்தைக் கவி இப்படிக் குறித்துக் காட்டியிருக்கிறார். குறிப்பும் காட்சியும் கூர்ந்து நோக்கி ஓர்ந்து உணரவுரியன. உலகிலுள்ள சிறந்த வில்வீரர்களை ஒருங்கே வரைந்து எண்ணி நோக்கினால் இந்திரசித்து ஒருவனே எவரினும் முதன்மையாய் முந்தி நிற்கத் தக்கவன். அவனது தகுதியான விறலை ஒரு பகுதியான விரலில் வைத்து விளக்கியருளினார். கையில் ஐந்து விரல்கள் உள்ளன. ஏதாவது ஒரு தொகையை எண்ணும்போது முத

லில் சுண்டு விரலை மடக்குவோம். அவ்வாறு எண்ணி அளவிடும் விரலின் முன்னதாக நிற்பவன் என்பார் விறற்குமுன் நிற்கும் வீரன் என்றார். தலைமை வீரனது நிலைமை இங்கே தெரிய வந்தது.

"வில்வரு வீரம் எண்ணின் விரல்முதல் விரவிநின்றான்"

என விசயன் இசைபெற்றுள்ளமை ஈண்டு எண்ணவுரியது.

சிறந்த போர்வீரனை இந்திரசித்து தம்பி இறந்துபோனதை நினைந்து நினைந்து வருந்தி நெடிது மறுகினான். முடிவில் உறுதிசூழ்ந்து உருத்து விரைந்தான். "எனது அனுசனைக்கொன்ற மனிதனைக் கொன்று பகை வகைகளைப் பாழ்படுத்தி விரைவில் வென்றியோடு மீளவில்லையானால் நான் அரசர் குடியில் பிறந்திருந்தாலும் வரிசையிழந்து இறந்தவனேயாவேன்" என்று வீரசபதங்கள் கூறினான். அன்று அவன் கூறிய சூளுரைகள் வீரியங்கள் விரிந்து வெந்திறல்கள் நிறைந்து வீறுகொண்டு வந்தன.

## வீரசபதம்

தந்தை எதிரே நின்று தம்பியின் பிரிவுக்கு மறுகி மயங்கிப் பரிவு கூர்ந்து பரிந்துநின்றவன் பின்பு வென்றிவீறோடு விரைந்து பேசியது அவனது இயல்பான வீரத்திறல்களை விளக்கி நின்றது.

என்னின்று நினைத்தும் இயம்பியும் எண்ணியும் தான்
கொன்னின்ற படைக்கலத்து எம்பியைக் கொன்றுளானை
அந்நின்ற நிலத்தவன் ஆக்கையை நீக்கி அல்லால்
மன்னின்ற நகர்க்கினி வாரலன் வாழ்வும் வேண்டேன். (1)

மாற்றா உயிர்எம்பியை மாற்றிய மானுடன்தன்
ஊற்றார் குருதிப்புனல் பார்மகள் உண்டிலாளேல்
ஏற்றான் இகல்இந்திரன் ஈரிருகால் எனக்கே
தோற்றான் தனக்குஎன் நெடும்சேவகம் தோற்கஎன்றான்.

வெங்கண்நெடு வானரத் தானையை வீற்றுவிற்றாய்ப்
பங்கம்உற நூறி இலக்குவனைப் படேனேல்
அங்கம்தர அஞ்சிஎன் ஆணை கடக்கிலாத
செங்கண் நெடுமால்முதல் தேவர் சிரிக்கஎன்னை. (3)

பாம்பில்தரு வெம்படை பாசு பதத்தினோடும்
தேம்பற் பிறைச்சென்னி வைத்தான்தரு தெய்வவேதி

ஓம்பித் திரிந்தேதற்கு இனியின்று உதவாதுபோமேல்
சோம்பித் துறப்பேன்உயிர் சோறும் உகந்துவாழேன். (4)

மருந்தேநிகர் எம்பிதன் ஆருயிர் வௌவினானை
விருந்தேஎன அந்தகற்கு ஈகிலன் வில்லும்ஏந்திப்
பெருந்தேவர் குழாம்நகை செய்திடப் பேர்ந்து பாரில்
இருந்தேன் எனின்நான் அவ்இராவணி அல்லன்என்றான்.

இந்திரசித்து பேசியுள்ள சூளுரைகளை இவை காட்டியுள்ளன. இவ்வுரைகளால் அவனுடைய உள்ளத் திமிரும் உறுதி நிலைகளும் உணரலாகும். எவ்வழியும் வெற்றியாளனாய் வீறு கொண்டு வாழ்ந்துவந்தவன் ஆதலால் ஈண்டு இவ்வாறு வீரவாதங்கள் கூற நேர்ந்தான். "தந்தாய்! இனி இங்கே நின்று வீணே உளைந்து புலம்பிக்கொண்டிருப்பது பிழை; என் தம்பியைக் கொன்று தொலைத்த அந்தச் சின்ன மனிதனைப் பதைக்கவதைத்து அவன் உயிரை வாங்கி உடலைக் கழுகு பருந்துகளுக்கு இரையிட்டு விரைவில் வருவேன்; போர்க்களத்தில் அவனைக் கொன்று தரையில் உருட்டினாலன்றி இலங்கைக்கு நான் மீண்டுவருவதில்லை; உயிர் வாழ்க்கையும் வேண்டேன்; அவனுக்குத் துணையாக வந்துள்ள படைகளையெல்லாம் அடியோடுஅழித்து எனது குடிக்கு நேர்ந்த பழியைத் தீர்த்தபொழுதுதான் நான் இங்கே பிறந்த பயனைப் பெற்றவன் ஆவேன்; தேவராசனான இந்திரனை வென்று எங்கும் இசை பொங்க இன்பம் மீதூர்ந்து இனிது வாழ்ந்துவந்த எனது வாழ்வெல்லாம் தம்பியை இழந்த இந்த ஓர் இழிவால் பேரிழவாய் அழிவடைய நேர்ந்தன. நேர்ந்த இப் பழியை விரைந்து துடைத்து வென்றி வீறோடு நான் மீளவில்லையானால் முன்பு பெற்றிருந்த வெற்றிப்புகழ் எல்லாம் பாழாய் அழிந்துபோகட்டும்; இந்திரனுக்கும் நான் இழிந்து தோற்றவன் ஆகட்டும்; திருமால் முதலிய தேவதேவர் யாவரும் சிரிக்கட்டும். சந்திரசூட சடாதாரியாகிய சிவபெருமான் எனக்கு உரிமையோடு அருளியுள்ள பாசுபதம் என் கையில் இருக்க எனது தம்பியை இழந்து வீணே நான் இங்கே இருக்கலாமா? அரிய சிறப்புடைய அது உரிய வெற்றியை உதவாது ஒழியின் என் உயிரை உடனே ஒழித்துவிடுவேன். மதிப்பும் மாண்பும் மானமும் வீரமும் இழந்தபின் வாழ்வது ஈனமேயாம். என் தம்பியை அழித்த அந்த இலக்குவன் உயிரைக் காலனுக்கு அளித்து வெற்றித்திரு

வோடு நான் மீண்டுவரேன் ஆயின் இராவணி என்ற அந்த நீண்ட மேன்மைப்பெயர் மாண்டுபோகக் கடவது; இராவணன் மகன் என்ற மதிப்பும் எனக்கு இல்லாமல் போகட்டும்; நானும் இறந்துபட்டவனுகவே யாண்டும் பழிநீண்டு பறந்து படட்டும்'' என இன்னவாறு இந்திரசித்து சூள் உரை புகன்று மீளிமை யோடு தந்தையை வணங்கி விடைபெற்று எழுந்தான்.

அவனுடைய மனக்கொதிப்பும் மானத்துடிப்பும் வீரத்திற லும் உரைகள் தோறும் ஒளி வீசி நிற்கின்றன. துக்கத்தொடர் போடு தோய்ந்து உக்கிரவீரங்கள் உருத்து வெளி வந்துள்ளன

மருந்தே நிகர் எம்பி.

என்று தன் தம்பியை இப்படி விழைந்து பாராட்டியிருக் கிருன். உரிமையும் அன்பும் பெருமை பெற்றுள்ளன.

அமிர்தம்போல் இனியனுய் அந்த இளையவன் இந்த அண் ணனுக்கு உவகை தந்து வந்துள்ளான் என்று தெரிகின்றது. உரிய துணைவர்களுடைய பிரிய வாழ்க்கைகள் உரைகளில் வெளி வந்துள்ளன. மருந்து அனைய தம்பி இறந்து போனுனே! என்று வருந்தி அழுதிருக்கிருன். அத்துயரத் துடிப்பை அடக்கிக் கொண்டு உயர் வீர நிலையில் உருத்துச் செயல்புரியும் சபதங்களை அயலவர் அறிய ஆங்காரத்தோடு அவன் நேரே கூறினுன்.

தனக்கு உறுதித் துணையாய் அமைந்துள்ள தெய்வீக ஆயு தங்கள் அவனுக்குப் பெரிய ஊக்கத்தை ஊட்டியுள்ளன. அவ் வுண்மை உரைகளில் பெருகி எழுந்து உலகம் உணரவந்தன.

பாம்பில்தரு வெம்படை பாசுபதம்.

என்றது நாகபாசத்தையும், சிவாத்திரத்தையும் குறித்து நின்றது. சிவபெருமானை அதி தேவதையாக் கொண்டுள்ள அம்பை அவன் மிகவும் துதிசெய்துள்ளான். பசுபதி அருளியது பாசுபதம் என வந்தது. பெயரால் அதன் உயர்வு விளங்கியது.

அற்புத நிலையில் அதிசயமான தெய்வப் படைக்கலன்கள் தன்பால் இருந்தும் தனது தம்பியை ஒருமனிதன் கொன்றுவிட் டானே! என்று குமுறியிருக்கிருன். வெம்பி வெதும்பி வெய் துயிர்த்து நின்றவன் வீறுகொண்டு கூறி நேரே சீறி வந்தான்.

போர்க்கோலம்.

தந்தையைத் தொழுது தனது அரண்மனைக்கு வந்தவன் விரைந்து போருக்கு ஆயத்தமாயினன். தங்கள் சக்கரவர்த்தி மகன் அமருக்கு மூண்டான் என்றதும் அரக்கர் திரள்கள் யாண்டும் ஆரவாரமாய் ஆர்த்தெழுந்தன. நால்வகைச் சேனைகளும் கால்வகுத்து அடர்ந்தன. கடல் ஒலிகள்போல் எவ்வழியும் அடல் ஒலிகள் மண்டின. இந்திரசித்து உடைவரிந்து கட்டி, மார்பில் கவசம் புனைந்து, தோளில் அம்புப் புட்டில் இறுக்கி, வீரக்கழல் வனைந்து வில் எடுத்து வீரகம்பீரமாய் எழுந்தான். அவன் ஏறிச் செல்வதற்கு உரிய தேர் அரண்மனை வாசல் முன் அலங்காரமாய் வந்து நின்றது. சிங்க ஏறுகள் பல பூட்டியிருந்த அந்தத் தேரை நோக்கித் தேவர் யாவரும் அஞ்சி "ஆவது என்னுமோ?" என்று அயர்ந்து நின்றனர். வீரப் போர்க்கோலத்தோடு வந்து இந்திரசித்து இராச கம்பீரமாய் அந்தத் தேரில் ஏறினன். அப்பொழுது வெற்றிச் சின்னங்கள் ஊதின; சங்கங்கள் முழங்கின; வாழ்த்தொலிகள் யாண்டும் நீண்டு கிளர்ந்து நெடிது கலித்தன. அவனுடைய இரதத்தின் சிகரத்தில் கட்டியிருந்த விருதுக்கொடி பொருதிறங்காட்டி போர்க்கோலம் நீட்டி வெருவரு திறலோடு வீறுகொண்டு ஆடியது.

ஏயாத்தனிப் போர்வலி காட்டிய இந்திரன்தன்
சாயாப் பெருஞ்சாய்கெடத் தாமபுகளால் தடந்தோள்
போயார்த்தவன் வந்தனன் வந்தனன் என்று பூசல்
பேயார்த் தெழுந்து ஆடுநெடுங்கொடி பெற்றதம்மா! (1)

அத்தேரினை ஏறியது ஒப்பனா ஆயிரம்தேர்
ஒத்தேய்வன சேமம தாய்வர உள்ளம் வெம்போர்ப்
பித்தேறினன் என்ன நடந்தனன் பின்பலால்மற்று
எத்தேவரையும் முகம் கண்டறியா ஈட்டான். (2)

அன்றைநெடு போகிய தானை அறிந்து கூற
என்றால் அரிதேனும் இயம்பு வான்மிகன்என்னும்
நன்றன் மறையான் அது நாற்பது வெள்ளம்என்னச்
சொன்னன் பிறர்யாரஃதுணர்ந்து தொகுக்க வல்லார். (3)

தேர்ஆயிரம் ஆயிரகோடிதன் மாடுசெல்லப்
பேரரானை புறந்தின் அவற்றின் இரட்டிபோதக்

தாரார் புரவிக்கடல் பின்செலத் தானைவீரப்
பேராழி முகம்செலச் சென்றனன் பேர்ச்சியில்லான். (4)

இந்திரசித்து தேர்மேல் ஏறிப் போர்மேல் சென்றிருக்கும் நிலையைக் கவி இங்ஙனம் காட்டியிருக்கிறார். அதிசயமான வீரக் காட்சிகள் வியந்து நோக்கவந்துள்ளன. அமரர்கோனை வென்ற அற்புதவீரன் அளவிடலரிய சேனைகளோடு சமரபூமியைநோக்கி வந்தது அமரர்முதல் யாவரும் அஞ்சி அயரும்படி உக்கிர வீரமாய் ஓங்கி நின்றது. யாண்டும் வெற்றியே கண்டவன் வீறுகொண்டு தேர் ஊர்ந்துவந்தான் ஆதலால் அவனுடைய சீரும் சிறப்பும் வீரப்பிரதாபமும் நேரே தெரிய வந்தன.

எத்தேவரையும் முகம்கண்டு அறியா ஈட்டான்.

இந்திரசித்தனது சுத்த வீரத்தையும் வித்தக வெற்றியையும் இது விளக்கியுள்ளது. தன்னோடு போராட நேர்ந்த தேவர் யாவரும் புறமுதுகு காட்டி ஓடியுள்ளமையால் முகம் கண்டு அறியான் என்றார். அவனது வெற்றித்திறலின் நிலையை இப்படி வித்தக விநோதமா விளக்கியுள்ளார். இந்திரனை வென்ற வீரசுந்தரன் வருகின்றான்! என்று வழி எங்கும் பேய்கள் ஆரவாரம் செய்யப் பெருமேன்மையோடு பொருமுகம் நோக்கி வந்தான். சேமத் தேர்கள் பல்லாயிரம் சேர்ந்துவந்தன. சேனைக்கடல்கள் இடங்கள்தோறும் பரந்து விரிந்து செறிந்து நடந்தன. யாண்டும் தூளிப்படலங்கள் நீண்டு விரியப் பேரொலிகள் பெருகப்படைகள் மூண்டு வருதலைக் கண்டு இலக்குவன் வீடணனை நோக்கி வினவ நேர்ந்தான். வினவிய நிலை விநயம் மிகவுடையது.

இலக்குவன் நிலை.

அதிகாயனைக் கொன்று முடித்தவுடன் அந்த வென்றி நிலையில் இளையவன் அண்ணனிடம் செல்லவில்லை. மூண்டுவந்து பொருது மாண்டுபோனவன் இலங்கைவேந்தனுடைய அருமை மகன் ஆதலால் மீண்டும் உடனே பெரிய படைகளோடு அரிய தலைவர்கள் வருவார்கள் என்று இலக்குவன் கருதி ஆண்டே நின்றான். எய்திய வெற்றியை எளிதாகநினைந்து மேலும் போரை விரும்பி அந்தப்போர்க்களத்திலேயே அமர்ந்து சேனைகளை எதிர் நோக்கியிருந்த இந்த வீரமகனுடைய மன நிலையையும் வித்தகத்

திறலையும் வியந்து மகிழ்கின்றோம். யாரும் வெல்லமுடியாதவனை வென்றவன் எவரும் சொல்ல முடியாத அருந்திறலாண்மையோடு அங்கே பொருந்தி நின்றான். இவனது கருத்தும் குறிப்பும் கருதரும் நிலையில் பொருதிறம் நாடி உறுதி கூடியுள்ளன.

### நின்ற நிலை.

நின்றனன் இலக்குவன் களத்தை நீங்கலன்
பொன்றினன் இராவணன் புதல்வன் போர்க்குஇனி
அன்றவன் அல்லனேல் அமரர் வேந்தனை
வென்றவன் வரும்என விரும்பும் சிந்தையான். (1)

### வினவிய விதம்.

யார்இவன் வருபவன்? இயம்பு வாயென
வீரவெந் தொழிலினான் விளம்ப வீடணன்
ஆரிய! இவன்இகல் அமரர் வேந்தனைப்
போர்கடந்தவன் இன்று வலிதுபோர் என்றான். (2)

### வீடணன் உரைத்தது.

எண்ணினது உணர்த்துவது உளதுஒன்று எம்பிரான்
கண்ணகன் பெரும்படைத் துணைவர் காத்திட
நண்ணின துணையொடு பொருதல் நன்றுஇது
திண்ணிதின் உணர்தியால் தெளியும் சிந்தையால். (3)

மாருதி சாம்பவன் வான ரேந்திரன்
தாரைசேய் நீலன்என்று இனைய தன்மையார்
வீரர்வந் துடனுற விமல நீநெடும்
போர்செயத் தகுதியால் புகழின் பூணினாய்! (4)

பல்பதி னாயிரம் தேவர் பக்கமா
எல்லையில் சேனைகொண்டு எதிர்ந்த இந்திரன்
ஒல்லையின் உடைந்தன்ன உயிர்கொண் டுய்ந்துளான்
மல்லலந் தோளினாய்! அமிழ்தின் வன்மையால். (5)

இனியவை மறையுமோ இந்திரன் புயப்
பனிவரை யுளநெடும் பாசப் பல்தழும்பு
அனுமனைப் பிணித்துளன் ஆனபோது அவன்
தனுமறை வித்தகம் தடுக்கற் பாலதோ? (6)

என்றவன் இறைஞ்சலும் இளைய வள்ளலும்
நன்றென மொழிதலும நணுகி னாரோ

வன்றிறல் மாருதி இலங்கைக் கோமகன்
சென்றனன் இளவல்மேல் என்னும் சிந்தையான். (7)

கூற்றமும் கட்புலம் புதைப்பக் கோத்தெழு
தோற்றமும் இராவணி துணிபும் நோக்குரு
மேற்றிசை வாயிலை விட்டு வெங்கடுங்
காற்றென அனுமனும் கடிதின் வந்தரோ. (8)

அங்கதன் முன்னரே ஆண்டையான் அயல்
துங்கவன் தோளினர் இவரும் சுற்றினர்
செங்கதி ரோன்மகன் முன்பு சென்றனன்
சங்கநீர்க் கடலைத் தழீஇய தானையான். (9)

மூண்டுவந்த சேனைகளோடு அதிகாயனை அழித்து வெற்றி பெற்ற இலக்குவன் மீண்டு தமையனிடம் போகாமல் ஆண்டு அப்போர்க்களத்திலேயே நிலைத்திருந்தான். அனுமான் அங்கதன் முதலிய வானர வீரர்கள் யாவரும் பிரிந்துபோய் அவர் தம் இடங்களில் நின்றனர். விபீடணன் மாத்திரம் இளையவனுடன் இருந்தான். அந்தநிலையில் இந்திரசித்தன் சேனைகள்வந்துள்ளன. தம்பி மாண்டுபட்டமையால் அவன் நீண்ட செருக்கோடுமூண்டு வருவான் என்றே இந்த ஆண்டகை கருதி அருந்திறலாண்மை யுடன் ஆண்டுநின்றுள்ள துஉண்டுவாய்மொழியால்தெரியவந்தது.

அமரர் வேந்தனை வென்றவன் வரும்
என விரும்பும் சிந்தையான்.

இந்திரசித்தனை எதிர்நோக்கி இலட்சுமணன் அங்கே இருந்தநிலையை இதனால் உணர்ந்து கொள்ளுகிறோம். விரும்பும் சிந்தையான் என்றதனால் போர்வேட்டுநின்ற வீரவேட்கை வெளிப் பட்டு நின்றது. வெற்றிக் குரிசில் நிலை வியப்பா விளங்கியுள்ளது.

அதிகாயனை வென்று முடித்தவுடன் இந்த வீரத்தம்பி இராமனை அடைந்திருக்கலாம். அவ்வாறு போகாமல் மேலும்போராடவருவாரை ஆவலோடு எதிர்நோக்கி அங்கு அமர்ந்திருந்தது அதிசய வியப்பாயுள்ளது. சுத்த வீரத்தின் தத்துவ நிலைகளும் வித்தக ஆண்மைகளும் ஈங்கு நன்கு உய்த்துணரவுரியன.]

இவ்வீரமகன் கருதி நின்றபடியேபடைகள் படர்ந்துவரலாயின. அந்தச் சேனைகளின்பெருக்கத்தையும் ஆரவாரங்களையும் நோக்கி

"வருபவன் யார்?" என்று அருகேயிருந்த விபீடணனிடம் கேட்டான். அவன் யாவும் விவரமா விளக்கி நேரே சொன்னான்.

வீரவெந்தொழிலினன் என இலக்குவனை இங்கே குறித்திருப்பது இவனது நீர்மை நிலைமைகளை நெடிது தெரியவந்தது. போராடலை உல்லாசமான விளையாடலாகவே கருதி உவந்து உறுதி சூழ்ந்துள்ளான். தன்னை எவரும் வெல்லமுடியாது; தான் எல்லாரையும் எளிது வென்று விடலாம் என்னும் வீரத்துணிபு இவன் உள்ளத்தில் வீறுகொண்டிருத்தலை உரையும் செயலும் துறைகள் தோறும் உணர்த்தி உறுதி கூர்ந்து வருகின்றன.

பகை இனத்தைப் பாழாக்கி அண்ணியை மீட்டி அண்ணனை மகிழவைக்கவேண்டும் என்றே கண்ணும் கருத்துமாய் உறுதிபூண்டு உழைத்துவருகிறான். பொருமுறைகிடைத்தபோது பெருமகிழ்ச்சி யடைகிறான். ஒருவனை வெல்லவந்தவன் பலரையும் வெல்ல விழைந்து வீறுகொண்டு தேறி நிற்கின்றான்.

அந்நிலையில் வருபவனுடைய நிலைமையை விளக்கித் தலைமையைத் துலக்கி விபீடணன் உரையாட நேர்ந்தான். ஆரிய! என்று விளித்தது சீரிய மேன்மை வாய்ந்துள்ளவனே! என்று கூறிய படியாம். நீதிமுறை தழுவித் தருமநெறி ஒழுகிக் கருமம் புரிந்து வரும் காரிய நீர்மை ஆரிய! என்றதனால் அறிய வந்தது. நேர்ந்த பகைவரை நிலைகுலைத்துச் சார்ந்த துணைவனுக்கு ஆர்ந்த வெற்றியை அருள இக்கொற்றக் குரிசில் ஓர்ந்து வினை புரிந்து வருகிறான். கருமத் துணைவனாய் உரிமை கூர்ந்துள்ள வீடணன் இத் தருமத் தம்பிக்கு எதிரியின் மருமங்களையெல்லாம் வகைதொகையாகவரைந்து விளக்கினான்: "பொருவருபொருந! இதுபொழுது இங்கே போருக்கு வருபவன் யாருக்கும் அடங்காத அதிசய வீரன். தேவருலகை வென்று தேவர்கோனைச் சிறைபிடித்து வந்தவன். இலங்கை வேந்தனுடைய தலைமைப் புதல்வன். இந்திரசித்து என்னும் பேரினன். மந்திர சித்திகள் வாய்ந்தவன். வில்லாடலில் எல்லையில்லாத வலியினன். எவ்வழியும் வெற்றியே கண்டவன். அவன் உக்கிரவேகமாய் உருத்து மூண்டுவருகிறான்; கடும்போர் நேர்ந்துள்ளது; நாம் தனியே நின்று எதிர்க்கலாகாது; தக்க துணைகளோடு சேர்ந்தே தாக்கவேண்டும்; வருகிறவன் போர்வீரத்தோடு அரிய பல மாய வேலைகளிலும் வல்ல

வன் ஆதலால் நாம் யாண்டும் மிக்க எச்சரிக்கையாய் நிற்க வேண்டும்'' என உரைத்த விடணன் ஆண்டுநின்றபடியே யாவரும் விரைந்து வந்து சேரும்படி ஏவலாளை ஏவினன். எல்லாரும் ஒல்லையில் வந்தனர். மேற்குக் கோட்டை வாசலில் வானரசேனைகளோடு மூண்டு நின்ற அனுமான் இந்திரசித்து தேர் ஏறிப் போர்மேல் வருகின்றான் என்று அறிந்ததும் அதிவேகமாய் இளையவன் அருகே வந்து நின்றான். அந்த அஞ்சனைச் சிங்கத்தைக்கண்டதும் சுமித்திரைச்சிங்கம் பெருமகிழ்ச்சிகொண்டது. சுக்கிரீவன் அங்கதன் நீலன் குமுதன் முதல் யாவரும் படைகளோடுவந்து அடலாண்மை பூண்டு யாண்டும்அடர்ந்து நின்றார்.

போர்மேல் மூண்டு வருகிறவன் இதுவரையும் யாரிடமும் தோலாத அதிசய வீரன்; அவனை வென்றால் பகை முழுவதையும் வென்று வெற்றிபெற்றபடியாம் என்று உற்ற நிலைகளையெல்லாம் உய்த்துணர உணர்த்திய விபீடணன் படைகளை யாண்டும் அடைவுடன் நிறுத்தி இளையவன் அருகே உழுவலன்போடு ஊக்கி எவ்வழியும் வினைவிளைவுகளை நோக்கி நின்றான்.

போர்நிலை.

இந்திரசித்து போராட வந்துள்ளான் என்று அறிந்ததும் அந்தரவாசிகள் யாவரும் சிந்தை கலங்கினும் அதிசய ஆடல்களைக் காண விழைந்து மேலே ஆவலோடு கூடி நின்றனர்.

கண்ணினால் மனத்தினால் கருத்தினால் தெரிந்து
எண்ணினால் பெறுபயன் எய்தும் இன்றுஎன
நண்ணினார் இமையவர் நங்கை மாரொடும்
விண்ணினோடு உறைவிடம் வெறுமை கூரவே. (1)

ஒத்திரு தானையும் உடற்ற உற்றுழி
அத்தனை வீரரும் ஆர்த்த ஆர்கலி
நத்தொலி முரசொலி நடுக்க லால்தலை
பொத்தினர் செவிகளைப் புரந்தராதியர். (2)

இலங்கையில் மூண்ட போரைக் காண விழைந்து ஆகாய வாசிகள் நீண்டு நெருங்கி வானம் எங்கணும் நேரே நிறைந்திருக்கும் நிலையை இவை குறித்துள்ளன. நாம் கண்பெற்றபயனை இன்று காணலாம் என்று விண்பெற்றிருந்தவர் வேணவாவோடு விரைந்து கூடியிருத்தலால் அன்று இந்த மண்பெற்றிருந்த

போரை நாம் எண்பெற்று உணர்ந்து இனிது உவந்துகொள்ளுகிறோம். தேவர்முதல்யாவருக்கும் அதிசயமான போர் இலங்கை அயலே விளைந்து நின்றது. எவ்வழியும் வீர ஒலிகள் முழங்கின.

சமர் மூண்டது.

இருதிறப்படைகளும் பொருதொழிலில்மூண்டன. கொடிய படைக்கலங்களைக் கொண்டு அடுமுரணோடு ஆர்த்து அமராடவே யாண்டும் கொலைகள் நீண்டு நிமிர்ந்தன. நால்வகைச் சேனைகளினும் கால்வகுத்துப் புகுந்து வானரங்கள் கொதித்துக் கொன்றன. அரக்கர்களும் குரங்குப்படைகளைக் கொடுமையாக் கொன்று குவித்தனர். மாறி மாறி எங்கும் கொலைகள் மீறிவிழுந்தன. இரு திறத்தாரும் பொருதிறத்தோடு பொங்கி மாண்டனர்.

அரக்கர் அழிந்தது.

வாள்களில் கவிக்குல வீரர் வார்கழல்
தாள்களைத் துணித்தனர்; தலையைத் தள்ளினர்;
தோள்களைப் பிரித்தனர்; உடலைத் துண்டவன்
போழ்களில் புரட்டினர் நிருதர் பொங்கினர். (1)

வானரர் வதைத்து.

பிடித்தன நிருதரைப் பெரிய தோள்பெயர்த்து
ஒடித்தன; கால்விசைத்து உதைத்த; உந்தின;
கடித்தன கழுக்தறக்; கைகளால் எடுத்து
அடித்தன; அரைத்தன; ஆர்த்த வானரம். (2)

மரங்களில் அரக்கரை மலைகள் போன்றுயர்
சிரங்களைச் சிதறின உயிரைச் சிந்தின
கரங்களைச் கழல்களை ஒடியக் காதின
குரங்கெனப் பெயர்கொடு திரியும் கூற்றமே. (3)

சுடர்த்தலை நெடும்பொறி சொரியும் கண்ணன
அடற்றலை நெடுமரம் அற்ற கையன
உடற்றலை வயிரவேல் உருவ உய்த்தவர்
மிடற்றினைக் கடித்துடன் விளிந்து போவன. (4)

கொலைமத கரியன; குதிரை மேலன;
வலமணித் தேரன; வாளின் மேலன;
சிலைகளின் குடுமிய; சிரத்தின் மேலன;
மலைகளிற் பெரியன குரங்கு உலாவுவ. (5)

அரக்கர் குழாங்களும், குரங்கினங்களும் கொதித்துப் போராடிக் கொலையுண்டு மாய்ந்துள்ள நிலைகளை இவை காட்டியுள்ளன. பிணமலைகளும் இரத்த வெள்ளங்களும் இடங்கள் தோறும் நிறைந்து பெருகிப் போரின் வலிகளையும் கொலைகளின் நிலைகளையும் அளவுசெய்து நின்றன. எவ்வழியும் இழவுகள் ஏறவே சேனைத்தலைவர்கள் சீறி ஏறினர். சுக்கிரீவன் அனுமான் அங்கதன் குமுதன் நீலன் முதலிய சேனாதிபதிகள் யாவரும் ஆனமல் ஏறி அடுதொழில் ஆடினர். நிருதர்களில் தலைசிறந்த பெருவீரர்கள் எல்லாரும் பொங்கி மூண்டு பொருதனர். எங்கும் வெற்றிபெற்று வீறுகொண்டுவாழ்ந்துவந்த அரக்கர் அன்று அங்கே சீரழிந்து செத்து வீழ்ந்தனரேயன்றிப் போரில் ஒன்றும் வெற்றிபெருது போயினர். கடல்போல் கொதித்துவந்த அப் படைகளையெல்லாம் வானரவீரர் உடல்வேறு உயிர்வேறு ஆக்கி அடலாண்மை புரிந்து ஆர்த்துவந்தது அதிசய வியப்பாய் நின்றது. ஒரு வானர வீரனுல் பல நிருதர்கள் அழிந்துபட்டனர்; அப்பாடு அவரது அழிவுகால நிலையை விழிதெரிய விளக்கி நின்றது. என்றும் எங்கும் வென்றியாளராய் விருதுபெற்று வந்த நிருதர் அன்று குரங்குகளோடு பொருது குலத்தோடு பொன்றி முடிந்தது நிலத்தோடு நேர்ந்த பெரிய அதிசயமாய் நிலவியது.

## இந்திரசித்து மூண்டது.

தனது குலச்சேனைகள் கொடுமையாய் அழிந்துபடுவதைக் கண்டதும் இந்திரசித்து உள்ளம் கொதித்து உருத்துச் சினந்து தேரைக்கடாவிப் போருள் புகுந்தான். நேரெதிர்ந்து நின்றவர் எவரும் நிலைகுலைந்து அழியும்படி சிலை வளைந்தது. அவனுடைய வில்லிலிருந்து விடுபட்ட பாணங்கள் வானரங்களை வதைத்து வீழ்த்தி வானகம் எங்கணும் ஓடி நீடின. பிடித்தது ஒருவில்; தொடுத்தது பலகணைகள்; அடுத்து அடர்ந்த கவிக்குலங்கள் துடித்து வீழ்ந்து துள்ளி மடிந்தன. அவன் மூண்டு பொருத சிறிது நேரத்துள் பல்லாயிரக் கணக்கான வானரங்கள் மாண்டு மடியவே வானவரும் நெஞ்சம் கலங்கி நெடிது மறுகினர். உற்ற படைகளை முற்றும் அழித்து வெற்றிபெற்றான் எனக் கொற்றங்கள் குலாவி எங்கும் உறுதிகள் பொங்கி நின்றன.

சுற்றும்வந்துகவி வீரர்வீசிய சுடர்த்தடங்கல்வரை தோன்மரம்
இற்றெறிந்து பொடியாய்திர்ந்தன எழுந்துசேணிடை இழிந்தபோல்
வெற்றிவெங்கணை படபடத்தலைகள் விண்ணினூடு திசைமீதுபோய்
அற்றெழுந்தன விழுந்துமண்ணிடை அழுந்துகின்றன அனந்தமால்.

சிலைத்தடம்பொழி வயக்கடும்பகழி செல்லவொல்கினர் சினத்தினல்
உலைத்தெறிந்திட எடுத்தகுன்றுதொறுடற்பரங்கள்கொடு ஒதுங்கினர்
நிலைத்துநின்றுசின முந்துசெல்லஎதிர் சென்றுசென்றுற நெருக்கலால்
மலைத்தலங்களொடு உரத்தலம் கழல ஊடுசென்றபல வாளியே, (2)

முழுத்தம்ஒன்றில்ஒரு வெள்ளவானரம் முடிந்துமாள்வன தடிந்து
போய்க்
கடுத்தகையநிமிர் காலவாலபல கண்டமானபடி கண்டுநேர்
எழுத்தொடர்ந்தபடர் தோள்களால்எறிய எற்றவுற்றன எழுந்துமேல்
விழுத்தபைந்தலைய வேணுமால்வரைகள் வீசிவீசியுடன் வீழுமால்.(3)

அற்றபைந்தலை அரிந்துசென்றன அயிற்கடுங்கணை வெயிற்கள்போல்
புற்றடைந்தகொடு வெவ்வராவின்நெடு நாகலோகமது புக்கவால்
வெற்றவெள்ளிடை விரிந்துபோவதொரு மேடுபள்ளம் வெளிஇன்மை
யால்
உற்றசெங்குருதி வெள்ளமுள்ளதிரை ஓதவேலையொடும் ஒத்ததால்.

விழிக்குமேல்விழிய; நிற்கின்மார்பிடைய; மீளுமேல்முதுக; மேனிய
கழிக்குமேல்;உயர ஓடுமேல்நெடியகால; வீசினிமிர் கையவாய்த்
தெழிக்குமேல் அகவுநாவ; சிந்தையினஉன்னுமேல்; சிகரம்யாவையும்
பழிக்குமேனிய குரக்கின்மேலவன் விடும்கொடும்பகழி பாயவே. (5)

மொய்யெடுத்தகணை மாரியாலிடைமுடிந்ததொன்றுமுறை கண்டிலார்
எய்விடத்தெறியும் நாணின்ஓசையலது யாதும்ஒன்று செவியுற்றிலார்
மெய்யெடுத்தகவி வெள்ளம்யாவையும் விழுந்துபோனவெனும் விம்ம
லால்
கையெடுத்தன குரங்கின் ஓடுமுறை கண்டுதேவர்கள் கலங்கினர். (6)

இந்திரசித்தினுடைய பாணப்பிரயோகங்களால் வானரங்கள் அழிந்துபட்டுள்ள நிலைகளை இவை வரைந்து காட்டியுள்ளன. அவனது வில்லாடல் எல்லையில்லாதபடி பகழிகளை ஏவிப் படைகளைப் படுநாசம் செய்திருத்தலால் அதன் அடுதிறலாண்மையும் அதிசய வேகமும் அறியவந்தன. வானர வீரர்கள் அடர்ந்துநின்று தொடர்ந்துஎறிந்த கருவிகளையெல்லாம்துணித்து வீழ்த்தி அவரைப் படுகொலைசெய்து பாரில் கிடத்தியிருக்கிருன். ஒரு வெள்ளம் வானரங்கள் செத்துமடிந்தன என்றதனல் அவனுடைய வித்தகப் போர்வலியை உய்த்துணர்ந்துகொள்ளலாம்.

பாணங்கள் பாய்ந்த வழியெல்லாம் மாய்ந்து விழுந்து மாண்டு போயுள்ளனர். பகழிகளோடு தலைகள் வானிலும் பறந்து மண்ணில் உருண்டிருக்கின்றன. எங்கிருந்து எப்படி அம்புகள் வருகின்றன என்று யாரும் காணமுடியவில்லை. வானரங்கள் பிணமலைகளாய்ச் செத்து மடிவதையே தேவரும் கண்டனர்; திகைத்து நின்றனர். திகிலும் அச்சமும் எங்கும் செழித்து நின்றன.

விழிக்குமேல் விழிய; நிற்கின் மார்பிடைய.

என்றது போரிடை நேர்ந்த புலன் தெரிய வந்தது. இந்திரசித்தின் அம்புகள் பாய்ந்திருக்கும் பாய்ச்சலை இங்கே கூர்ந்து ஓர்ந்துகொள்ளுகிறோம். எதிர்த்து விழித்தால் பகழிகள் விழிகளை ஊடுருவி ஓடுகின்றன; நேரே நின்றால் மார்புகளைத் துளைத்துச் செல்கின்றன; மாறித் திரும்பினால் முதுகுகளைப் பிளந்துபோகின்றன; மேலே தாவினால் கால்களைத் துணித்து வீழ்த்துகின்றன; பக்கத்தே அசைந்தால் தோள்களை அறுத்துத் தள்ளுகின்றன: உருத்து ஆரவாரித்தால் நாக்குகளைப் போக்கிவிடுகின்றன; கடுத்துச் சினந்தால் தலைகளைத் தரையில் உருட்டுகின்றன; இன்னவாறு என்னவகையிலும் யாதும் செய்யமுடியாதபடி அம்புகள் வானரங்களை அழித்து ஒழித்து வானவீதிகளில் உலாவின.

கணைமாரியால் கவிவெள்ளம் விழுந்துபோன.

அதிசய ஆற்றலுடைய அந்தப் போர்வீரன் அப்பு தொடுத்துள்ளதும், வானரங்கள் அழிந்துபட்டுள்ளதும் இதனால் தெளிந்துகொள்கிறோம். அளவிடலரியபடி மழைபோல் பாணங்களைக் கொதித்துப் பொழிந்திருக்கிறான்; அந்த நிலையைக் கணைமாரி என்னும் சொல் காட்டி நின்றது. கூரிய பாணங்களை இவ்வாறு மாரிபோல் சொரிந்துள்ளமையால் வானர சேனைகள் மாண்டு மடிந்தன. அவனுடைய உக்கிர வீரங்கள் நீண்டு நிமிர்ந்தன.

சுக்கிரீவன் துளங்கியது.

அந்த அழிநிலையை அறிந்ததும் சுக்கிரீவன் உள்ளம்கொதித்து உருத்து மூண்டு நெடிய ஒரு தண்டைக் கையில்கொண்டு அரக்கர் படையை மோதி முனிந்து இந்திரசித்தனை நேரே எதிர்த்தான். நெடிய மராமரத்தால் கொடிய போர்புரிந்து தன் இனத்தைக் கடுத்து அழித்துத் தன் எதிரே சுழித்துவந்த இந்த வானர

வேந்தனை அந்த மானவீரன் யாதும் மதியாமல் அடுகணைகளை ஏவிப் படுதுயர் செய்தான். நெற்றியிலும் மார்பிலும் பாணங்கள் ஊடுருவி ஓடின. ஓடவே சுக்கிரீவன் உள்ளம் கனன்று தள்ளாடி நின்றான். மானக் கொதிப்போடு மறுகி விரைந்து ஓர் வயிரத் தண்டை வாரி எடுத்து நேரே வீசினான்; வீசிய அதனைத் தூள்படுத்தி மேலும் பகழிகளைக் கடுத்துத் தொடுத்தான்; மேனி முழுதும் சோரி நீர்சொரிய மெய் அயர்ந்து நின்றான்.

## அனுமான் பாய்ந்தது.

கவிக்குல வேந்தன் கடுந்துயர் அடைந்ததைக் கண்டதும் அனுமான் நெடும் பரிவோடு விரைந்து பாய்ந்து இந்திரசித்தின் எதிரே மூண்டு நீண்ட குன்றம் ஒன்றை வென்றிவீறோடு நேரே வீசினான். வீசிய அக்கிரி சுக்கல் சுக்கலாய் நீறுபட்டழிந்தது.

அக்கணத்தனுமன் ஆலகாலம்என லாயதோர் வெகுளி ஆயினான்
புக்கனைத்துலக முங்குலுங்கநிமிர் தோள்புடைத்துருமு போலுரு
இக்கணத்தவன் இறக்கும்என்பதுஒரு குன்றெடுத்துமிசை ஏவினான்
உக்கதுஅக்கிரி சொரிந்தவாளிகளின் ஊழிலாதசிறு பூழியாய்.

உக்கிரவீரத்தோடு பாய்ந்து உருத்து எறிந்தமலை தூளியாய் ஒழியவே அனுமானை நோக்கி இந்திரசித்து ஆங்காரத்தோடு கொதித்தான். வேறு மரங்களை வாரி எடுக்க ஒல்லையில் அயலே தாவிய இவ்வல்லவனைத் தடுத்து நிறுத்தி அவ் வில்வீரன் வீறோடு வீரவாதம் கூறினான். அவன் சொல்லாடிய உரைகள் துடுக்கும் மிடுக்கும் தோய்ந்து வீரவெறி காய்ந்து வீறோடு வந்தன.

## இந்திரசித்து உரைத்தது.

நில்லடா சிறிதுநில்லடா! உனை நினைத்துவந்தனன் முனைக்குநான்
வில்லெடாமை நினதுஆண்மைபேசி உயிரோடுநின்று விளையாடினாய்!
கல்லடா நெடுமரங்களோ வரு கருத்தினேன் வலிகடப்பநீ
சொல்லடாஎன இயம்பினான்இகல் அரக்கன்ஐயன் இவை சொல்லினான்.

அனுமானை நோக்கி இந்திரசித்து இவ்வாறு பேசியிருக்கிறான். உள்ளக் கடுப்புகள் உரைகளில் வெளிப்பட்டுள்ளன. வில்லைத் தொடுப்பவன் எள்ளல் குறிப்போடு சொல்லைத் தொடுத்திருக்கிறான். "அடே! குரங்கே ஓடாதே! எதிரே நில்; நீ காட்டுக் குரங்கானாலும் புத்தியும் தந்திரயுத்திகளும் உன்னிடம்நிறைந்

திருக்கின்றன. சுத்த வீரனை இந்திரசித்து ஆயுதம் இல்லாமல் நிராயுதபாணிகளாய் நிற்பவரை யாதும் செய்யமாட்டான் என்று நீ நன்ருகத் தெரிந்துகொண்டாய்; ஆனதினுலேதான் வில் வாள் முதலிய கருவிகள் யாதொன்றும் கையில் கொள்ளாமல் கல்லையும் கட்டையையும் எடுத்து எறிந்து குரங்குச்சேட்டைகள் செய்துவருகிருய்! முன்பு என்கையில் பிடிபட்டவுடனே உன்னைக்கொன்று தொலைத்திருக்கவேண்டும்; அன்று கொல்லாமல் இரங்கிவிட்டதனுலேதான் இன்று ஒரு வல்லாளன்போலப் போரில் புகுந்து பொருவதாகப் பாசாங்கு காட்டித் திரிகின்ருய்; ஆயினும் இன்று நீ அழிந்துபடுவாய்; கல்லாலும் மரத்தாலும் என்னை வெல்லலாம் என்று கருதியுழல்வது எவ்வளவு மடமை! நீ ஒரு வில்லை எடுத்துவந்திருந்தால் இதற்குள் நான் உன் உயிரை எடுத்திருப்பேன்; வில் எடாமலே வேடிக்கைபண்ணித் திரிகிருய்! உன் வாடிக்கையை விட்டு ஒழி; ஒல்லையில் செத்து வீழுமுன் உள்ளதைச் சொல்லி ஒழிந்துபோ!'' என்று இன்னவாறு அவன் மொழிந்தபோது அனுமான் அமைதியாக எதிர்மொழிந்தான். அந்த வில்லின் செல்வனை நோக்கி இந்தச் சொல்லின் செல்வன் சொல்லிய திறம் பல்வகை நகைகளும் நிறைந்து சுவை சுரந்து வந்தது. அயலே வருவது காண்க.

வில்எடுக்க உரியார்கள்ஐயசில வீரர்இங்கும்உளர் மெல்லியோய்!
கல்எடுக்கஉரியானும் நின்றனன் அதுஇன்று நாளையிடைகாணலாம்;
எல்எடுத்தபடை இந்திராதியர்உனக்கு இடைந்துயிர் கொடேகுவார்
புல்எடுத்தவர்கள் அல்லம்வேறுசில போர்எடுத்தெதிர் புகுந்துளோம்.

என்னொடேபொருதியோ? அதன்றெனின் இலக்குவப்பெயரின் எம்பிரான்
தன்னொடேபொருதியோ? உனுங்கைதலை தள்ளநின்ற தனிவள்ளலாம்
மன்னொடேபொருதியோ? உரைத்தது மறுக்கிலேம் எனவழங்கினான்
பொன்னொடே பொருவினல்லது ஒன்றொடு பொதுப்படாவுயர்புயத்தினன்.

இந்திரசித்து முன்னம் கூறியதற்குப் பதிலாக அனுமான் இன்னவாறு எதிர்மொழி கூறியிருக்கிருன். அவனுடைய வார்த்தையில் சிறுமையும் துடுக்கும் மருவியிருக்கின்றன; இவனுடைய சொல்லில் தகைமையும் பெருமையும் தழுவியுள்ளன. அவன் ஆங்காரத்தோடு பரியாதையின்றி அடா! என்று கூறினுன்; இவன் அமைதியாக ஐய! என்று பேசினுன். கொடிய போர்

முனையிலும் மன நிலைகுலையாமல் மதிமாண்பு நிறைந்து பெருமிதம் சுரந்து பேசியிருத்தலால் இவனுடைய தீர தைரியமும் நீர்மையும் சீர்மையும் நிலைதெரியலாகும். தன் வாயிலிருந்து வெளிவருகிற சொல் ஒருவனைத் தெளிவாகக் காட்டி விடுகின்றது.

எதிரி சீறிச்சினந்து சீர்மைகுன்றிப் பேசினாலும் இவன் நீர்மை குன்றாமல் நிலைமையை வலியுறுத்தியிருப்பது தலைமையான விநயமாய்த் தழைத்து வந்துள்ளது. வில் எடாது விளையாடினாய் என்று அவன் சொல்லியதற்குப் பதில் இவன் சுட்டிச் சொல்லியுள்ள திறம் உய்த்துணரவுரியது.

வில் எடுக்க உரியார்கள் சில வீரர் இங்கும் உளர்.

நீ ஏன் வில் எடாமல் வந்து வீணச்சண்டை செய்கிறாய்! என அவன் கேட்டதற்கு அனுமான் இப்படி உரைத்திருக்கிறான். வில்லுக்கு உரியவர் இராம லட்சுமணரே என்று வரைந்து காட்டியுள்ளான். அந்த வில்லாளிகள் உரிமையாயிருத்தலால் நான் வில் எடுக்கவேண்டிய அவசியமேயில்லை. மெல்லியோய்! என்று விளித்தது உள்ள உண்மையை உணராமல் புன்மையாய் உரைத்தது புலையாம் எனக் குறித்தபடியாம். அந்த வலிய வில்வீரர் எதிரே நீ மெலியனாய் இழிந்து படுவாய் என்பதும் தெளிந்து கொள்ள வந்தது. விளி மொழியில் விளிவை விளக்கினான்.

வில் எடுக்க உரியாரை முதலில் குறித்துவிட்டு அடுத்த உரிமையைத் தொடுத்துக் குறித்தான்; அக்குறிப்பு கூர்ந்த நோக்குடையது. நகைச்சுவை தோய்ந்து வந்துள்ளது.

கல் எடுக்க உரியானும் நின்றனன்.

இந்தச் சொல் எடுப்பைச் சூழ்ந்து காணுகின்றோம். விபீடணனை இன்னவாறு குறித்திருக்கிறான். போரில் கல் எடுக்க எங்களில் பல்லாயிரப்பேர் உள்ளனர்; ஆனால் உங்களுக்குத் தனியே கல் எடுக்க இங்கே ஒருவனே உரிமையாயிருக்கிறான் என்பான் ஒருமையில் உரைத்து உறுவதைக் குறித்தான்.

கல் எடுத்தல் என்பது ஒரு சவச்சடங்கு. இறந்துபோனவரை நினைந்து ஒரு சிறிய கல்லை எடுத்து நட்டி அதில் அவரைப் பாவித்து நீராட்டி நிவேதித்துக் கிரியைகள் செய்வது வழக்கம்

ஆதலால் அந்தக் கருமத்தை இங்ஙனம் மருமமாக் குறித்து உரைத்தான். இகழ்ச்சிக் குறிப்பு இறப்பைக் காட்டி நின்றது.

கல்எடுப்பு; காடாற்று என்று சாவின் சடங்குகளைக்குறித்து இந்நாட்டில் வழங்கும் பழமொழிகளையும் கேட்டுவருகிறோம்.

நீங்கள் யாவரும் இறந்து, அரக்கர் குலம் முழுவதும் அடியோடு நாசமாய்ப் போன பின்னர், இராவணன் முதலாக உங்கள் எல்லாருக்கும் எள்ளும் நீரும் இறைத்து இறுதிக் கடன் கழிக்க உரியவன் விபீடணனே. தன் கருமத்தைச்செய்ய அவன் இங்கே எங்களோடு உரிமையாயிருக்கிறான் என்பான் கல் எடுக்க உரியானும் நின்றனன் என்றான்.

அந்தக் கல் எடுப்புக்கு அதிகநாள் செல்லாது; விரைவில் நடக்கும் என்பான் அது இன்று நாளையிடை காணலாம் என்றான். இரண்டு தினத்துள் உன் குலம் முழுவதும் அடியோடு அழிந்துபோகவுள்ளது; அந்த நாசநிலையில் நிற்கின்ற நீ யாதொரு யோசனையுமின்றி அவமே வீம்பான வார்த்தைகளைப் பேசுகின்றாயே பேயா! என்று ஏசுகின்றபடியாய் இந்தக் கல் எடுப்பை இங்கே எடுத்துக்காட்டித் தன் சொல் எடுப்பைத் துலக்கினான்.

தான் வில் எடாமலும், கல் எடாமலும் வெறுங்கையோடே போராட வல்லவன் என்பதை அனுமான் இங்கே சொல்லாமல் சொல்லினான். வில் எடுத்து வராமையை இகழ்ச்சியா அவன் சுட்டிப் பேசினமையால் இங்ஙனம் சொல் எடுத்துப் புகழ்ச்சியா இவன் கட்டிப் பேசினான். பேச்சு பெருமிதமாய் வந்தது.

இந்திராதி தேவர்கள் எல்லாரையும் வென்று நீ வீரவிருது பெற்றிருந்தாலும் இங்கே பொன்றி முடிதல் உறுதி; அந்த அமரர்களைப்போல நாங்கள் அபலைகள் அல்ல; உங்களைக்குலத்தோடு எமலோகத்துக்கு அனுப்பவே யாம் இலங்கைக்கு வந்திருக்கின்றோம். ஒரு சிறிய புல்லைக் கைக்கொண்டே பெரிய வில்லைக் கொண்டவரையும் வென்று தொலைப்போம். வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்னும் சொல்லை நீ உணர்ந்துகொள்ளவேண்டும். நான் வில் எடாமலே எவரையும் வெல்லவந்துள்ளேன்.

“என்னோடு போர்புரிகின்றாயா? அல்லது இளையபெருமாளோடு நேர்கின்றாயா? அல்லது உன் தந்தையைக் கொன்று

தொலைக்க வந்துள்ள அந்த வீர மூர்த்தியோடு பொருகின்றாயா? யாரோடு போராட உனக்குப் பிரியமோ? அதனை விரைவில் சொல்'' என இவ்வாறு அனுமான் வினவியிருக்கிறான். கேள்வியில் வீரமும் அறிவும் விரவித் தீரமாய் மிளிர்கின்றன.

உந்தை தலை தள்ள நின்ற தனி வள்ளல்.

என இராமனை உள்ளம் உவந்து இங்ஙனம் குறித்திருக்கிறான். தீயவர்களை அழித்து ஒழித்து நல்லவர்களுக்கு நலம் அருள வந்துள்ளான் என்பதை வள்ளல் என்னும் சொல்லால் அவனது உள்ளம் தெளிய உரைத்தான். இவனுடைய உள்ளமும் உறுதியும் உணர்வும் ஊக்கமும் உரைகள்தோறும் ஒளிவீசியுள்ளன. அருந்திறலாண்மைபெருந்தகைமையோடு மிளிர்கிறது.

இவன் பேசிய வார்த்தைகளைக் கேட்டு இந்திரசித்து உள்ளம் கனன்றான்; உருத்து உரைத்தான். அவ்வுரைகளால் அவன் போர்மேல் மூண்டு வந்துள்ள நிலை தெரிய வந்தது.

எங்குநின்றனன் இலக்குவப்பெயர்அவ் ஏழைஎம்பி அதிகாயனும்
சிங்கம்வந்தவனை வென்றுதன்உயிர் எனக்குவைத்ததொர்சிறப்பினான்
அங்கவன்தனைமலைந்து கொன்றுமுனிவு ஆறவந்தனன் அதன்றியும்
உங்கள்தன்மையின் அடங்குமோஉலகு ஒடுக்கும்வெங்கணை தொடுப்பினே. (1)

ஆரும்என்படைஞர் எய்தலின்றிஅயலேக யானும் இகல்வில்லும்ஓர்
தேரினின்றுமை அடங்கலும்திரள் சிரம்துணிப்பனிது திண்ணமால்
வாரும்உங்களுடன் வானுளோர்களையும் மண்ணுளோரையும் வரச்சொலும்
போருமின்றொரு பகற்கணேபொருது வெல்வன் வென்றலதுபோகிலேன். (2)

அவ்வீரனுடைய மனநிலையை இதனால் அறிந்துகொள்கிறோம். "என் தம்பியைக் கொன்ற அந்த இலக்குவனைக்கொன்று தொலைக்கவே இலக்கோடு நான் இங்கு வந்திருக்கிறேன்; அந்த ஏழை மகன் எங்கேபோய் ஒளிந்துள்ளான்? அவனை அன்றிக் குரங்குகளாகிய உங்களைக் கொன்று முடிப்பதால் யாது பயன்? விண்ணவர் மண்ணவர் அசுரர் யாவரையும் துணை சேர்த்துக் கொண்டு வந்தாலும் அவனைக் களத்தில் அழித்து ஒழித்துவிடுவேன்; இன்று பொழுது அடையுமுன் இங்கே கழுதடையும்படி

எல்லாரையும் ஒருங்கே கொல்லேன் ஆயின் இலங்கைக்கு நான் மீண்டு செல்லேன்" என்று இவ்வாறு உள்ளம்கனன்று சொன்னவன் உடனே கடுத்துப் பகழிகளைத்தொடுத்தான். சீறி எழுந்த கூரிய பாணங்கள் அனுமானுடைய உடலைத் துளைத்து ஊடுருவி ஓடின. உடல் எங்கும் உதிரம் வழிந்து ஓடியது; ஓடினும் அவன் உள்ளம் தளராமல் ஒரு குன்றை விரைந்து கவர்ந்து வென்றி வீறோடு இந்திரசித்தை நோக்கி வீரவாதம் கூறி நேரேவீசினான். வீசிய அதனைத் தூசிகளாக்கித் துடைத்து ஒழித்து அடுத்து அடுத்து வாளிகளைக் கடுத்துத் தொடுத்தான். எய்த அம்புகள் வெய்து பாயவே மாருதி யாதும் செய்யமாட்டாமல் மறுகி அயர்ந்தான். அயரவே நேரே நீலன் எதிர்ந்து நெடும்போர் புரிந்தான். அவனும் பாணங்களால் அடிபட்டுப் பதைத்து விழுந்தான். குமுதன், பனசன், மயிந்தன் முதலிய சிறந்த வானர வீரர்கள் யாவரும் வந்து வந்து பொருது நொந்துமயங்கினர். சேனைத் தலைவர் எல்லாரும் சீரழிந்து சிதைந்து வீழவே அங்கதன் அடலாண்மையோடு ஆர்த்து மூண்டு முனைந்து பொருதான். அவன் வீசி எறிந்த கருவிகளையெல்லாம் நீறு செய்து நீக்கி அம்புகளை மாரிபோல் பொழிந்தான். முகம் மார்பு தாள் தோள் முதலிய உறுப்புக்கள் எங்கணும் அம்புகள் ஊடுருவி ஓடியதால் அங்கதன் அயர்ந்து வெங்கதமோடு விரைந்து சாய்ந்தான்.

நெற்றிமேலும் உயர்தோளின்மேலும் நெடுமார்பின்மேலும் நிமிர் தாளினும்
புற்றினூடு நுழைநாகம் அன்னபுகை வேகவாளிகள் புகப்புகத்
தெற்றிவாள்எயிறு தின்றுகைத்துணை பிசைந்துகண்கள்எரி தீயுக
வற்றியோ டுதிரவாரி சோர்வுற மயங்கினான்நிலம் முயங்கினான்.

இன்னவாறு வெற்றி வீரர்கள் யாவரும் நிலைகுலைந்து வீழவே வானரங்கள் பலவகையிலும் பாழ்படலாயின. அந்நிலையினை அறிந்ததும் இலக்குவன் நெஞ்சம் கனன்று நெடிதுவருந்தி வீடணனை நோக்கி வெதும்பி மொழிந்தான்: "நம் படைகளை முதலில் அனுப்பியது பிழையாய் முடிந்தது; நானே முன்னுற மூண்டு எதிர்த்திருக்கவேண்டும்; அவ்வாறு செய்திருந்தால் இவ்வாறு நேர்ந்திராது; எதிரியின் வலிநிலை தெரிந்தும் இப்படித் தவறு செய்தது என் உள்ளத்தை வருத்துகின்றது" என்று உளைந்து கூறினான். பரிதாபமாய் இளையவன் பரிந்து கூறியதைக்

கேட்டு வீடணன் வருந்தி மேல் செய்யவேண்டியதைத் தெளிய வுரைத்தான். அவனுடைய உரைகள் உறுதிகளை விளக்கின.

ஐயா தன்னாதேயால் ஆயிர கோடிதேவர்
எய்தினார் எய்தினரே ஈடுபட்டு இரிந்தது அல்லால்
செய்திலர் இவனை ஒன்றும் நீயிது தீர்ப்பின் அல்லால்
உய்திறன் உண்டோவேறிவ் வுலகினுக்கு உயிரோடுஎன்றான்.

"இந்திரசித்தன் எதிரே வானரங்கள் மாண்டு மடிந்தது பெரிதன்று; வானவர்கள் பல்லாயிரம்கோடி பேர் திரண்டு பொருதும் உடைந்து இழிந்து ஒழிந்து போயினர்; நீ இவனை ஒழித்து நீக்கினாலன்றி உலகினுக்கு உய்தி இல்லை" என்று விபீடணன் அவனது வீரப்பிரதாபத்தைக் குறித்து இவ்வாறு கூறவே இலக்குவன் விரைந்து நேரே சென்றான். கையில் ஏந்திய வில்லோடு தன்னம் தனியே சமரபூமியில் மூண்டு தன்மேல் வருகின்ற இந்த அழகனைத் தேர்மேல் இருந்த இந்திரசித்து நேரேகண்டான். உருவ எழில் உள்ளத்தைக் கவர்ந்தது. அருகே நின்ற சாரனிடம் உரிமையோடு உசாவினான்.

என்பது சொல்லக் கேட்ட இந்திர வில்லி னோடும்
பொன்பொரு மேகம் ஒன்று வருவது போல்கின்றானை
முன்பனை முன்பு நோக்கி இவன்கொலாம் பரதன்முன்னோன்
தன்பெரும் தம்பி? என்றான்; ஆமெனச் சாரன்சொன்னான்.

வில்லோடு தன் எதிரே வந்த இளவலை நோக்கி இந்திரசித்து ஒற்றனிடம் உசாவி அறிந்துள்ள நிலையை இது உணர்த்தியுள்ளது. வினவியதில் வினயங்கள் விரவி நிற்கின்றன.

இவன்கோலாம் பரதன் முன்னோன் தம்பி?

என்று அவன் வினவியிருக்கிறான். இவன் இராமன் தம்பியா? என்று கேட்டிருக்கவேண்டும்; அவ்வாறு கேட்கவில்லை; இவ்வாறு கேட்டுள்ளான். கேள்வி சூழ்வினைக் காட்டியுளது.

திருவயோத்தியிலிருக்கும் பரதனைக் குறித்துப் பெரிதும் பெருமையாக இந்திரசித்து கருதியிருக்கிறான். அண்ணனைக் கண்ணினும் உயிரினும் அருமையாக எண்ணி உருகி அழுது கானகம் நோக்கிவந்து ஆனவரையும் தொழுதுவேண்டி அவன் மறுகிப்போன சரிதத்தை அறிந்து அவனை இவன் மிகவும் மதித்து

வியந்திருந்தான். பிறந்த துணைவர்களுள் பரதன் சிறந்தஉத்தமன்; அவனைத் தனக்குத் தம்பியாகப் பெற்றிருப்பது இராமனுக்கு ஒரு பெரிய பேரும் என நினைந்திருந்தான் ஆதலால் அந்த நினைவு நிலை உரையில் வெளிவர நேர்ந்தது. பகையாளிகளும் பரதனை உவகையாக விழைந்து கொண்டாடி வருவது அவனது அரிய பெரிய நீர்மைகளை உலகம் அறிய விளக்கியுள்ளது.

மறைந்துநின்று தன்மேல் அம்பை ஏவிய இராமனைநோக்கி வாலி சினந்து பேசும்போது "நீ பரதன் முன் தோன்றினையே! இந்தத் தீமையைச் செய்யலாமா?" என்று பரிந்து கேட்டிருக்கிறான். அந்தக் கேள்வி நிலை இங்கே அறிந்து கொள்ளத்தக்கது.

பரதன் முன்னோன் இராமன்; அவனுடைய தம்பி இலக்குவன்; சிறிய தம்பி சத்துருக்கன் ஒருவன் இருத்தலால் இவனைப் பெருந்தம்பி என்றான். பெருமை முறைமை நோக்கி எழுந்தது.

சீதையை இராவணன் கவர்ந்து வந்ததிலிருந்து இராமன் முதலாக அந்த அரசகுடும்பத்தாரை இலங்கையின் அரச குடும்பத்தார் நன்கு விசாரித்து அறிந்துள்ளார் என்பதை இங்கே தெரிந்துகொள்ளுகிறோம். இந்திரசித்து உரை அந்தரம் அருளியது.

படைகள் சூழ்ந்தது.

போர்மேல் மூண்டு சென்ற இலக்குவனை ஒற்றனிடம் உசாவி அறிந்த இந்திரசித்து அவனுடைய உருவ அழகைஉவந்து நோக்கினும் தன் தம்பியைக் கொன்றவன் என்ற கோபத்தால் கொதித்து நின்றான். வீர வெறியோடு போர்வேட்டு அவ்வாறு அவன் தேர்மேல் நிற்குங்கால் பார்மேல் படர்ந்திருந்த சேனைத் திரள்கள் இளையவனை இடையே அடைய வளைந்துகொண்டன.

தீயவன் இளவல் தன்மேல் செல்வதன் முன்னம செல்கென்று
ஏயினர் ஒருவர் இன்றி இராக்கதத் தலைவர் எங்கள்
நாயகன் மகனைக் கொன்றாய் நண்ணினை நாங்கள் காணப்
போயினி உய்வது எங்கே? என்றெறி விழித்துப் புக்கார்.

இந்திரசித்தோடு போருக்கு விரைந்து இலட்சுமணன் வந்தபோது இடையே இராட்சசசேனாதிபதிகள் வளைந்துகொண்ட நிலையை இது காட்டியுள்ளது. உள்ளம் கொதித்து உருத்து மூண்டு அவர் கடுத்துச்சூழ்ந்தது அடுத்து விளைவதைத்தொடுத்து விளக்கியது. பழிவாங்கும் குறிப்பு மொழியில் விளங்கியது.

எங்கள் நாயகன் மகனைக் கொன்றாய்! நண்ணினை!
போயினி உய்வது எங்கே?

சேனைத் தலைவர்கள் சீறித் தடுத்துப் பழிக்குப் பழிவாங்க வேண்டும் என்று தெழித்து நின்றதை இதனால் தெரிந்துகொள்கிறோம். மான உரிமையோடு வீரவாதம் விரவி எழுந்தது.

"எங்கள் சக்கரவர்த்தி மகனான அதிகாயனை அநியாயமாய்க் கொன்றாய்! நாங்கள் காண நேரே வந்து அகப்பட்டாய்! இனி நீ எங்கே தப்பிப் போவாய்? இங்கேயே செத்து மடிந்தாய்!" என்று செயிர்த்துக் கூறிப் படைகளோடு அவர் வளைந்து கொள்ளவே இலக்குவன் கையிலிருந்த வில்லும் வளைந்தது. வெம்போர் மூண்டது. ஆயிரக் கணக்கான படைகளோடு சூழ்ந்து அரக்கர் தலைவர்கள் அடலாண்மை மண்டிக் கடும்போர் புரிந்தனர். அவர் விரைந்து எறிந்து வெகுண்டு ஏவிய கொலைக் கருவிகளையெல்லாம் துணித்து வீழ்த்தி அவருடைய தலைகளும் உடல்களும் இடங்கள்தோறும் நிலை குலைந்துவிழ இளையவன் வில்வளைய நேர்ந்தது அதிசய வியப்பாய் நின்றது. தேர்களையும் யானைகளையும் குதிரைகளையும் செலுத்திச் சீறிவந்த சேனைத் தலைவர்கள் எல்லாரும் பாரில் விழுந்து பதைத்து மாண்டார். துடுக்காய்த் துள்ளிவந்தவர் யாவரும் துடித்து மாய்ந்து படித்தலத்தில் குவிந்துகிடந்தது நெடிய திகிலை விளைத்து எவரையும் நெஞ்சம் கலங்கச் செய்தது. அமரரும் அஞ்சலாயினர்.

கோடிநூறு இயைந்த கூட்டத்து இராக்கதர் கொடித்திண்டேரும்
ஆடல்மாக் களிறும் மாவும் கடாவினர் ஆர்த்து மண்டி
மூடினர் மூடினாரை முறைமுறை துணித்து வாகை
சூடினன் இராமன் பாதம் சூடிய தோன்றல் தம்பி. (1)

அதிர்ந்தன உலகம்ஏழும் அனற்பொறி அசனி என்னப்
பிதிர்ந்தன மலையும் பாரும் பிளந்தன பிணத்தின் மேன்மேல்
உதிர்ந்தன தலைகள் மண்டி ஓடின உதிர நீத்தம்
விதிர்ந்தன அமரர் கைகள் விளைந்தது கொடிய வெம்போர். (2)

விட்டனன் விசிகம் வேகம் விடாதன வீரர் மார்பில்
பட்டன உலகம் எங்கும் பரந்தன பதாகைக் காட்டைச்
சுட்டன துரக ராசி துணித்தன பனைக்கை மாவை
அட்டன கூற்றம் என்ன அடர்ந்தன அநந்தம் அம்மா! (3)

உலக்குநர் உலக்கின் ருரை எண்ணுவான் உற்ற விண்ணோர்
கலக்குறு கண்ணர் நோக்கிக் கடையுறக் காணல் ஆற்ருர்
விலக்கரும் பகழி மாரி விளைக்கின்ற விளைவை உன்னி
இலக்குவன் சிலைகொடேகொல் எழுமழை பயின்றது என்ருர்.

கையற்ருர் கால்கள்அற்ருர் கழுத்தற்ருர் கவசம் அற்ருர்
மெய்யற்ருர் குடர்கள் சோர விசையற்ருர் விளிவுமற்ருர்
மையற்ருர்க் கரியும் தேரும் வாசியும் மற்றும் அற்ருர்
உய்யச்சாய்ந்து ஓடிச் சென்ருர் உயிருள்ளா ராகியுள்ளார். (5)

இடையே மூண்டுவந்து இளையவனை வளைந்து போராடிய சேனைத்திரள்கள் மாண்டுமடிந்துள்ள நிலைகளை இவை காட்டியுள்ளன. கொடிய போர்களிலேயே நெடிது பழகி நெடுஞ் செருக்கு ஏறிய அரக்கர்கள் இலக்குவன் எதிரே இழிந்து அழிந்து ஒழிந்துபோனதை நோக்கி உம்பரும் வியந்து கம்பமுற்றுநின்ருர். விண்ணுலகவாசிகள்வெருவியது வியப்பால்நேர்ந்தது.

விதிர்ந்தன அமரர் கைகள் என்றதனல் அமரில் நிகழ்ந்த படுகொலைகளைக் கண்டு அமரர்கள் கைவிதிர்ந்து மெய் நடுங்கிக் கலங்கி நின்ற நிலை துலங்கி நின்றது. விண்ணவரும் இன்னவாருனல் மண்ணவர் நிலையை எண்ணி யுணர்ந்து கொள்ளலாம்.

தன்னைக்கொல்ல மூண்டு சூழ்ந்தவர் எல்லாரும் ஒல்லையில் மாண்டு மடிய இலக்குவன் வில் நீண்டு வேலை செய்துள்ளது. தேரில் வந்தவர் பாரில் வீழ்ந்து பதைத்தனர்; யானைகளில் ஏறி அடர்ந்து தொடர்ந்தவர் மானம் அழிந்து மடிந்து வீழ்ந்தனர்; வாசிகளில் வாவி வந்தவர் நாசமடைந்து போயினர்; காலாட் படைகள் காலும் கையும் கண்ணும் மூக்கும் தலையும் தோளும் இழந்து பிணக்குவியல்களாய்த் தரையில் நிறைந்தனர். தொடுத்த பகழிகள் அடுத்தவர் அனைவரையும் கடுத்து உயிர் துடைத்துக் கதிவேகங்கள் காட்டி அதிவேகமாய்ப் போயுள்ளன.

இலக்குவன் சிலைகொடோ எழுமழை பயின்றது?

இளைய பெருமானையும் அவனது கையிலிருந்த சிலையையும் கருதியுணரும்படி இவ் வுறுதி மொழி மருவி வந்துள்ளது.

காலமாரிபோல் அந்தக் கோல வில்லிலிருந்து பாணங்கள் சாரி சாரியாய் எழுந்து எங்கும் பொழிந்து அரக்கர்குலத்தை

அழித்துள்ளமையால் மழையும் அச்சிலையிடம் கலைபயின்றதோ? என நிலை தெரிய விளக்கினர். வில் ஒன்று; அம்புகள் அளவிட லரியன; கொலைகள் எல்லையில்லாதன. இதனல் அவ்வில்வீரனது வித்தகத்திறலும் வெற்றி நிலையும் உய்த்துணர வந்தன.

தன்னைக்கொன்று தொலைக்கவேண்டும் என்று ஆங்காரத் தோடு வந்து கொதித்து வளைந்துகொண்டு கொடிய கொலைக் கருவிகளால் கடுத்து வீசி அடுத்தடுத்து அடர்ந்து பொருத அரக் கர் திரள்கள் அனைத்தையும் அழித்துப் படித்தலத்தில் உருட்டிப் பாழாக்கியிருக்கிருன். வீரவேலை வெற்றியை விளைத்துள்ளது.

மூடினர் மூடினரை முறைமுறை துணித்து வாகை
சூடினன் இராமன்பாதம் சூடிய தோன்றல் தம்பி.

பகைவரை வென்று தொலைத்து வெற்றிபெற்றுள்ள கொற் றக் குரிசிலை இங்ஙனம் குறித்துக் காட்டியிருக்கிருர். வாகை என்பது போரில் வென்ற வீரனுக்குரிய விருதுமாலை. அதனைச் சூடினவன் யார்? அவனை நாடி அறியும்படி பாடியருளினர்.

இராமன் பாதம் சூடிய தோன்றல் என்றது பரதனை.

அண்ணனது திருவடி தோய்ந்த பாதுகையைத் தனக்கு மணிமுடியாக் கொண்டு உழுவலன்போடு தவ விரதம் பூண்டு நந்தியம்பதியில் மருவியுள்ள அந்த அருமைத் தம்பியை இங்கே உரிமையுடன் கருத நேர்ந்தது. புனித நீர்மை தோய்ந்த புண்ணி யன் ஆதலால் போர்முகத்திலும் எண்ணி மகிழ நேர்ந்தான்.

பரதன் தம்பி என இலக்குவனை ஈண்டு உரிமையோடு உரைத்தது கரும நலம் கருதி வந்தது. இராமன் பாதம் சூடிய அவன் ஆசைகளை அறவே வென்று அதிசய வெற்றியாளனுய் உயர்ந்து உலகம் துதிசெய்ய ஒளிபெற்றுள்ளான்.

அவன் தம்பியான இவன் கொடிய அரக்கர்களை அடி யோடு வென்று வெற்றிமாலை சூடி வீரப்புகழோடு விளங்கி நிற்கின்ருன். இராமன் பாதம் சூடினவரது பாதத்தைச் சூடின வரும் அதிசய சத்திகள் வாய்ந்து அற்புத சித்திகள் செய்ய வல்லவராவர் என்பது ஈண்டு நன்கு உய்த்துணரவந்தது.

இலக்குவன் போரில் மூண்டு வரும்போது தேர்மேல் நின் றுபார்த்த இந்திரசித்து சாரனை நோக்கி "இவன்தான் பரதன்

முன்னேன் தம்பியோ?" என்று முன்பு கேட்டு அறிந்ததற் கேற்ப ஈண்டு வெற்றிபெற்றுள்ள வீரக்குரிசிலைக் கவியின் வாக் கால் அந்த நோக்கோடு விளக்கியிருக்கும் வித்தகம் உய்த்துண ரத்தக்கது. கலைஞானம் தத்துவ நிலையைத் தழுவி மிளிர்கிறது.

இராமபத்தியில் பித்தேறியுள்ள பெருமானுனபரதன்காவிய சரிதத்தில் வெகுதூரம் ஒதுங்கியிருக்கிறான்; இருந்தாலும் நம் கவிஞர் பெருமான் அந்தப் புண்ணியத் தம்பியை எண்ணி உருகி இவ்வண்ணம் இடை இடையே கொண்டுவந்து காட்டி உலக உள்ளங்களுக்கு உவகையூட்டி வருகிறார். அக்குலமகனுடைய அன்பும் நேர்மையும் பண்பும் பாசமும் மனித சமுதாயத்தைப் புனிதமாக்கி இனிமை சுரந்து வருகின்றன. சிறந்த நீதிமானை அவனைத் தனக்கு உரிய தமையனுக அமையப்பெற்ற இந்த இளையவன் பெரிய தமையனுக்கு அரிய வெற்றியை விளைக்க அமர்முகத்தில் அரும்பாடுபட்டு வருகிறான். அந்த வரவில் வந்து தன்னைச் சூழ்ந்து மொய்த்த அரக்கர் குழாங்களை அழித்து ஒழித்து வெற்றித் திறலோடு இவ்வீரமகன் விளங்கி நின்றான்.

### இந்திரசித்து எதிர்ந்தது.

தனது சேனைகள் அழிந்துபட்டதைக் கண்டதும் கொடிய மானக் கொதிப்போடு நெடிய தேரைச் செலுத்தி நேரே வந்து இந்திரசித்து போராட நேர்ந்தான். அவன் வருகிற வேகத்தை நோக்கிய அனுமான் அதி வேகமாய்ப் பாய்ந்துவந்து இளவலை அணுகிநின்று "என் தோள்மீது ஏறியருளுங்கள்" என்று தொழு துவேண்டினன். வேண்டவே இந்த ஆண்டகை அவ்வாறே ஏறி னன். ஏறுமுன்னரே அவன் அம்புகளை வாரி இறைத்து வீரத் திறல் புரிந்தான். இவனும் மாறிப்பொழிந்தான்.

தோளின்மேல் ஆதி ஐய! என்றடி தொழுது நின்றான்
ஆளிபோல் மொய்ம்பி னனும் ஏறினன்; அமரர் ஆர்த்தார்;
காளியே அனைய காலன் கொலையன கனலின் வெய்ய
வாளிமேல் வாளி தூர்த்தார் மழையின்மேல் மழைவந்தன்னர்.

இடித்தன சிலையின் நாண்கள் இரிந்தன திசைகள் இற்று
வெடித்தன மலைகள் விண்டு பிளந்தன விசும்பு மேன்மேல்
பொடித்தஇவ் வுலகம் எங்கும் பொழிந்தன பொறிகள் பொங்கிக்
கடித்தன கணைக ளோடு கணைகள்தம் அயில்வாய் கவ்வி. (2)

அம்பினேடு அம்பு ஒன்றுஒன்றை அறுக்கமற் றறுக்கிலாத
வெம்பொறி கதுவ விண்ணில் வெந்தன கரிந்து வீழ்ந்த;
உம்பரும் உணர்வு சிந்தி ஒடுங்கினர்; உலகம் யாவும்
கம்பமுற்று உலேந்த வேலேக் கலமெனக் கலங்கிற்று அண்டம்.

அரியினம் பூண்ட தேரும் அனுமனும் அனந்த சாரி
புரிதலின் இலங்கை யூரும் திரிந்தது புலவ ரேயும்
எரிகணைப் படலம் மூட இலருளர் என்னும் தன்மை
தெரிகிலர் செவிடு செல்லக் கிழிந்தன திசைகள் எல்லாம். (4)

நாண்பொரு வரிவில் செங்கை நாமநூல் நவின்ற கல்வி
மாண்பொரு வகையிற்று அன்று வலிக்கிலே அவதி வானம்
சேண்பெரி தென்று சென்ற தேவரும் இருவர் செய்கை
காண்பரிது என்று காட்சிக்கு ஐயுற வெய்திற் றன்றே. (5)

என்செய்தார் என்செய்தார் என்று இயம்புவார்; இனைய தன்மை
முன்செய்தார் யாவர் என்பார்; முன்னது பின்னது என்பார்;
கொன்செய்தார் வீரர் இன்ன திசையினர் என்றும் கொள்ளார்
பொன்செய்தார் மவுலி விண்ணோர் உணர்ந்திலர் புகுந்தது
ஒன்றும். (6)

ஆயிரம் கோடி பல்லம் அயில்எயிற்று அரக்கன் எய்தான்
ஆயிரம் கோடி பல்லத்து அவைதுணித்து அறுத்தான் ஐயன்;
ஆயிரம் கோடி நாகக் கணைதொடுத்து அரக்கன் எய்தான்
ஆயிரம் கோடி நாகக் கணைகளால் அறுத்தான் அண்ணல். (7)

எய்யவும் எய்த வாளி விலக்கவும் உலகம் எல்லாம்
மொய்கணைக் கானம் ஆகி முடிந்தது முழங்கு வேலே
பெய்கணைப் பொதிகளாலே வளர்ந்தது பிறந்த கோபம்
கைம்மிகக் கனன்றது அல்லால் தளர்ந்திலர் காளைவீரர். (8)

இரண்டு வில்வீரர்களும் மூண்டு போராடியிருக்கும் நிலே களை இவை ஓரளவு காட்டியுள்ளன. கவிகளைக் கண் ஊன்றி நோக்கவேண்டும். சிலேயின் கலேயில் இருவரும் தலேசிறந்துள்ள னர். ஒருவரினும் ஒருவர் அதிசயமான அம்பு ஆடல்களை அமர ரும் துதிசெய்ய ஆடியிருக்கின்ருர். அக்கோமகன் கடுத்துத் தொடுத்த வாளிகளையெல்லாம் இக்குலமகன் தடுத்துத்தடைத்து அடுத்து அம்புகளைப் பொழிந்து வந்தான். மாரிபோல் சீறிவந்த பாணங்கள் யாவும் மாறி அழிந்துபட அவன் மீறி வேலேசெய்து

நின்றான். எடுப்பதும் தொடுப்பதும் விடுப்பதும் மடுப்பதும் கடுப்பதும் அடுப்பதும் விசித்திர வேலைகளாய் விரிந்து நின்றன.

மந்திர முறைகளோடு கூடிய திவ்விய பாணங்கள் ஆதலால் உயிருடையனபோல ஆகாய வீதியில் இருவகை இனங்களும் போராடியிருக்கின்றன. ஒருவரை ஒருவர் வென்றுதொலைக்கக் கன்றிக் கறுத்துக் கடுத்து மூண்டு கொதித்து அமராடியுள்ளனர். ஒரு நிலையில் நில்லாமல் பலவகை நிலைகளிலும் சாரி திரிந்து மாறி மாறிச் சீறிப் போராடியிருத்தலால் இவருடைய சிலைக் கடுந்தொழில்கள் கலைப்பெருங்காட்சிகளாய்க் கலித்து நின்றன. அதிசய வேகம் அமரரையும் மதிமயங்கச் செய்தது.

> அரியினம் பூண்ட தேரும் அனுமனும் அனந்தசாரி
> புரிதலின் இலங்கை யூரும் திரிந்தது.

இருவரும் சாரிதிரிந்து போராடியுள்ள நிலையை இது நேரே காட்டியுள்ளது. வீர வெறியோடு கூடிய சிங்கஏறுகள் பூட்டிய தேர் ஆதலால் இந்திரசித்து ஏறியிருந்த ரதம் அரியினம் பூண்ட தேர் என நீண்ட பேரை எய்தி நின்றது. அந்த உக்கிர வீரத் தேரோடு அனுமான் எப்பக்கமும் நேரே சாரி திரிந்து போராடியிருக்கிறான். அந்தச் சிங்க ஏறுகளும் அஞ்சி அயரும்படி இந்த அஞ்சனைச் சிங்கம் அடலாண்மை மண்டிக் கதிவேகம் காட்டி அடுதொழிலாற்றி நெடிது சுற்றி நேர்ந்து பேர்ந்து நெடுந்திகில் மூட்டியுள்ளது கூர்ந்து நோக்கி ஓர்ந்து கொள்ளத்தக்கது.

இலக்குவன் ஏறியுள்ள வாகனத்தின் கதிவேகங்களையும் அதிசய ஆற்றலையும் நோக்கி இந்திரசித்தும் மதிமயங்கி நின்றான். மேலுள்ள வில்லாளியின் ஆற்றலுக்கு ஆதாரமாய் நின்று ஏற்றம் புரிந்து வருகிற இவனை முதலில் அழித்து ஒழித்துவிட வேண்டும் என்று அவன் கவனமாகக் கடுங்கணைகளை அடுத்தடுத்துத் தொடுத்தான். தொடுத்த பகழிகள் யாதும் அனுமனை அணுகாதபடி இளையவன் கடுத்துத் துடைத்து வந்தான்.

இருவரும் பொருவரு நிலையில் போராடலாயினர். இவருடைய அதிசய அமராடலை நோக்கி அமரரும் யாதும் தோன்றாமல் பெருவியப்படைந்து ஒருவரை ஒருவர் நோக்கி வியன் மொழிகள் ஆடினர். எவர் உயர்ந்தார்? எவர் தாழ்ந்தார்? யார் வெல்வார்? யார் தோற்பார்? என்று யாதொரு முடிவும் யாரும் கூற முடியாமல் மாறிமாறி வியந்து மறுகி நின்றனர்.

இன்னதிசையில் நின்று இன்னவாறு பொருகின்றார் என என்னவகையிலும் அறிந்து கொள்ளாமையால் பேராவலோடு போராடலைப் பார்த்து நின்ற தேவர் பெரிதும் திகைத்துப் பேச நேர்ந்தார். அவருடைய வார்த்தைகள் வியனிலையில் வந்தன.

இனைய தன்மை முன் செய்தார் யாவர்?

இவ்வாறு அதிசய நிலையில் போராடினவரை இதற்குமுன் நாம் கேட்டதும் இல்லை; கண்டதும் இல்லை என்று இருவரையும் அவர் கொண்டாடி நின்றார். பேரறிவாளரான அமரரும் இவரது போராடலைப் பேரதிசயத்தோடு வியந்து போற்றியிருத்தலால் அப் போரின் சீரும் வீரச் சிறப்பும் நேரே தெரியலாகும்.

முன் ஏது? பின் ஏது?

இந்த மாதிரியான வீரப்போர் முன் காலத்தில் நடந்ததும் இல்லை; இனி நடக்கப் போவதும் இல்லை என இன்னவாறு உன்னி உரையாடியுள்ளனர். அவருடைய வார்த்தைகள் இவருடைய போரின் கீர்த்திகளை வார்த்துக் காட்டியிருத்தலால் நேர்ந்துள்ள அடலாண்மைகளை யூகமாய்க் கூர்ந்து நாம் ஓர்ந்து கொள்ளுகிறோம். போரின் திறல் பொருவரு நிலையில் நின்றது.

வானவர் தானவர் முதலாகத் திரண்டெழுந்த எவ்வளவோ சேனைகளை எளிதில் வென்று வெற்றியே கண்டு வீறுகொண்டு வாழ்ந்து வந்த இந்திரசித்து இந்த வீர இளவலோடு நெடுநேரம் கடுமையாகப் போராடியும் யாதொரு முடிவும் காணாமையால் உள்ளம் கனன்று உருத்துக் கொதித்தான். ஏவிய கணைகள் யாவையும் எதிரழித்து முதிர் வேகமாய் அவன் மூண்டு பொருது நீண்டு வருதலால் இளைய பெருமாளும் உளையலாயினான். விரைவில் வெல்ல முடியவில்லையே என்று உள்ளம் உளைந்தாலும் யாதும் தளராமல் உக்கிர வீரமாய் உருத்து மூண்டு இருவரும் கொதித்துப் போராடினார். மானக் கொதிப்பும் வீரத் துடிப்பும் மறுகி ஏறினவேயன்றி சிறிதும் தளரவில்லை. உறுதி ஊக்கங்கள் பெருகி ஒருவரை ஒருவர் பருகிவிடலாம்படி கருவி நின்று துருவி மூண்டு பொருது வந்தது அரிய பேராண்மையாய் மருவிநின்றது.

கோபம் கனன்றது அல்லால் தளர்ந்திலர் காளை வீரர்.

முரண்கொண்டு மூண்டு போராடிய இரண்டு போர் வீரர்களும் எதிர்ந்து புரிந்து நின்ற நிலையை இது வரைந்து காட்டியுள்ளது. உள்ளம் தளராமல் மானவீரங்கள் மண்டி இருவரும் பொரு வருநிலையில் ஊக்கிப் போராடி யிருப்பதை நோக்கி வீர வுலகம் வியந்து புகழ்ந்து நின்றது. வெற்றி விழைவுகள் விரிந்து வந்தன.

இந்திரசித்து கை முந்தியது.

அடுந்திறலோடு தான் கடும்போர் புரிந்தும் ஒரு சின்ன மனிதன் இன்னவாறு எதிர்ந்து நின்று ஏற்றம் காட்டி வருகின்றானே! என்று சீற்றம் மீதூர்ந்து இந்திரசித்து தெய்வப் பகழிகளைத் தேர்ந்து எடுத்தான். எதிரியைத் தாங்கி நிற்கின்ற வாகனத்தை முதலில் தகர்த்து அழிக்க வேண்டும் என்று துணிந்து பகழிகளைக் கடுத்துத் தோடுத்தான். கூரிய பாணங்களை வீரிய வேகத்தோடு குறிசெய்து தொடுக்கவே அவை யாவும் அதி வேகமாய்ப் பாய்ந்து அனுமானை ஊடுருவிப் போயின. இலக்குவன் மீதும் பகழிகள் பாய்ந்தன. ஊழியின் தீ போல் உருத்து அவன் பொழிந்த வாளிகள் அதிசய வேலைகளைச் செய்யவே யாவரும் கதிகலங்கி மதிமயங்கலாயினர்.

வீழியின் கனிபோல் மேனி கிழிபட அனுமன் வீரச்
சூழெழு வலைய தோள்மேல் ஆயிரம் பகழி தூவி
ஊழியின் நிமிர்ந்த செந்தீ உருமினை உமிழ்வது என்ன
ஏழிரு நூறுவாளி இலக்குவன் கவசத்து எய்தான்.

முற்கொண்டான் அரக்கன் என்னாழுளரி வாண் முகங்கள்தேவர்
பிற்கொண்டார்; இளைய கோவைப் பியல்கொண்டான் பெருந் தோள் நின்றும்
கற்கொண்டார் கிரியின் நாலும் அருவிபோல் குருதி கண்டார்
விற்கொண்டான் இவனே என்னு வெருக்கொண்டார் முனிவர் மேலோர்.

வீரத்திறலுடன் இந்திரசித்து வில்லாடல் புரிந்து அனுமனையும் இலக்குவனையும் அல்லலுறுத்தி யிருக்கும் நிலைமையை இவை உணர்த்தியுள்ளன. மாருதி மேனி முழுதும் உதிரம் ஒழுகி ஓடியுளது. சல்லடைக் கண்களாய் அவ்வுடல் பொள்ளலடைந்தது.

வீழியின் கனிபோல் மேனி கிழிபட என்றதனால் அனுமனது உடல் எங்கும் சிதைந்து இரத்தம் தோய்ந்த புழைகள் பொத்தி

நிற்றலை உய்த்துணர்ந்து கொள்கிறோம். வீழியின் கனி சிவந்த நிறம் உடையது ஆதலால் உதிரம் தோய்ந்த புண்களுக்கு அது இங்கு உவமையாய் வந்து நிலைமையை விளக்கி நின்றது.

இந்திரசித்து கை முந்திவிட்டது; இலக்குவனை வென்று விடுவான் போலும் என்று அமரர் யாவரும் அலமந்துள்ளனர். அவ்வுண்மையை முற்கோண்டான் அரக்கன் என அவர் உட்கொண்டு உளைந்து உருகி மறுகியுள்ளமை உணர்த்தி நின்றது.

விற்கொண்டான் இவனே என்னு வெருக்கொண்டார்.

வில்வீரர்களுள் இவன் ஒருவனே தலைசிறந்த நிலையினன் என்று பலரும் அன்று இந்திரசித்தைப் பாராட்டியிருத்தலை இது நேரே காட்டியுளது. மானக் கொதிப்போடு அவன் கடுத்துத் தொடுத்த பகழிகள் வெற்றி நிலையில் வீறு கொண்டு செல்லவே யாவரும் வெருவ நேர்ந்தனர். அனுமான் உடல் உதிரவெள்ளத்தில் தோய்ந்து நிற்றலைக் கண்டதும் இளையவன் உள்ளம் துடித்தது; உக்கிர வேகமாய் உருத்து அப்புகளைத் தொடுத்தான். தனக்கு வெற்றி கிடைத்துவிடும் என்று வீறுகொண்டு நின்ற இந்திரசித்தின் தேர் உடைந்தது; பூட்டியிருந்த சிங்கங்கள் பொன்றி மடிந்தன; சாரதி தரையில் உருண்டான்; தன் மார்பில் வனைந்திருந்த வச்சிரகவசமும் சிதைந்தது; தோளிலும் மார்பிலும் வாளிகள் ஊடுருவிப் போயின. எதிர்பாராதபடி அதிசய வேகத்தில் நிகழ்ந்த இந்த அழிவு நிலைகளைக் கண்டு இந்திரசித்து விழியூன்றி நோக்கி வெதும்பி யுளைந்தான். தனக்கு நேர்ந்த அல்லல்களையும்மறந்து எதிரியின் வில்லாடலை நினைந்துவியந்துகொண்டான். அவனது வியப்பு இவனது அற்புத ஆற்றலை விளக்கியது.

பொன்னுறு தடந்தேர் பூண்ட மடங்கல்மாப் புரண்ட போதும்
மின்னுறு பதாகை யோடு சாரதி வீழ்ந்த போதும்
தன்னிறத் துருவ வாளி தடுப்பில சார்ந்த போதும்
இன்னது என்று அறியான் அன்னன் இனையதோர் மாற்றம் சொன்னன் (1)

அந்நரன் அல்லன் ஆகில் நாரணன் அனையன் அன்றேல்
பின் அரன் பிரமன் என்பார்ப் பேசுக பிறந்து வாழும்
மன்னர்நம் பதியின் வந்து வரிசிலை பிடித்த கல்வி
இந்நரன் தன்னோடு ஒப்பார் யாருளர்? ஒருவன் என்றான். (2)

வாயிடை நெருப்புக் கால உடல்நெடுங் குருதி வாரத்
தீயிடை நெய்வார்த்து அன்ன வெகுளியான் உயிர்தீர்ந்தாலும்
ஓய்விடம் இல்லான் வல்லை ஒரிமை ஒடுங்கா முன்னம்
ஆயிரம் புரவி பூண்ட ஆழியம் தேரின் ஆனான். (3)

இலக்குவனுடைய வில்லாடலால் அல்லல் அடைந்து, தேர் முதலியன இழந்து அவலமுழந்து நின்ற இந்திரசித்து உள்ளம் வியந்து சொல்லாடியுள்ளதையும், மீண்டு விரைந்து ஓர் சிறந்த தேரில் ஏறிப் போரில் மூண்டு முனைந்து நிற்கும் நிலையையும் இக் கவிப் படங்கள் சீவிய ஓவியமா வரைந்து காட்டியுள்ளன. வீரத்திறல்களின் காட்சிகள் வியப்புகளை ஊட்டி வருகின்றன.

தன் உடலில் வாளிகள் பாய்ந்து உதிரம் ஒழுகிய போதும் அதனை யாதும் அறியாமல் போர் வெறியிலேயே மூண்டு நீண்டு நின்றுள்ளான். அவனது வீரத்திறல்கள் அதிசய வியப்புகளாய் விரிந்து போரின் வேகத்தைத் துலக்கி நிற்கின்றன.

தன் நிறத்து உருவவாளி சார்ந்த போதும்
இன்னது என்று அறியான்.

இந்திரசித்து அங்கே மன்னி நின்ற நிலையை இங்கே உன்னி உணர்ந்து கொள்ளுகிறோம். எதிரியை வென்று தொலைக்க வேண்டும் என்று வீர வெறியில் மூண்டு நிற்றலால் தன் மேனியில் ஊடுருவி ஓடிய வாளிகளையும் ஊறுபாடுகளையும் சோரிகளையும் அவன் யாதும் உணர முடியவில்லை.

தனது உடலில் உற்ற ஊறுகளை ஒரு சிறிதும் கருதாமல் உறுதி கொண்டு நின்றவன் இலட்சுமணனுடைய வில்லாடலையும் வீரப்பிரதாபத்தையும் வியந்து புகழ்ந்தான். தன்னை மறந்து அவன் பேசியுள்ள பேச்சுகள் அவனுடைய நேர்மையான தகுதியையும் வீரப்பான்மையையும் நேரே விளக்கியுள்ளன.

இந்நரன் தன்னோடு ஒப்பார் யார் உளர்?

"இந்த அழகிய வாலிபனுக்கு இணையாக உலகத்தில் யாரும் இலர்; தேவர் உலகத்திலும் அந்த மூவரையன்றி வேறு எவரும் இவனோடு ஒப்பாக மாட்டார். அரன், பிரமன், நாரணன் என்னும் அம் மூவரும் யாவரினும் பெரியரே; அரிய அதிசய ஆற்றல்களையுடையரே; ஆயினும் இவனிடமுள்ள ஆற்றல் எவ

ரிடமும் இதுவரை நான் காணாத அதிசயமுடைதாய்த் தோன்று கிறது என இன்னவாறு இந்திரசித்து இலக்குவனைக்குறித்து வியந்திருக்கிறான். வியப்புவீரவெற்றியைநேரேவிளக்கிநிற்கிறது.

தேவரையும் தேவர்கோனையும் வென்று, மூவரையுங்கண்டு அரிய வரபலங்களைக் கைக்கொண்டு எவரும்நிகரிலர் என்று வீர தீரத்தில் இறுமாந்து வாழ்ந்து வந்தவன் இன்று இலக்குவன் அம்பால் அலக்கண் அடைந்து அலமந்து நின்றான் ஆதலால் இந்த வீரக்குரிசிலை அந்தச் சுத்தவீரன் உள்ளம் திறந்து இப்படி உவந்து புகழ்ந்தான். மாற்றான் மதிப்பு ஏற்றம் மிகவுற்றது.

எதிரியாய் மூண்டு பொருது தனக்கு இடர் இழைத்திருந் தாலும் இலட்சுமணனது வில் வீரத்தை அவன் வியந்து மதித்துப் புகழ்ந்து போற்றியிருப்பது அவனுடைய உத்தம வீரத்தின் சத்திய நீர்மையை உய்த்துணரச்செய்தது.

சிறந்த இராசகுமாரன்; உயர்ந்த போர்வீரன்; உன்னத மான குணநலங்கள் வாய்ந்தவன்; முருகனே என்னும்படி பேரழகு பெற்றுள்ளவன்; ஈண்டு இளையபெருமாள் முன் தளர் வடைய நேர்ந்தான்; நேர்ந்தாலும் உண்மையை ஒளியாமல் உள்ளம் திறந்து உவந்து கூறினான். நல்ல சுத்த வீரர்களிடம் இயல்பாகவே உத்தம நீர்மைகள் உறைந்துள்ளன. உணர்ச்சி வேகங்களும் மானநீர்மைகளும் மருவி யிருத்தலால் வீரர்கள் யாண்டும் என்றும் நெஞ்சு நேர்மையாய் நிலவி நிற்கின்றனர்.

"Heroism feels and never reasons, and therefore is always rights." (Emerson)

"வீரம் என்பது வாதித்து அறிவதன்று; உள்ளத்தில் ஊன்றிய உணர்ச்சி மிகவுடையது; ஆகையால் எப்பொழுதும் தகுதியான நீதியில் அது நிலவியுள்ளது" என எமர்சன் என்னும் அமெரிக்க அறிஞர் இவ்வாறு கூறியிருக்கிறார்.

உண்மையான வீரமுடையவரது தன்மையை இதனால் உணர்ந்துகொள்கிறோம். எதிரியை ஏற்றமாப் புகழ்ந்து பேசி னான் என உலக நோக்கில் ஓரளவு இகழ்ந்து காணப்படினும் அவ்வீரனது உண்மைநிலை உலக நிலைகளைக்கடந்து ஈண்டு ஒளி புரிந்துள்ளது. தலைமையான வீரத்தில் தகுதியான நீர்மைகள் மிகுதியாய் அமைந்து மேன்மை சுரந்திருக்கின்றன.

அந்நரன் என்றதுமுன்னம் திருமாலின் அமிசமாய்த் தோன்றியிருந்த ஞானதீரனை. கிருதயுகத்தில் உலக மக்களுக்கு உணர்வு நலங்களைப் போதித்து உயர்த்தவும், அசுர சுபாவங்களை அழித்து அகற்றவும் ஆசிரியனும் மாணவனுமாய் மால் மருவி யிருந்தருளினர். அந்த இருவருக்கும் நாரணன், நரன் என முறையே பெயர் அமைந்திருந்தன. அதன்பின் திரேதாயுகத்தில் அவர் இராமன், இலக்குவன் எனத் தோன்றினர். பின்பு துவாபரயுகத்தில் கண்ணன், அருச்சுனன் எனக்கலந்திருந்தனர்.

முதலாவது இணைந்தது, தீமையால் செருக்கிநின்ற அசுரர் குலத்தை அழிக்க அமைந்தது; இரண்டாவது சேர்ந்தது, பொல்லாத அரக்கர் குலத்தை ஒழிக்கநேர்ந்தது; மூன்றுவது கூடியது, கொடுமை மண்டிய அரசர் குலத்தைத் தொலைக்க வாய்ந்தது. மாயவனுடைய மாய வேலைகள் தரும கருமங்களாய் மருவி அருமைப் பாடுகள் பெருகி அதிசயங்களை அருளியுள்ளன.

பழையநிலைகளை இங்கே தழுவி எண்ணியது புதுமையோடு கெழுமியுள்ள உறவுரிமை தெரியவந்தது. இந்த மூலத்தொடர்புகளை முடிவில் கண்ணனே விசயனிடம் சொல்ல நேர்ந்தான்.

என்னைநீ புகலக் கேண்மோ எங்குமாய் யாவும் ஆகி
மன்னிய பொருளும் யானே மறைக்கெலாம் முடியும் யானே
உன்னையான் பிறிவது இல்லை ஒருமுறை பிறிந்து மேனாள்
நன்னிலா வெறிக்கும் பூணுய்! நரனும் நாரணனும் ஆனேம். (க)

பின்னொரு பிறப்பில் யாமே இராமலக்குமப் பேர் பெற்றேம்;
இன்னெடும் பிறப்பில் நீயும் யானுமாய் ஈண்டு நின்றேம்;
நின்னிடை மயக்கும் இந்த நேயமும் ஒழிக என்று
தன்னிலை அவற்குக் காட்டித் தத்துவம் தெளிவித்தானே. (உ)
(பாரதம் முதல் போர்ச் சருக்கம்)

துரியோதனன் ஆதியரோடு போரில் மூண்டபோது முதல் நாள் அருச்சுனன் உள்ளம் மாறி மறுகினன். அருமையான உறவினர்களோடு போராடி வென்று பாராளுவதைவிட மறுபடியும் வனவாசம்போய் மனம் அமைதியாய் வாழுவதே நல்லது என்று கருதித் தனது வில்லைத் தேர்த்தட்டில் கீழே

போட்டுவிட்டு அவன் அயர்ந்து நின்றான். அப்பொழுது அந்தத் தேரின் சாரதியாய் அமர்ந்திருந்த கண்ணன் புன்னகைபுரிந்து இவ்வண்ணம் உண்மையை உரைக்கலானான். "பொல்லாத தீயரைத் தொலைத்துப் பூமி பாரம் தீர்க்கவே நாம் இங்ஙனம் சேர்ந்து வந்திருக்கிறோம்; முன்னரும் இருமுறை கூடியிருந்து குறித்த கருமங்களை முடித்துள்ளோம். இன்று அடுத்துள்ளதில் அயர்ச்சி அடையாதே; கிளர்ச்சியோடு வேலை செய்; கீர்த்தி உண்டாம்;" என்று இப்படிப் போரில் அன்று போதித்த தத்துவத் தொகுதியே பகவற் கீதை என்னும் நூலாய் வந்துள்ளது.

இறைவன் ஆன மால் ஏனமாய் இருநிலம் எடுத்தான்
மறைசொல்நாரதனுக்குப் பஞ்சராத்திரம் வகுத்தான்
விறல்செய் மா நர நாரணராய்த் தவம் விரித்தான்
உறையும் தாய்க்குநற் கபிலனாய்த் தத்துவம் உரைத்தான். (க)

அணிசெய் காவுசூழ் அயோத்தியில் இராமன் என்றடைந்து
பணிசெய் வானரப் படைகளால் பரவையை அடைத்து
மணிசெய் மாமதில் இலங்கையின் மருவுஇராவணனைத்
துணிசெய்தான் வந்து பதத்துணை வானவர் தொழுவோன். (உ)
(பாகவதம்)

நரன், நாரணன், இராமன் என மால் அவதரித்துள்ளதை இதுவும் குறித்துள்ளது. நாராயணன் இராமன் ஆகவும், நரன் இலக்குவன் ஆகவும் இணைந்துவந்துள்ளமையால் அந்த ஒப்புமை இங்கே பிணைந்து வந்தது. அந்நரன் என்னும் சேய்மைச்சுட்டு பூர்வகாலத்தின் எல்லையையும், இன்வுரிமையையும் குறித்து நின்றது. இந்நரன் என்னும் அண்மைச்சுட்டு எதிரே நிற்கும் இளவலைக் குறித்தது. தேவர்களையெல்லாம் வென்று இறுமாந்து நின்றவன் ஆதலால் மனிதரை மிகவும் கேவலமாகவே எண்ணி வந்தான்; இன்று இலக்குவனது வில்லாற்றலைக் கண்டதும் கலக்கம் அடைந்தான்; எளிதா இகழ்ந்துவந்தது பிழை என்று தெளிய நேர்ந்தான்; நேர்ந்தானும் 'நெடுங்காலமாக உள்ளல் குறிப்போடு நினைந்துவந்தபடியே இந்நரன் என்று உரைத்தான். இந்த உலகத்தில் தோன்றியுள்ள அரசிளங்குமரர் எவரும் இக் குமரனுக்கு இணையாகமாட்டார்; அமரரும் ஆகார்; என்று அதிசய வியப்போடு அவன் முடிவு செய்துள்ளான்.

அமரர் எவரிடமும் படாத அடியும் திறமையும் இவனிடம்

பட்டுள்ளமையால் இக்குலவீரனை இன்னவாறு அவன் தன்னை மறந்து வியந்து புகழ்ந்தான். பல தேச சரிதங்களையும், திருமாலின் அவதாரங்களையும் அரிய பல மருமங்களையும் அவன் நன்கு அறிந்துள்ளான் என்பது இங்கே தெரியவந்தது.

அந்நரன் என்றது இராமனைக்கருதி அந்த அண்ணனே இந்தத் தம்பிக்குச்சரி என்று சொன்னதுபோல் தோன்றினும் முன்னதே மூலப்பழமையோடு தோய்ந்து சாலப்பொருந்தியுளது. எதிரியை இவ்வளவு வியந்து சொன்னது எவர்க்கும் வியப்பாய்த்தோன்றும். யாரிடமும் என்றும் யாண்டும்படாத அவமானத்தை இன்று ஈண்டு இந்தக் கோமகனிடம் பட்டுள்ளான் ஆதலால் பாடு தெரிந்து கூறினன். "பட்டவனுக்குத் தெரியும் பாடு" என்னும் பழமொழியின் பொருளை ஈண்டு உளம் அறியவேண்டும். உண்மை நிலை உரையில் வந்தது.

இடம் காலம் வலி முதலிய நிலைகள் தனக்கு அனுகூலமாயுள்ளன; எதிரிக்கு அவ்வாறு அமையவில்லை; பல குறைபாடுகளோடு கூடியிருந்தும் இவ்வாறு இவன் என்னை ஈடழித்து வெற்றிபெற நேர்ந்தானே! என்னும் வியப்பு அவனுக்கு வியனாய் விளைந்துள்ளது. விளையவே இட நிலையை எண்ணி மொழிந்தான்.

நம்பதியில் வந்து வரிசிலை பிடித்த கல்வி.

இளையபெருமாளுடைய அதிசய வில்லாடலை இந்திரசித்து எண்ணி வியந்திருக்கும் நிலையை இது விளக்கியுளது. எவ்வளவு பெரிய வலிகளையுடையவராயினும் தன் இடம்விட்டு அயலிடம் வந்தால் அவர் செயல் குறைந்து நிற்பர்; நீரில் வெல்லும் முதலை நிலத்தில் இழிந்துபடும்; கடலில் ஓடும் நாவாய் தரையில் ஓடாது; அவரவர்க்கு உரிய இடத்தில் நின்றபோதுதான் எவரும் வலியுடையராய் நிலைத்து நிற்பர். இத்தகைய இடத்தின் ஆதரவு இந்நரனுக்கு யாதும் இல்லை; எனக்குத் தனி உரிமையாய் வலிமை அமைந்துள்ள என் இடத்தில் ஏறிவந்து என்னை இப்படி அலைக்கழித்தானே! என்று அவன் உன்னி உளைந்து வியந்திருக்கிறான்; அவ்வுண்மையை உரைகள் உணர்த்தியுள்ளன. "இவனுடைய ஊராகிய அயோத்தியில் புகுந்து நான் போராடி இவன் என்னை இவ்வாறு வென்றிருந்தால் அது ஒரு அதிசயம் அன்று; என் நிலத்தில் வந்து நின்றுகொண்டு என்னை இவ்வாறு

வென்று தொலைத்தது இவனுக்குப் பெரிய ஓர் அதிசய வெற்றியே" என்று பெரிதும் வியந்து அவன் துதி செய்திருக்கிறான்.

தன்னிலத்தினில் குறுமுயல் தந்தியின் வலிது என்று
இந்நிலத்தினில் பழமொழி அறிதிநீ இறைவ!
எந்நிலத்தினும் உனக்கு எளிதாயினும் இவர்நம்
நன்னிலத்தினில் வர அமர் தொடங்குதல் நன்றால்

(பாரதம்)

துரியோதனனுக்கு விதுரன் இப்படிப் புத்தி போதித்திருக்கிறான். விராடநகரத்தை முற்றுகைசெய்து அங்கே பாண்டவரை வளைத்துப் போராட வேண்டும் என்று அம்மன்னன் கூறிய போது இந்நீதி கூறப்பட்டது. இடத்தின் வலி நிலை இதனால் உணரலாகும். உரிய உறுதிநிலை அரிய திறல்களை அருளுகின்றது.

இந்த வலி அமைதி சிறிதும் இல்லாமல் எதிரியின் இடத்தே புகுந்து இலக்குவன் பகைவனைக் கலக்கி வென்றிருப்பது அவன் உள்ளத்தைக் கலங்கச் செய்தது. யாண்டும் அஞ்சாத எமனும் அருகேவந்து எட்டிப்பார்க்கவும் அஞ்சுகின்ற கட்டும் காவலும் உடையது இலங்காபுரி. போர்வெறியராய் எவ்வழியும் வீரத்திறல்களையே நாடி அடுதொழிலாற்றுகின்ற கொடிய அரக்கர் குழாங்கள் நெடிது நிறைந்தது; சேனைத்திரள்கள் செழித்துள்ளது; அத்தகைய அதிசய நகரில் எத்தகைய ஆதரவையும் எதிர்பாராமல் வில்லே துணையாய் இலக்குவன் வீரோடு நேர் ஏறிப் போராடி வென்றிருப்பது பெருவியப்பாய் நின்றது.

சிலைபிடித்த கல்வி என்றது இளையவன் செய்து நின்ற வில்லாடலை வியந்து சொல்லியபடியாம். அம்புகளை எடுத்துத் தொடுத்து அடுத்தடுத்து விடுத்த அச்செயல்கள் அதிசய விசித்திரங்களாய் விளங்கி நின்றமையால் அதனை ஓர் வித்தகக்கலையாக வியந்து சொல்லினான். வில்லில் நல்ல தேர்ச்சியுடையவன் ஆதலால் இவ்வீரன் புரிந்த வில் வேலைகள் அவனுக்கு அதிசய புதுமைகளாய்த் தோன்றின. புதுமைகண்டபோது புகழ்மொழிகள் மண்டி வந்தன. அதிசய நிலை துதிசெய்ய நேர்ந்தது.

மீண்டும் மூண்டது.

இவ்வாறு எதிரியை வியந்து நின்றவன் வேறு ஒரு தேரில் விரைந்து ஏறினான். வீரவெறியோடு வெகுண்டு போராடினான்.

மானக் கொதிப்பு மனத்தை வாட்டவே சினத்தீ ஏறச் சீறிப் பொருதான். சீற்றமும் ஆற்றலும் ஏற்றமுற்று எழுந்தன.

வாய் இடை நெருப்புக் கால உடல் நெடுங் குருதி வாரத்
தீயிடை நெய்வார்த்து அன்ன வெகுளியான்.

உள்ளம் கொதித்து வேக, உடலில் உதிரம் சோர ஊழித் தீபோல் உருத்து இந்திரசித்து உக்கிரவீரமாய்ப் போரில் ஊக்கி நிற்கும் நிலையை இங்கே நோக்கி நிற்கின்றோம். புதிய தேரில் ஏறியதும் அதிசய ஆற்றலோடு கொடிய பகழிகளைக் கடிது சொரிந்து அடு தொழில் புரிந்தான். கடுத்து மூண்டு தொடுத்த அம்புகளால் அடுத்து வளைந்த வானரங்கள் அழிந்து வீழ்ந்தன. அவன் ஏவிய பாணங்களை இடை ஒழித்து இலக்குவன் அவன் மேல் இலக்கோடு கடுங் கணைகளைக் கடுத்துத் தொடுத்தான். கூரிய பகழிகள் பல அவன் மேனியில் பாய்ந்து உருவி வான் வழி போயின. மானக் கொதிப்போடு மூண்டு பொருதவன் மார்பில் பாய்ந்த கணைகளால் சிறிது மயங்கித் தேரில் அயர்ந்து நின்றான். போரில் அயர்ந்தான் என்றதை அறிந்ததும் இலக்குவனும் அம்பு தொடாமல் ஏந்திய வில்லோடு எதிரே நின்றான். இவ்வீரக்குரிசில் இரங்கி அமைதியாய் நின்றது உயர் பெருந்தகைமையாய் ஒளிபுரிந்து விளங்கியது. அதுபொழுது அனுமான் விரைந்து பாய்ந்து அவன் ஏறியிருந்த தேரைக் காலால் எற்றி உதைத்தான். அந்த உதையால் அது உடைந்து சிதைந்தது. புரவிகளும் புரண்டு மடிந்தன; சாரதியும் பாரில் உருண்டு பதைத்துச் செத்தான். தேரில் நின்ற இந்திரசித்து அந்தரத்தே தாவி வேறு ஒரு தேரில் ஏறினான். புதிதாய் ஏறிய அதனை இலக்குவன் அதிவேகமாய் அழித்து ஒழித்தான். அது ஒழியவே வேறு ஒரு தேரில் தாவினான். அவன் தாவி நிற்கு முன்னரே அத்தேரும் தரையில் உருண்டது. போரில் அபாயங்கள் நேர்ந்தால் உதவிபுரிய ஆயத்தமாய் வந்திருந்த சேமத் தேர்கள் எல்லாம் சீரழிந்து சிதைந்து வீழ்ந்தன.

நூறு வெங்கணை மார்பில் நுழைதலின்
ஊறு சோரியோடு உள்ளமும் சோரத்
தேறலாம் துணையும் சிலை ஊன்றியே
ஆறி நின்றனன் ஆற்றலில் தோற்றிலான் (க)

புதையும் நன்மணி பொன்உருள் அச்சொடு
சிதைய ஆயிரம் பாய்பரி சிந்திட
வதையில் மற்ெறாரு கூற்றென மாருதி
உதையினால் அவன் தேரை உருட்டினான். (உ)

பேய்ஓராயிரம் பூண்டது பெய்ம்மணி
ஏய தேர் இமைப்பின்னிடை ஏறினான்
தூயவன் சுடர்த் தோளிணை மேற்சுடர்
தீய வெங்கணை ஐம்பது சிந்தினான். (ங)

ஏறி ஏறி இழிந்ததல்லால் இகல்
வேறு செய்திலன் வெய்யவன்; வீரனும்
ஆறு கோடிப் பகழியின் ஐயிரு
நூறு தேர் ஒரு நாழிகை நூறினான். (ச)

ஏறிய தேர்கள் யாவும் இவ்வாறு வேறுபடவே இந்திரசித்து மாறி மறுகிச் சீறிச் சினந்தான். நிலைமை குலைந்தாலும் தலைமை தளராமல் தாக்கி நின்றான். அப்பொழுது அவனுக்கு உப பலமாக வந்திருந்த சேனாதிபதிகள் யாவரும் மானவீரங்களோடு மூண்டுவந்து இலக்குவனை வளைந்து கொண்டு விலக்கரும் போரை விரைந்து புரிந்தார். தங்கள் தலைவனுக்கு ஆதரவாக உரிய சமையத்தில் வந்து பெரிய போரை ஆற்றிய அந்நெடிய திரள்களை இலக்குவன் அம்புகள் கடிது கொன்று குவித்தன. அனுமானும் பலரை உதைத்து உருட்டினான். சிறந்த வில்லாளியை மேலே தாங்கிக் கொண்டு யாண்டும் விரைந்து பாய்ந்து அரக்கர்களாகிய மதயானைகளை அஞ்சனைச்சிங்கம் அதம் செய்து வந்தது அதிசய வியப்பாய் நின்றது.

சுற்றி வால்கொடு தாவும் துவைக்கும் விட்டு
எற்றும் வானின் எடுத்துஎறியும் எதிர்
உற்று மோதும் உதைக்கும் உறுக்கு மால்
கொற்றவில்லி அன்று ஏறிய கூற்றமே. (க)

பார்க்கும் அஞ்ச உறுக்கும் பகட்டினால்!
தூர்க்கும் வேலையைத் தோள்புடை கொட்டிநின்று!
ஆர்க்கும் ஆயிரம் தேர்பிடித்து அங்கையால்!
ஈர்க்கும் ஐயன் அன்று ஏறிய யானையே. (உ)

மாவும் யானையும் வாளுடைத் தானையும்
பூவும் நீரும் புனைதளிரும் எனத்
தூவும் அள்ளிப் பிசையும் துகைக்கு மால்
சேவகன் தெரிந்து ஏறிய சீயமே. (௩.)

உரகம் பூண்ட உருளை பொருந்தின
இரதம் ஆயிரம் ஏயெனும் மாத்திரை
சரத மாகத் தரைப்படச் சாடுமால்
வரதன் அன்று வந்து ஏறிய வாசியே. (௪)

அநுமான் செய்துள்ள அடலாண்மைகளை இவை காட்டியுள்ளன. இளவலை ஏந்திச் சாரிதிரிந்து வருவதோடு அமையாமல் எதிர்ப்பட்ட அரக்கர்களை எவ்வழியும் நாசமாக்கி வீர மாருதி வீறோடு போராடியிருப்பது பெரிய அதிசயமாய் நின்றது. வாலாலும் கையாலும் காலாலும் வாய்த்த இடங்களிலெல்லாம் பகையினத்தை எற்றி உதைத்து எறிந்து தூவியாண்டும் சித்திரவதை செய்துவந்த அந்த வெற்றித் திறலை நோக்கிக் கொற்றக் குரிசிலும் கொண்டாடி நின்றான்.

கோற்ற வில்லி அன்று ஏறிய கூற்றம்.

என அநுமானை இப்படிக் குறித்துக் காட்டியிருக்கிறார். வானர உருவில் மருவியிருந்தாலும் அநுமானது பேராற்றல் அளவிடலரிய நிலையில் பெருகியிருக்கிறது. எமனையும் எதிர்த்துப் போராடவுரிய அரக்கர்கள் இந்த வானரவீரனால் அன்று திரள் திரள்களாக மாண்டு மடிந்தனர். கூற்றுவனும் நெருங்கக்கூசிய கொடிய வீர இனத்தைச் சின்னபின்னமாச் சிதைத்து அழித்தான் ஆதலால் இவன் ஓர் அதிசயமான கூற்றமாய் அங்கு ஏற்றமுற்று நின்றான. கூற்றமே, சீயமே, யானையே, வாசியே என்று நம் கவிநாயகன் ஆசை மீதூர்ந்து இக்கவிநாயகனைப் பேசியிருப்பது பேருவகையை விளைத்திருக்கிறது. வாசிபோல் வேகமாய் வாவுகின்றான்; யானைபோல் கம்பீரமாய் அடல் புரிகின்றான்; சிங்கம்போல் சீறி வதைக்கின்றான; கூற்றுவனைப் போல் மாற்றலரைக் கொன்று தொலைக்கின்றான். காலன்வாழ் கரம் என இவனுடைய கையை முன்னம் கவி குறித்திருப்பது ஈண்டுக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளத்தக்கது.

வீரமாருதியும் வெற்றிக்குரிசிலும் இன்னவாறு அடலாண்மை

புரியவே கடல்போல் வந்திருந்த படைகள் பலவும் பாழாயின. ஆகவே இறுதியில் ஒரு தேர் ஏறி இந்திரசித்து பொருதிறலோடு மீண்டும் மூண்டுபுகுந்து முனைந்து சினந்து போராடநேர்ந்தான்.

அங்கதன் மூண்டது.

கடுவேகத்தோடு கொதித்துவந்த இந்திரசித்தை இடையே அங்கதன் மூண்டு எதிர்த்து அடலாண்மை புரிந்தான். அவன் மீது அம்புகளை ஏவிக் கையிலிருந்த தண்டத்தையும் துண்டித்து வீழ்த்தி மேகநாதன் வேகமாய் வேலை செய்தான். தண்டம் துண்டமானவுடனே அங்கே கிடந்த ஓர் இருப்புலக்கையை விரைந்து எடுத்து நேரே பாய்ந்து அவன் ஏறியிருந்த தேரை எற்றி அடித்தான். அந்த நெடிய இரதம் கெட்டழிந்து உடைந்தது. அவன் தட்டழிந்து தாவி வேறு ஒரு தேரில் ஏறினன்.

இந்திரசித்தினுடைய தேரை அங்கதன் அடலாண்மையோடுபாய்ந்துஉடைத்தெறிந்ததைக்கண்டதும்எல்லாரும்அவனை வியந்து புகழ்ந்தனர். புகழ்ச்சி மொழிகள் உவப்பில் எழுந்தன.

தந்தை தந்தை பண்டு உற்ற சழக்கு எலாம்
எந்தை தீர்த்தனன்.

இந்தவாறு யாவரும் அங்கதனைப்புகழ்ந்து உவந்திருக்கின்றனர். இந்திரனை வென்று சிறைப்படுத்தி அதனால் இந்திரசித்து என்று மேகநாதன் வெற்றிப்பேர் பெற்றிருக்கிறான்.இன்று அங்கதனால் அவன் அவமானம் அடைந்தான். தன் தந்தையைப் பெற்ற பாட்டனை முன்பு அவன் செய்திருந்த வசையினை இன்று இப் பேரன் அவனுக்கு நேரே செய்து அப்பழியைத் தீர்த்துக் கொண்டான் என அமரர் யாவரும் ஆர்த்திருக்கின்றனர். அங்கதன் தந்தை வாலி. அவன் தந்தை இந்திரன். இந்திரன் அமிசமாய் வாலி பிறந்து வந்திருத்தலால் அவன் தந்தை என நேர்ந்தான். ஆகவே அங்கதனுக்கு அவன் பாட்டன் ஆயினன்.

தன் எதிரே தூதனாய் வந்தபோது நீ யார்? என்று அங்கதனை இராவணன் கேட்டான். அதற்கு இவன் சொன்ன பதில் என்ன? அதிக நன்னயமுடைய அதனை அயலே காண்க.

'இந்திரன் செம்மல்; பண்டு ஓர் இராவணன் என்பான் தன்னைச்
சுந்தரவாலால் கட்டி வந்தவன் மைந்தன் நான்''

என இந்த வீரமகன் இலங்காதிபதி எதிரே கூறியதும் இங்கே அறியவுரியது. தன் குடிக்கு நேர்ந்திருந்த பழியைத் தீர்த்த குலமகன் என இத்தலைமகன் இங்கே நிலைபெற்றுள்ளான்.

சழக்கு = அல்லல்; தீமை, அலைக்கழிவு.

பிதாமகன், பிதா, பேரன் என்னும் மூவரும் இங்கே சிந்தனைக்கு வந்துள்ளனர். கதைப் போக்கிலேயே குடிப்பழி தீர்ப்பது குலமகனுக்கு அழகு என்று கவி குறித்துக்காட்டியிருக்கிறார்; இந்த அரிய காட்சி இனிய சுவையை யூட்டியிருக்கிறது.

## சேனைத் தலைவர் சேர்ந்தது.

தேர் இழந்த அவ்வீரன் மீண்டும் ஓர் தேரில் ஏறி மூண்டு வந்து முனைந்து பொருதான். அங்கங்கே சிதறி நின்ற அரக்கரும் ஒருங்கு திரண்டு உதவியாய்ச் சேர்ந்து தங்கள் சக்கரவர்த்தி மகனுக்குப் பக்க பலமாய் நின்று மிக்க வீறோடு விரைந்து போராடலாயினர். போரின்வேகம் ஒருமுகமாய்உருத்து வந்தது.

வானரங்களை ஒரு பொருளாக மதியாமல் இளையவனையே அனைவரும் குறிக்கோளுடன் வந்து வளைத்துக்கொண்டார். வில்லும் வேலும் வாளும் கொல்லும் கருவிகள் யாவும் கூடி வேலை செய்தன. எல்லாரும் போரில் கைதேர்ந்த வீரர்கள் ஆதலால் எவ்வழியும் தீரமாய் ஏறிப் பொருதார். தானைத்தலைவர்கள் விளைத்த போர் வானத்தவரையும் கலங்கச் செய்தன. வானர சேனைகளும் மானமழிந்து மடிந்தன. இன்னவாறு அவர் எங்கும் திரண்டு பொங்கிப்பொருது வென்றி மீதூர்ந்து வந்தவர் இளையபெருமாள் ஏவியபாணங்களால் படுநாசம் அடைந்தனர். வெற்றி கிடைத்துவிடும் என்று வீறுகொண்டு போராடினவர் அதிவிரைவில் மாறுபடி மண்ணில் விழுந்து மாண்டது விண்ணவர்க்கும் மண்ணவர்க்கும் எண்ணரிய வியப்பாயது. சுற்றி வளைந்த சேனைத்தலைவர் யாவரையும் விரைந்து வென்று தொலைத்து இலக்குவன் வெற்றி வீறோடு விளங்கி நின்றான்.

வந்து நேர்ந்தனர் மாருதி மேல்வரும்
அந்தி வண்ணனும் ஆயிரம் ஆயிரம்
சிந்தினான் கணை தேவரை வென்றவன்
நுந்த நுந்த முறைமுறை நூறினான். (க)

அனைய காலையில் ஆயிரம் ஆயிரம்
வினைய வெங்கண் அரக்கரை விண்ணவர்
நினையும் மாத்திரத்து ஆருயிர் நீக்கினன்
மனையும் வாழ்வும் உறக்கமும் மாற்றினன். (உ)

பொருத நிருதர் பொன்றி மடிந்த நிலையையும், வென்று நின்றவனது விழுமிய மேன்மையையும் இவை நன்கு விளக்கியுள்ளன. பத்துலட்சம் அரக்கர்கள் செத்து விழுந்துள்ளமையை ஆயிரம் ஆயிரம் என்னும் எண்ணின் தொகை எதிர் உணர்த்தி நின்றது. வந்து மூண்டவர் எல்லாரும் நொந்து மாண்டனரேயன்றி மீண்டு போனவர் எவரும் இலர். இவ்வாறு கொன்றுகுவித்து வென்று நின்றவனைக் கவி இங்கே நன்கு காட்டியிருக்கிறார்.

மனையும் வாழ்வும் உறக்கமும் மாற்றினன்.

அரக்கருடைய உடல்களை நீக்கி உயிர்களை மாற்றினனது மாற்று அறிய இவ்வுரை இவ்வாறு தோற்றியுள்ளது. யாரும் மாற்ற முடியாதவைகளை மாற்றியிருத்தலால் அந்த ஏற்றம் தெரிய வந்தது. மூன்றை மாற்றி நின்றவனை மூவுலகமும் போற்றி நின்றன.

இலக்குவன் சிறந்த சக்கரவர்த்தி மகன்; உயர்ந்த இராசபோகங்களை அனுபவிக்கவுரியவன். காளைப்பருவமுடைய இந்தச் சுகுமாரன் அந்த இனிய சுகங்களையெல்லாம் அறவே ஒழித்துவிட்டு இராமனோடு வனவாசம் புகுந்து அவனுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்துகொண்டு உறக்கமின்றி இரவும்பகலும் கண்ணை இமை காப்பதுபோலக் கண்ணும் கருத்துமாய் அந்த அண்ணனையே தொழுது பேணி உழுவலன்போடு உருகி ஒழுகி வருகிறான். உடன் பிறந்த தம்பி என்ற அந்த உரிமைச்செருக்கு ஒரு சிறிதுமின்றித் தாசானுதாசனாய் இராமானுசன் நடந்து வருவது உலக உள்ளங்களைத் தொடர்ந்து உருக்கி வருகிறது.

மனையும் என்றதில் மருவியுள்ள உண்மை நினைவு கூர்ந்து சிந்திக்கவுரியது. எண் உம்மை சிறப்புநிலையில்குறிப்பாய்நின்றது.

அழகிய இளமனைவியைத் துறந்திருப்பது அதிசயமான துறவு ஆதலால் அதன் தலைமையும் நிலைமையும் தெரிய அது முதலில் வந்தது. அரிய பெரிய இராசபோகங்களை மறந்து காட்டுக் கிழங்குகளைத் தின்று காலம் கழித்து வருதலால் வாழ்வும் மாற்றினன் என்றார். அவனுடைய இயல்பான வாழ்வின்

உயர்வையும், அதனை அறவே மாற்றிவிட்டுப்புதிதாய் ஏற்றுள்ள நிலையையும் எண்ணி நோக்குவார் இப்புண்ணியத்தம்பியின் புனிதநீர்மையையும் சகோதரவாஞ்சையையும் கருதியுருகுவார்.

உறக்கமும் மாற்றினன்.

இது எவ்வளவு பெரிய அதிசயம்! யாவரும் மாற்ற முடியாததை இக்குலமகன் தனியே மாற்றியிருக்கிருன். இந்த அரிய விரதத்தை மேற்கொண்டது எதற்காக? எல்லாம் அண்ணனை இனிது காக்கவேயாம். அந்தப் பாதுகாவலில் கண் விழிப்பு விண் விழிப்பாய் நின்றது.

கங்கைக் கரையில் அண்ணனும் அண்ணியும் உறங்கும் போது இந்தத் தம்பி வில்லே ஊன்றியகையோடு இரவு முழுவதும் விழித்துப் பாதுகாத்து நின்றது காவியவுலகத்தில் ஒரு பெரிய விழிப்பை விளைத்து அரிய வியப்பை நெடிது வளர்த்துள்ளது.

"கங்குல் எல்லைகாண்பளவும் நின்றான் இமைப்பிலன் நயனம்"

என இவன் உறங்காது நின்ற நிலையைநோக்கிக் குகனும் உருகி அழுதிருக்கிருன். பரதனும் கேள்வியுற்றுக் கதறியிருக்கிருன். பரதன்முதலாக விரதமாதவர் எவரும் இவனது உறங்கா விரதத்தை வியந்து கொண்டாடிப் புகழ்ந்து போற்றியுள்ளனர்.

காமபோகங்களையும், சுகவாழ்வுகளையும், யாவரும் விலக்க முடியாத உறக்கத்தையும் விலக்கிவென்ற இலக்குவன் இங்கே எவரும் வெல்லமுடியாத அரக்கர் திரள்களை எல்லாம் ஒருங்கே வென்று ஒழித்து மருங்கே வெற்றிவீரனுடு விளங்கி நின்ருன்.

அரிய விரத ஒழுக்கங்களை உடையவரே பெரிய காரியங்களைச் செய்து முடிப்பர் என்னும் உண்மை ஈண்டு நுண்மையாக உணரவந்தது. அகப்பகைகளை வென்ற அதிசயவீரன் புறப்பகைகளையும் வென்று புகழ்மீதூர்ந்து துதிகொண்டு நின்ருன்.

அடலோடு மூண்டுவந்த படைகள் எல்லாம் மாண்டன. நிலைமையை நினைந்து நினைந்து இந்திரசித்து நெஞ்சம் கொதித்தான். அவனுடைய தேருக்குப் பாதுகாவலாய்ப் புடைசூழ்ந்து வந்த அதிசய மல்லர்கள் தண்டப்போர் செய்ய மூண்டார், இலக்குவன் வில்லின் வேலையை நிறுத்திக்கொண்டான். ஒத்த வில்லாளிகளோடு போராடுவதே உத்தம வீரம் என்று உறுதி

கொண்டுள்ளவன் ஆதலால் மல்லர் மூளவே பொறுதியாய் வில்லை நிறுத்தினான். அனுமான் ஒல்லையில் முன் ஏறினான். தண்டவீரர்கள் மூண்டு தாக்கினர். மல்லர் தலைவர் இருவர் நேரேவந்து ஓங்கியடித்தபோது அந்தத்தண்டங்கள் இரண்டையும் ஒருங்கே பறித்துக்கொண்டான். எமதண்டங்களைப் போன்ற அந்த நெடிய தடிகளை மாருதி கவர்ந்துகொள்ளவே வெறுங்கையராய் நின்ற அவ் இருவரும் மறுகி வெருவினர்.

இருவரும் இழந்த வில்லார் எழுமுனை வயிரத் தண்டர்
உரும்எனக் கடிதின் ஓடி அனுமனை இமைப்பின் உற்றார்
பொருகனற் பொறிகள் சிந்தப் புடைத்தனர் புடைத்த லோடும்
பருவலிக் கரத்தினால் தண்டுஇரண்டையும் பறித்துக் கொண்டான் (க)

தண்டவன் கைய தாய தன்மையைத் தறுகணாளர்
கண்டனர் கண்டு செய்ய லாவதொன்றுனும் காணார்
கொண்டனன் எறிந்து நம்மைக்கொல்லும்என்று அச்சம் கொண்டார்
உண்டசெஞ் சோறு நோக்கார் உயிருக்கே உதவி செய்தார். (உ)

மண்டிப்போராட வந்தவர் தங்கள் கைத்தண்டங்களை அனுமானிடம் பறிகொடுத்துவிட்டுப் பதறி ஓடியிருக்கும் நிலைகளை இவை காட்டியுள்ளன. போர்க்கருவிகள் பறிபோனவுடனே இனி உயிர் பறிபோய்விடும் என்று அவர் நெஞ்சம் அஞ்சியதால் நெடிது ஓட நேர்ந்தார். யாண்டும் ஓடாமல் எங்கும் மூண்டு போராடி வந்தவர் ஈண்டு இப்படி ஓடியிருப்பது காலவேற்றுமையைக் காட்டி நின்றது. அரக்கர் குலகாலனாய் அனுமான் கொன்றுவருதலை அடிக்கடி கண்டுவந்துள்ளமையால் அச்சம்கொண்டு அயலே விரைந்துஓடினர். ஓடிய அவரை நோக்கிப்பேடிகள் என்று வானரவீரர்கள் பெரிதும் சிரித்தனர். பறித்ததண்டங்களை முறித்து அனுமான் அயலே வீசிஎறிந்தான். மறங்காட்டி வந்த அரக்கர் புறங்காட்டி ஓடியது வீரமாருதியின் திறங்காட்டி நின்றது. அவரது ஓட்டம் எவருக்கும் உவகையை ஊட்டி உல்லாச விநோதங்களை நீட்டியது.

உண்டசெஞ்சோறு நோக்கார்; உயிருக்கே உதவிசெய்தார்.

அங்கே ஓடிப்போனவரைக் குறித்து நம் கவி இப்படிப் பாடிக் காட்டியிருக்கிறார். இந்த ஈற்றடியைப்பாடும்போது ஒரு குறுஞ் சிரிப்பும் கூடியிருக்கும் என்று நாம் நாடித் தெரிகின்றோம்.

தமக்குச் சோறூட்டி வளர்த்து வந்த அரசனுக்கு உதவி செய்யாமல் தம் உயிருக்கே உதவியை நாடி அவர் ஓடி ஒளிந்தார். உண்டுவந்த சோற்றுக் கடனைத் தீராமல் நன்றி கெட்டு ஓடினர் என்று அவர் இங்கே பழிக்கப்பட்டார்.

"நெடிதுநாள் வளர்த்துப் போர்க்கோலம் செய்துவிட்டார்க்கு
உயிர்கொடாது அங்குப் போகேன்"

என்று கும்பகருணனைப் போல் நன்றியறிவோடு போராடி மாள்பவரே என்றும் வெற்றி வீரராய் விளங்கிநிற்கின்றனர். ஓடிப்போவோர் பேடிகளாய் இழிந்து பிழைபடுகின்றனர்.

ஓடிப்போனர் என்னமல் உயிருக்கேஉதவிசெய்தார் என்றது உயர்ந்த கலைச்சுவையாய் ஒளி பெற்றுள்ளது. உற்றவருக்கு உதவி புரியாமல் ஊனமாய் ஓடின அவரை ஈனமா அவமானப் படுத்தாமல் நவமான விநயமாய் நம் கவிஞர் விளக்கியருளினர்.

## போர்க்கள நிலை.

இந்திரசித்தோடுவந்த சேனைகள் யாவும் நாசம் அடைந்தன. நாற்பதுவெள்ளம் என்னும் தொகையில் வந்தன தொலைந்து போகவே உயிரோடு இருந்த சிலரும் கலைந்து போயினர். பாணங்களால் அடிபட்டு உயிர்போகாமல் ஊசலாடிக்கிடந்தவரும் பின்பு பரிதாபமாய்ப் பதைத்து மடிந்தனர்.

வரையுண்ட மதுகை மேனி மருமத்து வள்ளல் வாளி
இரையுண்டு துயிலச் சென்றார் வாங்கிடின் இறப்பேன் என்றார்
பிரையுண்ட பாலின் உள்ளம் பிரிதுறப் பிறர்முன் சொல்லா
உரையுண்ட நல்லோர் என்ன உயிர்த்துஉயிர்த்துஉழைப்பதானர் (க)

தேரிடைச் செல்லார்; மானப் புரவியில் செல்லார்; செங்கட்
காரிடைச் செல்லார்; காலிற் கால்எனச் செல்லார்; காவல்
ஊரிடைச் செல்லார்; நாளுேல் உயிரின்மேல் உடைய அன்பால்
போரிடைத் திரியா நின்று நடுங்கினர் புறத்தும் போகார். (உ)

தாமரைக் கண்ணன் தம்பி தன்மை ஈதாகின் மெய்ம்மை
வேம்அரைக்கணத்தின் இவ்வூர் இராவணி விளிதல் முன்னம்
மாமரக்காலில் குன்றில் மறைந்திரும்! மறைய வல்லே
போம் எனத் தமரைச் சொல்லிச்சிலருடன் துறந்துபோனர். (ங)

அரக்கர் அலமந்துஅழிந்துள்ள நிலைகளை இவை குறித்துள்ளன.

உயிர்தப்பி நின்ற நிருதர் சிலரும் இனி இலங்கை பிழையாது; அரக்கர்குலம் விரைந்து அழிந்துபடும்; ஊருள்போவதால் யாதும் பயன் இல்லை; மலை வனங்களில் மறைந்து திரிந்து நாளைக்கழித்து ஒழிந்துபோகவேண்டியதுதான் என்று உள்ளம் உடைந்து உறுதிகுலைந்து பொறுதியிழந்து மறுகியுளைந்து அவர் ஒருவிப்போயுள்ள நிலைகளை ஈண்டு உணர்ந்து கொள்ளுகிறோம்.

கதிரவன் மறைந்தது.

படைகளை இழந்து தனியே தேரில் நின்ற இந்திரசித்தை வானரங்கள் வளைந்துகொண்டன. மானத்தால் புழுங்கி மறுகி நொந்தாலும், பொருதொழில் குன்றாமல் அவன் போராடி நின்றான். அப்பொழுது சூரியனும் மேலத்திசையை அடைந்து காலத்தின் கோலத்தைக் காட்டி மறைந்தான்.

மரங்களும் மலையும் கல்லும் மழைஎன வழங்கி வந்து
நெருங்கினார் நெருங்கக் கண்டும் ஒருதனி நெஞ்சும் வில்லும்
சரங்களும் துணையாய் நின்ற நிசாசரன் தனிமை நோக்கி
இரங்கினான் என்ன மேல்பால் குன்றுபுக்கு அருக்கன்நின்றான்.

வாழிய வேதம் நான்கும் மனுமுதல் வந்த நூலும்
வேள்வியும் மெய்யும் தெய்வ வேதியர் விழைவும் அஃதே
ஆழியங் கமலக் கையான் ஆகிய பரமன் என்றா
ஏழையர் உள்ளம் என்ன இருண்டன திசைகள் எல்லாம்.

சூரியன் மறைந்ததும், இருள் படர்ந்ததும் ஆகிய நிலைகளை இவை வரைந்து காட்டியுள்ளன. பொழுது அடைந்த காட்சியை விழுமிய மாட்சியோடு ஈண்டு விழைந்து பார்க்கின்றோம்.

உற்றபடைகளை இழந்து உள்ளம் கனன்று வில்லும் கையுமாய்த் தேரில் நிற்கின்ற இந்திரசித்தை வானரர்கள் சூழ்ந்து வளைத்துக் கொண்டனர். கல்லும் மரமும் எறிந்து அவனைக் கொன்றுவிடவேண்டும் என்று எல்லாரும் கொதித்து மூண்டனர். அப்பொழுது ஆதவன் மறைந்தான். இயல்பாக மறைந்த அம்மறைவில் உயர்வான ஓர் அருள்நெறியைக் கவி சுவையாக இங்கே வெளிப்படுத்தி யிருக்கிறார்.

தனியே அகப்பட்ட ஒருவனைப் பலரும் கூடிக் கொல்ல முயல்கின்றனரே! என்று உள்ளம் இரங்கிச் சூரியன் ஒதுங்கி மறைந்ததுபோல் அன்று மாலைக்காலம் மருவிநின்றது என்னும்

இது ஈண்டு அரிய பல நிலைகளைக் கருதி உருகி உணரவந்தது.

தனிமைநோக்கி இரங்கினன் என்ன

மேலோன் மேல்பால் இறங்கினன். இரக்கம் அற்ற அரக்கனுக்கு நேர்ந்த இடையூற்றைக்கண்டு அருக்கன் இரங்கியருளினன் என்றது உயர்ந்த நீர்மையை உணர்த்தி நின்றது. எவ்வளவு பொல்லாதவராயினும் அவர் அல்லல் அடையக் கண்டால் நல்லோர் உள்ளம் இரங்கி உதவிபுரிய நேர்கின்றார். நாம் வெளியே நின்றால் கண் வெளிச்சத்தின் ஆதரவால் வானரங்கள் அவனை வதைத்துவிடுவர்; மறைந்துகொண்டால் இருளில் யாதும் செய்யமுடியாமல் அவர் ஒதுங்கிப்போவர்; எனக் கதிரோன்நினைந்து கருணையோடு அகன்றதுபோல்கரந்துபோயினன்.

பகலைவிட இரவுதான் அரக்கருக்கு வலிய காலம். அருக்கன் மறைந்துகொண்டான் ஆனல் அரக்கர் வேந்தன்மகனுக்கு அதிசய ஆற்றல் உண்டாம். இங்கே இந்திரசித்தை நிசாசரன் என்றது நினைந்து சிந்திக்கவுரியது. இரவில் உயர் வலியுடையராய்ச்சஞ்சரிக்கும் இயல்பினர் என்பது தெரிய அரக்கருக்கு நிசாசரர் என்று ஒரு பெயர் வந்தது. நிசி=இரவு. நிசியில் வலியராய்ச் சரிக்கும் மரபில் வந்தவன் என்னும் அம்மருமம் தெரிய இங்கே இப்பெயரால் அவனைக் குறித்தார். உற்ற இடத்துக்கு உரிமையானபேரை உய்த்துணர வைத்தார். வலிய போர்வீரன் மெலியனாய் நலிவடைந்து நிற்கின்றான்; அந்நிலை அருக்கனுக்கு இரக்கத்தை உண்டாக்கியது.

அருக்கன் தேவர் இனத்தைச் சேர்ந்தவன். தன் இனத்துக்கு என்றும் இடர் இழைத்துப் பகைமைகொண்டுள்ளவர் அரக்கர். குலப்பகைமை மண்டியுள்ள அந்த இனத்தவனுக்கும் இங்கே இரக்கம் காட்டியருளியது இவனுக்கு உயர்ந்த சிறப்பை நீட்டி நிற்கின்றது. ஒளியோனது பேரளி ஒள்ளியோர் எவரும் உள்ளி உணர வந்தது. நிலைதளர்ந்தவரிடம் நெஞ்சம் இரங்கியருளுவதே தலைமையான மேன்மையாம்.

ஒருதனி நெஞ்சும் வில்லும்.

என்றது இந்திரசித்தின் அவல நிலையை விழி தெரிய விளக்கி

நின்றது. பேச்சுக்குக்கூட வேறு துணையின்றித் தன் உள்ளமே துணையாய் அவன் எள்ளலடைந்து நின்றுள்ளான். யாண்டும் எதற்கும் அஞ்சாத நெஞ்சு ஆதலால் அது இங்கு நேரே தெரியவந்தது. வில்லும் என்றது இந்தநிலையிலும்கூட வரிசிலை பிடித்து அரியினங்களை வதைக்க மூண்டு அவன் உறுதி பூண்டு நிற்கும் உக்கிர வீர நிலையை உணர்த்தி நின்றது.

## இருள் படர்ந்தது.

பொழுது அடையவே எங்கும் இருள் பரந்தது. அந்தக் கரிய இருள் மெய்யுணர்வு குன்றிய மூடர்கள் உள்ளம்போல் யாண்டும் பெரியஇருட்டாய்ப் பெருகி நின்றது. வேதம் முதலிய நூல்களும், வேள்விகளும், சத்தியமும், உத்தமமாதவர்களுடைய உள்ளங்களும் ஆகிய இவையாவும் திருமாலின் சொரூபங்களேயாம்; இந்த உண்மையை உணராத பேதைகள் நெஞ்சம்போல் இருள் எங்கணும் பரவி நின்றது என்றது உறுதியுண்மைகளை உணரவந்தது. அரிய பொருளை அறிவது பெரிய பிறவிப்பயனாயது.

கண் ஒளி இல்லாதகுருடர் புறப்பொருள்களைக்காணமுடியாது; அதுபோல் எண் ஒளி இல்லாதவர் உண்மைப் பொருளைக்காண மாட்டாமல் புன்மையாய் உழலுவர் ஆதலால் அவருடைய உள்ளம் இருட்பள்ளம் என எள்ளி இகழ நேர்ந்தது.

"There is no darkness but ignorance."

(Shakespeare)

"மூடமே பீடை இருள்" என ஆங்கிலக் கவிஞராகிய ஷேக்ஸ்பீயர் இவ்வாறு கூறியிருக்கிறார். மடமையான அஞ்ஞானம் கொடிய இருள் என்றதனால் அதனையுடையவரது நெடிய மருளும் நிலையும் மயக்கமும் அறியலாகும்.

ஏழைகள் என்றது அறிவில்லாத பேதைகள் என்றவாறு.

கடவுள் ஒருவர் உளர். அவர் எல்லாமாய் எங்கும் நிறைந்திருக்கிறார். உண்மை முதலிய நல்ல தன்மைகள் யாவும் அவருடைய உருவங்களே. அந்த மேலான நீர்மைகளை மேவிய போது எவனும் தேவனாய்த் திவ்விய நிலைகளை அடைகிறான். மெய் முதலிய அந்த நன்மைகளை மேவாதபோது தெய்வத் திருவருளை இழந்து புன்மையாயிழிந்து புலையாடி யுழல்கின்றான் என்னும் உண்மையான உறுதிநிலை ஈண்டுஊன்றி உணரவந்தது.

தெய்வ சிந்தனை மனிதனைத் தெய்வமாக உயர்த்தி உய்வைத் தருகிறது. பரம்பொருளிடம் அன்பாய் எவனுடைய உள்ளம் உருகுகிறதோ அவன் உயர்பரனாய் ஒளிபெறுகின்றான்.

"One single moment of the madness of extreme love to God brings us eternal freedom" [Vivekananda]

"உண்மையான பத்தியால் கடவுளை நோக்கி ஒருவன் உருகினால் அவன் பிறவிதீர்ந்து பேரின்பம் அடைய நேர்கின்றான்" என சுவாமி விவேகானந்தர் இவ்வாறு கூறியுள்ளார்! தெய்வபத்தி மனிதனுக்கு அற்புத சித்தியையும் இன்பநலனையும் அருளுகிறது.

தெய்வத்தின் திருவருளை ஒருவன் அடையவேண்டுமானால் பொய் முதலிய இழி குணங்கள் அவனிடமிருந்து அறவே ஒழிய வேண்டும். தூய நிலை தோயின் தூயபரன் அங்கே நேயமாய் நிலவி நிறை பேரின்பமாய் மிளிர்கிறான்.

மெய் பரமன்.

என்றது சத்தியத்தின் தத்துவத்தை உய்த்துணரவந்தது.

சத்தியமே கடவுள். கடவுள் அழிவில்லாதவர்; பரிசுத்த மானவர். சத்தியமும் அவ்வாறே நித்திய புனிதமாய் நிலைத்துள்ளது. மெய்ப்பொருள் என இறைவன் மருவியுள்ளமை கருதியுணர வுரியது.

"Truth is God. God as Truth has been for me a treasure beyond price."

"உண்மையே கடவுள். சத்தியத்தைப்போலவே கடவுள் விலை மதியாத பெருநிதியாய் நிலைபெற்று எனக்கு இருக்கிறார்" எனக் காந்தியடிகள் இவ்வாறு உறுதியாய் உரைத்திருக்கிறார்.

இத்தகைய சத்தியத்தை மனம்மொழிமெய்களால்பேணிவருப வன் கடவுளைத் தனக்குத் தனியுரிமையாப் பெற்றவனாகிறான். பேணாதவன் தெய்வத்திருவருளை இழந்து பிழையாயிழிந்துழலு கின்றான். அடையஉரியதை அடையாதவன் கடையனாயழிகிறான்.

போராடலைக் குறித்து உரைத்து வரும்போதே அரியஉறுதி நலங்களையும் பெரிய தரும நீதிகளையும் இவ்வாறு இங்கே சுவை யாக உணர்த்தியிருக்கிறார். உணர்வு நலன் உய்தியருளுகிறது.

எவரிடமும் இரங்கியருளுங்கள்; தெய்வம் உண்டு என்று நம்

புங்கள்; யாண்டும்சத்தியமேபேசுங்கள்; உத்தமநீர்மைகளோடு ஒழுகி வாருங்கள் என மனித சமுதாயத்துக்கு இனிய புனித போதனைகள் ஈண்டு இதமாப் போதிக்கப்பட்டுள்ளன.

சூரியனுடைய உதய அத்தமன வருணனைகள் காவியத்தில் இடங்கள்தோறும் சரித நிலைக்கு ஏற்ப மருவிவந்துள்ளன. அவ்வரவில் உணர்வு நலங்கள் பெருகி வந்திருக்கின்றன. கவியினுடைய உள்ளப்பண்பாடுகளை அவை தெள்ளத் தெளிய விளக்கி நிற்கின்றன. அறிவு நிலைகளும் அனுபவங்களும் உறுதி உண்மைகளும் உரைகளால் நேரே தெரிய வருகின்றன.

சூரிய உதயத்தைக்குறித்து ஒரு ஆங்கிலக் கவிஞர் கூறியிருப்பது ஈங்கு அறிய வுரியது. அயலே காணவருகிறோம்.

"Like a lobster boiled, the morn
From black to red began to turn." [Samuel Butler]

"அவித்த நண்டுபோல உதயகாலம் கருப்பிலிருந்து சிவப்பாய் மாறியது" என பட்லர் என்னும் கவிஞர் இப்படிப்பாடியிருக்கிறார். இதற்கும் நம் கவிக்கும் உள்ள நிலைமை நீர்மைகளைக் கூர்ந்துஓர்ந்துகொள்ளவேண்டும். பழகிய அனுபவங்கள் மொழிகளில் வெளி வருகின்றன. நம் கவியினிடம் கலையறிவு கனிந்து தெய்வ மணம் நிறைந்து திவ்வியமகிமைகள் சுரந்திருக்கின்றன.

வீடணன் விரைந்தது.

சூரியன் மறைந்து இருள்பரவவே விபீடணன் காரிய நிலைகளைக் கருதி விரைந்தான். இளவலை அணுகினன்; அதி விரைவில் இவனைக்கொன்று வீழ்த்தினாலன்றி வென்றி அவனது ஆகிவிடும்; நிசி நேரம் அவனுக்குப் பெரிய வலிமையை உதவியருளும். காலம் கழியவிடுவது சாலவும் பிழையாம்.

நாகமே அனைய நம்ப! நாழிகை ஒன்றுநான்கு
பாகமே காலம் ஆகப் படுத்தியேல் பட்டான்; அன்றேல்
வேகவாள் அரக்கர் காலம் விளைந்தது விசும்பின்மீதா
ஏகுமேல் வெல்வன் என்பது இராவணற்குஇளவல்சொன்னான்.

யூகவிவேகமாய் இலக்குவனை விபீடணன் இப்படி வேகப்படுத்தியிருக்கிறான். கால் நாழிகை நேரத்துள் அவனைக் கொன்று வீழ்த்திவிட வேண்டும்; இல்லையேல் அவன் வலியனாய் நம்மை

வென்றுவிடுவான் என்று உண்மையை உரிமையோடு உணர்த்தி யிருக்கிறான். அப்படி உரைத்தவன் யார்?

இராவணற்கு இளவல். வீடணனை இப்படிச் சுட்டிக்காட்டி யிருக்கிறார். இராவணனுடைய தலைமகனை ஒல்லையில் கொல்லும் படி அவன் தம்பியே எதிரியிடம் உளவு சொல்லினான் எனச் சொல்லியிருப்பது உள்ளி உணரவுரியது. உடன் பிறந்த உறவு நிலையை அறவே துறந்து புனித நிலையில் மறுபிறவி எடுத்திருப்ப வனைப்போல் வீடணன் உண்மையுணர்வுடன் ஒளி மிகுந்துள் ளான் ஆதலால் புகல் புகுந்த இடத்தில் இனிது கலந்து தனி உரிமையோடு நடந்துவருகிறான். தக்கவன் உரைதகவாய்வந்தது.

தன் அண்ணனது அருமை மகன் என்பதை ஒரு சிறிதும் எண்ணுமல் மருவிய இனத்தோடு ஒருமையாய் மருவியிருப்பது கருதியுணர வந்தது. அரிய மருமங்களைத் தெரிய விளக்கினான்.

விசும்பில் ஏகுமேல் வெல்வன்.

இந்திரசித்தை அங்கிருந்து தப்பவிட்டால் தப்பாமல் அவன் வெற்றிபெற்றுவிடுவான் என்பதை விரகோடு சுட்டிக்காட்டி ஊக்கியிருக்கிறான். இவ்வுரைகளைக் கேட்டதும் இலக்குவன் இலக்கோடு விரைந்து அம்பு தொடுத்தான். இந்திரசித்து ஏறி யிருந்த தேர் உடைந்து நொறுங்கியது. தேர் அழிந்துபடவே அவன் அதிவேகமாய் அந்தரத்தில் தாவி இந்திரசாலம்போல் மறைந்து போனான். தேரை இவன் உடைத்து மண்ணில் வீழ்த்தியதும் அவன் விண்ணில் தாவிப் போனதும் அதிசய வியப்பாய் நின்றது. மூண்டு நின்ற போர் முழுதும் மாறியது.

அத்தனை வீரர் மேலும் ஆண்டகை அனுமன் மேலும்
எத்தனை கோடி வாளி மழைஎனா எய்யா நின்ற
வித்தக வில்லி ஞனைக் கொல்வது விரும்பி வீரன்
சித்திரத் தேரைத் தெய்வப் பகழியால் சிதைத்து வீழ்த்தான்.

அழித்ததேர் அழுந்தா முன்னம் அம்பொடு கிடந்து வெம்பி
உழைத்துயிர் விடுவ தல்லால் உறுசெரு வென்றேம் என்று
பிழைத்திவர் போவர் அல்லர் பாசத்தால் பிணிப்பின் என்னு
விழித்திமை யாத முன்னம் வில்லொடும் விசும்பில் சென்றான்.

பொன்குலாம் மேனி மைந்தன் தன்னொடு புகழ்தற்கு ஒத்தான்
வன்கலாம் இயற்றி நின்றான் மற்றொரு மனத்தன் ஆகி
மின்குலாம் கழற்கால் வீரன் விண்ணிடை விரைந்த தன்மை
என்கொலாம் என்ன அஞ்சி வானவர் இரியல் போனார். (௩)

தாங்குவிற் கரத்தன் தூணி தழுவிய புறத்தன் தன்னின்
ஓங்கியுற்று எரியா நின்ற வெகுளியின் உயிர்ப்பன் தீயன்
தீங்கிழைப்பவர்கட்கெல்லாம் சீரியன் மாயச் செல்வன்
வீழ்கிருட் பிழம்பின் உம்பர் மேகத்தின் மீதின் ஆனான். (௪)

தணிவறப் பண்டு செய்த தவத்தினும் தருமத்தானும்
பிணியறுப் பவரிற் பெற்ற வரத்தினும் பிறப்பினானும்
மணிநிறத்து அரக்கன் செய்த மாய மந்திரத்தினானும்
அணுவெனச் சிறியது ஆங்கோர் ஆக்கையும் உடையனானான்.

தேர் உடைந்து வீழவும் இந்திரசித்து மேலே தாவி வில்லோடு ஒல்லையில் மறைந்துபோயுள்ளதை இங்கே நோக்கி நாம் உள்ளம் வியந்து நிற்கிறோம். மேக மண்டலத்தை அடைந்து உருவம் கரந்திருந்தவன் தன்னை யாரும் அறியாதபடி அணுவுருவாய்மாறி ஆவதை ஆய்ந்து வினைபுரிய நேர்ந்தான். அவனது நிலையை நோக்கி வானவரும் அஞ்சி மறைந்துபோயினர். பொல்லாதவன் என்ன அல்லல் செய்வானோ? என்ற திகில் எல்லார் உள்ளங்களையும் நடுங்கச்செய்தது. யாவரும் வெருவி ஒருவினர்.

ஒடுங்கி மறைந்து நின்றவன் கொடுந்தீமை செய்யத் துணிந்தான். நாகபாசத்தை ஏவி அனைவரையும் கொன்று தொலைக்கவேண்டும் என்று அவன் வேகமாய் விரைந்தான். அடிபட்ட சிங்கம்போல் மானத்தால் புழுங்கி வானத்தில் ஓடி ஓர் தானத்தை அடைந்து மறைந்து நின்றவன் மாயவேலையை விரைந்து துணிந்தது அவனுடைய தீய கொடுமையை விளக்கி நின்றது.

## இலக்குவன் இருந்தது.

தன்னோடு நெடிது போராடினவன் முடிவில் முடியாமல் கடிது மறைந்து போகவே இளையபெருமாள் இளநகை புரிந்து அனுமானது தோளிலிருந்து இறங்கினான். வில்லை அங்கதன் கையில் கொடுத்துவிட்டுத் தன் மேனியில் மடுத்திருந்த உதிரங்

களைத் துடைத்து விளைவதை யாதும் கருதாமல் ஆறுதலாய் இருந்தான். மூண்டுவந்த பெரியபோர்வீரன் படைகளையெல்லாம் இழந்து தோல்வியடைந்து மீண்டு ஓடிப்போனான் என்று எண்ணி மகிழ்ந்து வானரங்கள் யாண்டும் ஆரவாரங்கள் செய்தன. தமக்கு வெற்றி கிடைத்துவிட்டதென்று உள்ளம் களித்துத் துள்ளிக் குதித்து எல்லாரும் போரில் நேர்ந்தவைகளை வியந்து பேசி உல்லாசமாயிருந்தனர்.

ஆயின காலத்து ஆர்த்தார் அமர்த் தொழில் அஞ்சி அப்பால்
போயினன் என்பது உன்னி வானரர் வீரர் போர்வில்
நாயகற்கு இளைய கோவும் அன்னதே நினைந்து நக்கான்
மாயையைத் தெரிய வுன்னார் போர்த்தொழில் மாற்றி நின்றார்.

அஃதுகணத்து அனுமன் தோள்நின்று ஐயனும் இழிந்துவெய்ய
கதுவலிச் சிலையை வென்றி அங்கதன் கையது ஆக்கி
முதுகுறச் சென்றுநின்ற கணையெலாம் முறையின் வாங்கி
விதுவிதுப்பு ஆற்றல் உற்றான் விளைகின்றது உணர்கிலாதான்.

இந்திரசித்து மறைந்து போனபின் இலக்குவன் புரிந்துநின்ற நிலையை இவை உணர்த்தியுள்ளன. வந்து போராடிய வீரன் நின்று மடியாமல் விரைந்து கரந்துபோனான் என்று மிகுந்த மகிழ்ச்சியால் சேனைகள் வெற்றி முழக்கம் செய்யவே இலக்குவன் கீழே இறங்கித் தன் கொற்ற வில்லை அங்கதனிடம் கொடுத்துவிட்டு உடம்பில் படிந்திருந்த இரத்தங்களை நீக்கிச் சுத்தம் செய்து கொண்டு அமைதியாயிருந்துள்ளான்.

வஞ்சம் சூதுகள் அறியாத நேர்மையான நெஞ்சினன் ஆதலால் இந்த வீர இளவல் அமரில் நேர்ந்த இளைப்புத்தீர ஆறுதலுற்றிருந்தானேயன்றி மேலே விளைகின்ற அபாய நிலைகளை யாதும் கருதவில்லை. கரும வீரன் தருமமாயிருந்தான்.

விளைகின்றது உணர்கிலாதான்.

அதுபொழுதிருந்த இளையவன் நிலைமையை இப்படிக் குறித்துக் காட்டியிருக்கிறார். தோற்றுப்போன எதிரி இலங்கைக்கே போய்விட்டான் என எண்ணியிருத்தலால் வேறொரு சிந்தனையும் தோன்றவில்லை. தூயநெஞ்சம் தீயவன் செய்கிற மாயவேலை

யை அறியாமல் இருந்தது பெரிய பரிதாபமாய் நின்றது.

விளைகின்றது என்றது மேலே நின்று அவன் செய்கிற கொடிய சதியை. எல்லாரையும் ஒருங்கே கொல்லமூண்டு அப் பொல்லாதவன் தீய மாயவினையை மேலே மறைந்து செய்து கொண்டிருக்கிறான்; இவன் கீழேயிருந்து உல்லாசமாய்ப் போரின் வெற்றியைச் சிந்தனை செய்துகொண்டு ஆறுதலுற்றிருக்கிறான். விதுவிதுப்பு ஆற்றல் உற்றான் என்றதனால் போரில் நேர்ந்த இளைப்பு நிலை அறியலாகும். விதுவிதுப்பு = களைப்பு, ஆயாசம். அடுக்கு அதன் மிகுதி தோன்ற வந்தது.

உணர்கிலாதான் என்றது உணர்ந்தால் அபாயத்திலிருந்து தப்பியிருக்கலாம் என்பதை உணர்த்தி நின்றது. விதிமூண்டு வேலை செய்யும்பொழுது எவ்வளவு பெரிய மதியும் நேரேநீண்டு வேலை செய்யாது; வேறாய் மாண்டு மடிந்திருக்கும் என்பது ஈண்டு உணரவந்தது. கொடிய அபாயம் கடிது வேகித்துநின்றது.

நாகபாசம்.

இது அரிய ஒரு தெய்வப்படை. பெரிய வரபலத்தால் பிரமனிடமிருந்து பெற்றது. இந்திரசித்துக்கு உறுதித்துணையாய் அமைந்தது; மந்திரசித்தி வாய்ந்தது. அம்பின் வடிவில் அமைந்தது. வில்லில் வைத்து மந்திர முறையோடு தொடுத்துவிட்டால் பாம்பின் வடிவாய் வெளியே பாய்ந்து எவரையும் பிணித்துமாய்க்க வல்லது. தேர்வடம் போல் தெவ்வளவை நோக்கி எவ்வளவு நீளமும் நீண்டு விரிந்து நெடிய மயக்கத்தைச்செய்து கொடிய மரணத்தை விளைப்பது. எவரையும் எளிதே அழிக்கவல்ல அந்தத் திவ்வியாஸ்திரத்தைச் செவ்வையா எய்ய நோக்கி ஊக்கி நின்றான். அந்த நிலை யாவரையும் கொன்று தொலைக்கும் குறிப்பில் மூண்டு வென்றி வீறோடு விரிந்து விளங்கியது.

வாங்கினான் மலரின் மேலை வானவன் வானக் கங்கை
தாங்கினான் உலகம் தாங்கும சக்கரத் தவன் என்றாலும்
வீங்குவான் தோளை வீக்கி வீழ்த்தலான் மீள்கிலாத
ஓங்குவாள் அரவின் நாமத்து ஒருதனிப்படையை உன்னி, (1)

விட்டான் அரக்கன் வெய்ய படையினை விடுத்தலோடும்
எட்டினோடு இரண்டு திக்கும் இருள்திரிந்து இரிய ஓடிக்
கட்டினாது என்ப மன்னோ காகுத்தற்கு இளைய காளை

வட்டவான் வயிரத் திண்டோள் மலைகளை உளைய வாங்கி. (2)

இறுகுறப் பிணித்த லோடும் யாவையும் எதிர்ந்த போதும்
மறுகுறக் கடவான் அல்லன்மாயம்என்று உணர்வான் அல்லன்
உறுகுறைத் துன்பம் இல்லான் ஒடுங்கினன் செய்வது ஓரான்
அறுகுறைக் களத்தை நோக்கி அந்தர மதனை நோக்கும்; (3)

காலுடைச் சிறுவன் மாயக் கள்வனைக் கணத்தின் காலை
மேல்விசைத்து எழுந்து நாடிப் பிடிப்பன்என்றுஉறுக்கும்வேலை
ஏல்புடைப் பாசம் மேல்நாள் இராவணன் புயத்தை வாலி
வால்பிணித் தென்னச் சுற்றிப் பிணித்தது வயிரத் தோளை. (4)

மற்றையோர் தமையும் எல்லாம் வாள் எயிற்று அரவம்வந்து
சுற்றின வயிரத் தூணின் மலையினிற் பெரிய தோள்கள்
இற்றன இற்ற என்ன இறுக்கின இளகா உள்ளம்
தெற்றென உடைய வீரர் இருந்தனர் செய்வது ஓரார்; (5)

மலைஎன எழுவர்; வீழ்வர்; மண்ணிடைப் புரள்வர்; வானில்
தலைகளை எடுத்து நோக்கித் தழல்எழ விழிப்பர்; தாவி
அலைகிளர் வாலால் பாரின் அடிப்பர்; வாய்மடிப்பர்; ஆண்மைச்
சிலையவற்கு இளைய கோவை நோக்குவர்; உள்ளம் தீவர். (6)

வீடணன் முகத்தை நோக்கி வினையுண்டே இதனுக்கு என்பர்;
மூடின கங்குல் மாலை இருளினை முனிவர்; மொய்ம்பில்
ஈடுறத் தக்க போலாம் நம்எதிர் என்னு ஏந்தல்
ஆடகத் தோளை நோக்கி நகைசெய்வர் விழுவர் அஞ்சார். (7)

ஆரிது தீர்க்க வல்லார் அஞ்சனை பயந்த வள்ளல்
மாருதி பிழைத்தான் கொல்லோ? என்றனர் மறுகி நோக்கி
வீரனைக் கண்டு பட்டது இதுகொலாம் என்று விம்மி
வார்கழல் தம்பி தன்மை காணுமோ வள்ளல் என்பார். (8)

(நாகபாசப்படலம் 188-195.)

இந்திரசித்து நாகபாசத்தை ஏவியதும், அந்த மாயவாளி வந்து பாய்ந்து இலக்குவனைப் பிணித்து வீழ்த்தி வானர வீரர்கள் யாவரையும் சுற்றி வளைத்துப் பற்றி இறுக்கிப் பாரில் கிடத்தி வதைத்திருக்கும் படுதுயரங்களையும் இங்கே பார்த்து வருந்துகிறோம். தீய ஒரு மாய வேலையாய் யாவும் மருவி யுள்ளன.

போரில் நேர்ந்த சோர்வு தீர ஆறுதலாய் அமர்ந்திருக்கும்

போது ஏதோ ஓர் நெடிய மின்னல் தோன்றியதுபோல் பாய்ந்தது; பாயவே தோள்கள் பிணிப்பிண்டு மயக்கமாய் இளவல் கீழே சாய்ந்தான்; சாயவே அயலே நின்ற அனுமான் மேலே ஆகாயத்தை நோக்கிப் பாயநேர்ந்தான்; தீய அரக்கன் வானில் மறைந்து நின்று வஞ்ச வேலை செய்கின்றான் என்று நெஞ்சம் துணிந்து அஞ்சனைச் சிங்கம் நேரே கொதித்துத் தாவநேர்ந்த போது அவனும் பாசத்தால் கட்டுண்டு மயங்கிக் கீழே வீழ்ந்தான். வானர சேனைகள் முழுவதும் செத்த இனங்கள்போல் செயலிழந்து மயலுழந்து மண்ணில் கிடந்தன. போரில் வெற்றி கிடைத்துவிட்டது என்று ஆரவாரித்துக் கெக்கலி கொட்டி நின்றவர் பாரில் படிந்து மடிந்து கிடந்தது படுதுயரமாயிருந்தது. இடையிடையே உயிர் ஊசலாடிக் கிடந்தவர் படுகளத்தைப் பார்த்தும், ஆகாயத்தை நோக்கியும், இளையபெருமானுக்கு எய்திய அபாயத்தை எண்ணியும் கண்ணீர் சொரிந்து உண்ணீர்மையோடு உருகித்தவித்தார். பரிதாபத்துடிப்புகள் எவரிடமும் பெரிதாய் ஓங்கிநின்றன. ஆற்றலிழந்து அலமந்து கிடந்தனர்.

## பகழிகள் பாய்ந்தது.

படுகளம் எங்கணும் படுசாவாய்ப் பரிதாப நிலையில் மயங்கிக் கிடந்த வானர சேனைகள் மீது அந்தரத்திலிருந்துகொண்டே இந்திரசித்து கொடிய பாணங்களைக் கடிது பொழிந்தான். யாதொரு இரக்கமுமின்றி மேலும் அவன் அம்புகளைச் சொரிந்தது படுபாதகமாயிருந்தது. "இரக்கம் என்று ஒரு பொருள் இலாத நெஞ்சினர்" என்றபடியே அந்த அரக்கன் அன்று செய்து தன் குலத்தின் கொடுமையை நன்கு காட்டிநின்றான். ஏனைய பகழிகள் யாவும் வானரங்கள்மீது பாய்ந்து வதைகள் புரிந்தன.

என்சென்ற தன்னசொல்லின் எறுழ்வலி அரக்கன் எய்தான்
மின்சென்ற தன்ன வானத்துஉருமினம் வீழ்வது என்னப்
போன்சென்ற வடிம்பின் வாளி புகையொடு பொறியும் சிந்தி
முன்சென்ற முதுகில் பாயப் பின்சென்ற மார்பம் முற்ற. (க)

மலைத்தலைக் கால மாரி மறித்தெறி வாடை மோதத்
தலைத்தலை மயங்கி வீழும் தன்மையில் தலைகள்சிந்தும்
கொலைத்தலை வாளி பாயும் குன்றன குவவுத்தோளார்
நிலைத்திலர் உலைந்து சாய்ந்தார் நிமிர்ந்தது குருதிநீத்தம். (உ)

ஆயிர கோடி மேலும் அம்புதன் ஆகத் தூடு
போயின போதும் ஒன்றும் துடித்திலன் பொடித்துமானத்
தீயெரி சிதறும் செங்கண் அஞ்சனைச் சிங்கம் மேனி
நாயகன் தம்பிக்கு உற்ற துயர்சுட நடுங்குகின்றான். (ந)

வேறுள வீரர் எல்லாம் வீழ்ந்தனர் உருமின் வெய்ய
நூறும் ஆயிரமும் வாளி உடலிடை நுழையச் சோரி
ஆறுபோல் ஒழுக அண்ணல் அங்கதன் அனந்த வாளி
ஏறின மெய்யன் ஏனும் இருந்தனன் இடைந்திலாதான. (ச)

கதிரவன் காதல் மைந்தன் கழலிளம் பசுங்காய் அன்ன
எதிர்எதிர் பகழி தைத்த யாக்கையன்; எரியும் கண்ணன்;
வெதிர்நெடுங் கானம் என்ன வேகின்ற மனத்தன்; மெய்யன்;
உதிர வெங் கடலுள் தாதை உதிக்கின்றான் தனையும் ஒத்தான்.

வெப்பாரும் பாசம் வீக்கி வெங்கணை வளைக்கு மெய்யன்
ஒப்பாரும் இல்லான் தம்பி உணர்ந்திருந்து இன்னல்உய்ப்பான்
இப்பாசம் மாய்க்கும் மாயம் யான்வல்லன் என்பதுஓர்ந்தும்
அப்பாசம் வீச ஆற்றாது அழிந்தகல் அறிவு போன்றான். (6)

அம்பெலாம் கதிர்களாக அழிந்தழிந்து இழியும் ஆகச்
செம்புனல் வெயிலில் தோன்றத் திசையிருள் இரியச்சிறிப்
பம்பு பேர் ஒளிய நாகம் பற்றிய படிவத் தோடும்
உம்பர்நாடு இறந்து வீழ்ந்த ஒளியவனேயும் ஒத்தான். (எ)

நாகபாசத்தால் பிணிப்புண்டு மயங்கிக் கிடந்த வானரங்கள் மேல் அம்புகளை ஏவி இந்திரசித்து வதைத்திருக்கும் நிலைகளை இவை காட்டியுள்ளன. கவிகளைக் கண்ஊன்றி நோக்கினால் நிகழ்ந்துள்ள கொடுமைகளையும் கொலைகளையும் நேரே தெரிந்து கொள்ளலாம். ஈரம் இரக்கம் யாதுமின்றிக் கோரக் கொலைகளை அவன் கொடுமையாய்ச் செய்திருக்கிறான். வானரங்களின் உடல்கள் எங்கும் பாணங்கள் ஊடுருவிப் போயுள்ளன; உதிரங்கள் யாண்டும் ஓடியிருக்கின்றன. தலைசாய்ந்தபடியே நிலைகுலைந்து நிலத்தில் வீழ்ந்துகிடந்தவர் கொடிய கொலைப் பகழிகள் பாயவே குலைகள் துடித்து நெடிது அயர்ந்தார்.

அனுமான் உடலம் சல்லடையாய்த் துளைபட்டது; படினும் உள்ளம் தளராமல் அப்போர் வீரன் உறுதிகூர்ந்து கிடந்தான். வஞ்சனையாய் மறைந்துநின்று அத்தீயவன் இப்படிக் கொடிய

மாயக்கொலைகளைச் செய்தானே! என்று நினைந்து நினைந்து நெஞ்சம்கொதித்தான். கண்கள் சிவந்து தோன்றக் கனன்றுகிடந்த அவனது மனநிலை கனலின் கொதிப்பாய்க் கதித்து நின்றது.

தீ எரி சிதறும் செங்கண் அஞ்சனைச் சிங்கம்.

என்றதனால் அனுமான் அப்பொழுது அங்கே வெப்போடு கிடந்த வெவ்விய துயர நிலையை உய்த்துணர்ந்துகொள்ளுகிறோம். வெற்றி கிடைத்தது என்று வியந்து மகிழ்ந்திருந்தவன் விபரீத விளைவை எண்ணித் துயருழந்திருக்கிறான். கடலைக் கடந்து இலங்காபுரியை எரித்து அரக்கர் குலத்தைக் கலக்கி அடல் கொண்டுவந்தவன் உடல் எங்கும் உதிரம் சோர உள்ளம் துடித்து உயிர்பதைத்துக்கிடந்தது கொடிய பரிதாபமாயிருந்தது.

நாயகன் தம்பிக்கு உற்ற துயர் சுட நடுங்குகின்றான்.

தன் உயிர்க்கு உற்ற துயருக்கு அனுமான் அஞ்சவில்லை; இலக்குவனுக்கு நேர்ந்த துயரை நினைந்தே நெஞ்சம் கலங்கி நெடிது பதைத்திருக்கிறான். உரிமையும் பாசமும் கெழுதகைமையும் விழுமியநிலையில் இங்கே விளங்கி நிற்கின்றன. இராமனை ஈண்டு நாயகன் என்றது அவனே ஆண்டவனாகவே கருதி என்புருகும் அன்பால் யாண்டும் இந்த ஆண்டகை அடிமைபூண்டுவரும் அமைதி தெரிய வந்தது. இராமன்மேல் உள்ள பத்தி தம்பி மீதும் தழுவி மிளிர்கிறது; அனுமான் கூடிப் போகின்றான் ஆதலால் தன் தம்பிக்கு யாதொரு இடரும் நேராமல் பாதுகாத்துக் கொள்ளுவன் என்று தன்னை உரிமையோடு நம்பி நம்பி உறுதி பூண்டிருப்பனே! அந்தப் பெரியவன் நம்பிக்கைக்குப் பிழை நேர்ந்ததே! என்று அனுமான் உள்ளம் மறுகித் துடித்திருக்கிறான். உருக்கமும் மறுக்கமும் அவனது உரிமையை உணர்த்தின.

துயர்சுட என்றதனால் கொடிய தீயைப்போல் அத்துன்பம் இவன் உயிரைத் தகித்திருக்கும் நிலை உணரலாகும். இளையவன் நிலையை நினையும்தோறும் நெஞ்சம் கலங்கி நெடிது பதைத்துக் கடிது துடித்திருத்தலால் நடுங்குகின்றான் என்றார். யாண்டும் கலங்காத அருந்திறலாளன் ஈண்டு நடுங்கி இடருழந்திருப்பது இளவல்மேல் பூண்டுள்ள உரிமைப் பாசத்தை உலகறிய வெளிப்படுத்திநின்றது. அரிய அன்பு பெரிய துன்பமாய்ப் பெருகியது.

சுக்கிரீவன் முதலிய வானரத் தலைவர்கள் எல்லாரும் நானக்

கொதிப்போடு மயங்கி மனம் மறுகிக் கிடந்தனர். உதிர வெள்ளத்தில் அவன் தோய்ந்து கிடந்தது அதிக துயரமா யிருந்தது. அடலாண்மை யுடையவன் அவலமாய்க் கிடந்தான்.

வெதிர் நெடுங் கானம் என்ன வேகின்ற மனத்தன்.

நெடியமூங்கில்காடு தீப்பிடித்துஎரிந்ததுபோல்அவன்உள்ளம் கொதித்து உளைந்து கிடந்துள்ளதை இது உணர்த்தியுள்ளது. வெதிர் = மூங்கில். உள்ளே மூதிர் கோபம் மூண்டு எழுந்தாலும் வெளியே யாதும் எழ முடியாமல் அவலமாய் மயங்கி மறுகிக் கவலையோடு கனன்று கிடந்தான்.

தலைவர்கள் பலரும்இவ்வாறே நிலைகுலைந்துநெடிதுகிடந்தார்.

சோரி ஆறுபோல் ஒழுக அங்கதன் கிடந்தான் என்றதனால் அந்தச்சிங்க ஏற்றின் செயலும் மயலும் தெரியவந்தன. எங்கும் அவலத்துயரங்கள் பெருகிக் கவலைத் துடிப்புகள் கதித்து நின்றன. எல்லாரும் இலக்குவனையே எண்ணி ஏங்கிக்கலக்கம் அடைந்து கடுந் துயரங்களோடு கலுழ்ந்து கிடந்தனர்.

நாகபாசம் தன்னை வேகமாப் பிணித்து வீழ்த்தியிருப்பதை அறிந்தாலும் எழுந்திருக்க முடியாமல் மயங்கி மறுகி உயங்கி உளைந்தான். அந்த மாயப் பாசத்தை அறுத்து எறியவல்ல தெய்வீக சத்தி அமைந்திருந்தாலும் அதனை நினைத்துக் கொள்ள முடியாமல் இளைய பெருமான் நெஞ்சு அயர்ந்து கிடந்தான்.

அப்பாசம் வீச ஆற்றாது அழிந்தநல் அறிவு போன்றான்.

பாசத்தால் கட்டுண்டு கிடந்த இலக்குவனுக்கு இது உவமையாய் வந்துள்ளது. தெளிந்த தூயவர்களுடைய நல்ல அறிவை இங்கே ஒப்புக்கூறியிருக்கும் நுட்பம் உய்த்துணர வுரியது.

கல்வியறிவு நிறைந்து தெளிந்த ஞானி ஒருவன் உலகபாசங்களைக்கடந்து உயர் நிலையை அடையத்தக்கவன். நித்திய அநித்தியங்களின் நிலை தெரிந்தவன். தத்துவ நோக்கினன். உடல் அழியும் இயல்பினது; உயிர் என்றும் நித்தியமானது. இந்தச் சீவன் ஈசனிடமிருந்தே பிரிந்து வந்துள்ளது. நேர்ந்த மாசு கழிந்தபடின் ஈசனைச் சேர்ந்துகொள்ளும். நீசமான ஆசைகள் நீங்கியபொழுதுதான் ஈசனை அடைய முடியும். பாசங்களை

ஒழித்துப் பரமனைப்பற்றவுரிய நல்ல தேசுடைய அறிவு அவ்வாறு செய்யாமல் அயர்ந்து மயங்கியிருப்பதுபோல் இங்கே பிணித்த நாகபாசத்தை அறுத்து எளிதே வெளியேற வல்ல வித்தகத் திறலிருந்தும் தன்னை மறந்து இலக்குவன் தளர்ந்து கிடந்தான் என்பார் அழிந்த நல் அறிவு போன்றான் என்றார்.

சிறந்த வில் வீரனைத் தெளிந்த நல்லறிவோடு நேர்வைத்து மொழிந்தது அவனது நிலைமை நீர்மைகளும் தலைமையும் நினைந்து தெளிய. தெய்வீகமான அதிசய நிலையினன்; எடுத்த பிறவிக்கு இயையத் தனது இயல்பினை மறந்து செயலழிந்து கிடந்தான் என இலக்குவனை இங்கே நன்கு துலக்கியருளினார்.

மனிதனுடைய நல்ல அறிவுக்குப் பயன் பொல்லாத பாச பந்தங்களை நீங்கி ஈசனை அடைந்து கொள்ளுவதே என்னும் உண்மை ஈண்டு நுண்மையாயுணர வந்தது.

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. (குறள், 350)

உலக ஆசைகளான பாசப்பற்றுகள் மனிதனை அல்லல் களில் ஆழ்த்தி அவலப்படுத்துகின்றன; அந்த நீசங்கள் ஒழிந்து நிலையான பேரின்பத்தை அடைய வேண்டுமானல் ஈசனை நீ பற்றிக்கொள்ள வேண்டும். பற்று அற்றான் எனக் கடவுளை இங்கே சுட்டிக்காட்டியிருக்கிறார். பற்று அறாதவனது பாடும்பீடும் இதனல் தெரியலாகும். பற்று அற்றால் அவன் பரமன் ஆகிறான்.

ஒரு சொந்தமும் இல்லாமல் இடையேவந்து தொந்தமாய்த் தொடர்ந்துள்ள மனைவி மக்களிடம் பற்று மிகுந்து அந்தப் பாசத்தளையில் பிணிப்புண்டு மனிதன் அல்லலுழந்து அலமந்து கிடக்கின்றான். அந்த மாயபந்தத்தைக் கடந்தவர் மகான்களா யுயர்ந்து தூய பர நிலையை அடைந்து கொள்ளுகின்றார்.

ஈசனை நோக்கி உருகிவருபவர் பாசநீக்கம் பெறுகின்றார்.

உள்ளமெனும் கூடத்தில் ஊக்கமெனும் தறிநிறுவி உறுதியாகத்
தள்ளரிய அன்பென்னும் தொடர்பூட்டி இடைப்படுத்தித்
தறுகட்பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக் களித்துண்டு கருணை
என்னும்

வெள்ளமதம் பொழிசிந்து வேழத்தை நினைந்துவரும் வினைகள்
தீர்ப்பாம். (திருவிளையாடல்)

உற்ற பாசங்கள் ஒழிந்து தொலையத் தன் உள்ளத்தில் விநாயக மூர்த்தியை நிறுத்திப் பரஞ்சோதி முனிவர் உய்தி பெற்றுள்ளதை இது உணர்த்தியுள்ளது.

பாசத் தளை அறுத்துப் பாவக் கடல்கலக்கி
நேசத் தளைப்பட்டு நிற்குமே—மாசற்ற
காரார் வரையீன்ற கன்னிப் பிடி அளித்த
ஓரானை வந்தென் உளத்து. (காசிக் கலம்பகம்)

ஈசன்மகனைப் பற்றிக்கொண்டு பாசத்தளையைக் குமரகுருபரர் அறுத்துள்ள நிலையை இது குறித்துள்ளது. பாசத்தை ஒழிக்க நேர்ந்த ஞானிகள் ஈசனை விழித்து நோக்குகின்றார்.

பாசசாலங்களெல்லாம் பற்றுவிட ஞானவைவாள்
வீசுநாள் எந்நாள் விளம்பாய் பராபரமே!

பாசக் கூட்டங்களை ஞானவாளால் அறுத்து ஈசனை நோக்கித் தாயுமானவர் பேசியிருத்தலை இதனால் உணர்ந்து கொள்கிறோம். ஞானவாளே பாசத்தளையை அறுக்கவல்லது என்றதனால் அந்த இரண்டின் நிலைமைகளும் நேரே தெரிய நின்றன. எல்லா மேன்மைகளையும் சிதைத்து யாண்டும் நீசத்தைச் செய்கிற பொல்லாத பாசத்தை நீங்கி உய்பவரது நிலைமை நீர்மைகள் ஈங்கறிய வந்தன. பாசபாசம் நீங்கின் பதிமைகள் ஓங்குகின்றன.

நாகபாசத்தால் கட்டுண்டு கிடக்கின்ற இலக்குவனைக் குறித்துச் சொல்ல நேர்ந்த கவிஞர் மோக பாசத்தால் கட்டுண்டு கிடக்கிற உலகமக்களுடைய நிலைகளையும் உணர்த்தியருளினர். பாசக்கட்டுகள் நீசக்கட்டுகளாய் நிலைத்திருக்கின்றன; அந்தக் கட்டுகள் நீங்கி உய்ய வேண்டும்; அதுவே நல்ல அறிவுடைய மனிதன் செய்ய வேண்டிய புனிதமான இனிய கடமையாம். இவ்வுண்மை ஈண்டு உண்மையாக எதிர் தெரிய வந்தது.

கதைப்போக்கிலேயே உலக மக்களுக்கு உறுதி நலனை உணர்த்தியிருப்பது கலையின் விளைவாய்க் கனிந்து கவியின் உள்ளத்தை விளக்கி நிற்கிறது. மனித சமுதாயம் புனிதமாய் இனிது உய்ய வேண்டும் என்றே கவிகள் யாண்டும் போதிச்

தருளுகின்றார். அவரது போதனைகள் புண்ணியங்களாயுள்ளன.

தத்துவ ஞானிகள் தம்மளவில் சித்த சுத்தி எய்தி உத்தம கதிகளை அடைந்துகொள்ளுகின்றனர். உத்தமக் கவிகள் உலக மக்கள் உய்ய உணர்வொளி பரப்பி இலகொளி ஞாயிறாய் நிலவி நிற்கின்றார். ஆகவே கவிஞருடைய கருணைநிலை அறியலாகும்.

"Poets are the mirrors of the gigantic shadows which futurity casts upon the present." [Shelley]

"எதிர்கால நிகழ்கால நிலைகளை விளக்கி நிலவுகிற பெரிய ஒளி மண்டலங்கள் போல் கவிஞர் விளங்கி நிற்கின்றார்" என ஷெல்லி என்னும் ஆங்கிலக் கவிஞர் இவ்வாறு கூறியிருக்கிறார்.

மனித இனத்துக்கு இனிய உண்மைகளை உணர்த்தி வருதலால் கவிகள் தனி மகிமை பெற்றுவருகின்றார். தரும நீதிகளை எவ்வழியும் கருமக்காட்சிகளாக் காட்டியருள்கின்றார். அவர் உரிமையோடு உணர்த்த உலகம் உவகையோடு உணர்ந்து வருகிறது. அவரது உணர்வொளிகளால் உயர்நலங்கள் உறுகின்றன.

பெரிய போர்வீரன் கொடிய நாகபாசத்தால் கட்டுண்டு படியில் மயங்கிக் கிடந்த பரிதாப நிலையைத் தெரியவுரைக்குங்கால் அரிய ஒரு கருத்தையும் குறித்து உணர்த்தினர். புறத்தே நெடிய கரும்பாம்பு சுற்றச் சூரியன் தனது இனிய கிரணங்களை அயல்எங்கும் வீசி உதிர வெள்ளத்தில் இழிந்து கிடந்தது போல் வீரிய இளவல் விழுந்து கிடந்தான். படைகள் யாவும் பரிதாபமாய்ப் பாடு கிடந்தன. படுகளம் முழுவதும் கொடிய கொலைக்களமாய் அடுதுயர் அடைந்து அவல முற்றிருந்தது.

இந்திரசித்து மீண்டது.

தான் ஏவிய நாகபாசத்தால் மேவிய காரியசித்தியைக் கண்டு இந்திரசித்து மிகவும் மகிழ்ந்தான். போரில் கொடிய துயரங்களை அடைந்தாலும் முடிவில் அடைந்தவெற்றியை நினைந்து முற்றவும் உவந்து வானிலிருந்தபடியே இலங்கையை நோக்கிப் போனான். அவனது போக்கும் நோக்கும் வெற்றிக் களிப்பில் விரிந்து நின்றது. வீரச்செருக்கோடு விரைந்து சென்றான்.

சொற்றது முடித்தேன் நாளை என்னுடற் சோர்வை நீக்கி
மற்றது முடிப்பென் என்று எண்ணினன் மனிதன் வாழ்க்கை

இற்றது; குரங்கின்தானை இறந்தது என்று இரண்டு பாலும்
கொற்ற மங்கலங்கள் ஆர்ப்ப இராவணன் கோயில் புக்கான்.

தந்தையை எய்தி அன்று ஆங்குற்றுள தன்மை யெல்லாம்
சிந்தையின் உணரக் கூறித் தீருதி இடர்நீ எந்தாய்!
நொந்தனன் யாக்கை நொய்தின் ஆற்றிமேல் நுவல்வன் என்னுப்
புந்தியில் அனுக்கம் தீர்ப்பான் தன்னுடைக் கோயில் புக்கான்.

இந்திரசித்து மீண்டுபோய்த் தந்தையைக் கண்டு தான் வென்று வந்ததை விளம்பிவிட்டுத் தனது அரண்மனைக்குப் போயிருக்கிறான். வானர சேனைகளை அழித்து ஒழித்து இலக்குவனை வென்று வருவேன் என்று முன்பு சபதம் கூறிப்போனபடியே போரில் காரியசித்தி அடைந்து வந்திருக்கிறான் ஆதலால் நகர மாந்தர் திரண்டு வாழ்த்துகள்கூறி வெற்றி முழக்கங்கள்செய்ய நேர்ந்தனர். கொற்ற மங்கலங்கள் ஆர்ப்ப என்றதனால் அங்கே வெற்றிவிழாக் கொண்டாடி வேந்தன் மகனை எதிர்கொண்டழைத்துப்போயுள்ள வரிசை தெரியவந்தது. அரிய போர்வீரன் பெரிய காரியத்தைமுடித்துவந்துள்ளான்என்னும்களிப்புஎங்கும் பரவிப் பொங்கி நீண்டது. யாவரும் உவகையில்ஓங்கி நின்றனர்.

கடுமையாகப் போராடி முடிவில் மாய வஞ்சனையால் தப்பி வந்திருக்கிறான்; இருந்தும் வெற்றி பெற்றிருப்பதாக விழைந்து புகழ்ந்து கொற்றவன் மகனைக் கொண்டாடியுள்ளனர். பெற்ற தந்தையும் பெருமகிழ்ச்சி அடைந்து உற்ற மைந்தனை உரிமையோடு உவந்து அருமை யொழிகள் கூறி வியந்திருக்கிறான்.

தீருதி இடர் நீ எந்தாய்!

என்று இந்திரசித்து தந்தையைத் தேற்றியிருப்பது சிந்தனை செய்யத்தக்கது. உள்ளக்கவலை ஒழியும்படி பிள்ளை பேசிப் போனான்.

மூண்டுவந்த படைகளை முழுதும் அழித்துத் தொலைத்துவிட்டேன்; எதிரியைப்பற்றிய கவலை இனி யாதும் அடையாமல் சுகமாயிருங்கள்! என்று நயமாய் மொழிந்து போயுள்ளான்.

போரில் பெருந்துயரம் அடைந்திருந்தான் ஆதலால் அதனை ஆற்றிஆறுதல் செய்ய விரைந்து தனது அரண்மனைக்குப்

போனான். அரிய பல உபசாரங்கள் நடந்தன. அமரின் களைப்புகளை நீக்கி அங்கே அவன் ஆறுதலாய் இருந்தான். அவ் வீரனை வியந்து ஊரும் நாடும் உவந்து புகழ்ந்து நின்றன.

## வீடணன் வருந்தியது.

நாகபாசத்தால் நேர்ந்த அவலத் துயரங்களை நோக்கி வீடணன் சோகம் அடைந்து துடித்தான். மேகநாதன் மிஞ்சிப்போய் போய்விட்டானே! என்று நெஞ்சம் பதைத்து நெடிதுகவன்று படுதுயருழந்தான். மத்து ஏறி உடைதயிர்போல் மனம் உடைந்து செயல் இழந்து அவன் மறுகிப் புலம்பி உருகி உளைந்தது பெரிய பரிதாபமாய்ப் பெருகி நின்றது.

இத்தலை இன்னல் உற்ற வீடணன் இமைப்பது ஓரான்
மத்துறு தயிரின் உள்ளம் மறுகினன்; மயங்கு கின்றான்;
அத்தலைக் கொடியன் என்னை அட்டிலன் அளியத் தேனான்
செத்திலன் வலியன்நின்றேன் என்றுபோய் வையம்சேர்ந்தான்.

பாசத்தால் அனகன் தம்பி பிணிப்புண்ட படியே பட்ட
நேசத்தார் எல்லாம் வீழ்ந்தார் யான்ஒரு தமியன் நின்றேன்
தேசத்தார் என்னை என்ன சிந்திப்பார்? என்று தீயும்
வாசத்தார் மாலை மார்பன் வாய்திறந்து அரற்றல் உற்றான். (க)

கொல்வித்தான் உடனே நின்றான் என்பரோ? கொண்டுபோனான்
வெல்வித்தான் மகனை என்று பகர்வரோ? விளைவிற் கெல்லாம்
நல்வித்தாய் நடந்தான் முன்னே என்பரோ? நயந்தோர் தத்தம்
கல்வித்தாய்வார்த்தை என்று கரைவிந்தான் உயிரைக்கண்போல் (உ)

போரவன் புரிந்த போதே பொருவரு வயிரத் தண்டால்
தேரொடும் புரண்டு வீழச் சிந்திஎன் சிந்தை செப்பும்
வீரமுன் தெரித்தேன் அல்லேன்; விளிந்திலேன்; மெலிந்தேனிங்ஙன்
ஆர்உற வாகத் தக்கேன் அளியற்றேன் அழுந்து கின்றேன். (ச)

ஒத்தலைந்து ஒக்க வீடி உய்வினும் உய்வித் துள்ளம்
கைத்தலை நெல்லி போலக் காட்டிலேன் கழிந்து மில்லேன்
அத்தலைக்கு அல்லேன் யான்ஈண்டு அபயம்என் றடைந்துநின்ற
இத்தலைக்கு அல்லேன்நல்லேன் இருதலைக் கொள்ளி ஒப்பேன். (ரு)

வீடணன் மனம் கலங்கி மறுகிப் புலம்பியிருக்கும் நிலைகளை

இங்கே கண்டு கவல்கின்றோம். நாகபாசம் அவனை யாதும் செய்யவில்லை; பகைவகையினர் என்று இந்திரசித்து கருதி ஏவியபடியே அப்பாசம் வேலை செய்துள்ளது. இலக்குவனை யும் வானர சேனைகளையும் மயக்கி வீழ்த்தி மரண வேதனைகளை விளைத்து நின்றது. ஆகவே விபீடணன் தனித்து நின்று தவித்தான். "எல்லாரும்போல் நானும் செத்து வீழாமல் சீவித்து நிற்கின்றேனே!" என்று நெஞ்சம் துடித்து நிலை குலைந்து அழுதிருக்கிறான். பல பல நினைந்து பரிதபித்திருப்பது அவனது மன நிலைமையை வெளிப்படுத்தியிருக்கிறது. "அந்தக்கொடிய பாதகன் மாய வஞ்சம் புரிந்து நெடிய தீமையை விளைத்துப் போய்விட்டானே! உலகம் என்னை என்ன சொல்லும்? நானும் கூட இருந்து சதிபுரிந்தேன் என்றே எவரும் கருதி இகழ்வர். முதலிலேயே கரவாய்ப் புகுந்து உறவுபோல் ஒட்டிநின்று கொடிய கேடுகளைச் செய்துவருகின்றான் எனப் பேதை உலகம் என்னைப் பிழைபடப் பேசுமே! அண்ணன் மகனுக்கு இவ் வண்ணம் வெற்றியை விளைத்தது அந்த வீடணனே; அவனை உள்ளே புகவிட்டது தவறு; உட்பகையாய் நின்று அரக்கர் குலத்துக்கே அநுகூலம் நாடி வருகிறான்; தீய அரக்கருள் நல்லவன் எப்படியிருக்க முடியும்? இவனும் ஒரு பொல்லாதவனே; கள்ளவஞ்சமாய் உள்ளே இருந்துகொண்டே பொல்லாத தீமைகளைச் செய்து வருகிறான்" என இன்னவாறு என்னை வையம் வையுமே! ஐயோ! நான் என்னசெய்வேன்? அந்தத்தீயவன் போரில் புகுந்தபோதே நானே முதலில் நேரே புகுந்து அவனைக் கொன்று தொலைத்திருக்க வேண்டும்; அல்லது பொன்றி மடிந்திருக்க வேண்டும். ஒன்றும் செய்யாமல் நின்று வீணே அவலப் பழிகளுக்கு ஆளாகி அவமாயிருக்கின்றேனே; என் இருப்பு இழிவு மிகவுடையது. பிறந்த இனத்தின்படியே இலங்கையிலிருந்து தொலையாமலும், புகுந்த இடத்தில் நின்று தகுந்த உதவி செய்யாமலும் மிகுந்த பழிக்கே ஆளாய் வீணே நிமிர்ந்து நிற்கின்றேனே! அந்தோ! என் வாழ்வு ஒரு வாழ்வா? நான் உயிர் வைத்திருக்க வேண்டுமா?" என இன்னவாறு உள்ளம் நொந்து உருகிப் புலம்பி மறுகித் துடித்திருக்கிறான்.

உலகப் பழிகளை நினைந்துஉயிர்பதைத்துள்ளது. துயரத்துடிப்பு

களில் சீவ சுபாவங்கள் வெளியே எளிது தெரிய வந்துள்ளன.

*கொல்வித்தான் உடன்நின்று என்பரோ? மகனை*
*வெல்வித்தான் என்று பகர்வரோ?*

வீடணன் இப்படி எண்ணியிருக்கிறான். வஞ்சகமாய்க்கூட இருந்து கொலைபுரியும்படி சதி செய்திருப்பானோ? இந்திரசித்து வெற்றிபெற்று மீளும்படி உற்ற துணையாய் உள்ளே நின்று உதவிபுரிந்திருப்பானோ? என்று உலகம் புலையா இகழ்ந்து தன்னைப் பழிக்குமே! என்று நெஞ்சம் பதைத்திருப்பதை இவ்வுரைகள் வெளிப்படுத்தியுள்ளன. இனநிலையைநினைந்து மனநிலைமறுகியது.

போர்மேல் மூண்டு வந்தவன் தமையன் மகன் ஆதலால் அவனுக்கு இந்தச் சிறிய தகப்பன் ஆதரவாய் நின்று வேண்டிய உதவிகளை விநயமாய்ச் செய்திருப்பான் என்றே எவரும் எண்ணி இகழ்வர் என எண்ணி எண்ணிக் கண்ணீர் சொரிந்திருக்கிறான். கவலைந் துயரங்கள் அவலமாய் விளைந்தன.

உலகப்பழிகளுக்கு உள்ளம் அஞ்சியிருப்பது நிலைமைகளை நினைந்து வந்தது. நம்பிக்கை மோசமா ஏசுமே! என நடுங்கினான்.

தன்னை நம்பி அனுப்பிய அருமைத்தம்பியைத்தான் இனிது பாதுகாக்கவில்லையே! அந்தப் புனித வீரர் என்னை என்ன நினைப்பார்? என இன்னவாறு நினைந்து இன்னல்உழந்துள்ளான்.

*செத்திலன்; வலியன்; நின்றேன்.*

இந்த மூன்று வார்த்தைகளால் வீடணனுடைய உள்ளத்தில் ஊன்றியுள்ள துன்பத் துடிப்புகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம். தான் சாகவில்லையே; தன் உயிர் போகாமல் நிற்கிறதே! என்று புலம்பியிருக்கிறான். நேர்ந்துள்ள நிகழ்ச்சி நெஞ்சைத் தகிக்கவே நிலைகுலைந்து மறுகி நெடிது உருகினான்.

*கரைவித்தான் உயிரைக் கண்போல்.*

வீடணனது உயிரையும் கண்ணையும் இது காட்டியுள்ளது.

உள்ளம் கரைய உயிர்கரையக் கண்ணீர் வெள்ளம் பெருக வெந்துயருழந்து வெய்துயிர்த்து நொந்து செய்வதறியாது திகைத்து இனி உய்தி என்னே! என்று மயங்கி அலமந்தான்.

## அனலன் ஆற்றியது.

அப்பொழுது அனலன் என்னும் துணைவன் அவனை ஆற்றித் தேற்றினன். "ஈண்டு நாம் அழுது தவித்துப் பொழுதைக் கழிப்பது பழுதாம்; ஆண்டவனிடம் போய்ச் சொல்லி வருகிறேன்" என்று ஒல்லையில் எழுந்து இராமனை நோக்கி விரைந்து வந்தான். அவன் தூர வரும்போதே இவ் வீர வள்ளல் ஏதோ அபாயம் நேர்ந்துள்ளது என்று அறிந்து பதைத்தான்; அருகே வந்த அவன் வணங்கி நின்று அமரில் தமருக்கு உற்றதை உரைத்தான்.

தம்பிக்கு அபாயம் நேர்ந்தது என்ற அவ்வுரையைக்கேட்டதும் இந்நம்பி துடித்தான். கலங்காத நெஞ்சம் கலங்கித்தவித்தது; உள்ளம் உடைந்து உணர்வு சிதைந்து உயிர் பதைத்துத் துயருழந்து துடித்து எழுந்து எடுத்த வில்லோடு கடுத்து விரைந்தான். எங்கும் கொடிய இருள் நெடிது சூழ்ந்திருந்தமையால் வழி தெரியவில்லை; அக்கினியாத்திரத்தை எடுத்து அபிமந்திரித்துப் போர்க்களத்தின் திசையை நோக்கிப் பிடித்தான். அத்திக்கு முழுதும் இருள் நீங்கி ஒளி ஓங்கி நின்றது. அவ்ஒளி வழியே அதிவேகமாய் வந்தான். இரணகளத்தை அடைந்ததும் பிணமலைகளே எங்கும் பெருகி நின்றன. கோரக் கொலைகள் விரிந்து கிடந்துள்ள அப்போர்க்களத்துள் இவ்வீரக்குரிசில் புகுந்து விரைந்து நடந்தது மிகுந்த பரிதாபமாய் மீறியிருந்தது.

## இராமன் கண்டது.

வானர சேனைகள் மடிந்து கிடப்பதைக் கண்டதும் இராமன் மறுகி உருகினன். மனம் கரைந்து விரைந்தான். இளையவன் விழுந்துகிடக்கும் இடத்தை அனலன் சுட்டிக் காட்டி வர அணகன் எட்டி நடந்தான். உதிரச்சேறுகளையும் உடல்களையும் கடந்து பேராவலோடு பெரிதும் கலங்கி நேரே நெகிழ்ந்து சென்றான்.

*பிணப்பெருங்குன்றி னூடும் குருதிநீர் பெயரப் பேரும்*
*நிணப்பெருஞ் சேற்றி னூடும் படைக்கல நெருக்கி னூடும்*
*மணப்பெருங் களத்தின் மோடி மங்கல வாழ்க்கை வைப்பில்*
*கணத்தினும் பாதிப் போதில் தம்பியைச் சென்றுகண்டான்.*

*அய்யவன் ஆக்கை தன்மேல் விழுந்துமார்பு அழுந்தப்புல்லி*
*உய்யலன் என்ன ஆவி உயிர்த்துயிர்த்து உருகு கின்றான்*

பெய்யிரு தாரைக் கண்ணன் பெருந்துளி பிறங்க வானின்
வெய்யவன் தன்னைச் சேர்ந்த நீல்நிற மேகம் ஒத்தான் (உ)

உழைக்கும்வெய் துயிர்க்கும் ஆவி உருகும்போய்உணர்வுசோரும்;
இழைக்குவது அறிதல்தேற்றான்; இலக்குவா! இலக்குவா! என்று
அழைக்கும்; தன்கையை வாயின் மூக்கின்வைத்து அயர்க்கும்; ஐயா!
பிழைத்தியோ? என்னும் மெய்யே பிறந்தேயும் பிறந்திலாதான்.

தாமரைக் கையால் தாளைத் தைவரும்; குறங்கைத் தட்டும்;
தூமலர்க் கண்ணை நோக்கும்; மார்பிடைத் துடிப்புஉண்டுஎன்று
ஏமுறும்; விசும்பை நோக்கும்; எடுக்கும், தன்மார்பில்ஏற்றும்;
பூமியில் வளர்த்தும்; கள்வன் போய்அகன்றானோ? என்னும். (ச)

வில்லினை நோக்கும்; பாச விசிப்பினை நோக்கும்; வீயா
அல்லினை நோக்கும்; வானத்து அமரரை நோக்கும்; பாரைக்
கல்லுவன் வேரோடு என்னும்; பவளவாய்கறிக்கும்; கற்றோர்
சொல்லினை நோக்கும்; தன்போல் புகழினை நோக்கும் தோளான் (ரு)

வீரரை எல்லாம் பார்க்கும் விதியினைப் பார்க்கும் வீரப்
பாரவெஞ் சிலையைப் பார்க்கும் பகழியைப் பார்க்கும் பாரில்
யாரிது பட்டார் என்போல் எளிவந்த வண்ணம் என்னும்
நேரிது பெரிதுஎன்று ஓதும் அளவையில் நிமிர நின்றான். (சு)

எடுத்தபோர் இலங்கை வேந்தன் மைந்தனோடு இளையகோவுக்கு
அடுத்ததுஎன்று என்னை வல்லே அழைத்திலை அமரர் பாசம்
தொடுத்தகை தலையினோடு துணித்துயிர் துடைக்க என்னைக்
கெடுத்தனை வீடணா நீ என்றனன் கேடு இலாதான். (எ)

அங்கே அடுத்திருந்த பரிதாப நிலைகளை இவை நன்கு எடுத்துக்காட்டியிருக்கின்றன. காட்சிகளைக் கருதி நோக்குவோர் யாரும் பெரிதும் மறுகி உருக நேர்வர். உரை ஒலிகள் உள்ளச் செவிகளில் ஒலித்து உயிர்களை உருக்கியிருக்கின்றன.

காவியக் காட்சியே ஆயினும் சீவிய உணர்ச்சிகளை நேரே தெரியச்செய்துள்ளன. பிறவிப் பாசம் பெருகி விரிந்துளது.

இராமன் பரிதாபத்தோடு விரைந்துவந்து படுகளம்புகுந்து தம்பியைக்கண்டு துடித்து விழுந்து உழுவலன்போடு அவனைத் தழுவிக்கொண்டு அழுது தவித்திருக்கும் அவலநிலைகள் அளவிடலரிய சோகங்களாய்க் கவலை நிறைந்துள்ளன. அருந்திறலாளன் அலமந்துள்ளது கடுந்துயரங்களை விளைத்து நிற்கின்றது.

மதிமயங்கி மருண்டு தரையில் விழுந்து கிடக்கிற இளவலை இவ்வீரக்குரிசில் ஆரத்தழுவி ஆவி பதைத்து அரற்றியிருப்பது உரிமைப் பாசங்களை உணர்த்தி யுள்ளது. சூரியனை ஒரு நீல மேகம் தழுவியதுபோல் தம்பியை மருவி உருகிய நம்பி பின்பு மறுகி எழுந்து உறுதியுடன் நின்று பரிவுடன் நோக்கிப்பலவும் கருதினன். நிலைமைகளை எல்லாம் நினைந்து நெஞ்சம் தவித்தான்.

## புலம்பித் தவித்தது.

உள்ளம் கருகி உணர்வு மறுகி உயிர் உருகிக் கண்ணீர் பெருகி ஏங்கிநின்றான்; செயல் இழந்து மயல் உழந்தான்; தம்பீ! இலட்சுமணா! என்று பாசத் துடிப்போடு பதறிக் கூவினன். உயிர் இருக்கிறதா? இல்லையா? என்று அல்லலடைந்து அலமந்து நொந்தான். தனது வலது கையை அவன் மூக்கில் வைத்துச் சிறிதுபோது கருதி யிருந்தான்; மூச்சு ஊசலாடிக்கொண்டிருப்பதை அறிந்து ஆசையால் உவந்தான்; ஐயோ! ஐயா! என்னைக் கண்திறந்து பார்க்க மாட்டாயா? என் கண்ணே! உயிரே! எண்ணே! உணர்வே! அமுதே! நீ இப்படி மண்ணில் மடிந்து கிடக்க நான் கண்ணில் காண நேர்ந்ததே! என்று இன்னவாறு பரதவித்துப் புலம்பி நெஞ்சைத் தொட்டுக் காலைத்தடவி மூக்கைப் பிடித்துக் கண்ணை நோக்கி இமைகளைத் தூக்கி ஏங்கித்தவித்தான். பின்பு உடலை எடுத்துத் தன் தோளில் சுமந்தான்; மார்பில் அணைத்தான்; மறுபடியும் கீழே கிடத்தி மேலே பார்த்தான்; அந்த மாயத் தீயன் மறைந்து போய்விட்டானே! என்று விரைந்து உருத்தான். வெகுண்டு நகைத்தான்; வில்லைநோக்கிப் பல்லைக்கடித்தான்; பகழிகளைப் பார்த்துப் பழித்து வெறுத்தான்; இருளைக்கடிந்து இகழ்ந்து சிரித்தான்; தேவரை எள்ளி யாவரை

யும் பழித்தான். "விண்ணை வீழ்த்துவேன்; மண்ணை ஆழ்த்துவேன்; உயிரினங்களையெல்லாம் ஒருங்கே மாய்த்து ஒழிப்பேன்; பெருங் கேடு செய்த அரக்கர் குலத்தை அடியோடு அழிப்பேன்: என் தம்பியை இழந்த பின் எனக்கு இந்த உலகில் இனி என்ன வாழ்வு! ஆனவரையும் யாவரையும் தொலைத்து நானும் மாண்டு போவேன்" என்று மூண்டு மூண்டு மீண்டும் மீண்டும் மறுகி உளைந்து உருகி அயர்ந்தான். அதிகாயசூரனை இந்த வீரன் தம்பி யின் பிரிவால் வெம்பி வெதும்பி வெய்துயிர்த்து நொந்து பல பல கூறிப் பரிந்து புலம்பியது சகோதர பாசத்தைத் தனியே துலக்கி நின்றது. துன்பத் துடிப்புகள் அன்பின் வெடிப்புகளாய் எழுந்தன.

இலக்குவா! இலக்குவா! என்று அழைக்கும்;
ஆவி உருகும்; உணர்வு சோரும்.

என்றதனால் இந்த வீரக்குரிசில் அன்று பதைத்துத் துடித்திருக் கும் பரிதாப நிலைகளை நன்கு அறிந்துகொள்ளலாம். உள்ளே மண்டிய துயர நிலைகளைப் புறத்தே கண்ட மெய்ப்பாடுகள் துலக்கி நிற்கின்றன. உயிரின் சோதனை துயரின் வேதனையாயது.

தன்கையை வாயில் மூக்கில் வைத்து அயர்க்கும்.

உடலில் ஆவி இருக்கிறதா? இல்லையா? என மரண நிலையை இவ்வாறு பரிசோதனை செய்து பார்த்திருக்கிறான். நாக்கில் ஈரப்பசை உள்ளதா? என்று வாயைத் தொட்டுப்பார்த்தான்; மூக்கில் மூச்சு வருகிறதா? என்று கையை நேர்வைத்துக் கருதி நோக்கியுள்ளான். மெய் யாதும் அசையாமல் தரையில் அயர்ந்து கிடத்தலால் ஐயம் அதிகம் ஆயது; ஆகவே ஐயன் இவ்வாறு அவலத்துயரங்களோடு அலமந்து ஆராய நேர்ந்தான்.

தாமரைக் கையால் தாளைத் தைவரும்; குறங்கைத் தட்டும்;
தூமலர்க் கண்ணை நோக்கும்.

பாதத்தில் சூடு இருக்கிறதா? குளிர்ந்துபோயதா? என்று காலைப்பிடித்துப் பார்த்திருக்கிறான். உயிர் நீங்கிப் போனால் உடல் குளிர்ந்துபோம் ஆதலால் அந்தக் குளிர்ச்சி வெப்பங்களை இங்ஙனம் கூர்ந்து கவனித்திருக்கிறான். கண்ணை விரித்து நோக்கியது நீலம் பூத்துள்ளதா? என்னும் அந்நிலையினை நினைந்து வந்தது. ஆவி அகன்றுவிடின் தேகத்தில் தோன்றும் அடை

யாளங்கள் பலவற்றையும் ஆராய்ந்து நோக்கியுள்ளான். குறங்கு=தொடை. தொடையைத் தட்டியது விழித்து நோக்குவானோ? என்னும் விழைவினால் விளைந்தது. ஆசைத்துடிப்புகள் பாசப் பெருக்குகளாய் வெளியே வெடித்து வந்துள்ளன.

மார்பிடைத் துடிப்பு உண்டு என்றே ஏமுறும்.

தம்பி இறந்துபோகவில்லை; உயிரோடு இருக்கிறான் என்னும் உண்மையை நம்பி உணர்ந்து உவந்ததை இது உணர்த்தியுள்ளது. ஏமுறும் என்றது சேமமாய் இருத்தலை நினைந்து எழுந்தது. ஏமம்=இன்பம். ஆவி உளது என அறியவே ஆனந்தம் அடைந்திருக்கின்றான். தரையில் அயர்ந்து கிடந்த தம்பியை அள்ளி எடுத்து மார்போடு அணைத்துத் தோளில் தாங்கி மீளவும் பூமியில் கிடத்திவிட்டு வானை நோக்கி இம்மானவீரன் கொதித்து நின்றான். அந்நிலை அடலாண்மையை நேரே விளக்கி நின்றது.

கள்வன் போய் அகன்றானோ?

தன் தம்பியை மாயச்சூதால் வென்று தொலைத்தவனைக்கொன்று தொலைக்க வேண்டும் என்று இப்படிக் கொதித்திருக்கிறான். கள்வன் என்று இந்திரசித்தை இங்ஙனம் எள்ளி இகழ்ந்தது நேர்மையாய் நேரே நின்று போராடாமல் சோரத்தனமாய் மறைந்து மாயத்தொழில் செய்து போனதை நினைந்து. அகன்று போகாமல் அங்கே நின்றிருந்தால் அவன் அழிந்துபோயிருப்பான் என்பது தெரிந்துகொள்ளவந்தது. கோதண்டவீரன் மூதண்ட வேகமாய்க் கொதித்துக் கடுத்துக் குமுறியிருக்கிறான்.

வில்லினைநோக்கும் என்றது தன் கையில் இந்தவீரகோதண்டம் இருந்தும் தனது தம்பியை ஒரு சோரன் வென்று போனானே என்று இவ்வீரன் வெகுண்டு சீறியிருத்தலை விளக்கி நின்றது. வார்த்தை யாதும் ஆடாமல் அவலத் துயரோடு பலவற்றையும் பார்த்த பார்வைகள் அதிசய கம்பீரங்கள் தோய்ந்து அருந்திறலாண்மைகள் வாய்ந்து உக்கிர வீரங்களாய்த் தோன்றின.

பாரைக் கல்லுவன் வேரோடு.

தம்பிக்கு நேர்ந்த துன்பத்தால் உள்ளம் கொதித்த வீரமூர்த்தி இப்படி உருத்திருக்கிறான். உலகத்தையெல்லாம் அடியோடு பிளந்து எறிவேன் என்று கிளர்ந்து மூண்டிருத்தலால் ஆனை

அளந்து அறிந்துகொள்ளுகிறோம். மனித உருவில் மருவியிருந்தாலும் உள்ளே புதைந்துகிடக்கிற தெய்வீக சத்தி உரைகளில் வெளி வந்துள்ளது. புறத்தே நிகழ்ந்தன அகத்தை விளக்கியன.

பவளவாய் கறிக்கும்.

பவளம் போன்ற சிவந்த வாய் இதழை மடித்துக் கடித்துக் கொண்டு கரிய செம்மல் கருதி நிற்கும் நிலையை இது காட்டியுள்ளது. அரிய போர்வீரனுடைய செயல் இயல்கள் பெரிய நீர்மைகளில் பெருகி நிற்கின்றன. நெடிய சோகம் மூண்ட போது நிலைமைகள் யாவும் நேரே படியறிய வந்தன.

இன்னவாறு பலவும்கருதி உன்னி உளைந்துநின்ற இராமன் முடிவில் திரும்பி விபீடணனை நோக்கினன். "அந்த இராவணன் மகன் இங்கே மூண்டுவந்து இளையகோவோடு போராடிய நிலையை எனக்கு அறிவியாமல் வறிதே நீ இருந்துவிட்டாயே! அறிவித்திருந்தால் இந்த அவலத்துயரம் நேர்ந்திராதே! அமரர் பாசத்தை எடுத்துத் தொடுத்த அந்தக் கையும் தலையும் ஆகாயத்தில் துள்ளியெழுந்து தரையில் உருண்டிருக்குமே! உரியசமையத்தில் செய்ய உரியதை நீ செய்யாமையால் இந்த வெய்ய கேடு விளைந்திருக்கிறது" என உளைந்து கூறினன்.

அமரர்பாசம் தொடுத்தகை தலையினோடு
துணித்து உயிர்துடைக்க.

இந்தவீராவேசத்தை வியந்து பார்க்கின்றவர் எவரும் உக்கிர வீரநிலையை உணர்ந்துகொள்வர். எவ்வளவு துணிவு! எத்தனை தெளிவு! இந்தச் சுத்தவீரனுடைய வாய்மொழிகளில் சத்திய வெற்றி ஒளிகள் நித்திய சோதிகளைவீசி நேரே மிளிர்கின்றன.

என்னை அழைத்திருந்தால் அவன் பிழைத்திருப்பானா? என்று இங்ஙனம் இவன் இழைத்திருக்கிறான். இந்த இழைப்பில் அதிசய சிந்தனைகள் இழைந்திருக்கின்றன. அவன் உயிரோடு இருக்க நான் துயரோடு நிற்க நேர்ந்ததே! என்று துடித்திருக்கிறான். நெஞ்சத் துடிப்புகள் நேரே வெடித்து வந்தன.

வல்லை அழைத்திலை! என்றது அழைக்க வேண்டிய எல்லையை வெளிப்படுத்தியது. அபாயம் மூண்டபொழுது அதிவிரைவில் என்னை நீ அழைத்திருக்க வேண்டும் என இந்த ஆண்டகை ஆர்த்துநின்றான். வார்த்தைகள் வீரத்திறலை வார்த்து நின்றன.

கெடுத்தனை வீடணா! நீ என்றலன் கேடு இலாதான்.

சோகத் துடிப்போடு வெளிவந்துள்ள இந்த வாசகத்தை யூகத்தோடு ஓர்ந்து சிந்திக்கவேண்டும். தம்பிக்கு நேர்ந்துள்ள ஆபத்தால் உள்ளம் கலங்கி உயிர் பதைத்துள்ளமையால் உரிய நண்பனையும் இங்ஙனம் எள்ளி இகழ்ந்து இனைந்து மொழிந்தான்.

இந்திரசித்து கெடுக்கவில்லை; நீயே கெடுத்தாய்! என்று அடுத்துநின்றவனைக் கடுத்து மொழிந்தது உறவுரிமையைமடுத்து வந்தது. உள்ளம் கனன்று கொதித்திருத்தலால் உரைகள் கடுமையாய் வெளிவர நேர்ந்தன. உரிய தம்பிமேல் மருவியிருக்கும் பிரியம் அரிய நண்பனையும் வறிதே வையச்செய்தது.

தான் கேடு இன்றிவாழவிருப்பித்தன்னைவந்து அடுத்துஅபயம் புகுந்து நிற்பவனைப் பார்த்து நீ கெடுத்தனை! என்று கடுத்தது மடுத்திருக்கும் கேட்டினை எடுத்துக்காட்டியது. அல்லல்நேர்ந்த போது யாரும் எல்லைமீறிச் சீறிச் சொல்லாடநேர்வர் என்பதை இவ்வில்வீரன் ஈண்டு விளக்கி நின்றான். உயிரின் இயல்புகள் துயரங்களில் வியனாக வெளியேறி அயல் அறிய வருகின்றன.

தம்பியின்பால் இந்நம்பி கொண்டுள்ள பாசமும், தன்னை நம்பி வந்துள்ளவனது நேசமும் இங்கே நிலைதெரிய வந்தன.

வீடணா நீஎன்னைக்கெடுத்தனைஎன்று இன்னலுழந்துகூறினான். அவ்வாறு கூறினவன் யார்? தெரியுமா? என இவ்வாறு யாதொரு வினாக்களையும் கிளப்பாமலே முடிவில் அதிவிநயமாய்க் கவி விளக்கியிருக்கிறார். குறித்தவிளக்கம் கூர்ந்துநோக்கவுரியது.

கேடு இலாதான்.

என்னைக் கெடுத்தனை வீடணா! என்றுஇலங்கைத் தம்பியை நோக்கிக் கடுத்து மொழிந்த இராமனைக் கவி இங்ஙனம் எடுத்துக் காட்டியுள்ளார். இந்தக் காட்சி நிலையைக் கருதிக் காணுகிறோம்.

யாதொரு கேடும் இன்றி என்றும் நித்தியமாய் நிலைத்திருப்பவன் என அவதாரத்தின் ஆதிமூல நிலை ஈண்டு அறியவந்தது. யாராலும் கெடுக்க முடியாதவன்; தானே எல்லோரையும் அழிக்கவும் ஆக்கவும் வல்லவன்; கெட்டவரைத் தொலைத்து நல்லவரை நிலைத்து வாழச்செய்பவன்; இவ்வாறு எவ்வழியும்

யாண்டும் யாதும் கேடு அறியாத அவன் ஈண்டுக் கெடுத்தனை என்று ஓர் அரக்கனை நோக்கிக் கடுத்து உரைத்தது எடுத்த மனிதப் பிறப்பின் இயல்பிற்கு ஏற்ப நேர்ந்தது. மனித நிலையிலும் தனி உரிமையாக இது இனிதமைந்து நின்றது.

கெட்ட செயல்கள் யாதும் இல்லாதவன்; யாண்டும் நல்ல எண்ணங்களையே உடையவன் என்னும் உண்மையும் ஈண்டு உணரவந்தது. பிறர்க்குக் கேடு கருதாதவன் யாதொரு கேடுமின்றி என்றும் நன்மையே மருவி இம்மையும் மறுமையும் இன்புற்று வாழ்வன் என்பதும் இங்கே இனிது தெரியநின்றது.

முடிவில் முடித்துவைக்கும் பெயர்களில் அரிய பொருள்களை மருவிவைத்துக் கவி இனிய சுவைகளோடு கூறிவருவது இன்பம் சுரந்து இதம் புரிந்து வருகிறது.

பிறந்தேயும் பிறந்தி லாதான்; 1
புகழினை நோக்கும் தோளான்; 2
அளவையில் நிமிர நின்றான்; 3
கேடு இலாதான். 4

இந்த நான்கு வாசகங்களும் இராமனைக்குறித்து ஈங்கு வந்திருக்கின்றன. ஒவ்வொன்றும் ஆழ்ந்த கருத்துக்கள் நிறைந்தது. தத்துவ நிலைகள் தோய்ந்தது; உய்த்துணர்வுகள் வாய்ந்தது; ஓர்ந்து சிந்தித்து ஆய்ந்து தேர்ந்து கொள்ள வேண்டும்.

வினைப்போகங்களை அனுபவிக்கவே மனிதன் பிறக்கின்றான். நல்வினை தீவினை என இரு வினைகள் உள்ளமையால் அவற்றின் பயன்களான இன்ப துன்பங்களை அவன் அனுபவிக்க நேர்கின்றான். இவ்வாறு வினைவயத்தனான மனிதனைப்போலவே இராமன் இங்கே பிறந்திருப்பதுபோல் தெரிகின்றது. உண்மையில் இவன் அவ்வாறு பிறக்கவில்லை. தானாகவே ஈண்டு இறங்கி வந்திருக்கிறான். தீமைகளை நீக்கி நன்மைகளைப் பாதுகாக்கவே இராமன் என்னும் பெயரோடு தோன்றியுள்ளான்.

"விரிந்திடுதீ வினைசெய்த வெவ்விய தீ வினையாலும்
அருங்கடையின் மறைஅறைந்த அறம்செய்த அறத்தாலும்"

இராமன் பிறந்துள்ளான் என முன்னம் வரைந்துள்ளது எவ்வளவு சுவை சுரந்துள்ளது! உணர்ந்து உணர்ந்து உவந்து

கொள்ளவுரியது. புண்ணியம் பெருகிவரப் பாவம் அருகிஒழிய இராமன் இம்மண்ணில்வந்து அவதரித்திருக்கிறான். மனித வடிவம் தாங்கியிருந்தாலும் தனி ஒரு நிலையில் ஊன்றி நிற்கின்றான் ஆதலால் பிறந்தேயும் பிறந்திலாதான் என இவனது பிறப்பின் சிறப்பு நிலையை இங்ஙனம் உணர்த்தியருளினார்.

இவ்வீரனது தோள் வெற்றிப் புகழையே யாண்டும் நோக்கியுள்ளது. கல்வி கொடை முதலிய வேறு காரணங்களாலும் புகழ்வரும்ஆயினும்போரில் நேரும் வீரக்கீர்த்தியையே இத் தீரன்தோள்கள்யாண்டும்வேண்டி ஆர்வமுற்றுநிற்கின்றன.

புகழ் என்பது ஒருவனது காரிய மேன்மையால் விளையும் சீரிய நன்மதிப்பு. யாரும் செய்ய முடியாத அரிய காரியங்களைச் செய்து வானும் வையமும் புகழ இராமன் பெரிய கீர்த்திமானாய் நிலவி நிற்கின்றான். அந்த மேன்மையானநிலை ஆண்மை வீரங்களால் அமைந்தது ஆதலால் தோள்மேல் ஏற்றிக்கூறினார். ஆண்டகை, அருந்திறலாளன், வில்வீரன், வெற்றிக்குரிசில், வீர மூர்த்தி என இன்னவாறு தீர விருதுகளோடு கோதண்டவீரன் குலாவி மிளிர்கின்றான். மூதண்டங்களிலும் இவனுடைய புகழ் ஒளி பேரொளிகளை வீசிப் பெருகியுளது. அவ்வுண்மையைக் காவியங்களும் சீவிய ஓவியங்களும் காட்டிவருகின்றன.

அளவை என்றது காண்டல் கருதல் முதலிய பிரமாணங்களை. நேரே பொறிகளால் காணும்காட்சியும், அறிவினால் யூகமாய் உய்த்துணரும் அனுமானமும் என இவ்வாறு அளவைகள் பல அமைந்துள்ளன. அரிய பொருள்களை அளந்துகாணும் கருவிகளாய் மருவியிருத்தலால் இவை அளவை என வந்தன.

காட்சி கருதல் ஆகமம் அருத்தாபத்தி முதலிய இந்த அளவைகளால் யாதும் முடிவு காண முடியாதவன் ஆதலால் "அளவையில் நிமிர நின்றான்" என்றார்.

மூலமும் நடுவும் ஈறும் இல்லாதவன்;
காலமும் கணக்கும் நீத்த காரணன்;
ஆலமும் மலரும் பொருப்பும்விட்டு அயோத்திவந்தான்.

என முன்னம் குறித்திருப்பதும் ஈண்டுக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வுரியது. அரிய பரம நீர்மைகள் நேரே அறிய வந்தன,

எத்தகைய அழிவுமின்றி என்றும் நித்தியனுயிருப்பவன் என்னும் தத்துவத்தை இறுதியில் உய்த்துணரவுரைத்தார். தனது காவிய நாயகனைப் போற்றி மகிழ்ந்து நம் கவி நாயகன் காட்டி வரும் காட்சிகள் யாண்டும் சுவைகளை ஊட்டி வருகின்றன.

கேடு இலாதான் கேடுத்தனை!

என்றது எடுத்த பிறவிக்கு இயைய இயைந்தது. தன்னைமறந்து அவன் பேசியிருக்கிருன்; நம்மை மறந்து நாம் ஏமாந்துபோக லாகாது என்னும்குறிப்புஇங்கே கூர்ந்துணரவந்தது. இராமனது சரித நிகழ்ச்சிகளை இனிது விளக்கி உலக உள்ளங்களை உருக்கி வரும்பொழுதும் இடையே உண்மை நிலைகளைக் கவி உணர்த்தி விடுகிருர். இங்கே அழுபவன் அதிசய நிலையினன் என்பதாம்.

வீடணன் உரைத்தது.

தம்பி மடிந்தான் என்று பதைத்து மறுகிச் சோகமாய்த்துடித்து நின்றவன் உரிய சமயத்தில் என்னை அழையாமல் பிழைசெய்து விட்டாயே! என்று விபீடணனை நோக்கி உரிமையோடு கடிந்து சொல்லவே நடந்தவைகளையெல்லாம் அவன் தொடர்ந்து சொன்னுன். "ஆண்டவா! ஆண்டிருந்து விடை பெற்றுவந்த இளையபெருமான் அதிகாயனேடு மூண்டுபொருது படைகளை யெல்லாம் அழித்து முடிவில் அவனையும் கொன்று தொலைத்து அதிசய வெற்றியை அடைந்து நின்ருர். உற்ற வெற்றியை உவந்து மீளவிரும்பாமல் மீண்டும் போரை எதிர்நோக்கி ஈண் டே இருந்தார். இருக்கவே இந்திரசித்து பெரும் படைகளோடு பொங்கி வந்தான். போர்மூண்டது. இருவகையிலும் அழிவு கள் நீண்டன. நீளவே இளவலும் அவனும் எதிர்த்துப் போராடினுர். போர் கடுமையாயிருந்தது; நாற்பது வெள்ளம் சேனைகள் அவன் பக்கம் நாசமாயின; நம் பக்கமும் அந்த அள வில் அழிவு நேர்ந்தது. இறுதியில் சினந்து அவன் ஏறியிருந்த தேரை உடைத்து ஆதரவாய் வந்தன யாவும் தொலைத்து அள்ளி டலரிய அதிசய நிலையில் இளவல்அமராடியது; ஆடவே அயர்ந்து நின்ற அவன் முடிவில் ஓடநேர்ந்து வானில் விரைந்து மறைந் தான். தோல்வி அடைந்தமையால் நாணம் மீதூர்ந்து ஊருக்குப் போயிருப்பான் என்று கருதிப் போருக்குரிய நிலைகள் மாறி நாங்கள் யாவரும் அமைதியாயிருந்தோம். அதிவேகமாய் ஓர்

ஒளி வீசியது; அனைவரும் மயங்கி மடிந்து மண்ணில் சாய்ந்தனர். நாகபாசம் என்னும் தெய்வப்படையால் நேர்ந்த தீங்கு இது. அது திவ்விய மகிமையுடையது; பிரமன் செய்த வேள்வியில் பிறந்தது; ஈசனிடம் எய்தியிருந்தது; இந்திரசித்து செய்த பெருந்தவத்தினால் அவனிடம் வந்தது; அதிசய ஆற்றல் வாய்ந்தது; மந்திரசத்தி நிறைந்த அந்த ஆயுத பலத்தினாலேயே அமரர் யாவரையும் வென்று இந்திரனையும் சிறைப்படுத்தி இசைமிகப் பெற்றான். அனுமானைக் கட்டி வீழ்த்தியது அதனாலேயேயாம். எவரையும் அது கொல்லவல்லது; விட்டவன் மீட்டினாலன்றி அது விடாதுபற்றி உயிரை வாங்கியே விடும். ஊனைவிட்டு உயிர் நீங்கினால் அதுவும் தானாக நீங்கிப்போம்.

தான்விடின் விடும் இதுஒன்றே சதுமுகன் முதல்வ ராய
வான்விடின் விடாது மற்றிம் மண்ணினை எண்ணி என்னே?
ஊன்விட உயிர்போய் நீங்க நீங்கும் வேறு உய்தி இல்லைத்
தேன்விடு துளபத் தாராய்! இதுஇதன் செய்கை என்றான்.

தான்பற்றிய உடலிலுள்ள உயிரைநீக்கித் தானாக விட்டாலன்றி வானவராலும் யாதும் செய்ய முடியாது; பிரமதேவனாலும் விடுவிக்க இயலாது; பின்னர் இம்மண்ணவரைக் குறித்துப்பேசி என்ன பயன்? என இன்னவாறு நாகபாசத்தின் செயல் இயல்களை வீடணன் சொல்லவே இராமனுடைய உள்ளம் கனன்றது; உருத்துச் சினந்தான். அரிய வலியுடைய இந்தப் பெரிய கொலைக் கருவியைக் கொடியவனிடம் கொடுத்தது கொடுந் தீமையாம் எனக் கொடுத்தவரை வெறுத்து இக்கோதண்ட வீரன் கொதித்தான். அந்த உள்ளக் கொதிப்புகளையும் துடிப்புகளையும் அயலே வருகிற கவிப்படங்கள் காட்டிநிற்கின்றன.

வரங்கொடுத்து இனைய பாசம் வழங்கினான் தானே நேர்வந்து
இரங்கிடத் தக்கது உண்டேல் இகழ்கிலன்; இல்லை என்னின்,
உரங்கெடுத்து உலகம்மூன்றும் ஒருவன் ஓர் அம்பில் சுட்ட
புரங்களின் தீர்த்துக்காண்பேன் பொடிஒரு கடிகைப் போழ்தின். (க)

எம்பியே இறக்கும் என்னின் எனக்கினி இலங்கை வேந்தன்
தம்பியே! புகழ்தான் என்னை? பழிஎன்னை? அறந்தான் என்னை?
நம்பியே என்னைச் சேர்ந்த நண்பரின் நல்ல வாமே
உம்பரும் உலகத்துள்ள உயிர்களும் உதவி பார்த்தால். (உ

என்றுகொண்டு இயம்பி ஈண்டின்றுஒருவனிங் கிடுக்கண்செய்ய

வென்றருட்உலகை மாய்த்தல் விதி அன்றால் என்று விம்மி
நின்றுநின்று உன்னி உன்னி நெடிதுஉயிர்த்து அலக்கண் உற்றான்
தன் துணைத் தம்பிமேலும் துணைவர்மேல் தாழ்ந்த அன்பான். (ந)

மீட்டும்வந்து இளைய வீரன் வெற்பன்ன விசயத் தோளைப்
பூட்டுறு பாசம் தன்னைப் பன்முறை புரிந்து நோக்கி
வீட்டியது என்னின் பின்னை வீவன்என்று எண்ணும் வேதத்
தோட்டியின் தொடக்கின் நிற்கும் துணைக்கைமால் யானை அன்னான்.

(நாகபாசப்படலம்)

இங்கே காட்டியுள்ள பாட்டுக்களைக் கண்ணூன்றிப் படிப்பவர் அரிய பல உண்மைகளை அறிய நேர்வர். உரிய வீரனை உணர்த்தி யிருக்கும் மானசக் காட்சிகள் பெரிய ஞான நோக்குடையன.

நாகபாசத்தின் நிலைமையைக் கேட்டதும் இராமன் மனம் கனன்று சினந்து சீறியிருக்கும் நிலைகளை இங்கே உணர்ந்து கொள்கிறோம். கோபம் பல வழிகளிலும் பாய்ந்து ஓடிநீண்டு திரிந்து நெடிது அலைந்திருக்கிறது. இந்த மாய பாசத்தைத் தீயவனிடம் தந்திருப்பது கொடிய அநியாயம் என்று குமுறியிருக்கிறான். பாசத்தின் மூலதேவதையான பிரமதேவன் மீதும் சீற்றம் பாய்ந்திருத்தலால் சீறியுள்ளவனது ஏற்றத்தையும் ஆற்றலையும் அது விளக்கி நிற்கிறது. தேவரும் இவ்வாறு பாவிகளுக்குத் துணைபுரிந்திருப்பது படுதீமையாம் என்று பழித்தான்; அந்தக்கொதிப்பினால் மூன்று உலகங்களையும் தொலைப்பேன்; யாவரையும் ஒழிப்பேன்; திரிபுரங்களை உருத்திரமூர்த்தி எரித்து ஒழித்தது போல் உலக முழுவதையும் ஒரு நொடியில் பொடியாக்கி உதிர்ப்பேன் என்று உருத்துக் கொதித்தான். என் தம்பியையே நான் இழந்த பின்பு இனி இந்த உலகில் எனக்கு என்ன உறவு? யார் தேவை? எல்லாவற்றையும் அழித்து முடித்து நானும் முடிந்துபோகின்றேன் என்று துணிந்து எழுந்தான். எழுந்தவன் மேலும் எண்ண நேர்ந்தான். ஒருதீய அரக்கன் கேடு செய்ய அதற்காக உள்ளம் வெறுத்து உலகத்தை நாம் அழிக்க நினைப்பது பழியாம்; நேர்ந்த அபாயத்தை ஒழிக்க வழி தேட வேண்டும்; வழியிலதேல் நாம் அழிய வேண்டும் எனத் தெளிவுகொண்டு மீண்டும் வந்து தம்பியின் முகத்தை நோக்கி "ஐயோ! இளையவா! இளையவா!" என்று ஏங்கிக் கூவினான்.

பாசப்பிணிப்பைப் பன்முறையும்பார்த்தான்; உயிர் நீங்கிவிடின் பாசம் நீங்கிவிடும் என்ற அந்த வாசகத்தால் தம்பி இறக்க வில்லை என்று தெளிந்து நப்பி ஆறுதலடைந்தான். எவ்வாறு பிணிப்பை நீக்கலாம் என எண்ணி உளைந்தான்; கண்ணீரும் சிந்தியது; இளவல் முகத்தில் ஒளி தவழ்ந்துள்ளது உவகைதரி னும் விரைவில் விடுதலையடையவேண்டுமே! என்று கடிது தவித் தான். யாதும் அஞ்சாத அதிசய வீரன் தம்பிக்கு நேர்ந்ததை நினைந்து நினைந்து நெஞ்சம் துடித்தான். பதைப்பும், துடிப்பும் உருக்கமும் மறுக்கமும் பரிதாப நிலைகளில் பெருகி நின்றன.

நின்று நின்று உன்னி உன்னி
நெடிது உயிர்த்து அலக்கண் உற்றான்.

இராமன் பரதவித்துநின்ற நிலைகளை இது காட்டியுள்ளது. வெளி யே தோன்றியுள்ள துயரக்குறிப்புகள் உள்ளே ஊன்றியுள்ள உயிர் வேதனைகளை நன்கு உணர்த்தியுள்ளன. இளையவன் நாக பாசத்தால் மயங்கிக்கிடக்கிறான்; அவன்மேலுள்ள பாசத்தால் மூத்தவன் உணர்வு கலங்கி உள்ளம் மயங்கி உயிர் உயங்கித் துயரமீதூர்ந்து மறுகி உருகிப் பரிதபிக்கின்றான். அந்தப் பரிதாப நிலையில் வார்த்தைகள் பதைப்பேறி வந்திருக்கின்றன.

இலங்கை வேந்தன் தம்பியே!

என்று விபீடணனை இப்படி இராமன் இங்கே விளித்திருக்கிறான்.

அவன் பிறந்த இடத்தை அறவே வெறுத்துத் துறவியாய் வெளியேறி இராமனே தஞ்சம் என்று வந்து சரணம் புகுந்து உள்ளமும் உயிரும் ஒன்றி உரிமை கூர்ந்து உறைந்திருக்கிறான். அவ்வகைய உரிமையாளனை இவ்வாறு அந்நிய வாடை வீசப் பகைமைத் தொடர்பு படியப் பற்றியுள்ள உறவு முற்றும் முடிய இவ்வெற்றி வீரன் கூறியிருப்பது வியப்பை விளைத்து நின்றது.

எவ்வழியும் இனிய நீர்மையாளன்; யாண்டும் நெறிதிறம் பாத நேர்மையாளன்; தன்னை அடைந்தவரை என்ன வகையி லும் ஏதும் பிழைகாணாமல் என்றும் உரிமையோடு ஆதரித்தருளும் அரிய சீர்மையாளன். அத்தகைய உத்தம வீரனுடைய வாயி லிருந்துஇத்தகைய வார்த்தைகள் ஈண்டு வெளி வந்துள்ளன.